சரசுவதி மகால் வெளியீட்டு எண். 93

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

(நச்சினார்க்கினியர் உரையுடன்)




சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்

1999 விலை ரூ. 100-00

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடு எண்-- 93

# தொல்காப்பியம் - சொல்லதிகாரம்

( நச்சினார்க்கினியர் உரையுடன் )

பதிப்பாசிரியர் :
வித்துவான் இராம. கோவிந்தசாமிபிள்ளை,
தமிழ்ப்பண்டிதர் (ஓய்வு),
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

1997 விலை ரூ. 100-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு



| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | தொல்காப்பியம்—சொல்லதிகாரம் (நச்சினார்க்கினியர் உரையுடன்) |
| பதிப்பாசிரியர் | : | இராம. கோவிந்தசாமிபிள்ளை |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 93 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | பிப்ரவரி, 1997. |
| தாள் | : | 13.7 கிலோ–சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 764 |
| படிகள் | : | 1200 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| புத்தகக்கட்டு | : | முழுகாலிகோ |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| விலை | : | ரூ. 100—00 |
| பொருள் | : | இலக்கணம் |



# வெளியீட்டாளர் முகவுரை

பன்மொழி ஓலைச்சுவடிகளின் பாங்குறு கருவூலமாகத் திகழும் சரசுவதி மகால் நூலகத்தின் பெருமைக்குரிய சுவடிப் பதிப்புகளுள் ஒன்று, இத் 'தொல்காப்பியம்–சொல்லதிகாரம்' எனும் நூலாகும்.

1962இல் முதற் பதிப்பாக வெளிவந்து தமிழ் அறிஞர்க்கும் அன்பர்க்கும் பயன்விளைத்த பதிப்பான இந்நூலின் பதிப்பாசிரியர் உயர்திரு பண்டித வித்துவான் இராம. கோவிந்தசாமி பிள்ளை அவர்களாவார்.

இந்தத் 'தொல்காப்பியம்—சொல்லதிகாரம்', நூற்பா முதற்குறிப்பகராதி, பொருளகராதி, அருஞ்சொல் முதலியவற்றின் அகராதி, மேற்கோள் அகராதி முதலிய பயனுறு பகுதிகள் அமையப் பதிப்பிக்கப்பட்டிருத்தல் குறிப்பிடத் தக்கது.

இந்நூல் இப்பொழுது, தமிழன்பர்தம் விழைவையும் தேவையையும் கருதி இரண்டாம் பதிப்பாக வெளியிடப் படுகின்றது.

இவ்விரண்டாம் பதிப்பு வெளிவரத் தேவையான நிதியுதவியை நல்கியுள்ள நடுவண் அரசுக்கு எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

இந்நூலின் இரண்டாம்பதிப்பு நன்முறையில் வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. எம். உத்திராபதி அவர்களுக்கும் நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் என் பாராட்டுகள்.

நூல் அச்சுப்பணியைச் செம்மையுற நிறைவுசெய்த்த நூலக அச்சகப் பணியாளர்களுக்கும், இந்நூல் நன்முறையில் வெளிவரத் துணைநின்ற ஏனையோர்க்கும், என் பாராட்டுகள்.

'ஒல்காப் புகழ்பெற்ற தொல்காப்பிய' மூலத்தையும் 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினிய' உரையையும் கொண்ட இப்பதிப்பு நூல், முதற்பதிப்பில் பெற்றதைப் போன்ற வரவேற்பை இவ்விரண்டாம் பதிப்பின்போதும் தமிழுலகில் பெறுதல் திண்ணம்.

**வி. கு. ஜெயக்கொடி,** இ. ஆ. ப.,
*மாவட்ட ஆட்சித் தலைவர்*
*மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*

தஞ்சாவூர்.
22—2—1997.

# முதற்பதிப்பின் வெளியீட்டாளர் முகவுரை

இப்பேரிலக்கண நூலானது, சமதக்கினி முனிவரர் புதல்வராகிய திரண தூமாக்கினி யென்னுங் காரணப்பெயர் பெற்ற தொல்காப்பிய முனிவரரா லருளிச் செய்யப்பெற்ற தாகும். இது முத்தமிழுள் இயற்றமிழின் ஒரு பகுதியாகும். இயற்றமிழின் பிரிவாகிய இலக்கணத்தமிழ் இந்தநூல். இந்நூலின்கண் எழுத்து, சொல், பொருள் என்னும் மூவகை இலக்கணங்களும் கூறப்பட்டுள்ளன. **"எண்ணும் எழுத்துங் கண்ணெனத் தகும்'** எனவும் **"எண்ணென்ப ஏனையெழுத்தென்ப இவ்விரண்டுங், கண்ணென்ப வாழும் உயிர்க்கு"** எனவும் ஔவையாரும் வள்ளுவப் பெருந்தகையும் கூறுவன கொண்டு **இலக்கணம்** மக்களுக்குக் கண்ணிற் சிறந்ததுபோற் கொள்ளக் கிடக்கின்றது என்பது வற்புறுத்தப் படுகின்றது. வடமொழியில் **சிட்சை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதம், சோதிடம், நிருத்தம்** என ஆறங்கங்கள் உள்ளன. அவ்வாறங்கங்களுள் ஒன்றாகிய வியாகரணமென்னும் இலக்கணத்தைப் பாணினிக்கு எல்லாம்வல்ல இறைவனாகிய சிவபெருமான் உபதேசித் தருளினர் எனவும் தமிழிலக்கணத்தினை அகத்தியனார்க்கு அப்பெருமானே யருளிச்செய்தனர் எனவும் அடியில் வரும் சிவஞான முனிவரர் பாடல் அறிவிக்கும்.

***" வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்***
***தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்தும்***
***குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்***
***கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார் "***

எனவும்,

" ஆதியிற் றமிழ்நூ லகத்தியர்க் குணர்த்திய, மாதொரு பாகனார் " எனவுங் கூறுவனவற்றால் அறியலாம்.

இத்தன்மையினையுடைய தெய்வத் தமிழிலுள்ள இலக்கண நூலைக் கற்றே முதனூற் பொருளை யுணர்தல் மக்கள் கடப்பாடாகும். இதனைக் கருவிநூல் என்றுங் கூறுவர். வடமொழியில் பாணினிகண்ட வியாகரணத்திற்குப் பேருரை இருப்பதுபோன்று தொல்காப்பிய இலக்கணத்திற்கும் பல பேருரைகள் காணப்பெறுகின்றன. மூவகையிலக்கணத்தினும் முதன்மையுற்றது **சொல்லிலக்கணம்** என்பது பலரறிந்து கண்டது.

இத்தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குப் பலருரை வகுத்துள்ளனர். அவற்றுள் நச்சினார்க்கினியர் வகுத்தவுரைப்பகுதியையுடைய ஓலைச்சுவடிகள் எங்கள் நூல் நிலையத்தில் நல்ல நிலையிலுள்ளன. இதுகாறும் அச்சில் வெளிவந்துள்ள நூல்களிடைக் காணப்பெறாத பல பாடபேதங்களும், உண்மையான உரைநடைப் பகுதிகளும் காணப்பெறுவதால் அதனையும் அச்சிடல் வேண்டும் என அரசினர் பணித்தனர். அப்பணியினை, ஆசிரியர், பண்டித வித்துவான் திரு. **இராம. கோவிந்தசாமி பிள்ளை**யவர்கள் மிகவும் முயன்று பதிப்பித்துள்ளார். இவர்தம்முடைய பணி தமிழகத்திற்குப் பெரிது நலனளிக்குமென்பது உறுதி. இவரால் இன்னுஞ் சில இயல் நூல்களும் வெளிவரு நிலையிலுள்ளன. அவற்றினையும் தமிழகம் ஏற்குமென்பது நம்பிக்கை. இந்நூலை நல்லிய முறையில் அச்சிட்டு வெளிவருதற்குப் பேருபகாரம் புரிபவர் தமிழ்நாட்டு அரசினர் ஆவர். இவர்கட்கு எங்கள் நன்றியுரித்தாகுக.

சரசுவதி மகால் நூல் நிலையம்
தஞ்சை *15—3—62*

**சே. கோபாலன்,**
**கௌரவ காரியதரிசி**

# தமிழ்த்தெய்வ வணக்கம்



" மறைமுதற் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணி
யிறைவர்தம் பெயரை நாட்டி
யிலக்கணஞ் செய்யப் பெற்றே
யறைகடல் வரைப்பிற் பாடை
யனைத்தும்வென் றாரி யத்தோ(டு)
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
யுண்ணினைந் தேத்தல் செய்வாம் "

—*சிவப்பிரகாச முனிவரர்*

# தொல்காப்பியம்
# சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம்

## பொருளடக்கம்

# தொல், சொல், நச்சினார்க்கினியம்

## பதிப்புரை

### திருத்தாண்டகம்

*" மின்காட்டுங் கொடிமருங்குல் உமையாட் கென்றும்*
*விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்*
*நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி*
*நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்*
*பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற*
*புனக்காந்தட் கைகாட்டக் கண்டு வண்டு*
*தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத் தூரில்*
*திருத்தளியான் காணவனென் சிந்தை யானே."*

**பண்டைத் தண்டமிழ்ப் பெரியோர்களே !**

நாவலந்தீவினில் பரதமெனுங் கண்டத்தில் இமயக் குன்றினை வடபாலும், கன்னியாகுமரி முனையைத் தென்பாலும் வங்காளவிரி கடலினையும், அரபிக்கடலினையும் கீழ்பால் மேல்பாலுமாகவுடைய நாட்டினை இந்திய நாடென்று லும் இயம்புகின்றனர். இந்நாட்டில், பனம்பாரனார் பகர்ந்த பாயிரத்தான் "வடவேங்கடந் தென்குமரி யாயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்" என்பதே, தமிழ் நாடெனக் கொள்ளக் கிடக்கின்றது. இந்நாட்டு மக்கள் அயல்நாட்டு மொழிகளையும் தன்தாய் மொழியோடு வளங்குன்றாது பயின்று வந்தனரென்பது நூல்களாலறியக் கிடக்கும் உண்மையாகும். "இரத்திநீடிய வகன்றலை மன்றத்து வேண்டுமொழி பயிற்றி" என்னுஞ் சங்கப்பாட்டாலும் "பதினெண்டேய மாந்தரும் திரண்ட சொற்றிரட்சிதான்"

என்றும் பாட்டாலும். "பண்டிதராவர் பதினெட்டுப் பாடையும்" என்னும் திருமந்திரப் பாட்டாலும் மொழி பலவுள. அவற்றுள் வேண்டுபவர் வேண்டுமொழி பயின்று வித்தகத்தன்மை மேவினரென்பது வெள்ளிடை. அவற்றுள் ளும் தலைசிறந்த இலக்கண வரம்புடைய தெய்வீகத்தன்மை எய்திய மொழி தமிழ்மொழி என்பது யாவரும் தெளிந்த உண்மை. "என்றுமுள தென்றமிழ் இயம்பி யிசை கொண் டான்" "வட சொற் கடந்தான் றென் சொற்கெல்லை தேர்வான்" எனக் கம்பர் பாடலின்படி அழியாத்தன்மை எய்திய கன்னித்தமிழ் மூலமொழி, முதன்மொழி என்று மேனாட்டினரும் வியந்து பாராட்டி வரைந்துள்ளனர்.

எழுத்தும், சொல்லும், பொருளும், இனிமை பயக்கும் தனிமைமொழி தண்டமிழ்மொழி என்பது கொள்ளக் கிடக்கின்றது. இம்மொழியில் முதன்முதல் இலக்கண நூல் செய்த கடல்குடித்த குடமுனிவராகிய அகத்திய முனிவருக் குப் பின் வழிநூல் கண்டவர், அவர்தம் மாணாக்கராகிய தொல்காப்பிய முனிவராவர். இவர்தம் பெருமை, "வட வேங்கடந் தென்குமரி" என்னும் முதலடியுடைய பனம்பார னார் பகர்ந்த பாயிரத்தானே அறியக்கிடக்கும். பல் புகழ் நிறுத்தபடிமையோன் என்பதனானே பல்லாற்றான் வந்தீண்டிய பல புகழினையுமுடைய விரதமொழுக்க முடையவன் என்பது புலனாகும். "அறங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டாசான்" என்பதனானே இவருடன் பயின்ற அதங்கோடு என்னும் ஊரின் ஆசிரிய னும் அறமொன்றனை மாத்திரங்கூறும் நன்னாவினை உடையவனும் நால்வேத முடிவுகண்ட சால்புடையவனும் என்பது புலனாதல் கொண்டு இத்தொல்காப்பியரும் அப் பெற்றியர் என்பது அறியக்கிடக்கும். இந்நூலுக்குப் பல்லுரையாசிரியர் நல்லுரை கண்டுள்ளனர். அவற்றுள் நச்சினார்க்கினியர் உரையினை இராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் பல பிரதிகளைப் பார்த்துச் சென்ற நூற்றாண்டிற் பதிப்பித்துள்ளனர். அவர் காலத்தே சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டாதியன அச்சில்

வந்துலாவப் பெற்றில. அவர்தாம் முதன்முதலில் மிகவு முயன்று கலித்தொகையுரை, வீரசோழியவுரை, தணிகைப் புராண முதலியன அச்சிடுவித்தனர். இவர்கள் அரிதின் முயன்று அச்சிட்டிலராயின் இற்றைப் நிலையில் அவை நல்லிய வகையில் அச்சிட முடியாதென்பதொருதலை. அவற்றினைப் பின்பற்றிப் பவானந்தர் கழகமும் சொல்லதி காரவுரையினைப் பதிப்பித்துள்ளது. இவ்விருவர்தம் பதிப் பிலும் காணப்பெறாத எடுத்துக்காட்டுகளும். பாடாந்தரங்க ளும் காணப்பெறுவதாலும், ஏட்டுப் பிரதியின்கண் உள்ள வாறே அச்சிடின் பலநயமுடைப் பகுதிகள் ஆய்வதற் குபகாரமாகும் என்பதனாலும், தமிழ்நாட்டு அரசினர் அச்சிடல் வேண்டுமென ஆணையிட்டருளினர். அவ் வாணையினை யிட்டருளிய பரோபகாரியும், ஆங்கிலம் ஆரியம், அருந்தமிழ் மொழிகளிலுள்ள சீரிய கலைகளை நன்காய்ந்துணர்ந்த புலமையாளரும், தமிழ்நாடு தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றச் செயலாளருமாகிய அருங்கலை விநோதர் கனம்பொருந்திய உயர்திரு வே. கண்ணையன் பி.ஏ., அவர்கள் அவர்கட்கு என் நன்றியும் வணக்கமும் உரித் தாகுக. இந்நூல் நல்லிய முறையில் அச்சிட்டு வெளிவரல் வேண்டுமெனப் பலகால் ஊக்கி முன்னுரை முதலியன தந்துதவிய நூல்நிலையக் கௌரவகாரியதரிசி செல்வச் சீமான் கனம் உயர்திரு சே. கோபாலையர் அவர்கள், பி. ஏ., பி. எல்., அவர்கட்கும் நன்றியும் வணக்கமும் உரித்தாக்கு கின்றேன்.

இந்நூலும் உரையும் படியெடுத்தும் ஒப்புநோக்கியும் உதவிபுரிந்த நூல்நிலையத்துப் படியெடுக்கும் பண்பாளர் திரு. ப. இராசரத்தினம் அவர்கட்கும் எம்நன்றியும் ஆசியும் உரித்தாகுக.

இந்நூலினை அச்சிடுங்காலத்து உடனிருந்து ஒப்பு நோக்கியும், காகிதப்படி செய்தும், நூற்பாவகராதி, அருஞ் சொல் விளக்க அகராதி முதலியன வகுத்தும் நல்லுதவி

புரிந்த என்புதல்வியும், மாணவியும், திருவையாறு சீனிவாச ராவ் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியையும் ஆகிய வித்துவான் திருநிறைசெல்வி **கோ. திலகவதியார்** அவர்களுக்கு மேலும் மேலும் நற்றமிழ்நூல் பல ஆயுந்திறனும், அரோக திடகாத்திரமும், நல்வாழ்வும் அருளச் செந்தமிழாசானாகிய செவ்வேட்பரமன் சேவடிகளை இறைஞ்சுகின்றேன். இந் நூலை உரிய போழ்தின் அரிய முறையில் அச்சிட்டுதவிய வெற்றிவேல் அச்சக முதல்வர் உயர்திரு **பக்கிரிசாமி பிள்ளையவர்கட்குப்** பாராட்டும் நன்றியும் வணக்கமும் உரித்தாகுக. இதனையடுத்து அண்மையில் வெளிவரப் போவது நாற்கவிராச நம்பியகப்பொருள் விளக்கவுரையாகும். இதனையும் தமிழுலகம் போற்றி ஏற்றுக்கொள்ளுமாக. அயர்வு காரணமாக அச்சிட்ட வகையில் பல தவறுகள் ஏற்பட்டிருத்தல் கூடும். அவைகளை நீக்கி நல்லன கொண்டு பாராட்டல் தமிழர்தம் கடப்பாடாகும். வணக்கம்.

இங்ஙனம்,

பண்டித வித்துவான்

**இராம. கோவிந்தசாமிப்பிள்ளை,**

தமிழாராய்ச்சியாளர்,

சரபோசி மன்னர் சரசுவதி மகால் நூல்நிலையம்.

தஞ்சாவூர்
பிலவ
பங்குனி



# முகவுரை

## கணபதி

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்

## இறைவணக்கம்

" ஆதியிற் றமிழ்நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போத மெய்ஞ்ஞான நலம்பெறற் பொருட்டே"

"சொல்விற் பனமும் அவதான முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள் வாய்நளி னாசனஞ்
சேர்
செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதை யாமைநல்குங்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே"

வான்நின்று இழிந்து வரம்பு இகந்த மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும் உயிருமாய்க் காணப்பெறுவன அறிவு வகையான் அறுவகைப்படும் எனல் சான்றோர். கண்ட முடிபாம் பூதங்களின் கலப்பால் ஐயறிவுற்றுத் திகழ்வன. மெய் வாய் கண் மூக்குச் செவியானுணரும் வானவரும், மக்களும், நரகரும், விலங்கும், புள்ளு மேயாம்: இவற்றுள் தக்கவின்ன தகாதன வின்னவென் றொக்க வுன்னும் பகுத்தறிவுடைய மக்கட் பிறப்பே தக்கதென்டார். இம் மக்கட் பிறப்பினரே மனனுணர்,

வான் ஐம்பொறி வழிச்சென்று நல்லன கண்டு அல்லன அகற்றி யறநெறி கடைப்பிடிக்கும் உளவுணர்வினராவர் 'மக்கடாமே யாறறி வுயிரே'' யென்னுந் தொல்காப் பியமும் வலியுத்தா நிற்கும்.

தொல்காப்பியர்

'' மாவு மாக்களும் ஐயறிவினவே'' எனவும்
'' மக்கடாமே யாறறி வுயிரே.'' எனவும்

கூறியன கொண்டராயும் காலத்து, மா, மாக்கள், மக்கள் என்பனவாகிய மூவகை வடிவங்கள் காணப்பெறு கின்றன. அவற்றுள் ஒன்று ஐயறிவுடைய விலங்கின மேயாம். ஒன்று ஆறறிவுற்றுத் திகழும் மக்களினமே யாம். ஒன்று உறுப்பால் மக்களை யொத்தும் உணர் வால் விலங்கினை யொத்துநிற்கும் மாக்களினமேயாம் இவற்றுள் மாவினையும் மாக்களையும் ஒழித்து நின்ற மக்கட்பிறப் பினருக்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் அறனும், பொருளும், இன்பமும், வீடும், என்னும் நான்குமேயாகும். இதனை வடநூலார் புருடார்த்தம் என்பர். இப்பொருள் நூல்களை நன் காய்ந்து அதன்படியொழுகி யெய்துவதற்குக் கருவி நூல்கள் வேண்டப்பெறும். இக்கருவி நூல்களைக் கொண்டே முதல்நூற் பொருளை யுணரல்கூடும். என்பது பின்வரும் பழம்பாடல் உணர்த்தாநிற்கும்.

**வெண்பா**

'' எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தாள்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும் - மொழித்
திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்''

என்பதாம்.

**வெண்பா**

"ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி
நீதி வழுவா நிலைமயால்-மாதே
யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்
றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு"

என்பதாம்.

மக்கள் தம் உள்ளக்கருத்தினை பிறர்க்கறிவித்தாற்கும் பிறர் தம் உள்ளக்கருத்தைத் தாம் அறிந்துகோடற்கும் கருவியாக அமைந்துள்ளன ஒலிவடிவே மொழியாகும். இம் மொழியானது, "பண்டிதராவர் பதினெட்டுப்பாட்டையும்,, எனத் திருமந்திரமாலையின் பதினெண்வகையினையுடைத் தென வறியக்கிடக்கின்றது. "பத்தோடொன்பது பாடைநூல்களும்,, என்னுஞ் சூத்திரத்தான் பத்தொன்பதாயிற்று. அவையே, யிவை யெனப் பின் வரும் பாடலறியாநிற்கும்.

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந்
துளுக்குடகம்
கொங்கணங் கன்னடம் கொல்லந் தெலிங்கங்
கலிங்கம்வங்கம்
கங்கம், மகதம் கடாரம் கவுடங்
கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி
தாமிதாயே"

என்பது பாட்டு.

இவற்றுள்

" மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்று
ஏரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரியமுந் தமிழு முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணைசெய் தானே"

என்னுந் திருமந்திரப்பாட்டால் ஆரியமும் தமிழும் ஆகிய இருமொழிகளே சிறந்தனவாயின. "என்றுமுள தென்றமிழ் இயம்பி யிசை கொண்டான்" என்னுங் கம்பர்பாட்டின்படி என்றும் அழியா வொருபடித்தாய செந்தமிழ்இயல், இசை, நாடகமென மூவகையுறும். அம் மூவகையில் இயற்றமிழ் விலக்கணமும், இலக்கிய மும் மாக விருவகைப்படும். இவ்விலக்கணத்தமிழ் எழுத்துச் சொல் லும், பொருளுமென மூவகையாகவும், எழுத்துச் சொற் பொருள் யாப்பணியென ஐவகையாகவும் பகுக்கப்படும்.

இயலிசை நாடகமெனும் முத்தமிழும் விரவியது அகத்தியம் எனவும், அஃது சிற்றகத்தியம், பேரகத்தியம், எனவிருவகைப்படும் எனவும் ஆன்றோர் கூறுகின்றனர். அவை இக்காலத்தரியன வாயின. இந் நூல்களைக் கண்ட இம்முனிவரை மலயமுனி, பொதியமுனி, தண்டமிழகத் தியர், செந்தமிழ்ப்பரமாசாரியர், செந்தமிழ்த் தேசி கர், "தென்னவற் பெரிய துன்னருந் துப்பிற்றொன் முது கடவுள்" எனப் பல வாறாகச் சிறப்பித்தோதுவர். முதலிடை கடையெனுஞ் சங்க காலத்தில் முதல்சங்க தமிழாராய்ந்த முனைவர் என்பது இறையனார் களவிய லுரையாலறியத்தகும். அகத்தியர் தமிழில் இலக்கணங் காண்டற்கு முன்னரே தொன்மைத் தமிழில் பன்மை நூல்கள் இருந்தனவாம் என்பது "முன்னூற்கும் மலய முனி தன்னூற்கும் இனியியற்று நூற்கும்" என்பதனா லறியக் கிடக்கும்.

இம் முனிவர் பெருமாற்கு:- (1) தொல்காப்பியர், (2) அதங்கோட்டாசான், (3) பனம்பாரன், (4) துரா லிங்கன், (5) செம்பூட்சேய், (6) வையாபிகன், (7) வாய்ப்பியன், (8) அவிநயன், (9) கழாரம்பன், (10) நற்றத்தன், (11) வாமனன், (12) காக்கைபாடினியன். எனப் பன்னிரு மாணாக்கர் தலைசிறந்தோராவர். "பாங் கருஞ் சிறப்பிற் பன்னிருபுலவரும்" என்பதனாலறியப்

பெறும், இருப்பன்னிரு வரும்'' சேர்ந்து செய்தவியனூல் பன்னிரு படலமாகும். இவர்கள் தனித்தனியாகவும் நூல் களையாத்துள்ளனர். அங்ஙனமாகச் செய்தவருள் தொல் காப்பியரும் ஒருவராவர். இவர் செய்த நூலே தொல் காப்பியம் எனும் பேரியல் நூலாகும். இந்நூல் அகத் தியத்தின் வழிவந்ததால் வழி நூலென்பர். இந்நூல் இடைச்சங்ககாலத்து இலக்கண நூல் ஆகும். இஃது வட மொழியில் பாணினி வியாகரணம் போன்றுளது. இவ் வடிப்படையிலேயே, எழுத்தின்தன்மை சொற்றன்மை, பொருட்டன்மை, ஆகியவற்றினை விரித்தோதினர். மூன் றுறுப்படங்கிய பிண்டத்தானும் என்றதனால் எழுத்த திகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், எனச்செப் பரும்முப்பகுதித்தாகவுடைய பெருநூலாகும். இந்நூலும் வள்ளுவர் வாய்மொழியாகிய திருக்குறளும், அன்றுமுத லின்றுவரை ஓர்எழுத்தோ, ஓர்அசையோ, ஓர்சீரோ, ஓர்அடியோ, ஓர்செய்யுளோ முறிவுபட்டுச் சிதையாமல் அனைத்து மக்களாலும் கொண்டாடப்பட்டுவரலே இவற்றின் ஏற்றமுடைமையயினிது புலப்படுத்தா நிற்கும். இத் தொல்காப்பியத்தின் வழியாகவே, நன் னூல், சின்னூல் (நேமிநாதம்) இலக்கணவிளக்கம், வீர சோழியம், தொன்னூல், முத்துவீரியம், சுவாமிநாதம் முதலிய வைந்தியல் நூல்களும், இறையனார்களவியல், பன்னிருபடலம், புறப்பொருள்வெண்பாமாலை, நம்பி யகப்பொருள், மாறனகப்பொருள், யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கலவிருத்தி, தண்டியலங்காரம், மாற னலங்காரம், வெண்பாப்பாட்டியல், சிதம்பரப்பாட் டியல், பன்னிருபாட்டியல் முதலிய நூல்களும் தோன் றின. இவற்றினையடுத்தும் வடமொழிநூல்களையடுத் தும், பிரயோகவிவேகம், இலக்கணக்கொத்துரை, முதலிய நூல்களும் தோன்றின.

இங்ஙனமிருப்ப அகத்தியத்தின் வழிநூலாகிய

தொல்காப்பிய மெனும் பேரியல் நூலானது ஒவ்வோரதிகாரத்தும் ஒன்பது, ஒன்பது இயல்களாக, இருபத்தேழு வியல்களை யுடைத்தாயிற்று. இந்நூண் முழுமைக்கும் உரை கண்டாரும். ஒவ்வோரதிகாரத்திற்கு, மாத்திரம் உரைகண்டாரும் ஆகப்பலருளர்.

எழுத்ததிகாரத்திற்கும் சொல்லதிகாரத்திற்கும். பொருளதிகாரத்திற்கும் முற்றவுரைகண்டார் இளம்பூரணர் என்பார் ஆவர். இவர் முதன் முதலில் உரை கண்டமையால் உரையாசிரியர் எனவும் அழைக்கப் பெறுவர். சொல்லதிகாரத்திற்கு மாத்திரம் உரைகண்டார் சேனாவரையர் தெய்வச்சிலையார், கல்லாடர் முதலினோராவர். பொருளதிகாரத்திற்கு உரைகண்டவர் பேராசிரியராவர். நச்சினார்க்கினியர் எழுத்துச் சொல் பொருளதிகாரங்கட்கும் பேருரைகண்டவராவர். இவருள் நச்சினார்க்கினியர், வடமொழியில் காவிய நாடக அலங்காரங் கட்குரைகண்ட மல்லிநாத சூரியென்னும் புலவரைப்போலத் தமிழ் மொழியிலுள்ள காவியங்கட்கும் இலக்கண நூல் கட்கு முரைகண்டுளார் என்பது அடியிற் கண்டபாட்டானது அறிவியா நிற்கும்.

"பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்நான்கும் - சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே"

என்பது செய்யுள்.

நச்சுவார்க்கினியராகிய நச்சினார்க்கினியர் இத்தொல்காப்பிய மெனும் பேரியல் நூலுக்கு முன்னுளோர் பலர் உரைகளையும் நன்கு துருவித்துருவியாய்ந்து தழுவியும், மறுத்துந் தமிழ்நெறி மரபு பிறழாதேயுரைகண்டவர் என்பது பலருமறிந்தவுண்மை. சிவஞானசுவாமிகள் சேனாவரையருரையையே சிறப்பிப்

பார். வடநூன் மதம் பெரிதுந் தழுவியிருப்பதனாற் போலும். இவ்வுரையில் பல நூல்களை மேற்கோளாகக் காட்டியிருப்பினும் பத்துப்பாட்டில் முதற் பாட்டாகிய நக்கீரதேவ நாயனரருளிய திருமுகாற்றுப்படையில் மிக மிகப் பற்றுடையவர் என்பது நன்கறியக்கிடக்கின்றது.

கிளவியாக்கம்:-

"இனைத்தென வறிந்த சினைமுதற்கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மைவேண்டும்"

என்னுஞ் சூத்திர வுரையில்

'பன்னிருகையும் பாற்படவியற்றி'

எனவும், எச்சவியலின்கண்

"முன்னத்தி னுணருங் கிளவியுமுளவே
இன்ன வென்னுஞ் சொன் முறையான"

என்னுஞ்

சூத்திரவுரையுள் "முருகாற்றுப்படையுள்"

"கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டின நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத்தலைத் தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே"

என்புழி வந்த வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்கள் ஆக்கம் பெற்றுப் பொருளுணர்த்துங்கால் 'கச்சைக் கட்டி' கழலையணிந்து. கண்ணியைச்சூடி குழலையூதி, கோட்டைக் குறித்து, பல்லியங்களை யெழுப்பித் தகரைப்

பின்னிட்டு மயிலையேறி, கொடியையுயர்த்து வளர்ந்து, தோளிலே தொடியையணிந்து, துகிலையுடுத்து, ஏந்தி, தழீஇ, தலைக்கை கொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பு எனச் செய்தெனெச்சப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க. எனவும், பிறாண்டு மெல்லாம் திருமுருகாற்றுப் படையடிகளையே எடுத்துக் காட்டாக வெடுத்துக்காட்டுவர், இவற்றால் இவர்க்கு திருமுருகாற்றுப் படையிலுள்ள ஈடுபாடு பெரிதெனத் தெரிகின்றது. உரையாசிரியரையும் சேனாவரையும் பெயர்களைச் சுட்டி மறுத்துரைப்பதும் போற்றுவதும் இவர் தமக்கேயுள்ள வாற்றலைப் புலப்படுத்தா நிற்கும். இவரைப்போன்று தமிழ் நூல்களுக்கு வேறுரைகண்டவர் யாருமிலர் என்பது வெள்ளிடை. இவர்தாம் இந் நூல்களுக்கெல்லாம் எங்ஙனமுரை கண்டனரோ அறி யோம். இக்காலத்தே புலவராயினாருள் பலர் இவர் வரைந்த உரைகள் முற்றும் பயின்றவர் மிகவுமரியர். இவர் சொற்களுக்குப் பொருள்கூறும் வனப்பு மிகவும் போற்றற்பாலதாகும். அஃது வருமாறு, கிளவியாக்கத்து திணைவழுக்காக்கின்ற,

> காலம் உலகம் உயிரே உடம்பே
> பால்வரை தெய்வம் வினையே பூதம்
> ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
> ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன
> ஆவயின் வரூஉம் கிளவி யெல்லாம்
> பால்பிரிந் திசையா வுயர்திணை மேன,

என்பது (சூத்திரம்)

சொல்நன்று-நாமகளாகிய தெய்வம்,காலம் என்றது காலக்கடவுளை, வினைவிளைந்தது—இஃது இருவினைத் தெய்வ, காலம் உலகம் என்பன, வடசொல் அன்று, ஆசிரியர் வடசொற்களை, யெடுத்தோதி இலக்கணம்

கூறார் ஆகலின் 'உலகம்' என்பது மக்கள் தொகுதியை புணர்த்தியவழி உயர்திணையாயும், இடத்தினை யுணர்த் தியவழி அஃறிணையாயும், வருதலின் ஒருசொல் இரு பொருட்கண்ணும் சென்ற தெனப்படாது இருசொல் எனவேபடும். அங்ஙனம் மக்கட்டொகுதியை யுணர்த்துங் கால் உரிப்பெயராயே உணர்தித்ற்று. ஆகுபெயர் அன்று என்றெல்லாம் உரைபகர்வர். இளமையாவது காமச் செவ்விநிகழ்வதோர் காலம், எனவும், வன்மையாவது ஒருதொழிலை வல்லுதல் எனவும், பெண்மையாவது, கட்புலன் ஆயதோர் அமைதித்தன்மை, எனவும், குடிமை யாவது குடிப்பிறப்பிற்கேற்ற வொழுக்கம் எனவும் ஆண்மையாவது— ஆளுந்தன்மை எனவும், பொருளு ரைப்பனவும் பிறவும் ஆண்டாண்டு நோக்கியாய்ந்து இன்புறற் பாலனவாம். வேற்றுமைதெரிந்த நாற்பால் அந்தணர், அரசர் வணிகர் வேளாளர், எனவேயாம் எனலை யாண்டுங் குறிப்பிடுகின்றார். பின்னர் அப்பால் (அவை) வேறு பெயர் உற்றன போலும். இவர் வைதி கசைவர் என்பது இவர் உரைப் பகுதியால் நன்கறியப் பெறும். பத்துப்பாட்டாகிய, பெரு நூல்கட்கேற்பப பொருளுரைப்பது, உரைவகுத்திருப்பது மிகமிகப் போற்றற்பாலதாகும்.

"தொல்காப் பியத்திற்றொகுத்த பொருளனைத்தும்
எல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்--சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் கடரெறிப்பக் கண்டு"

என்னும் வெண்பாச் செய்யுள் இவர் இயற்றியருளிய தொல்காப்பிய உரையின் சிறப்பைவிளக்க வெழுந்த தாகும்.

இப் பேரறிஞர்பெருமான் பெருமைகளைப் பின் வரும் உரைச்சிறப்புப்பாயிர வகவற்பா விளக்கா நிற்கும். அஃது வருமாறு:—

“பாற்கடற் போல பரந்த நன்னெறி
நூற்படு வான்பொருள் நுண்ணிதி னுணர்ந்து
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தின்
நாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
எழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்றும்
இழுக்கற வாய்ந்த வழுக்கில்தொல் சீர்த்தித்
தொல்காப் பியமெனும் தொடுகடற் பரப்பை
மறுவும் குறைவு மின்றி யென்றும்
கலையின் நிறைந்த கதிர்மதி யென்ன

நிலையுடைக் கலத்தின் நெடுங்கரை காணாக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்
உரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்
ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டும் உணர்பவர்க் கெல்லாம்
உரையற முழுதும் புரைபட வுரைத்தும்
ஒலித்திரைத் தலத்தின் உணர்ந்தோ ருரைக்கும்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்

குள்ளுறை யுவமும் ஏனை யுவமும்
தெள்ளிதின் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த

நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மாமணி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்

நல்லறி வுடைய தொல்பே ராசான
கல்வியுங் காட்சியும் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவன் எழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாசன்
நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய

தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்
நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்
இருவினை கடியும் அருவியம் பொதியில்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க

ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே''

இப்பெற்றியுற்ற வொப்பில் புலவரால் ஆய்ந் தாய்ந்து கண்ட தொல்காப்பியச் சொல்லதிகார உரை

யிற்காணும் நயங்கள் கற்றார் கண்டு களித்தற்குரியன வாகும்.

இப் பேருரைகண்ட பெரியார் பாரத்துவாச கோத்திரத்தவர் என்றும், மதுரைமாநகரைச் சார்ந்தவர் என்றும், வடமொழி, தென்மொழியின்கண்உள்ள விலக்கண விலக்கியங்களை முற்றக்கற்றவர் என்றும் திருமுருகப்பெருமானையே, யுருகவழுத்திப் பெரும்புகழ்பெற்றவரென்றும் முக்கண் உடையப்பன் திருப்பெயராகிய நச்சினார்க்கினியர் தம்பெயரையே சூட்டப்பெற்றவர் என்றும் இவர் இப்பெரு நூல்கட்குரைவகுத்திலரேல் நுண்பொருள் காண்டல் அரிதினும் அரிதென்றும், இலக்கண நூல்கட்குத் துருவித் துருவியுரைவகுப்பதில் கண்ணுங் கருத்தும் உடையவர் என்றும் இருவருடைய உரை நூல்களாலறியக்கிடக்கின்றது.

பலநூற்றாண்டுகட்டு முற்பட்ட தொல்காப்பிய நூற்கு உரைகாண்டல் பழையவழக்கும் காலப்போக்கும் அறிந்துணரும் நுண்மாண் நுழைபுலமீக்கூர்ந்தார்க் கன்றி இயலாதென்பதொருதலை. சிந்தாமணிக்கிரு முறையுரைகண்டாரெனும் வழக்குமிதனையறிவியா நிற்கும். இந்தவன்மை, நச்சினார்க்கினியர் தமக்கியல் பாயமைந்த தெனல்க் கூறல் வேண்டுமோ!

''ஓசை யொலியெலா மானாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே
பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி''

தஞ்சாவூர்
பிலவ, பங்குனி,
17—3—62,

இங்ஙனம், பண்டித வித்துவான்
**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**
*தமிழாராய்ச்சியாளர்*
*சரசுவதிமால் நூல் நிலையம்.*

# தொல்காப்பியர் வரலாறு.

தொல்காப்பியக்குடி:- மதுரைக்கருகி லொரு பட்டிணம். பழையகாப்பியக்குடி சீகாழிக்கு வடக்கில் காப்பியக்குடியென ஓர் ஊர் உள்ளது. அங்குத் தொல்காப்பிய முனிவர் சிலையொன்று கண்டெடுக்கப்பட்டு, அச்சிலைக்கொரு சிறு திருக்கோயிலும் எடுப்பித்தனர், என்று கூறுகின்றனர். கவியின் வம்சத்தினர் என்றும், அவர்கள் காவியர் என மாறினரென்றும் பின்னர்க் காப்பியர் என மருவி வழங்குகின்றதென்றும் ஆய்கின்றனர். கப்பியர் என்பதே முதனீண்டு காப்பிர் என வந்ததென ஒருசாரார் கருதுகின்றனர். பழைமையினைக் கடைப்பிடிக்குமரபினை யுடையவர் என்பது அதற்குப் பொருளாகும். இப்பெற்றிவாய்ந்த குடியிற் பிறந்த பெற்றியானே தொல்காப்பியர் எனப் பெற்றனர் போலும்.

இத்தொல்காப்பியர் வரலாறு வருமாறு:-

இவர் சமதக்நி முனிவர் குமாரர் எனவும் அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருள் தலைமை வாய்ந்தவரெனவும், இவர் தமிழில் ஐந்திலக்கணம் கண்டவர் எனவும் திரண தூமாக்கினி யென்னும் பெயருடையவர் எனவும் அகத்திய முனிவர் இவரைச் சுவர்க்கம் புகாதிருக்கச் சபித்ததனால் ஆசிரியரையும் அவ்வாறே சபித்துவிட்டுப் பாண்டியன் மாகீர்த்திசபையில் அதங்கோட்டாசான் முன்னிலையில் தாமியற்றிய நூலை அரங்கேற்றியவர் எனவும் ஒரு வரலாறு காணப்பெறுகின்றது.

புன்னாலைக் கட்டுவன் கணேசையர் பதிப்பிற் காணும் தொல்காப்பியர் வரலாறாவது:-

தொல்காப்பிய மென்னும் இப்பேரியல் நூலைச் செய்த தொல்காப்பியர், சமதக்கினி முனிவர் புதல்வ

ரென்பதும், இவரியற் பெயர் திரணதூமாக்கினி யாரென்பதும் இந்நூற்பாயிரத்துள் 'சமதக்கினி யாருழைச்சென்று அவர்மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு'' என்று நச்சினார்க்கினியார் கூறுதலானே யறியக்கிடக்கின்றன. இன்னும் அப்பாயிரத்துள் ''தொல்காப்பியன் என்பதற்குப் பழைய காப்பியக்குடியிற் பிறத்தலின் தொல்காப்பியன் என்று பெயராயிற்று'' என்று கூறுதலானே காப்பியக்குடியிற் பிறந்தவரென்பதும், சமதக்கினி புதல்வர் என்பதனானே அந்தணர் குலத்தவரென்பதும், பெறப்படும்.

இராமயணத்துள்ளே பரசுராமர் இராமரோடு போரை விரும்பிச்சென்று அவருக்குத் தோற்றதாகவும், அவருக்கு முந்தினவராகவும் அறியப்படுதலானும் இராமராற் சீதையைத் தேடும்படி யனுப்பப்பட்ட குரங்குப் படை இடைச்சங்க மிருந்த கபாடபுரத்தை யடைந்து சென்றதாக அறியப்படுதலினாலும், இடைச்சங்கப் புலவர்களாயிருந்தோர் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் முதலாயினோர் என்று இறையனாரகப்பொருளுரை முதலியவற்றானறியப் படுதலினாலும், தொல்காப்பியரும் இராமர் காலத்திற்கு மிகவுமுந்தியவராவர் என்பதும், தொல்காப்பியரிருந்து பல்லாயிரம்யாண்டுகள் சென்றன என்பதும் அறியத்தக்கன. ஆயினும் இக்காலத்துச் சரித்திர ஆராய்ச்சிக் காரருட் சிலர் மூவாயிரம் யாண்டென்றும் ஆறாயிரமாண்டு என்றும், இப்படிப் பலவாறாகக் கூறுகின்றனர். தொல்காப்பியப் பொருளதிகாரப்பதிலாளர் இராவ்பகதூர் சி. வை தாமோதரம் பிள்ளையவர்கள் அப்பொருளதிகாரப்புரையில் பன்னீராயிரம் ஆண்டுகளுக்குக குறையாதென்று கூறுயிருக்கின்றனர்.

தமிழ் இலக்கிய வரலாறு வரைந்த கா. சுப்பிரபணிப்ப் பிள்ளையவர்கள். கி.மு. எழுநூறு யாண்டு

களுக்குப் பிற் படாதென்கின்றனர். அவ்வாறு கூறி னும் இவர்காலம் பன்னீராயிரம் யாண்டுகளுக்கு மிக முற்படுமன்றிப் பிற்படாது.

இனி இடைச்சங்கத்தாருக்கு இந்நூல் இலக்கண மாக இருந்ததாக அறியப்படுதலானே முதற் சங்கத்திறு தியில் இத்தொல்காப்பியம் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது ஆராய்ந்துணரத்தக்கது.

இவர் வடமொழியையும் நன்கு கற்றவரென்பது 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்பதனானறியத் தக்கது. இவர் அகத்தியரோடு தென்னாடு புக்கபின் அவர்பாற் செந்தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்று அவருடைய முதன் மாணாக்கராய் விளங்கினர் அகத்தியர்பால் இவருடன் கற்றவர்கள் அதங்கோட்டா சிரியர், பனம்பாரனார். செம்பூட்சேய் வையாபிகர், அவிநயனார், காக்கைபாடினியார், துராலிங்கர் வாய்ப் பியர், கழாரம்பர், நற்றத்தர், வாமனர் என்னும் பதினொருவருமாவர். தொல்காப்பியர் முதலாகப் பன்னிருவர் அகத்தியர்பால் ஒருங்கு கற்றவர் என்பது,

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த',

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யு ளானும்,

"வீங்குகடலுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை யகத்திய னென்னும்
அருந்தவ முனிவ னாக்கிய முதனூல்

பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்''

என்னும் பன்னிருபடலச் செய்யுளானு மறியப்படும்

இவராலியற்றப்பட்ட இத்தொல்காப்பிய மென்னும் நூலுக்கு உரைசெய்தோராகத் தெரியப்பட்டவர் இளம் பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர் நச்சினர்க்கினியனார், தெய்வச்சிலையார் என்னும் அறுவராவர். சேனாவரையரும், தெய்வச்சிலையாரும் சொல்லதிகாரத்திற்கு மாத்திரமே உரை செய்தனர்.

இத்தொல்காப்பிய மொன்றே முன்னோரால் எமக்குக் கிடைத்த மிகப்பழையதொருநிதியாம். இதன் கண் சில சூத்திரங்கட்குக் கடைச்சங்க நூல்களிற்கூட உதாரணமில்லாமையை நோக்கும்போது இதன்பழமை எத்துணை என்பதை நாம் அறிந்துக்கொள்ளலாம். பன்னிருபடலத்துள் ஒருபடலமும் இவராற்செய்யப்பட்டதென்பர். இவரைப்பற்றிய உண்மைச் சரிதங்கள் கிடைக்காமையால் இஃது மிகச்சுருக்கி வரையப்பட்டது என்க என்பதாம். தொல்காப்பியத்தேவர் என்பார் திரிப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் பாடினோராவர். இவரும் அவரும் வேறேயாவர். இவர் இரட்டையரால் போற்றப்பட்டவர்.

தொல்காப் பின்றன் றுணையடி வாழ்க.
நச்சினார்க்கினியன் நற்றாள்வாழ்க,
வாழ்க தமிழ்!

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

## நச்சினார்க்கினியம்

---

### சொல்லதிகாரங் கிளவி யாக்கம்.

### உயர்திணை.

1. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
யஃறிணை யென்மனா ரவரல பிறவே
யாயிரு திணையி *னிசைக்குமன் சொல்லே.

என்பது சூத்திரம். (இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின்) மேற் பாயிரத்துள், எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடியென நிறுத்த முறையானே யெழுத் துணர்த்திச் சொல்லுணர்த்துகின்றா ராதலிற்சொல்லதி கார மென்னும் பெயர்த்தாயிற்று. அது, சொல்லை புணர்த்திய முறைமையென விரியும்.

சொல், என்றது எழுத்தினான் ஆக்கப்பட்டு இரு திணைப் பொருட்டன்மையும் ஒருவனுணர்தற்குக் கருவி யாம் ஓசையை. ஈண்டாக்கப் படுதல் என்றது. ஒரு சொற் கூறுமிடத்து ஓரெழுத்துக் கூறுவதல்லது ஒரு சொல்லாய் முடியு மெழுத்தெல்லாஞ் சேரக் கூறலா காமையின் அவ்வெழுத்துக்கள் கூறியவடைவே போயிற் றேனுங் கேட்டோர் கருத்தின்கண் ஒரு தொடராய் நிலைபெற்று நின்று பொருளை யறிவுறுத்தலை. ஆயின் ஓரெழுத் தொருமொழிக் காக்குதலின்றா லெனின், ஓரெ ழுத்தொரு மொழியைக் கூறியக்கால் அதுவுஞ் செவிப்புல

---

* இசைக்குமன சொல்லே (பா. பே.)

லனாய்க் கருத்தின்கணி கழ்ந்துபின்னர்ப் பொருளையாக்குதலின், அதுவுமாக்குந் தன்மையையுடைத்தாயிற்று.

இருதிணைப் பொருளுமாவன, ஐம்பாற் பொருளின் பகுதியாகிய காட்சிப் பொருளுங் கருத்துப் பொருளும். அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய வியங்கு திணையும், நிலைத் திணையுமாம் இவையெல்லா மைம் பாலா யடங்கின.

இனிப் பொருட் டன்மையாவது, மக்கட் டன்மையும் இயங்குதிணைத் தன்மையும் நிலைத்திணைத் தன்மையும் ஆம். இத்தன்மை யொரு பொருட்குக் கேடு பிறந்தாலுந் தனக்குக் கேடின்றித் தானொன்றேயாய்ப் பலவகைப்பட்ட பொருடோறும் நிற்குமென் றுணர்க.

கருவியாவது, அப்பொருட்டன்மையை யொருவனுணர்தற் கவ்வோசைக் கருவியாய் நிற்றல். இதனை ஐம்பொறிகள் ஒருவன் பொருள்களை யுணர்தற்குக் கருவியாய் நின்றாற் போலக் கருவியாய் நிற்குமென் றுணர்க.

இனி, யோசையைச் சொல்லென் றீரேற், கடலொலி சங் கொலி, விண்ணொலி முதலியனவுஞ் சொல்லாகா வோவெனின் சொல் (சொல்லாகா வொலியென) இது முன்பியானுணர்ந்த வெழுத்தென்றே பின்பு கூறியக்காலும் உணர நிற்றலிற் கேடின்றி நிலைபேறுடைய தாயிற்று. இவை யங்ஙன முணர்த லாற்றாமை யானும், எழுத்தினான் ஆக்கப்படாமையானும் நிலைபேறு இல வாயின; ஆதலிற் சொல்லெனப்படா. அன்றியும், ஓசை, அரவம், இசை என்பன போலன்றிக் கிளவி, சொல், மொழி யென்பன வெழுத்தினான் ஆகிய வோசையை யுணர்த்தும். முற்கு, விளை* முதலாயின வெழுத்தினானாக்கப்படாமையிற் சொல்லாகா.

* முதலியன. (பா. பே.)

இனி யொரு சாரார், எழுத்தினா னாகிய வோசை யையுங் கெடுமென்பர். உரையாசிரியரும், சொல்லென்ப தெழுத் தினானாக்கப்பட்டுத் திணையறிவுறுக்கு மோசை யென்றும் தன்னை யுணரநின்றவழி யெழுத்தெனப்படும், தான் இடைநின்று பொருளுணர்த்தியவழிச் சொல் லெனப் படுமென்றுங் கூறினார், இக்கருத்தே பற்றி.

இனிச் சேனாவரையர், சொற்பொருள் குறித்துவரும் என்றாராலெனின், ஒருவன், பொருட்டன்மையை யுணர் தற்குச் சொற் கருவியாய் நிற்றலன்றித் தனக்கோ ருணர்வின் மையிற்றானொரு பொருளைக் கருதிநிற்ற லின்றென மறுக்க.

அச்சொல்லை யெட்டு வகையானும், எட்டிறந்த பல வகை யானு முணர்த்துப. இரண்டு திணையும், ஐந்து பாலும் ஏழு வகைவழூவும், எட்டு வேற்றுமையும், ஆறொட்டும், மூன்றிடமும், மூன்றுகாலமும், வழக்குஞ் செய்யுளுமாகிய விரண்டி டமும், எனவெட்டுவகை யானும் உணர்த்துப. இனியெட்டிறந்தபலவகை யாவன சொன்னான்கு வகையவென்றலும், அவற்றையே பல வாகப் பகுத்தலும் விகாரவகையும், பொருள்கோள்வகை யும் செய்யுட்குரிய சொன்னான் கென்றலும் பிறவுமாம்.

அச்சொற்றான், தனிமொழியுந் தொடர்மொழியு மென விருவகைப்படும். தனிமொழிப் பொருள் விளக்கு மாறு

**''நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்**
**கலந்த மயக்க முலக மாதலின்**
**இருதிணை யைம்பா லியனெறி வழா அமைத்**
**திரிவில் சொல்லொடு தழா அல் வேண்டும்''**

என்னுமரபியற் சூத்திரத்தா னுணர்க.

தொடர்மொழி, இருமொழித்தொடரும் பன் மொழித் தொடருமென விருவகைப்படும். அவைதொட ருங் காற் பயனிலைவகையானும் தொகைநிலை வகைாய

னும் எண்ணு நிலை வகையானும் தொடரும். இனி வட நூலோர் கூறிய வாறே யவாய் நிலையானும், அண்மை நிலையானும், தகுதியானும்தொடரு மென்றலுமாம்.

(உ-ம்) சாத்தன், உண்டான், மன், நனி என்பன தனி மொழி.

சாத்தன் வந்தான்இதுபயனிலைத் தொடர்
யானைக்கோடு — இது தொகைநிலைத் தொடர்
நிலம்நீர் — இஃது எண்ணு நிலைத்தொடர். இவை யிருமொழித்தொடர். அறம் வேண்டி யரசனுலகம் புரந் தான் என்பது பன்மொழித்தொடர்.

வழுக் களைந்து சொற்களை யமைத்துக் கோடலின் இவ்வோத்துக் கிளவியாக்க மென்னும் பெயர் பெற்றது இனிச் சொற்கள் பொருள்கண் மேலாமாறுணர்த்தின மையிற் கிளவியாக்க மென்னும் பெயர் பெற்ற தென்று மாம். ஒருவன் மேலாமாறிது, ஒருத்திமேலாமாறிது, பலர்மேலாமாறிது, ஒன்றன்மேலாமாறிது, பலவற்றின் மேலாமாறிது, வழுவா மாறிது, வழுவமையுமாறிது எனப் பொருள்கண் மேலா மாறுணர்த்தினமையின்.

இனி யித்தலைச் சூத்திரம் சொல்லும் பொருளும் வரையறுத்துணர்த்துகின்றது.

(இ-ள்) மக்கட் சுட்டே—மக்களாகிய நன்கு மதிக்கப் படும் பொருளை, உயர்திணை யென்மனார் - உயர் திணை யென்று கூறுவர் தொல்லாசிரியர், அவரல பிறவே — அம்மக்களல்லாத பிறபொருளை, அஃறிணை யென்ம னார் — அஃறிணை யென்று கூறுவர் தொல்லாசிரியர், ஆயிருதிணையின் இசைக்கு மன் சொல்லே — அவ்விரு திணைப் பொருள்களையும் உணர்த்துஞ் சொற்கள் (என்றவாறு)

ஏகார மூன்று மீற்றசை. இனைத்தென வறிந்த வும்மை விகாரத்தாற் றொக்கது.

இசைப் பிசையாகும் *என்பதனால் இசைப்பு, ஒலிப் பொருட்பந்த தெனின் (ஒலிக்கு மென்றும் பொருள்) சொல்லுக்குப் பொருளுணர்த்தும் வழியல்ல தொலித்தல் கூடாமை யின் உணர்த்து மென்னுந் தொழிலின்னை யிசைக்கு மென்னுந் தொழிலினாற் கூறினார். இதுவு மோர் மரபுவழுவமைதி. பொருளை யுணர்த்துவான் ஒரு சாத்தனே யெனினும் அவற்கது கருவியாக வல்லது ணர்த்தல் ஆகாமையின், அக்கருவி மேற்றொழிலேற்றிச் சொல்லை யுணர்த்தும் (சொல் உணர்த்தும்) என்று கருவிக் கருத்தாவாகக் கூறினார். இவ்வாசிரியர் எவ்வி டத்தும் சொல்லைக் கருவிகருத்தாவாகக் கூறுமாறு என்று †மேலே யுணர்க அது

(அஃது) "எல்லாச் சொல்லும் பொருள் குறித்த னவே" என்றாற் ‡போல்வன.

இதனாற் பொருளிரண்டு, சொல்லிரண்டென வரை யறுத்தார் (இச்சூத்திரத்தால்)

உயர்திணை யென்ப துயர்ந்த வொழுக்கமென விறந்த கால வினைத்தொகை. அது ஆகுபெயராய் மக்கட்பொருளை (அப்பொருளை) யுணர்த்தி நின்றது. இதனைப் பண்புத் தொகை யென்பாருமுளர். அது பொருந்தாது. என்னை இதுகாலந் தோன்றி நிற்றலின்.

மக்கட் சுட்டென்பது மக்களாகிய சுட்டென விரு பெய ரொட்டுப் பண்புத்தொகை. சுட்டு நன்கு மதிப்பு. அஃது ஆகு பெயராய் மக்கட் பொருளை யுணர்த்தி நின்றது. சேனாவரையரிதனைப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த வன்மொழித் தொகையென்றாராக லின் (என்றாராலோவெனின் இருபெயரொட்டு ஆகு பெயருக்கு மன்மொழித் தொகைக்கும் வேறுபாடுணரா மற் கூறினமையி னதுபொருந்தாது. என்னை வேறு

* என்றதனால் (பா. பே.) † மேலே காண்க (பா. பே.)
‡ போல்வது ஷை

பாடென்னில் ஈண்டாகு பெயராய் நின்ற நன்குமதிக்கும் பொருளும் மக்களையே யுணர்த்தி நிற்கும். அன்மொழித் தொகை யவ்வாறன்றி வெள்ளாடையென்றால் வெண்மையு மாடையுமின்றி யுடுத்தானையே (யுடுத்தாளையே) யுணர்த்தி நிற்கும் இது, தம்முள் வேற்றுமை.

"அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்" என்புழி 'வெள்ளாடை" யென்புழித் தொக்க விருமொழி மேலும் நில்லாது உடுத்தானென்னும் (உடுத்தாளென்னும்) அன்மொழி மேனின்ற தென்றுதாரணங் காட்டி' னார். (சேனாவரையரும் என்றுணர்க)

அஃறிணை 'அவ்வொழுக்கம் அல்லவாகிய வொழுக்கம்' எனப்பண்புத்தொகை. அது பொருளை யுணர்த்தி நின்றது ஆகுபெயராய்.

'என்மனார்' என்பது ஓர் ஆரீற்று நிகழ்கால முற்று வினைத் திரிசொல். 'என்றிசினோர்' என்பது அவ்வாறு வந்த இறந்த கால முற்றுவினைத் திரிசொல்.

'மக்கடாமே யாறறி வுயிரே'

என்று மக்கள் உயர்ந்தமை மரபியலிற் கூறுப. 'அவரல' வென்னாது 'பிற' என்றார், அஃறிணை உயிருள்ளனவும் இல்லனவுமாகிய விருகூறும் அடங்குதற்கு.

'மறங்கடிந்த வருங்கற்பின்' (புறம். **166.13.**) எனவும் 'சில் சொல்லிற் பல்கூந்தல்' எனவும் பிறாண்டும் சான்றோர் செய்யுளில் 'இன்' சாரியை யுருபுபற்றியும் பற்றாது நிற்றல் நோக்கி யுரையாசிரியரும் 'ஆயிரு திணையினையும்' என விரண்டாம் உருபு விரித்துப் பொருள் கூறினார்.

இனிச் சேனாவரையர் 'மக்கட்சுட்டு' என்பதற்கு மக்களாகிய சுட்டு யாதன்கணிகழும்? அது மக்கட்சுட்டு என்றும், ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே யென்பதற்குச் சொன்னிகழ்ச்சிக்குப் பொருள் இடமா

தலின் ஆயிருதிணையின் கண் என ஏழாவது விரிக்க, என்றும் பொருள் கூறினாரால் எனின் முன்னர் மக்கள் என்று கருதப்படும் பொருளை உயர் திணை? யென்ப என்று அவர் கண்ணழிவு கூறியது, ஒரு பொருளிடத்து நின்ற மக்கள் தன்மையாலே ஒருவற்கு அப்பொருள் மக்களென்று கருதப்பட்டதென்று பொருடந்து நின்றது. பின்னர் மக்களாகிய சுட்டு யாதன்கணிகழும்? என்றது நோக்குகின்றவர்க்கு மக்களாகிய கருத்து யாதொரு பொருளிடத்துத் தோன்று மென்று பொருடந்தால், வெள்ளாடை யென்னும் பண்புத்தொகைபோல அக் கருத்து மக்களாகாமையிற் பண்புத்தொகை யன்றாம். அது மக்கட் சுட்டென்றதற்கு, அப்பொருண் மக்கட் சுட்டென்று அவர் கூறிய பொருளானும் மக்களையே தோற்றுவித்து நிற்றலின், அன்மொழித் தொகையன் றாம். அன்றியும் ஆசிரியர் ஈண்டு ஒருபொருள் நின்று தன்னை யொருவற்கு உணர்த்துமாறும் ஒருவன் அதனை யுணருமாறும் ஆராய்கின்றா ரல்லர்.

உயர்ந்த வொழுக்கமென்று முதனூலாசிரியர் கூறிய குறி உலகத்தார்க்கு விளங்கப் பொருள் கூறக்கருதி யதன் பொருளே பயப்பத் (அதன்பயன் எய்து விப்பத்) தாமு மக்களாகிய நன்கு மதிக்கும் பொருமௌன்று அச் சொற்குப் பொருள் கூறினார் என்றுணர்க. அவர் கூறிய வுயர்ச்சி தோன்றத் தாமும் நன்கு மதிப்பென்று பொருள் கூறினார், தாமும் உயர்திணை யென்றே யாளுதல் பற்றி:

இனி, இசைப்பிசையாகும் என்பதனால் திணையிட மாகச் சொற்கள் நின்று பிறவற்றை யிசைத்தல் வேண் டும். அதனானது பொருந்தாது. அன்றியும் ஆசிரியர்க் கங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தாயின். ஆடூஉ வறிசொல் முதலிய சூத்திரங்களெல்லாம் சொன்னிகழ்ச் சிக்குப் பொருளிடமாக ஆடூஉவின் கண் நிகழும்சொல்

வின்கண் நிகழும் சொல்) என்றே சூத்திரஞ்செய்வர். அங்ஙனஞ் செய்யாது ஒருவன் ஆண்மகனை யறியுஞ் சொல்லும், பெண்டாட்டியை யறியுஞ் சொல்லுமென வறியு மென்னும் பெயரெச்சஞ் சொல்லென்னுங் கருவிப் பொருளைக் கொண்டு முடியச் சூத்திரஞ் செய்தலின் ஆசிரியர்க் கங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தன்மை யறிக.

மன் னென்பது வினை பற்றிய அசைநிலை யிடைச் சொல்லாய் நின்றது.

உயர்திணைப்பாற்பகுப்பு

(2) ஆடூஉ வறிசொற் மகடூஉ வறிசொற்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
யம்முப் பாற்சொல் லுயர்திணை யவ்வே

இது (இஃது) உயர்திணைப் பாலைப் பகுக்கின்றது

(இ-ள்) ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் - ஒருவன் ஆண்மகனை அறியுஞ் சொல்லும், பெண்டாட்டியை அறியுஞ் சொல்லும், பல்லோர் அறியுஞ் சொல்லொடு சிவணி—பலரை அறியுஞ் சொல்லொடு சிவணு கையினாலே, அம்முப்பாற் சொல்—அம்மூன்று கூறாகிய சொல்லும், உயர்திணைய - உயர்திணையினை யுடைய வாம் என்றவாறு.

ஆண் பன்மையும் பெண்பன்மையும் (அவ்) இவ்விருவர் (உம்) தொக்கபன்மையும் அன்றிப் பன்மைப் பொருள் வேறின்மையின், ஆடுஉவும் மகடூஉவும், பல்லோரறியுஞ் சொல்லொடு சிவணு கையினாலே மூன்று கூறாயிற் றென்றார். எனவே யல்லுழி யிரண்டேயா மென்பது கருத்து.

செய்தெ னெச்சம் காரண காரியப் பொருட்டாய் நின்றது. உயர்திணைய என்ற ஆறாம் வேற்றுமையாய் நிற்குஞ் சொல் ஈண்டுப் பெயராகாது வினைக்குறிப்பாய் நின்றது.

இனிச் சிவண வெனத்திரிப்பாரு முளர்.

இவ்வாறன்றிச் சிவணி யுயர்திணையவாம், என்பார்க்கு முப்பாற் சொற்கும் பயனிலையாய் நின்ற வுயர்திணையவாம் என்னும் வினைக்குறிப்பு ஆடூஉவறி சொல் மகடூஉவறிசொல் என்னும் இரண்டன் வினையாகிய 'சிவணி' என்னும் செய்தெனெச்சத்திற்கு வினைமுதல் வினையாயிற்று. உயர்திணையவாகல் ஆடூஉ வறி சொற்கும் மகடூஉ வறிசொற்கும் எய்து தலின், ஆடூஉ, மகடூஉ என்பன பண்டையார் வழக்கு. அறி சொல் அதற்குக் கருவியாகியசொல். (உ)

அஃறிணைப் பாற்பகுப்பு.

ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொல் லஃறிணை யவ்வே
இஃது அஃறிணைப் பாலைப் பகுக்கின்றது.

(இ-ள்) ஒன்றறி சொல்லே பலஅறி சொல்லென்று- ஒருவன் ஒன்றனை யறியுஞ் சொல்லும், பலவற்றை யறியுஞ் சொல்லும் என்று சொல்லப்பட்ட, ஆயிருபாற் சொல் அஃறிணைய-அவ்விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணை (யினை) யுடையவாம் என்றவாறு.

பேடியுந் தெய்வமுந் திணைப்பால்களு ளமையுமாறு.

பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென வறியுமந் தந்தமக் கிலவே
யுயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.
இஃது ஐயமறுத்த னுதலிற்று. (ஐயமறுக்கின்றது)

மேற்றொகையு ளொழிந்த தெய்வத்தையும் வகையு ளொழிந்த பேடியையும் இவ்வாறா மென்றலின்.

(இ-ள்) உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய- ஒருவன் உயர்திணையிடத்துப் பெண்பாற்குரிய அமை

தித்தன்மையைக் கருதுதற்குக் காரணமான, ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்—ஆண்பாற்குரிய வாளுந் தன்மை திரிந்த பெயர்ப் பொருளும், தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக்கிளவியும்—தெய்வத்தன்மையைக் குறித்த பெயர்ப்பொருளும், இவ்வென அறியும் அந்தந் தமக் கிலவே — இவையெனத்தம் (பெயர்ப்) பொருளினை வேறறியநிற்கும் ஈற்றெழுத்தினையுடைய சொற் களைத்தமக்குடையவல்ல, உயர்திணை மருங்கிற் பால் பிரிந்திசைக்கும்—உயர்திணை யிடத்திற்குரிய பாலவாய் (பாலாய்) வேறுபட்டு இசைக்கும் என்றவாறு.

அலி அன்று என்றற்குப் 'பெண்மை சுட்டிய' என் றார். 'பெண் அன்று' என்றற்கு 'ஆண்மை திரிந்த' என்றார். இரண்டிடத்துப் பெயர்நிலைக்கிளவியுஞ் சொல்லினாற் பொருளறியப்படுதலின் ஆகு பெயராய் அப்பொருளுணர்த்தி நின்றன.

சுட்டிய வென்பது (நிலம் பூத்த மரம்) என்பதுபோ லும் பெயரெச்சம். அது, 'பெயர்நிலைக்கிளவி' என்பத னோடு முடியும். 'ஆண்மை திரிந்த' என்ப திடைநிலை. இதன் பொருள், ஆண்பாற் குரியவாளுந்தன்மை. முற் பிறப்பிற்றான் செய்த தீவினையால் தன்னிடத் தில்லை யான பெயர்ப்பொருள் என்க, என்றது. நல்வினை செய்யாத பொருளென்றவாறு. இதற்குப் பெண்மை திரிதலும் உண்டேனும் ஆண்மை திரிதல் பெரும் பான்மை.

பால் பிரிந் திசைத்தலாவது தாம் உயர்திணைப் பொருளாய் (அவற்றின் ஈற்றினால்) அவ்வீற்றினா லிசைத்தலாம்.

பேடியைப் பாலுள்ளுந் தெய்வத்தைத் திணையுள்ளு மடக்கினார்.

(உ-ம்)

பேடி வந்தாள், பேடியர் வந்தார், தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார், எனவரும்.

பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்க தற்குப் 'பேடி' என்னாது 'ஆண்மை திரிந்த' என்றார்.

'பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ? என்பதனால் பெண் அவாய் நிற்றல் கொள்க.

'அந்தம் தமக்கில' என்றதனான் நிரயப்பாலர், அலி, மகண்மா முதலியவற்றையும் இம் மூவிற்றின் என்பதனான் (ஏற்பதனால்) முடிக்க.

(உ-ம்) நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார், அலி வந்தான், அலிவந்தாள், அலியர் வந்தார். மகண்மா வந்தாள் எனவரும். (4)

ஆடூஉ வறிசொல்

னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.

இஃது ஆடூஉ வறிசொல் லுணர்த்துகின்றது.

(இ-ள்) னஃகான் ஒற்று-னஃகானாகிய ஒற்றினை யீறாகவுடைய சொல், ஆடூஉ வறிசொல்—ஒருவன் ஆண் மகனையறியுஞ் சொல்லாம் என்றவாறு.

ஏகாரம், தேற்றேகாரம்.

(உ-ம்) உண்டனன், உண்டான்,
உண்ணா நின்றனன்
உண்ணா நின்றான்
உண்பன், உண்பான்,
கரியன், கரியான். எனவரும்.

உண்டனன் உண்டான் என்புழி னகாரம் ஒழிந்த மூவெழுத்துக்களும், ஏனைப்பாற்கும் வருதலின் னகரத்தின் சிறப்பு நோக்கி 'னஃகான் ஒற்றே' என்றார். 'அன்

ஆன் என்னும் இரண்டனையுந் தொகுத்து ஊஃகான் என்றார் (மேலனவற்றிற்கும் இஃதொக்கும்). (5)

கிளவி யாக்கம்

மகடூஉ அறிசொல்

ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்.

இது மகடூஉ அறிசொல் உணர்த்துகின்றது.

(இ-ள்) ளஃகான் ஒற்று—ளஃகானாகிய ஒற்றினை யீறாகவுடையசொல், மகடூஉ அறிசொல்-ஒருவன்மகடூஉ வினையறியுஞ் சொல்லாம். என்றவாறு.

(உ-ம்) உண்டனள், உண்டாள், உண்ணா நின்றனள், உண்ணா நின்றாள், உண்பள், உண்பாள், கரியள், கரியாள் எனவரும்.

முதற்கூறிய சூத்திரத்துரைகளை யிதற்குங்கொள்க. (6)

பலர் அறிசொல்

ரஃகா னொற்றும் பகர விறுதியும்
*மாரைக்கிளவி யுட்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

இது பலரறி சொல் லுணர்த்துகின்றது

(இ-ள்) ரஃகான் ஒற்றும்-ரஃகானாகிய வொற்றினை யீறாகவுடைய சொல்லும், பகரவிறுதியும்—பகரமாகிய விறுதியையுடைய சொல்லும், மாரைக்கிளவியுட் படமூன்றும்-மாரென்னு மிடைச்சொல்லை யீறாகவுடையசொல் உட்பட மூன்றும், நேரத்தோன்றும் பலரறி சொல்லே-நிரம்பத் தோன்றும் பலரையறியுஞ் சொல் லாம் எனறவாறு.

அகரத்தோடு புணர்ந்த பகரமல்ல துயர்திணைப் பன்மையுணர்த்தாது எனறற் கீண்டுப் பகரம் என்றும், மேல் அ ஆவ என்றும் பகர வகர வுயிர்மெய் யீறாய் நிற்றல் இடம்பொடு புணர்த்துக் கூறினாராயிற்று.

* மாரைக்கிளவி யுளப்பட (பா.பே)

(உ-ம்) உண்டனர், உண்டார், உண்ணா நின்றனர், உண்ணா நின்றார், உண்பர், உண்பார், கரியர், கரியார், கூறுப வருப, ஆர்த்தார், கொண்மார், வந்தார். எனவரும்.

மாரீறு, ஆரீறு எனவடங்குமெனின் மாரீற்றின் மகர வொற்றுக் காலங்காட்டு மெழுத்தாய் முதனிலைக் கேற்ற வாற்றான் உண்பார் வருவார் என்றாற்போல வேறுபட்டு வரல்வேண்டும். அங்ஙனம் வேறுபடாமையானும் வினை கொண்டு முடிதலானும், மாரீறு ஆரீற்றின் அடங்காதாயிற்று.

ஏனைப் (பன்மையீறுகள்) பன்மைகளீறு திரிபுடைமையி னிவற்றை (நேரத்தோன்றும்) என்றார். பகர விறுதியென்றது. மொழிந்த பொருளோ டொன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்றுமுடித்த லென்பதற்கினம். 7

ஒன்றறி சொல்

ஒன்றறி கிளவி தறட வூர்ந்த<br>குன்றிய லுகரத் திறுதி யாகும்.

(இ-ள்) ஒன்றறிகிளவி—ஒருவன் ஒன்றனை யறியுஞ் சொல்,தறடவூர்ந்த குன்றிய லுகரத்திறுதியாகும்த-தறட வென்னு மொற்றுக்களை (ஊர்ந்துவந்த) யேறிநின்ற குற்றிய லுகரத்தினை யீறாகவுடைய சொல்லாம் என்றவாறு.

(உ-ம்) வந்தது, வாராநின்றது, வருவது, கரியது, கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று, குண்டுகட்டு, குறுந்தாட்டு எனவரும். 8

பலவறிசொல்.

அ ஆ வஎன வரூஉ மிறுதி<br>யப்பான் மூன்றே பலவறி சொல்லே.

இஃது அஃறிணைக்கட் பலவறி சொல் லுணர்த்து கின்றது

(இ-ள்) பலஅறிசொல்—ஒருவன் பலவற்றையறியுஞ் சொல்லாவன, அ ஆ வஎன வரூஉம் இறுதி அப்பால் மூன்று—அ ஆ வ என வரூஉம் இறுதியையுடைய அக் கூற்று மூன்றே சொல்லாம் என்றவாறு.

(உ-ம்) அ-உண்டன, உண்ட, உண்ணா நின்றன, உண்பன, உண்ப, கரியன, கரிய, கோட்டன எனவரும்.

உண்ப வென்பது பலரறிசொல்லன்றோ? வெனின் தகைத்தன, தகையாநின்றன, தகைப்பன என அன் பெற்றும் தகைத்த, தகையாநின்ற, தகைப்ப என அன் பெறாதும் நின்றாற் போலவுங் 'கானந்தகைப்பச் செலவு' என்றாற் போலவும் உண்ப வென்பதும் அன் பெறாது நின்ற வகரவீற்றுப் (பலவறிசொல்) பலவறி சொல்லும் பகரவிற்றுப் பலரறி சொல்லன்று.

ஆ—உண்ணா தின்னா எனவும், வ.உண்குவ, தின் குவ எனவும் வரும்.

இவை யன்பெறாது எதிர்காலத்து வரூஉம் வகர வொற்றூர்ந்து நின்ற வகர விறாகாவோ? எனின் குகரம் பெறுதலின் வகரவிறேயாம். வருவ, சொல்வ எனக்குகரம் பெறாத வழி யகரவிறாதலும் பெற்றவழி வகரவிறாதலும் உடையவாம். (9)

வினையில் இருதிணைமருங்கின் ஐம்பாலையுணர்த்தும்

ஈற்றெழுத்து

இருதிணை மருங்கி னைம்பா லறிய
வீற்றுநின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

இது மேற்பா லுணர்த்திய வெழுத் தினைத்தென் றும் அவை வினைக்கணின்றுணர்த்து மென்றும், வினைக்

கண்ணு மீற்றினின் றுணர்த்து மென்று முணர்த்து கின்றது.

(இ-ள்) இருதிணை மருங்கின் ஐம்பாலறிய--உயர் திணை யஃறிணை யென்னு மிரண்டு திணைக்கண்ணும் உளவாகிய ஒருவன் ஒருத்திபலரொன்று பலவென்னும் (ஐந்துபாலினையும்) ஐந்துபாலுமறிய, ஈற்றுநின்று இசைக்கும் பதினோரெழுத்தும்-அவ்வச் சொல்லி னிறு திக்கணின் றொலிக் கும்பதினோரிடைச்சொற்களும், தோற்றந்தாமே வினையொடு வருமே-பாலுணர்த்துதற் குப் புலப்படுதற்கண் வினைச்சொற் கீறாய்ப் புலப்படு மென்றவாறு.

பதினோ ரிடைச்சொல்லையும் பதினோ ரெழுத் தென்றார், எழுத்தினாற் சொல்லாதல் பற்றி. இது கருத்தாதல் 'மாரைக் கிளவி' என்றதனாற் பெற்றாம். ஈற்றி னின்றிசைக்கும் என்றது. னகாரம் முதலிய விரண்டற்கும் ஞாபகம். அல்லன வற்றிற் கநுவாதம். அவை, னகாரமும், ளகாரமும், ரகாரமும், பகாரமும், மாரும், துவ்வும். றுவ்வும் (டுவ்வும்), அவ்வும், ஆவும் (வவ்வும்) இதுவிரித்தது, தொகுத்தது, வினை யியலுள் வினைக்கீறு பற்றி யோதிப் பெயரியலுட் பெயர் கடமை யெடுத்தோதினமை யானும், இப்பதினோரீறும் பெயர்க் கட் டிரிபுடையவாய் வருதலானும், பெயர்க்கிவ்விறுகள் கோடலாகாமையு முணர்க. (10)

ஒருபாற் சொல் ஏனைப்பாற் சொல்லுடன் மயங் காமை

வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கற் கூடா தம்மர பினவே

இது வழுவற்க என்று காத்தலும் வழுவமைக என்று (வழுவியமைக) காத்தலு மென்னு மிரண் டனுள் வழுவற்க வென்று காக்கின்றது.

(இ-ள்) வினையிற்றேன்றும் பாலறி கிளவியும்—வினைச் சொல்லான் விளங்கும் பாலதறியப்படும் பொருளும், பெயரிற்றோன்றும் பாலறிகிளவியும்—பெயர்ச்சொல்லான் விளங்கும் பாலறியப்படும் பொருளும், மயங்கல்கூடா— (ஒன்றோ டொன்றை) ஒன்றனோடொன்ற மயங்கச் சொல்லுதல் பொருந்தா, தம் மரபின — தத்தமிலக்கணத்தாலே சொல்லுதலுடையவென்றவாறு.

சொல்லென்றா ரதனானுணரும் பொருளைப் (பால்) பான் மயங்காதெனவே திணைமயங்காமையுங் கூறிற்றாம்.

(உ-ம்) உண்டானவன், உண்டாளவள், உண்டாரவர், உண்டதது, உண்டனவவை இவை வினைநின்று (பெயர்மேல்) பெயர்மேற்றத்தமரபினான் வந்தன.

அவனுண்டான், அவளுண்டாள், அவருண்டார், அதுவுண்டது, அவையுண்டன — இவைபெயர்நின்று (வினைமேல்) வினைமேற்றத்த மரபினான் வந்தன

வினைச் சொல்லான் விளங்கு மெனவே யதனினுள்ள காலமுமிடனு மயங்காமையும் பெற்றாம். (அவை) உண்டே னெருநல், உண்ணா நின்றேனின்று, உண்கு நாளை, யான்வந்தேன், யாம்வந்தேம், நீ வந்தாய், (நீவிர்) நீர்வந்தீர். எனவரும்

இனி யுய்த்துக் கொண்டுணர்த லென்பதனாற்றத்த மரபின வென்பதனைப் பிரித்து, வேறோர் தொடராக்கி மரபு மயங்காமையுங்கொள்க. அவை யானை மேய்ப்பானைப் பாகனென்றும், ஆடு மேய்ப்பானை யிடையனென்றுமாம்,

(அவை, யானை மேய்ப்பானை பாகனென்றலும் ஆடுமேய்ப்பானை யிடைய னென்றலுமாம்)

இச்சூத்திரத்தாற் றிணையும் பாலு மிடமுங் காலமும் மரபும் வழுவாமற் காத்தார்.

இனி, 'மயங்கல் கூடா' வென்பதனானே, மயங்குதலு முண்டென்பது, பெற்றாம். அம்மயக்க மெழுவகை யென்பதுரையிற் கோடும். (அவை) இவை, திணைமயக்கமும், பான்மயக்கமுங் காலமயக்கமு மிடமயக்கமுஞ் செப்பு மயக்கமும் வினாமயக்கமும், மரபு மயக்கமு மெனவேழாம். இஃவ மயங்கு மெனவே வழுவாதல் பெறறாம்.

உண்டானது, உண்டானவை, உண்டாளது, உண்டாளவை, உண்டாரது, உண்டாரவை, உண்டதவன், உண்டனவவன், உண்டதவள், உண்டனவவள், உண்டதவர், உண்டனவவர்—இவைதிணைவழு.

உண்டானவள், உண்டானவர், உண்டாளவன், உண்டாளவர், உண்டாரவன், உண்டாரவள், உண்டதவை, உண்டனவது: இவைபால்வழு—இவை வினை நின்று பெயர்மேல் வழீஇயின.

அவன் வந்தது, அவன்வந்தன, அவள்வந்தது, அவள் வந்தன, அவர்வந்தது, அவர்வந்தன, அதுவந்தான், அவை வந்தான், அதுவந்தாள், அவைவந்தாள், அது வந்தார், அவை வந்தார்—இவை திணைவழு.

அவன்வந்தாள், அவன்வந்தார், அவள்வந்தான், அவள்வந்தார், அவர்வந்தான், அவர்வந்தாள், அது வந்தன, அவை வந்தது—இவைபால்வழு. இவை பெயர் நின்று வினைமேல் வழீ இயின.

செத்தானைச் சாமென்றல் காலவழு.

யானுண்டான், யானுண்டாய் என்றாற் போல்வன விடவழு.

இவை பெயர் வினைகளைப் பற்றிவரும் விகற்பமுங் கொள்க.

யானை மேய்ப்பானை யிடையனென்றலும், யாடு மேய்ப்பானைப் பாகனென்றலு மரபுவழு.

செப்பும் வினாவும் வழுவாமையும், வழுவுமாறும் மேலே கூறுப. வினையியலுட் கடைக்கட் கால வழு வமைதியு மரபியலுண் மரபு வழுவமைதியுங் கூறி, யேனைய வழீஇ யமையுமா றிவ்வோத்தினுட் கூறுப.

ஆண்மை திரிந்த பெயர்

(ஆடூஉ அறிசொல்லோடு பொருந்தாமை)

ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி
யாண்மை யறிசொற் காகிட னின்றே.

இதுவுமது.

(இ-ள்) ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி— உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கு மென மேற் கூறிய வாண்மை திரிந்த பெயர்ச்சொல், ஆண்மை யறி சொற் காகிடன் இன்று—ஆடூஉவறிசொல்லோடு பொருந்து மிடனுடைத்தன்றென்றவாறு.

இதுவழுவற்க வெனநின்ற தாகலினீண்டுப் போதந்து வைத்தார். (12)

செப்பும் வினாவும் வழாமல் காத்தல்

செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்.

இதுவுமது.

(இ-ள்) செப்பும் வினாவும்—வினாயபொருளை யறி வுறுப்பதனையு மறியலுறவு வெளிப்படுப்பதனையும், வழாஅலோம்பல்—வழுவாமற் போற்றுக வென்ற வாறு.

செவ்வனிறையு மிறைபயப்பதுவுமெனச் செப்பிரு வகைத்து. அவற்றுளிறை பயப்பன தாஅம் வினாவெதிர் வினாதலு மேவுதலு மறுத்தலு முற்றதுரைத்தலு மூறு

வது கூறலு முடம்படுதலுஞ் சொற்றொகுத் திறுத்தலுஞ் சொல்லா திறுத்தலுமென் வெண்வகைய. உயிர் எத்தன் மைத்து? என்று வினாயவழி யுணர்தற் றன்மைத் தென் றல் செவ்வனிறையாம். உண்டியோ வென்று வினாய வழி வயிறு குத்திற் றென்றலு முற்றதுரைத்தலா யுண் ணேனென்பது பயத்தலினிறை பயப்பதாம். கடம்பூர்க்கு வழியாதோ? வெனினிடம் பூணி யென்னாவின் கன் றென்றல் செப்புவழுவாம். (ஏனைய வழுவமைப்புழிக் காண்க.)

அறியான் வினாவும், அய்ய வினாவும், அறிபொருள் வினாவுமென வினா மூவகைத்து. உயிரெத்தன்மைத்து? என்றலறியான் வினாவொருவாற்றானு மறியப்படாத பொருள் வினாவப் படாமையிற், பொதுவகையா னுணர்ந்து, சிறப்புவகையானறியாமையின் வினாயினா னென வுணர்க. குற்றியோ மகனோ தோன்றுகின்ற (உரு) தென்றதையவினா. அறியப்பட்ட பொருளை வேறறிதலும், (வேறறியவும்) அறிவுறுத்தலு முதலிய பயனோக்கி வினாதலறிபொருள்வினா. இவ்வறிபொருள் வினாவின் கண்ணேயறிவொப்புக் காண்டலுமவனறிவு தான் காண்டலு மெய்யவற்குக் காட்டலு மடங்கின.

ஒரு விரல் காட்டி நெடிதோ குறிதோ வென்றலு (மிரண்டு விரல்காட்டி யவ்விரற் கிவ்விர னெடிதோ வென்னாமையின் வழுவாயிற்று) கறக்கின்ற வெருமை சினையோ பாலோவென்றலும் பிறவும் வினாவழுவாம்.

செப்பு ஆசிரியன் கண்ணது ஆகலானும் வினா இன்றியும் செப்பு நிகழ்தலானும் செப்பு முற் கூறினார்.

செல்வன் இன்றயும், அறியான் வினாவும், ஐயவினா வும் வழாநிலை ஆதலின், வழாஅல் ஓம்பல் என்பத னாற் கொள்க. ஏனைய வழுவமைப்புழிக் காண்க. (13)

வினாச் செப்பாகவும் வருதல்

வினாவுஞ் செப்பே வினாவெதிர் வரினே.

இது வழுவமைக்கின்றது.

(இ-ள்) வினாவெதிர்வரின்-வினாப்பொருளை ஒருவாற்றா னறிவுறுத்து வினாவிற்கு மறுமொழியாய்வரின், வினாவுஞ் செப்பே-வினாத்தானுஞ் செப்பா மென்றவாறு.

சாத்தா உண்டியோ வென்று வினாயவழி யுண்ணேனோ வெனவரும் வினா வாய் பாட்டான் வந்ததேனு முண்பே னென்னும் பொருள்பட வருதலிற் செப்பாயிற்று. இது வினாவெதிர் வினாதல். (14)

செப்பு வழுவமைதி

செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
யப்பொருள் புணர்ந்த கிளவி யான.

இதுவுமது.

(இ-ள்) செப்பே வழீஇயினும் வரைநிலை யின்று-செவ்வனிறை யாகாது செப்பு வழுவி வரினுங் கடிவுப்படாது, அப்பொருள் புணர்ந்த கிளவியான — ஒருவாற்றானவ்வினாய பொருட்கியைபுபட்ட கிளவியாதற்கண்ணென்றவாறு.

'சாத்தா உண்டியோ?' வென்று வினாயவழி வயிறு குத்திற், றெனவுற்ற துரைத்தலும், வயிறு குத்துகின்றதென மறுத்தலும், நீயுண்ணென வேவுதலும், வயிறு குத்து மென்றுறுவது கூறலும், பசித்தே னென்றும், பொழுதாயிற்றென்று முடம்படுதலுமொரு வாற்றான் வினாய பொருளை யறிவுறுத்தின. குமரியாடிப் போந்தேன், ஒருபிடி சோறு தம்மி னென்பது, சொல்லா திறுத்தல். சொற்றொகுத் திறுத்த லெப்பொருளாயினு மென்புழியு மப்பொரு ளென்புழியுங் கூறுப.

'செப்பே' என நின்ற வேகாரம், பிரிநிலை யேகாரம்; வினா நிற்பச் செப்பை *வாங்கிக்கொண்டமையான் வழீ இயினு மென்றவும்மை சிறப்பும்மை.

செபபு வழுவினு மமைக. வினா வழீஇயின விடத் தமையாதாம். (15)

செப்புக்கும் வினாவுக்கும் மரபு.

செப்பினும் வினாவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ் துணைப் பொருளே.

இது, செப்பிற்கும் வினாவிற்கும் மரபு கூறுகின்றது.

(இ-ள்) செப்பினும் வினாவினும் — செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும், சினைமுதற் கிளவிக்கு- சினைக்கிளவிக்கும் முதற் கிளவிக்கும், உறழ்துணைப் பொருளே—ஒப்புமை கருதாது மாறுபடக் கூறும் பொருளு மொப்புமை கூறப்படும் பொருளும், அப் பொருளாகும்—அவ்வப் பொருளு கவ்வப் பொருளே யாமென்றவாறு.

(உ-ம்.)

இவள் கண்ணி னிவள்கண் பெரிய
நும்மரசனி னெம்மரசன் முறைசெய்யும்
இவள் கண்ணின் இவள் கண் பெரியவோ
எம்மரசனி னும்மரசன் முறை செய்யுமோ
இவள் கண் ணொக்கு மிவள் கண்
எம் மரசனை யொக்கும் நும்மரசன்
இவள் கண் ணொக்குமோ யிவள் கண்
எம் மரசனை யொக்குமோ நும்மரசன்.

எனவரும்.

* வாங்கிக்கொண்டமைத்தலின் (பா. பே.)

தன்னின முடித்த லென்பதனா (லென்னுங்காலுந்) லெண்ணுங்காலுந் துகிரு முத்தும் பொன்னுமென வின மொத்தன வெண்ணுக. முத்துங் கருவிருந்தையும் (மணி யுங்) கானங் கோழியும், பொன்னுமென் றெண்ணற்க. (16)

மரபு வழு அமையுமாறு

தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

இது மரபு வழு வமையுமாறு கூறுகின்றது.

(இ-ள்) தகுதியும் வழக்குந் தழீஇயினவொழுகும்- ஒரு பொருட்குரிய சொல்லாற் பட்டாங்கே சொல்லுத னீர்மையன் றென்றது களைந்ததற்குத் தக்கதோர் வாய்ப்பாட்டாற் கூறு தலையு மொரு காரண மின்றி வழங்கற் பாடே பற்றி வருவதனையும் பற்றி நடக்கும், பகுதிக் கிளவி—இலக்கணத்திற் *பகுதிச்சொல், வரை நிலையிலவே-கடியப்படாவென்றவாறு.

செத்தாரைத் துஞ்சினா ரென்றலுஞ் சுடுகாட்டை நன்கா டென்றலு மோலையைத் திருமுகமென்றலுங் கெட்டதனைப் பெருகிற்றென்றலும் போல்வன தகுதி.

பண்பு குறியாது சாதிப்பெயராய் 'வெள்யாடு' வெண் களமர் 'கருங்களமரென' வருவனவுங் குடத்துள் ளும் பிற கலத்துள்ளுமிருந்த நீரைச் சிறிதென்னாது சில வென்றலு மடுப்பின் †கீழ்ப் புடை யடுப்பை மீயடுப் பென்றலும் போல் வனவழக்காம். (17)

செய்யுட் குரிய மரபு வழுவமைதி.

இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

இது செய்யுட்கு மரபு வழுவமைதி கூறுகின்றது.

---

* பக்கச்சொல் (பா. பே.) † கீழ்ப்புடைஙிய ஷெ

(இ-ள்) இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க் கொடை-இனத்தைச் சுட்டியவற்றினின்றும் விசேடிக்கப் படுதலில்லாத பண்படுத்து வழங்கப்படும் பெயரை யொரு பொருட்குக் கொடுத்தல், வழக்காறல்ல செய்யு ளாறு-வழக்கு நெறியல்ல, செய்யுணெறி யென்றவாறு.

செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்
வெண்டிங்களுள் வெயில் வேண்டினும், (புறம்.)

எனவிவை கருஞாயிறுங் கருந்திங்களுமாகிய வினமின்மை யின் விசேடிக்கப் படாவாயினுஞ் செய்யுட் கணியாய் நிற்ற லினமைத்தார். எனவே, வழக்கின் கட் பண்பு கொள் பெயரினங் குறித்து வருதன் மரபென்பதூஉஞ் செய்யுட்கண் வழீ இயமைதன் மரபென்ப தூஉங் கூறிய வாறாயிற்று.

பண்படாது 'வடவேங்கடந்' தென்குமரி' முட் டாழை கோட்சுறா வெனத்திசையு முறுப்புந் தொழிலும் முதலிய வடையடுத்து இனஞ் சுட்டாது வருவன. *ஒன்றின முடித்தலாற் செய்யுளாறென வமைக்க. (18)

இயற்கைப் பொருளில் மரபு வழாமை
இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

இஃது இயற்கைப் பொருட்கண் மரபு வழுவாமை கூறுகின்றது.

(இ-ள்) இயற்கைப் பொருளை—பொருட்குப் பின் றோன் றாதுடனிடனிகழுந் தன்மைத்தாய பொருளை யதனியல்பு கூறுங்கால், இற்றெனக் கிளத்தல்—ஆக்கமுங் காரணமுங் கொடாதிற்றெனச் சொல்லுக வென்ற வாறு.

(உ-ம்) நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்யது, வளி யுளரும், உயிருணரும் எனவரும்.

---

* ஒன்றென முடித்தலாற் (பா. பே.)

சேற்றுநிலம் மிதித்து வன்னில மிதித்தான். 'நிலம் வலி தாயிற்' றென்ற வழி மெலிதாயது வலிதாய் வேறு பட்ட தென வாக்கம் வேறுபாடு குறித்து நிற்றலி, னியற் கைப் பொருளாக்கமொடு வந்ததன்றாம். (19)

செயற்கைப் பொருளில் மரபு வழாமை.

செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்.

இது செயற்கைப் பொருண்மேன் மரபு வழுவாமை கூறுகின்றது.

(உ-ம்) செயற்கைப் பொருளை—காரணத்தாற் றன்மை திரிந்த பொருளைத் திரிபு கூறுங்கால், ஆக்க மொடு கூறல்—ஆக்கங் கொடுத்துச் சொல்லுக வென்ற வாறு. (20)

மேலதற்கு ஓர் புறநடை.

ஆக்கந் தானே காரண முதற்றே.

இது மேலதற்கோர் புறநடை. (புறனடை)

(இ-ள்) ஆக்கந்தானே—செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறுங் காலவ்வாக்கச் சொற்றான், காரண முதற்றே—காரணச் சொல்லை முன்னாக வுடைத் தென்றவாறு.

(உ-ம்) கடுக்கலந்த கைபிழி யெண்ணையைப் பெற்ற மையான் மயிர் நல்லன வாயின.

எருப்பெய் திளங்களை கட்டு நீர் கால் யாத்தமை யாற் பைங்கூழ் நல்லவாயின என வரும்.

மயிர் நல்ல, பைங்கூழ் நல்லவென வாக்கமின்றி வந்தது, பொருட்குப் பின் றோன்றா துடன்றோன்றி நிற்றலி னியற்கைப் பொருளாம். அவ்வாறன்றி முன்றீய வாய்ப் பின்னல்ல வாயினவழி யத்தீமை காணாதான் மயிர்நல்லவெனினு மிழுக்கின்றெனச் செயற்கை யுண ராமற் கூறலின். (21)

எய்தியது விலக்கல்.

கந கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.
(இஃது) எய்தியது விலக்கிற்று.

(இ-ள்) ஆக்கக்கிளவி—காரண முதற்றென்ற வாக்கச் சொல், காரணமின்றியும் போக்கின் றென்ப—காரணமின்றி வரினும் குற்றமின்றென்று கூறுப, வழக்கினுள்ளே—வழக்கிடத் தென்றவாறு.

(உ-ம்.)
மயிர் நல்ல வாயின
பயிர் நல்ல வாயின.

எனவரும்.

எனவே, செய்யுட்குக் காரணம் பெற்றே வருமாயிற்று.

வருமழைய வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி—திருநுதாஅல்!
இன்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்
சாயல வாயின தோள்.

எனவிது காரணமு மாக்கமும் பெற்றது.
குருதி படிந்துண்ட காக முருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய (களவழி)

எனவிதற் காக்கம் விகாரத்தாற் றொக்கதென் றுண்க.

அரிய கானஞ் சென்றோர்க்

கெளிய வாகிய தடமென் றோளே. (குறுந்தொகை)

இதற்குக் கற்புக் காலத்தாற் றோள்எளிய வாயிற் றென விக்காலங் காரணமாயிற்று. (வாயின என அக்)

உம்மை யெதிர்மறை யாகலாற் காரணங் கொடுத்துச் சொல்லுதலே வலியுடைத்து. (22)

ஐயப் பொருள்மேல் சொல்லுணர்த்துமாறு. (நிகழ்த்துமாறு)

பான்மயக் குற்ற வையக் கிளவி
தானறி பொருள்வயிற் பன்மை கூறல்.

இது, மேலியற்கை யெற்கையெனப் பகுத்த பொருட்களுட்டிணையுணர்ந்து பாலையந் தோன்றிய வழியவ்வையப் பொருண்மேற் சொன்னிகழ்த்துமாறு கூறுகின்றது.

(இ-ள்) பான்மயக்குற்ற வையக்கிளவி—திணைதுணிந்து பாறுணியாது நின்ற வையப் பொருளை, தானறி பொருள் வயிற் பன்மை கூறல்—தானறிந்தவுயர்திணைப் பொருளிடத்துப் பன்மையாற் கூறுகவென்றவாறு.

ஐயப் பொருளாவது சிறப்பியல்பாற் றோன்றாது பொதுவியல்பாற் றோன்றிய பொருள்.

ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ வித்தோன்றுகின்ற விவரென (வரென) வரும்.

திணைவயி னென்னாது தானறி பொருள்வயின் எனப் பொதுப்படக்கூறியவதனானொருவன்கொல்லோ பலர்கொல்லோ விக்கறவை யுய்த்த கள்வர்! ஒருத்தி கொல்லோ பலர்கொல்லோ விக்குருக்கத்தி நீழல் உண்டலயர்ந்தாரெனத் திணையோ டாண்மை பெண்மை துணிந்த பன்மை யொருமைப்பால் அய்யமுங் கொள்க.

அப்பொருட் கிருபாலுமாய் (நிற்ற லுண்மையிற்றானொன்றாகிய) நிற்றல் இன்மையின் றான் ஒன்றாகிய பொருளைப் பன்மையாகக் கூறினுமமைக வெனவழுவமைத்தார். (23)

இதுவுமது

உருவென மொழியினு மஃறிணைப் பிரிப்பினு
மிருவீற்று முரித்தே சுட்டுங் காலை.

இதுவு மைய்ப் பொருண்மேற் சொன்னிகழ்த்து மாறு கூறுகின்றது.

(இ-ள்) இருவீற்றுஞ் சுட்டுங்காலை—திணை யையத்துக் கண்ணு மஃறிணைப்பாலையத்துக் கண் ணுங் கூறு மரபு கருதுமிடத்து, உருவென மொழியி னும்—திணை யையத்துக் கண் (உருஎன) ணுமெனச் (உருவெனச்) சொல்லு மிடத்தும், அஃறிணைப் பிரிப் பினும்-ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படு மஃ றிணை யியற் பெயராகிய பொதுச் சொற் கண்ணும், உரித்து-ஐயத்தைப்புலப்படுத்தும் பொதுவாகிய தன்மை யுரித்தென்றவாறு.

குற்றி கொல்லோ மகன் கொல்லோ வித்தோன்றா
நின்ற வுரு
ஒன்று கொல்லோ பலகொல்லோ விச்செய் புக்க
பெற்றம்

எனவரும்.

உருவினு மென்னாது உருவென மொழியினு மென்ற தனானுருவின் பொருளாகிய வடிவு, பிழம்பு, பிண்டமென்னுந் தொடக்கத் தனவுங் கொள்க. உருவு முதலியன வுயர்திணைப் பன்மை யொருமைப் பாலை யத்திற் கேலாமையு மேனைத் திணை யையத்திற் கேற் புடைமையுந் தோன்றச் சுட்டுங் காலை யென்றார்.

'உருபு' எனப் பகர வுகரமாகப் பாடமோதி லது வேற்றுமை யுருபிற்கும் உவம வுருபிற்கும் *பெயராய் வடிவை யுணர்த்தாதென்றுணர்க. 'அதுவெனுருபு கெட' வெனவும் உருபினும் பொருளினும் மெய்தடு மாறி யெனவும், முருபு தொடர்ந் தடுக்கிய வெனவு முருபு தொகவருதலு மெனவும், மெய்யுருபு தொகா

* பெயராய வடிவை (பா. பே.)

வெனவும், யாதனுருபி னெனவும் பிறாண்டும் வேற்று மைக் குருபென்றே சூத்திரஞ் செய்தவாறு காண்க. உவம வுருபென்ற லவ்வோத்திற் கூறிய வுரைகளா னுணர்க.

அன்றியுஞ் சான்றோர் செய்யுட்களினு முருவு கிள ரொளி வினை யெனவும் ஞாயிற் றுருவு கிளர் வண்ணங் கொண்ட வெனவும், பூருவக்குதிரை யெனவும், வேண் டுருவங்கொண்டதோர் கூற்றங்கொல்' லெனவும் பிற வுங் (பிறாண்டுங்) கூறுமாற்றா னுணர்க.

உருவென்ப துடலுயிர் கூட்டப் பொதுமையாகிய மக்களென்னும் பொதுமைக்கேலா துடலையேயுணர்த் துதலானும் பெற்றமென்ப தியற் பெயராயினு மொரு (கால்) சொல்லுதற்க ணொரு பான் மேனில்லா திரு பான்மே னிற்ற லானும் வழுவமைதி யாயிற்று. (24)

ஐயுற்றுத் துணிந்த பொருண்மேலன்மைத் தன்மை கூறும் மரபு.

தன்மை சுட்டலு முரித்தென மொழிப
வன்மைக் கிளவி வேறிடத் தான.

இது, முன்னர்க் கூறிய பாலையத்திணையுந் திணை யையத் திணையுந் துணிந்து கூறும் வழி யவற்றிற் கன்மைத்தன்மை கூறும் மரபு கூறுகின்றது.

(இ-ள்) தன்மை சுட்டலு முரித்து ஒருவற்குப் பாலையமுந் திணையையமும் நிகழ்ந்துழி யங்ஙனமை யுறலே யன்றி யவர்க்கப் பொருள்களி னுண்மைத் தன்மையைக் கருதுதலு முரித்து, அன்மைக் கிளவி வேறிடத்தான வென மொழிப—ஆண்டொரு பொரு ளல்லவாந் தன்மையை (தன்மை) யுணர்த்துஞ் சொல்லை யத்திற்கு வேறாய்த் துணிந்து தழீ இக்கொண்ட பொருளின் கண்ணவென்று கூறுவ ராசிரிய ரென்ற வாறு.

இவன் பெண்டாட்டி யல்லன் ஆண் மகன்
இவ ளாண்மகன் அல்லள் பெண்டாட்டி
இவன் குற்றி யல்லன், மகன்
இவ்வுருமகனன்று, குற்றி
இப்பெற்றம் பல அன்று, ஒன்று
இப்பெற்ற மொன்றல்ல, பல

எனவரும்.

இவனென்னு மெழுவா யல்ல னென்பதனோடு முடிந்தது. மகனென்ப திவனென்னுஞ் சுட்டுப்பெயர்க்குப் பெயர்ப் பயனிலையாய் நின்றது. இவற்றிற் கைந்தா முருபு விரித்தலு மொன்று, பெண்டாட்டியி னென (பெண்டாட்டியின் அல்லன் என).

இனிச் சேனாவரையர் முன்னிற் சூத்திரத்தி லுரு வென்பதனை ஆண்மகன் கொல்லோபெண்டாட்டி கொல்லோ (இத்தோன்றா நின்ற) வுருவெனப் பாலை யத்திற் குருவென்னுமைப் புலப் பொதுச் சொல் லுரித்தென்று முதாரணங்காட்டி யிச்சூத்திரத்தி லண் மைக் கிளவி மறுக்கப்படும் பொருண்மேலா மென்று கூறினாரா லெனின், அவருதாரணங் காட்டியவற்றி லாண்மகனென்று துணிந்தவழிப் 'பெண்டாட்டி யல்ல ளாண் மகனென்றும், பெண்டாட்டி யென்று துணிந்த வழி யாண் மகனல்லன் பெண்டாட்டி யென்று மறுக் கப்படும் பொருண்மே லன்மை கூறி யவற்றிற் கிவ் வுருப் பெண்டாட்டி யல்ல ளாண் மகனென்று, மிவ் வுரு வாண்மகனல்லன் பெண்டாட்டியென்று முரு வென்னுஞ் சொற்கூட்டியே பொருண் முடிக்க வேண் டுதலி னுருவென்னு மஃறிணைப் *பேரல்ல னல்லள் என்னு முயர்திணை வினைக்† குறிப்பின் முடியாமையு முணர்க. அன்றியுமிவன் பெண்டாட்டி யல்ல ளாண் மகன், இவளாண் மகனல்லன் பெண்டாட்டி யென

* பெயரல்லன் (பா,பே) † குறிப்போடு முடியாமை ஷை.

வவர் சொன் முடித்தற்குக் கூட்டிய சுட்டுப் பெயர் கூட்டினு முடியாமையு முணர்க. இனிக் 'குற்றியோ மகனோ' வென் றையுற்றான் மகனென்று துணிந்தது. மக்கட் டன்மையை யாண்டுப் பெற்றன்றேயஃது பெறவே, குற்றித் தன்மை யாண்டில்லை யாயிற்று, ஆண்டில்லாத குற்றித் தன்மையை னல்லன் மகனா தலா னஃதல்லாதான்மே லன்மை யேற்றுதலே யாசிரி யர் கருத்தென் றுணர்க. இனிக் குற்றி யென்று துணி யினு மிஃதொக்கும். சுட்டலுமென்ற வும்மை யெண் ணும்மை. (25)

வண்ணச் சினைச்சொற்கண் மரபு.

அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.

இது வண்ணச் சினைச்சொற்கண் மரபு கூறுகின்றது.

(இ-ள்) அடை சினை முதலென மூன்றும்-பண்புச் சொல்லுஞ் சினைச்சொல்லு முதற்சொல்லு மென்ற மூன்றும், முறை மயங்காமை நடைபெற்றியலும்— கூறப்பட்ட முறைமயங்காமை வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச்சினைச்சொல்—வண்ண முதலாகிய பண்புகளோடு தொடர்ந்த சினைச் சொல்லையுடைய முதற்சொல்லென் றவாறு.

மீட்டும் 'வண்ணச்சினைச் சொல்லென்றது' அச் சொற்குப் பெயர் கூறிற்று.

(உ-ம்)

செங்கா னாரை
பெருந்தலைச் சாத்தன்

என்வழக்கினுண் மயங்கா தென்வே; செய்யுளுட்

'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி'

யென மயங்கியும் வருமாயிற்று. சினையொடு முதற் கொற்றுமை (யுடைமையான்) யுண்மையான் முதலொடு மியைந்தன.

'பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை யென்பது மவ்வாறே மயங்கிவந்தது, செய்யுளாதலின். 'பெருவழு துணங்காய் என்பது, பெருமை முதன்மேலே கூறுதலின் சொல்லுவான் கருத்து வேறாயிற்று. இன்னும் 'வழக்கினுஞ் மயங்கா' தென்றதனாற் சிறுபைந்தூவி யெனச் சினையொடு குண மிரண்டடுத் தல் செய்யுளாறென்க. 'இளம் பெருங்கூத்தன்' என்பது சினையின்மையின் வேண்டியவாறு வந்தது. (26)

பால் திணை வழுவமைதி

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
மொன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

இது, பால் வழுவுந் திணைவழுவுமமைக்கின்றது.

(இ-ள்) ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவியும்- ஒருவனையு மொருத்தியையுஞ் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைக்கூறும் பன்மைக் கிளவியும்— ஒன்றனை யுயர்திணைப் பன்மையாகச் சொல்லும் பன்மைச் சொல்லும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி— வழக்கினுளவாகிய *வுயர்த்துஞ் சொல்லும் சொல்லாம். இலக்கண மருங்கிற சொல்லாறல்ல—இலக்கண முறைமையாற் சொல்லும் நெறியல்ல வென்றவாறு.

---

* உயர்த்துச் சொல்லும் (பா. பே.)

வழக்கி னாகிய வெனவே வழுவமைதிபெற்றாம். உயர் சொல்-உயர்க்குஞ் சொல். ஒருவனையுந் தாம் வந்தாரென்ப. ஒருத்தியையுந்தாம் வந்தாரென்ப; ஒன்றனையும் தாம் வந்தா ரென்ப.

(உ-ம்)

யாம்வந்தேம். நீயிர் வந்தீர், இவர் வந்தார். எனவரும்.

'தாம் வந்தார் தொண்டனா' ரென்ப துயர்சொற் குறிப்பு நிலையினிழிபு விளக்கிற்று.

இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல வென்ற மிகையான் ஓர், எருத்தை எந்தை வந்தானெனவும் ஓராவை எம்மன்னை வந்தாளெனவும்.

கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாயர் (முல்லைப்பாட்டு)

யெனவும் ஒப்புமை கருதாது காதல்பற்றி யுயர்த்து வழங்கலுங் 'கன்னி நறுஞாழல்' 'கன்னியெயிலெனவும்' ஓரெருத்தை நம்பி யெனவும், ஒரு கிளியை நங்கை யெனவு மஃறிணையை உயர்திணை வாய்பாட்டாற் கூறலும், பண்புகொள் பெயர்க் கொடை வழக்கின கத்தும் 'பெருங்கொற்றன்' பெருஞ்சாத்தனெனவில்குண மடுத்துயர்த்துக் கூறலுங் கொள்க, 'என்பாவை வந்த' தென்ப தாகு பெயர். அஃதொப் புள்வழிக் கூறியது (27)

இடம் பற்றி நிகழுஞ் சொற்களுக்குப் பொதுவிதி.

செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்து முரிய வென்ப.

இஃது, இடம்பற்றி நிகழுஞ் சொற்களுக்குப் பொது விதி கூறுகின்றது.

(இ-ள்) செலவினும் வரவினும் தரவினும் கொடையினும் நிலைபெறத் தோறுன்ம் அந்நாற்சொல்லும் —செலவு முதலிய நான்கு வினையானு மிடம்நிலை பெறப் புலப்படா நின்ற அந் நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை யென்னு மம்மூவிடத்து முரியவென்ப-தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்றிடத்திற்கு முரியவாய் வருமென்று கூறுவர் புலவரென்றவாறு.

ஈங்கு முதலியன தன்மைக் கண்ணு மாங்கு முதலியன படர்க்கைக் கண்ணு மடக்கப்பட்டன.

வினைச்சொற் பாஓ ணர்த்து மீற்றான் மூன்றிடத் திற்கு முரிமை வினையியலுட் கூறிச் செலவு முதலியன முதனிலை தாமே யிடமுணர்த்தி நிற்றலி னீண்டு வேறு கூறினார். அவற் றுளடங்காமையின். (28)

அவற்றுள் சிலவற்றிற்குச் சிறப்பிலக்கணம்

அவற்றுட் ,
டருசொல் வருசொல் லாயிரு கிளவியுந்
தன்மை முன்னிலை யாயி ரிடத்த.

இஃது அவற்றிற் சிலவற்றிற்குச் சிறப்பிலக்கணங் கூறுகின்றது'.

(இ-ள்) அவற்றுட் டருசொல் வருசொல் லாயிரு கிளவியும்முற் கூறிய நான்கு சொல்லினுட்டருசொல்லும் வருசொல் லுமாகிய விரண்டு சொல்லும், தன்மை முன்னிலை யாயி ரிடத்த- தன்மை முன்னிலை யாகிய வவ்விரண்டிடத்திற்கு முரியன வென்வாறு.

(உ-ம்) எனக்குத் தந்தான்
நினக்குத் தந்தான்

என்னுழை வந்தான்
நின்னுழை வந்தான்
ஈங்கு வந்தான்

என விற்றா னன்றித் தரவும் வரவுமாகிய வினை, தன் கண்ணு முன்னின்றான் கண்ணுஞ் சென்றன. முன்னின்ற சூத்திரத்துப் பொது விதியான் மூன்றிடத் திற்கும் வரைவின்றி யாமெனவுங் கொள்ள வைத்த மையான்

'பெருவிற லமரர்க்கு வென்றி தந்த'
'புனறரு பசுங்காய் தின்ற'
'தூண்டில் வேட்டுவன் வாங் வாராது'

வெண்பா

*அரிமல ரார்ந்தகண் ணம்மா கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா தணங்காகி
†யையத்து நின்ற தரா.

என மயங்குவனவு மமைக.

தரவு வரவுணர்த்துஞ் சொல்லென்பது பொருள். (29)

இதுவுமது.

ஏனை யிரண்டு மேனை யிடத்த.

இதுவும் அது.

(இ-ள்) ஏனை யிரண்டும்—செலவுச் சொல்லுங் கொடைச் சொல்லும் ஏனை யிடத்த—படர்க்கைக் குரிய வென்றவாறு.

(உ-ம்) அவன்கட் சென்றான்
ஆங்குச் சென்றான்
அவர்க்குக் கொடுத்தான்.

* வையத்துஙின்ற தரவு (பா. பே.) † அரிமலராய்ந்தகண் ஷை

என வீற்றானன்றிச் செலவுத் தொழிலுங் கொடைப் பொருளும் படர்க்கையான் கட் சென்றுற்றன. (30)

அறியாப் பொருண்மேற் சொன்னிகழ்த்து மரபு
யாதெவ னென்னு மாயிரு கிளவியு
மறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்

இது அறியாப் பொருண்மேற் சொன்னிகழ்த்து மரபு கூறுகின்றது.

(இ-ள்) யாதெவ னென்னு மாயிரு கிளவியும்- யாதெவ னென்று சொல்லப்படு மவ்விரண்டு சொல்லும், அறியாப் பொருள் வயிற் செறியத்தோன்றும்-அறியாப் பொருளிடத் தொருவன் வினாவும் வினாவா யாப்புறத் தோன்று மென்றவாறு

(உ-ம்) இச்சொற்குப் பொருள் யாது
இச்சொற்குப் பொருளெவன்

இது பொதுவகையா னுணரப்பட்டுச் சிறப்பு வகை யானுணரப்படாத பொருளாம். இக்காலத் தெவ னென்ப தென்னென்று மென்னையென்று மருவிற்று.

யாவன்? யாவள்? யாவர்? யார்? யா? யாவை? யாண்டு? யாங்கு? எப்பொருள்? என்பன திணைபான் முதலியன வுணர்த்தலிற் செறியத்தோன்றா வாயின. ஆயின், யாதெவ னென்பன வற்றிற்கு மவை யுளவா லெனின் வினாவுகின்றானஃறிணை யொருமையும் பன்மையுந் துணிந்தவற்றின் பகுதி யறிவதற்கு வினாவு கின்றானல்லன், பொது வகையான் வினாவுகின்றா னென்றறிவுறுக்குமாறு வழக்கு நோக்கி யுணர்க.

(31)

அறிந்த பொருண்மேல் ஐயந்தீர்க்க வரும்வினா

அவற்றுள்
யாதென வருஉம் வினாவின் கிளவி
யறிந்த பொருள்வயி னையந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாகலு முரித்தே.

இஃது அவற்று ளொன்றறிந்த வழியும் வருமென்ற றிந்து காக்கின்றது. எனவே மரபு கூறிற்றாம்.

(இ-ள்) அவற்றுள் யாதென வருஉம் வினாவின் கிளவி அக்கூறப்பட்ட விரண்டனுள் யாதென்னும் வினாச்சொல்லறியாப் பொருளை வினாவுதலே (வினாதலேயன்றி) கெட்டது என்பனவுங் கொள்க. அறிந்த பொருள்வயினையந் தீர்தற்குத் தெரிந்த கிளவி யாகலு முரித்து—அறிந்த பொருட்கணையந் தீர்தற் காராய்ந்த சொல்லாதலு முரித்தென்றவாறு.

(உ-ம்) நம்மெருதைந்தனுட் கெட்ட வெருதி யாது? எனவரும்.

இஃது, அறிந்த பொருட்கணையந் தீர்தலின் வழு வமைதியன்று.

முன்னின்ற சூத்திரத்துள் யாதென்பதனை இச்சூத்திரத் தோடு பொருந்தப் பின் வையாததனாற் செறியத் தோன்றாதனவற்றிலும் வருவன கொள்க. நமருள் யாவன் போயினான் என எல்லாவற்றோடு மொட்டுக.

இனிக் 'கடிசொல்லில்லை' யென்பதனால்
நமரு ளேவன் போயினான்?
அவற்று ளெவ்வெருது கெட்டது?
என்பனவுங் கொள்க.

உம்மை யெதிர்மறை யும்மை யாகலா னையந்தாய் நிற்றல் வலியுடைத்து. (32)

சினை முதற் கிளவிகள் உம்மை வேண்டல்
இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
*வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.

இது, வரையறை யுடையது தொகை பெறும்வழிப் படுவதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு -கேட் போராலித்துணை யென்றறியப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும், வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்-முடிக்குஞ் சொல்லோடு படுந்தொகு திக்கண் ணும்மை கொடுத்துச் சொல்லுக வென்றவாறு.

(உ-ம்) நம்பி கண்ணிரண்டும் நொந்தன
தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார்.

எனச் சினை (முதற்கிளவி) முதல்கடாமே வினைப் பட்டமையினும்மை வேண்டின.

''பன்னிரு கையும் பாற்பட வியற்றி' (முருகு) இது பிறவினைப் படுத்தினது.

''மூரசு முழங்கு தானை மூவிருங் கூடி'' (புறநானூறு)

இதுவுந்தானே வினைப்பட்டது, பன்னிரண்டென் னுந் தொகுதியுங் கையுமியற்றி யென்பதன் மேல் வருத லிற்கை யென்பதனோ டியைந்த வியற்றி யென்னும் வினைத்தொகைப் பெயரோடு மியைந்ததாம். ஐந்தலை நாகமுடன்ற தென்பதற்கு நாகம் வினைப்படு †தொகு தியா யைந்தலை முடிக்குஞ் சொல்லன்று. இனிக் கண்ணி ரண்டுங் குருடு. எருதிரண்டு மூரி.எனப்பெயர் கொண்ட வழியும் பெயர் முடிக்குஞ் சொல்லேயாம். சுவையாறு முடைத்திவ் வடிசில், கதியைந்து முடைத்திக் குதிரை யெனச்சிறவாத பண்பு முதலியன பற்றி வருவனவுங் கொள்க.

---

* வினைப்படுதொகையின் (பா. பே.)
† தொகுதியுன்று முடிக்குஞ் சொல்லன்மையின் ஷி

'இருதோ டோழர் பற்ற'

வென்பது பிறரால் வினைப்படுக்கப் பட்டது. இதற் கும்மை விகாரத்தாற் றொக்கது செய்யுளாதலி னித் துணை யென்றறியாக்கான் முருகற்குக் கைக பன்னிரண் டென்றும்மை பெறாதாம்.

ஒண்குழை யொன்றொல்கி யெருத் தலைப்ப.

வென்ப தொன்றேனு *மித்துணைத்தென வறிதலி னும்மை வேண்டும் அது விகாரத்தாற் றொக்கது. (33)

மன்னாப் பொருள் உம்மை வேண்டல்.

மன்னாப் பொருளு மன்ன வியற்றே.

இது நிலையாப் பொருட்கண் மரபு நிகழ்த்துமாறு கூறுகின்றது.

(இ-ள்) மன்னாப்பொருளும்-உலகத்து நிலையில் லாத பொருளும், அன்னவியற்றே — அதுபோல உம்மை கொடுத்துக்கூறுதல் வேண்டு மென்றவாறு.

பொருளு மென்ற வெச்சவும்மை யானுலகத் தில் லாத பொருளு மிடமுங் காலமும் பொருளு முதலியன வற்றோடு படுத்துக் கூறுதற்க ணும்மை கொடுத்துக் கூறுதல் வேண்டுமென்று பொருளுரைத்துக் கொள்க.

'யாக்கையும்நிலையா' தெனவே யிளமையுஞ் செல் வமும் நிலையாவென்னும் பொருளு முணர்த்தி யெச்ச உம்மையாய் நிற்கும் உம்மை பெறுத லொப்புமையான் முற்றும்மையோ டெச்ச உம்மையை மாட்டெறிந்தார்.

இனிப் பவளக் கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளு மில்லை; குருடு காண்டல் பகலுமில்லை; உறற் பாலநீக்க லுறுவர்க்குமாகா (நாலடி) என இல்

---

* இனைப்தென வறிந்தபி— உம்மைவேண்டுல் (பா, பே).

லாப்பொருள்களு மெச்ச வும்மை பெற்றவாறு காண்க. இடம் முதலிய வற்றோடு வாராதவழி யும்மை பெறா.

"மன்னுக பெறுமநீ நிலமிசை யானே"
எனவும்
"மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்" (புறம்)
எனவும்.
மன்னாப் பொருட்பிணி முன்னிய.
எனவும்

மன்னாமை நிலையாமையை யுணர்த்துதலன்றி யின்மையை யாண்டு முணர்த்தாமை காண்க. (34)

சொல் தொகுத்து இறுத்தல்

எப்பொரு ளாயினு மல்ல தில்லெனி
னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்

இது வினாயதன் புறத்துச் சொற் பல்காமற் றொகுத்துக்கூற லென்னுஞ் செப்பாமாறு கூறுகின்றது.

(இ-ள்) எப்பொருளாயினும் — யாதானுமொரு பொருளையாயினும், அல்லதில்லெனின் — தன்னுழை யுள்ளதல்லதனை யில்லையெனலுறுமே யெனின், அப்பொருளல்லாப் பிறிது பொருள் கூறல். அவன்வினாய பொருடன்னையே கூறாததற்கினமாகிய பிறிது பொருளைக் கூறி யில்லையென்க என்றவாறு.

நூறு விற்கும் பட்டாடை யுளவோ?

என்று வினாயினாற் கைம்பது விற்குங் கோசிக மல்லதில்லை யென்றும், பயறுளவோ வணிகீ ரென்றாய் குழுந்தல்ல தில்லைக்கொள்ளல்ல தில்லை யென்றுந் தன்னுழை யுள்ள நல்லதனை யில்லை யென்பான். பிறிது பொருளைக் கூறினான்.

* றொருத்திறுத்தலென்னும் (பா. பே.)

பயறுளவோ? வென்றவழி யல்லதென்ப தொழிய வும் பயறில்லை யுழுந்துள்ள தென்றாற் படு மிழுக் கென்னையெனின் எப்பொருளாயினு மென்ற தைம்பாற் பொருளை யாகலானு மல்லதென்ப தஃறிணை யொரு மைப்பாற் குரித்தேனும் மற்றை நான்கு பாற்கண் ணும் பால்வழுவாயுந் திணைவழுவாயு மயங்குதலானு மது கண்டதனை யமைத்தற் கெப்பொருளா யினுமல்ல தில் லென்றார். அவனல்லது, அவளல்லது, அவரல்லது அதுவல்லது, அவையல்லது, எனவரும்

"நாணு நட்பு மில்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே" (அகம்)

எனச்சான்றோர் செய்யுளுட் பயின்று வருமாறு முணர்க. அவனல்லது பிறனில்லை யெனமேல்வருஞ் சொல்லோடு படுத்து வழுவமைதி யாதல் அறிக.

பயற்றான் முடிக்குங் குறை யுழுந்தான் முடித்த லன்றிப் பாம்புணிக் கருங்கல்லான் முடித்தலாகாமையிற் பயறுளவோ வென்றாற்குப் பாம்புணிக் கருங்கலல்ல தில்லையென்றல் பொருந்தாமை யுணர்க.

மேலதற்கோர் புறனடை
அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

இது மேலதற்கோர் புறநடையாய தோரிறுத்தல் வகைமை கூறுகின்றது.

(இ-ள்) அப்பொருள் கூறின்-அல்லதில்லென்பான் பிறிது பொருள் கூறாதப்பொருடன்னையே கூறுமா யின் சுட்டிக்கூறல் - முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச்சொல்லுக வென்றவாறு.

இவையல்லதில்லை, இப்பயறல்லதில்லை எனவரும். வினாயினான் பயற்றி னன்மையுந் தீமையு முணர்ந்து கோடற்குந் தவிர்தற்கு மிவ்வாறே கூறுகவென்றார்.

சுட்டாது பயறல்ல தில்லை யெனிற் பயறுள உழுந்து முதலியன வில்லையெனப் பிறிதுபொருளேற்பித்துச் செப்பு வழுவாம்.

தன்னின முடித்த லென்பதனாற பெரும்பயறல்ல தில்லை பசும்பயறல்லதில்லை யெனக் கிளந்து கூறுதலுங் கொள்க. (36)

பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் மரபு

(37) பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே.

இது, திணைவழு வமையுமாறும், ஒரு பொருட் பெயர் சுட்டாய்நின்றப்பொரு ளுணர்த்துவதோர் மரபு வழு வமைதியு முணர்த்துகின்றது.

(இ-ள்) சுட்டுப்பொருளொடு புணராவாயினு மாகும்-ஓர்சுட்டுத் தானுணர்த்துதற் குரிய வஃறிணைப் பொருளை யுணர்த்தாதுயர் திணைப் பொருளை யுணர்த்தி நிற்குமாயினுமாம், சுட்டாயபெயர் பொருளொடு புணராவாயினும் சுட்டுப் பொருள் வேறுபடா தொன்றாகும்—சிலபொருட்பெயர் சுட்டுப்பொருளை யுணர்த்தாவாயினுந் தாஞ் சுட்டுவதோர் பொருளிடத்து வேறுபடநில்லாமல் அப்பொருளையே யுணர்த்தி நிற்கு மென்றவாறு.

இஃதொத்த னென்றவழி யிஃதென்ற தஃறிணைப் பொருளை யுணர்த்திய சுட்டிவனொருத்தனென உயர் திணைப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க. இஃதோர் செல்வற் கொத்தனம் யாம் என்பதுமது.

'நாயுடை முதுநீ' ரென்னு மகப்பாட்டினுள்,
'நாணி' நின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந! வானத்
தணங்கருங் கடவுளன் னோணின்
மகன்றா யாதல் புரைவதா லெனவே.

என்புழி 'நாணி நின்றோள்' என்னும் பொருட் பெயர் தன் றொடர்ப்பொருளைக்கொண்டு முடிந்த பின்னரப்பொருட் பெயர்மேலொரு காரியங் கூற வேண்டிய வழி, யவளெனச் சுட்டிக்கூறுதல் வேண்டும் அங்ஙனங் கூறாது வானத் தணங்கருங் கடவுளன் னோளென வெல்லார்க்கும் பொதுவாயதோர் பெயராற் கூறினாளாயினுங், கூறுகின்றாள் பரத்தையைக்கருதியே கூறுதலின்' அக்கடவுளன்னோளென்றபெயருஞ் சுட்டுப் பெயர்த் தன்மையாய் நின்றவாறு காண்க.

அளிநிலை பொறாஅதென்னு மசுப்பாட்டினு ளொண்ணுத......லுயிர்த்தகாலை மாமலர் மணியுரு விழந்த......தோற்றங் கண்டே கடிந்தன மென முடிந்த பின்ன ரவண் மேற் பின்னருமொரு காரியங் கூறக் கருதிய. தலைவனொண்டொடி யெனப்பொதுப் பெயராற் கூறினா னேனு மப்பெயரவளென்னும் பொருடந்து நின்றவாறு காண்க.

வெண்பா

கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே! — கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட.

பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக்கோடுபோழ
நற்பூங் கழலா னிருதிங்க ளயந்த வாறுங்
கற்பா டழித்தகனமா மணித்தூண்செய் தோளான்
வெற்பூடறுத்துவிரைவி னெற்க்கொண்ட வாறும்.
(சீவக சிந்தாமணி)

என்றாற்போலப் பிறசெய்யுட்களுள்ளும் பொருட் பெயர் சுட்டுப்பெயர்ப் பொருளவாய் வருதல் பெரும் பான்மை யென்றுணர்க.

வெண்பா

வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலா! யின் றுநீ நல்கினை நல்காயேற்
கூடலார் கோவொடு நீயும் படுதியோ
நாடறியக் கௌவை யொருங்கு.

என்புழிக் 'கூடலார்கோ' வென்றாற்போலப் பின்வரும் பொருட்பெயர் பொதுவாய் நில்லாதப்பொருளையே விளக்கிச் சுட்டாய் நிற்பனவு மொன்றென முடித்தலாற் கொள்க.

இச்சூத்திரத்திற்குப் பலருங்கூறும் பொருளெல்லா முன்னின்ற சூத்திரத்தாற் பெற்றவாறு காண்க.

சுட்டுப் பெயராயினு, மென்ற வும்மை சிறப்பும்மை. அது வேறு பொருள் படுதன் மாலைத்தாயினும் பொருள் வேறுபடா தொன்றாகும் என்றவாறு. (37)

38] இயற் பெயருஞ் சுட்டுப்பெயருஞ் சேர்ந்து வருமுறை

இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
ரியற்பெயர் வழிய வென்மனார் புலவர்.

இஃது, ஒரு பொருளை யுணர்த்து மிருபெயர் வழூக் காக்கின்றது.

(இ-ள்) இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும்—இயற்பெயராகிய சொல்லுஞ் சுட்டுப்பெயராகிய சொல்லும், வினைக்கொருங்கியலுங் காலந்தோன்றில்—ஒன்றனையொன்று கொள்ளாதிரண்டும் பிறிது வினைகோடற் கொருங்கு நிகழுங் காலந் தோன்றுமாயின், சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக்கிளவார்—உலகத்தார் சுட்டுப்பெயராகிய சொல்லை முற்படக் கிளவார், இயற்பெயர் வழிய வென்மனார் புலவர்—இயற்பெயராகிய சொல்லுக்குப்பின்னாகக் கூறுவாரென்று கூறுவர் புலவரென்றவாறு.

ஒருங்கியலு மென்றதனா னொருபொருளை யுணர்த்துதல் கொள்க. வழிய வென்றதனா னியற்பெயர் வழி நிற்றற் குரியவாகச் சுட்டேகொள்க. (அகர இகரச் சுட்டேகொள்க.)

சாத்தன் வந்தான், அவற்குச் சோறுகொடுக்க.
சாத்தி வந்தாள், அவட்குப் பூக்கொடுக்க.

எனவரும்.

அவன் வந்தான், சாத்தற்குச் சோறுகொடுக்க, எனின் அவனுஞ் சாத்தனும் வேறா யவன் வருந் துணையுஞ் சாத்தன் சோறு பெறாதிருந்தா னாவான் செலலும். அங்ஙனங் கூறற்க.

இனி, யியற்பெயர்வழிய என்ற மிகையா னியற் பெயரல்லாவுயர் திணைப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்குஞ் சுட்டுப் பெயர் பின்வருதல்கொள்க.

நம்பி வந்தான், அவற்குச் சோறுகொடுக்க
நங்கை வந்தாள், அவட்குப் பூக்கொடுக்க
எருது வந்தது, அதற்குப் புல் இடுக (கொடுக்க)
குதிரை வந்தது, அதற்கு முதிரை கொடுக்க

எனவரும்.

தன்னின முடித்த லென்பதனான், விரவுப்பெயரு ளியற் பெயரொழிந்தனவுங் கொள்க.

முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க.
முடத்தி வந்தாள், அவட்குப் பூக் (ன்றை) கொடுக்க.

எனவரும்.

'வினைக்கொருங் கியலு,' மென்று வினைன்றுதலாற், பெயர்க்கியலாது முன் ன்றினு மமைக வென்பதாம்.

(உ-ம்) சாத்தன் அவன்.
அவன் சாத்தன்.

எனவரும். இது மரபு வழுக்காத்தது. (33)

எய்தியது விலக்கல்.

39 முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே.

இஃது, எய்தியது விலக்கிற்று.

(இ-ள்) முற்படக் கிளத்தல் — இயற்பெருஞ் சுட்டுப் பெயரும் வினைக்கொருங்கியலும்வழிச் சுட்டுப் பெயரை முற் கூறுதல், செய்யுளுளுரித்தே — செய்யுளிடத் துரித்தென்றவாறு.

(உ-ம்) வெண்பா

அவனணங்கு நோய்செய்தா னாயிழாய்! வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகன மர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்
பின்னை யதன்கண் விளைவு. (விழைவு)

சேந்தன், இயற்பெயர். (39)

சுட்டு முதலாகிய காரணக்கிளவி

40 சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்
சுட்டுப்பெய ரியற்கையின் செறியத் தோன்றும்.

இதுவுமச் சுட்டாராய்ச்சியே கூறுகின்றது.

(இ-ள்) சுட்டு முதலாகிய காரணக்கிளவியும்—சுட்டெழுத்து (பெயர்) முதலாகிய காரணப்பொருண்மையை யுணர்த்துஞ் சொல்லு மும்மையாற் காரணமின்றி வருஞ் சுட்டுப்பெயரும், சுட்டுப்பெயரியறகையின் செறியத்தோன்றும்-சுட்டுப்பெயர் போலத் தன்னாற் கட்டப் படுந்தொழிலை யுணர்த்துஞ் சொற்குப் பின் கிளக்கப் படு மென்றவாறு.

சுட்டுப்பெய ரியற்கை யெனவே வழக்கிற்குப் பின் னுஞ் செய்யுட்கு முன்னும் நிற்குமென்பது பெற்றாம்.

'சாத்தன்கை யெழுதுமாறு வல்லன்' அதனாற் றந்தை யுவக்கும். 'சாத்தி சாந்தரைக்குமாறு வல்லள்' அதனாற் கொண்டானுவக்கும்—இதனுட் சுட்டு முதலாகிய காரணக் கிளவி யுருபன் றுருபேற்று நின்ற சுட்டுப் பெயரோடொப்ப தோரிடைச் சொல், என்னை பிளவு படா தொன்றுபட்டி ரைத்தலின்.

சாத்தன் வந்தா னஃதரசற்குத் துப்பாயிற்று. கிழவன் பிரிந்தா னதனைக் கிழத்தி யுணர்ந்திலள். எனவிவை காரணமின்றி வந்தன. (40)

இயற்பெயர்க் கிளவியைப் பிற்படக் கிளத்தல்

41 சிறப்பி னாகிய பெயர் நிலைக் கிளவிக்கு
மியற்பெயர்க் கிங்வி முற்படக் கிளவார்.

இதுவு மொரு பொருளை யுணர்த்து மிருபெயர் வழுக காக்கின்றது.

(இ-ள்) சிறப்பினாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்— வினைக்கொருங்கியலும்வழிச் சிறப்பினாகிய பெயராய் நிற்றலையுடையசொற்கும் (உம்மையாற், றவங், கல்வி, குடி, யுறுப்பு முதலியவற்றினாகிய சொற்கும்) இயற் பெயர் கிளவி முற்படக் கிளவார் — இயற்பெயராகிய சொல்லையுலகத்தார் முற்படக் கிளவார் பிற்படக் கிளப்பரென்றவாறு.

சிறப்பு, மன்னர் முதலியோராற் பெறும் வரிசை.

(உ-ம்) ஏனாதி நல்லுதடன்
முனிவன் அகத்தியன்
தெய்வப் புலவன் றிருவள்ளுவன்
சேரமான் சேரலாதன்
சோழன் நலங்கிள்ளி-(சோழன் வன் கிள்ளி)
பாண்டியன் மாறன்
குருடன் கொற்றன்

எனவரும்

தச்சக் கொற்றன், தொழிலினா னாகியபெயர். 'திருவீர வாசிரியன்' என்றாற் போலவியற்பெயர் முற் கூறுவன பிறவு மிக்காலத்தார் மயங்கிக் கூறுவன பிறவுங் 'கடிசொல் இல்லை' யென்பதனாற் கொள்க. (41)

42] ஒரு பொருட் பலபெயர் மரபு வழுக் காத்தல்

ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.

இஃது, ஒருபொருளை யுணர்த்தும் பலபெயர் வழுக் காக்கின்றது.

(இ-ள்) ஒரு பொருள்-குறித்த வேறுபெயர்க் கிளவி-ஒருபொருளை யுணர்த்துதலைக் குறித்துவந்த பல பெயர்ச் சொற்கள், தொழில்வேறு கிளப்பின்—ஒரு தொழிலையே முடிபாகக் கூறாது பெயர்தோறும் வேறாகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின், ஒன்றிடனில—ஒரு பொருளினவா யொன்றுதலில வென்றவாறு.

கிளவி, கருவிக்கருத்தாவாய் நின்றது.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றிய விளங்கண்ணன் சாத்தன் வந்தான், என்னா தாசிரியன் வந்தான், பேரூர் கிழானுண்டான், செயிற்றியன் சென்றானென வேறுவேறு முடிக்குஞ் சொற் கொடுப்பி னொருவனாகாது வேறுவேறு பொருளாம்.

எந்தை வருக! எம்பெருமான் வருக!

என்றாற் போல்வன, காதல்பற்றிப் பலகா லொரு தொழிலே வந்தனவாம். (42)

43] எண்ணில் திணைவழு வமைதி

தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.

இஃது எண்ணின் கட்டிணைவழு வமைக்கின்றது.

(இ-ள்) தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி யென்று- தன்மைச் சொல்லு மஃறிணைச் சொல்லு

மென்று கூறியவிரண்டும், எண்ணுவழி மருங்கின் விரவு வரையார்— எண்ணுமிடமாகிய விடத்து விராய் வந்து தல் சொல்லா னஃறிணைச் சொன்முடிதலை நீக்கா ராசிரியர் தன்மைப் பன்மைச் (என்றவாறு)

மேற் 'பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி' யென் பதனானும் பன்மைத் தன்மை பெற்றாம்.

'யானுமென் னெஃகமுஞ் சாறும் அவனுடைய
யானைக்குஞ் சேனைக்கும் போர்.?

இஃது இருதிணையும் விராயெண்ணி யஃறிணை யுயர் திணையோடு முடிந்தது. (43)

44] ஒருவன் ஒருத்தி என்னுஞ் சொள்மரபு.
ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
லொருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.

இஃது, எண்ணு வகையாற் கூறுமொருவகைச் சொன்னிகழ்ச்சி கூறுகின்றது.

(இ-ள்) ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற் சொல்-ஒருமை யெண்ணினை யுணர்த்து மொருவரென் னும் பொதுமையினின்றும் பிரிந்த பாலுணர்த்துஞ் சொல்லாகிய வொருவ னொருத்தி யென்னுஞ்சொல், ஒருமைக்கல்ல தெண்ணு முறை நில்லாது—ஒருமைக்க ணல்லதிருமை முதலிய வெண்ணு முறைக்கணில்லா தென்றவாறு.

எனவே, பொதுப் பிரியாப் பாற்சொல்லாகிய வொருவரென்னுஞ் சொல்லிருவர் மூவரெனவெண்ணு முறைக்கண்ணிற்குமாயிற்று. (நிற்பது) 'இருவ ன் மூவ னெனவு மிருத்தி முத்தி யெனவும், னகரவீறும் மிகர வீறும் இயைபின்மையானும், ரகரவீறு இயைபுடைமை யானுமிங்ஙனங் கூறினார்.

ஒன்றென முடித்த லென்பதனா னொருவேன் ஒருவை யென்னுந் தன்மை முன்னிலை யீறு மெண்ணு முறை நில்லாமை கொள்க.

45) எண்ணில் திணைவழு வமைதி.

வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்

இஃது எண்ணின்கட் டிணை வழுவமைக்கின்றது.

(இ-ள்) வியங்கோ ளெண்ணுப்பெயர்—வியங்கோ ளோடு தொடருமெண்ணுப்பெயர், திணைவிரவுவரை யார்—திணைவிராய் வருதலை நீக்கா ராசிரியரென்ற வாறு.

ஆவு மாயனுஞ் செல்க

என்ற தெண்ணும்மையாதலிற் சேறற்றொழிலிரண் டற்கு மெய்துதலின் வழுவின்றேனு மஃறிணை யேவற் றொழிலை முற்ற முடியாமைகருதி வழுவமைத்தார்.

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்"

எனவெண்ணி 'நும்மரண் சேர்மினென' முன்னிலை வினைகோடல் செய்யுண் முடிபென்ப ததிகாரப்புற நடையாற் கொள்க.

'ஆவு மாயனுஞ் சென்ற கானம்' செல்லுங்கான மென வியங்கோளல்லா விரவு வினையான் வருதற் றன்னின முடித்லாற்கொள்க. (45)

46) மரபு வழுக் காத்தல

வேறுவினைப் பொதுச்சொல் லொருவினை கிளவார்

இது மரபுவழுக் காக்கின்றது.

(இ-ள்) வேறுவினைப் பொதுச்சொல்-வேறுபட்ட வினை யினையுடைய பலபொருட்குப் பொதுவாகிய சொல்லை, ஒரு வினை கிளவார்—அவற்றுள் யாதானு மொருவினையாற் கூறாரெனவே யவற்றை யெல்லா முள்ளடக்கி நிற்கும் பொது வினையாற் கூறுவரென்ற வாறு.

'அடிசி' லென்பது உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன வற்றிற்கும், 'அணி' யென்பது கட்டுவன, கவிப்பன, செறிப்பன, பூண்பன வற்றிற்கும், இய மென்பது, கொட்டுவன, ஊதுவன, வெழுவன, (எழுப்பு வன,) வற்றிற்கும். படையென்பது எய்வன, வெறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்கும் பொதுவாகலின்.

அடிசிலுண்டார், கைதொட்டார்.

எனவும்,

அணி அணிந்தார், மெய்ப்படுத்தார்.

எனவும்,

இயம் இயம்பினார்; படுத்தார்.

எனவும்,

படைவழங்கினார்; தொட்டார்.

எனவும் பொதுவினையாற் கூறுப. இவற்றை யொரு வினையாற் கூறின் வழுவாம்.

மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி

யெனவும்,

நளிபுகை கமழா *திறாயினிர் மிசைந்து

எனவும்

'இடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த'

வெனவும்,

'கடவு ளொருமீன் சாலினி யொழிய
வறுவர் மற்றையோரு மந்நிலை யயின்றனா'

* இறானீர் (பா. பே.)

எனவு மிவை தின்றெனவும் விழுங்கி யெனவும் பெரும் பான்மை வருதலின் மிசைந்தா ரயின்றா ரென்பன வுதாரணங் காட்டல் பொருந்தாமை யுணர்க.

இனி,

'உண்டற் குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே.'

என்னும் பொருளியற் சூத்திரத்தா லுண்டற் றொழி லெல்லா வற்றிற்கும், பெரும்பான்மை வருதல் பெற்றாம்.

'அறுசுவை யடிசி லணியிழை தருதலி
னறுவயி றார வோம்பாது தின்றென'
என்ப திழித்தற்கண் வருதலின் வழுவன்று. (46)

இதுவுமது

47 எண்ணுங் காலு மதுவதன் மரபே.

இதுவுமது

(இ-ள்) எண்ணுங்காலும் — அவ் வேறு வினைப் பொருள்களைப் பொதுச்சொல்லாற் கூறாது பிரித் தெண்ணு மிடத்தும், அதுவதன்மரபே — (அதன்மர பதுவே) - அதனிலக் கண மொருவினையாற் கிளவாது பொதுவினையாற் கிளத்த லேயா மென்றவாறு.

'சோறுங் கறியும் நன்றென் றுண்டார்'
'யாழுங் குழலும் பறையு மியம்பினார்.

எனவரும்.

'தின்றா ரூதினா' ரென்றால் வழுவாம்

ஊனுன்றுவை

சுறிசோ றுண்டு வருந்துதொழி வல்லது, (புறம்) என்புழி நுகரப்படும் பொருள் எல்லாவற்றிற்கு முண்டற் றொழில் வந்தவாறு காண்க. (47)

48] இரட்டைக் கிளவி

இரட்டைக்கி ளவி யிரட்டிற் பிரிந்திசையா.

இஃது உரிச்சொற்கண் மரபு வழுக் காக்கின்றது.

(இ-ள்) இரட்டைக்கிளவி—இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொற்கள், இரட்டிற் பிரிந்திசையா — இரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லா வென்றவாறு.

சுரு சுருத்தது, மொடு மொடுத்தது;
என விசைபற்றியும்,
கொறு கொறுத்தார், மொறு மொறுத்தார்
எனக் குறிப்புப் பற்றியும்,
குறு குறுத்தது, கறு கறுத்தது.

எனப் பண்பு பற்றியு மிரட்டித்துப் பிரியாது நின்றன.

இவை, குறுத்தது குறுத்ததென வொருசொன் முழுவது மிருமுறை வாராமையினடுக்கன்று. இவை மக்களிரட்டையும் விலங்கிரட்டையும் போல வேற்றுமை யின்றி யிலையிரட்டையும் பூவிரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையு முடையவாம். குறுவென்னுஞ் சொல்லடுத்துக் குறுத்ததென் பதுமிகுதி யுணர்த்திற்றேற் குறுவென்பதியாண்டும் மிகுதியுணர்த்தல் வேண்டு மஃதுணர்த்தாமையி னிரண்டுமொரு சொல்லேயாயிற்று. (48)

49) ஒருபெயர்ப் பொதுச்சொல் மரபு வழுக்காத்தல்

ஒருபெயர்ப் பொதுச்சொ லுள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்த றலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்.

இஃது, ஒருபெயர்ப் பொதுச்சொல்லை மரபு வழுக்காக்கின்றது.

(இ-ள்) உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்-உயர்திணைக் கண்ணு மஃறிணைக் கண்ணும், ஒருபெயர்ப் பொதுச்சொல்—ஒருபெயரவாய்ப் பலபொருட்குப் பொதுவாகிய சொல்லை, உள்பொருளொழியத் தெரிபு வேறுகிளத்தல் — பிறவுள் பொருளொழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக. தலைமையும்—பன்மையும்—தலைமையானும்பன்மையானும் என்றவாறு.

பிறரும் வாழ்வா ருளரேனும், பார்ப்பனச் சேரியென்ற லுயர்திணைக்கட் டலைமைபற்றிய வழக்கு. எயினர் நாடென்ப தத்திணைக்கட் பன்மை பற்றிய வழக்கு.

பிற புல்லு மரனு முளவேனுங் கமுகந் தோட்டமென்ற லஃறிணைக்கட் டலைமை பற்றிய வழக்கு.

ஓடுவங் காடென்றலத்திணைக்கட் பன்மை பற்றிய வழக்கு.

பார்ப்பார் பலராயினுங், கமுகு பலவாயினுமவைதாமே பன்மை பற்றிய வழக்காம்.

'ஒன்றென முடித்தலான்' அரசர் பெருந்தெரு, ஆதீண்டு குற்றி வயிரக்கடகம் என்னும் பொதுச் சொல்லனவுங் கொள்க.

பலகுடியுஞ் சேர்ந்திருப்பது சேரி. பலபொருளுந் தொக்கது தோட்டம். (49)

50] இருதிணையிரு பாற்பொதுப்பெயர் மரபு

பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லாம் மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

இஃது இருதிணை யிருபாற்கும் பொதுவாகிய பெயர்க் கண் மரபு வழுக்காக்கின்றது.

(இ-ள்) பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லாம்—உயர்திணைக் கண்ணு மஃறிணைக் கண்ணும் பெயரினானுந் தொழிலினானும் பொது மையிற் பிரிந்த வாண்பாற்கும் பெண் பாற்கு முரியவாய் வருவெனவெல்லாம். மயங்கல் கூடா — வழூவாகா, வழக்கு வழிப்பட்டன-வழக்கின் கணடிப்பட்டன வாத லான். (எ—று)

(உ-ம்) 'பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர்' இது, பெயரிற் பிரிந்த வாணொழி மிகு சொல்.

'வடுகரச ராயிரவர் மக்களை யுடையர்'—இது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

'இவர் வாழ்க்கைப் பட்டார்'—இது தொழிலிற் பிரிந்த வாணொழி மிகுசொல்.

'இவர் கட்டிலேறினார்' - இது, தொழிலிற் பிரிந்த பெண் ணொழி மிகுசொல்.

இவை உயர்திணைக்கட் பெயரானுந் தொழிலானும் பிரிந்தன.

'நம்பி நூறெருமை யுடையன்'—இது', பெயரிற் பிரிந்த வாணொழி மிகுசொல்

'நம்மரச னாயிரம் யானையுடையன்'-இதுபெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல்.

'யானையோடிற், றென்பது' தொழிலிற் பிரிந்த பெண் ணொழி மிகுசொல்.

'யானைநடந்தது—இது தொழிலிற் பிரிந்த வாணொழி மிகுசொல்.

இவை, யஃறிணைக்கட் பெயரானுந் தொழிலானும் பிரிந்தன. இவை யிருபாற்கும் பொதுவாயினும் ஒரு பாற்கட் டாமே பிரிந்தன.

இவர் பெரிதுஞ் சொல்லுமாறு வல்லவர், இவர் பெரிதுங் கால்கொண் டோடுவர், எனத்தொழிலின் மிகுதி விளக்கி வருவனவுங் கொள்க. (50)

51] திணைவழுவமைதி

பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

இது திணைவழு வமையுமாறு கூறுகின்றது.

(இ-ள்) பலவயினானு மெண்ணுத்திணை விரவுப் பெயர்— பலஇடத்துந் திணைவிரா யெண்ணப்பட்ட பெயர், செய்யுளுள்ளே யஃறிணை முடிபின—செய்யுள கத்துப் பெரும்பான்மையுமஃறிணைச் சொற்கொண்டு முடியுமென்றவாறு.

'வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார் (ஆசாரக்கோவை)

'கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடியநிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மற வருமென
நான்குடன் மாண்ட தாயினும்.''
எனவரும்.

பலவயினானு (மென்றமையான்) மென்றதனாற். சில வயினாற்றிணை விரவாதுயர்திணையா னெண்ணி யஃறிணையான் முடிவனவுந் திணைவிரா யெண்ணி யுயர்திணையான் முடிவனவுங் கொள்க.

'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை'

என்றன, பாண்குடி, பறைக்குடி யெனக் குடியைச் சுட்டி நில்லாது பாணன், பறைய னெனப்பால் காட்டி

நிற்றலா னுயர்திணைப பொருணின்றஃறிணை முடிபு கொண்டனவேயாம்.

வெண்பா

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி—ரென்றிவர்க
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படுவார், (ஆசாரக்கோவை)
'பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டு
(சிலப்பதிகாரம்)

இவை திணைவிரா யெண்ணி யுயர்திணையான் முடிந்தன.

உயர்திணையும் 'பொருள்' என்னும் பொதுமை யான் அஃறிணைக்க ணடங்குதலானு, முயர்திணைக்க ணஃறிணை யவ்வா றடங்காமையானு மாசிரிய ரஃறிணை முடிபின, வென்றார்.

திணைவிரா யெண்ணி யஃறிணையானு முயர் திணையானு முடிந்தது தலைமை பற்றியும் பன்மை பற்றியு மிழிபுபற்றியு மென்றுணர்க.

'தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான் என்றாற் போல்வன தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளுமுடன் முடிந்த தோர் முறைமைபற்றி வந்தனவாம். (51)

**52) பலபொருள் ஒருசொல்லின் வகை**

வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொலென்
றாயிரு வகைய பலபொரு ளொருசொல்

இதனாற் பலசொல்லா னொருபொருளுணர்த்தி யினியொரு சொல்லான் வரும் பலபொரு ளுணர்த்து கின்றார், அவற்றின் பெயரு முறையுந் தொகையுங் கூறுகின்றார்.

(இ-ள்) வினைவேறு படூஉம் பலபொரு ளொரு சொல்-வினையான் வேறுபடும் பலபொரு ளொருசொல்லும், வினைவேறுபடாஅப் பலபொரு ளொருசொல்-வினையான் வேறுபடாத பலபொரு ளொருசொல்லும் என்று ஆயிருவகைய பலபொரு ளொருசொல்-என அவ் விரண்டு வகைப்படும் பலபொரு ளொருசொல். (எ-று) (52)

53) வினை வேறுபடும் பலபொரு ளொருசொல்

அவற்றுள்
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினு மினத்தினுஞ் சார்பினுந்
தேறத் தோன்றும் பொருடெரி நிலையே.

இஃதவற்றுள் வினைவேறு படுவதாமாறு கூறுகின்றது

(இ-ள்) அவற்றுள் வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்—அவ்விரண்டினுள்ளும் வினையான் வேறு படும் பலபொருளொருசொல், வேறுபடு வினையினு மினத்தினும் சார்பினும்—ஒருபொருட்கே சிறந்த வினை யானு மினத்தானுஞ் சார்பானும், பொருடெரி நிலை தேறத் தோன்றும் — பொருடெரி நிலைமைக்கட் பொதுமை நீங்கித் தெளியத் தோன்று மென்றவாறு.

'மா'வென்ப தொரு சார் விலங்கிற்கும், மரத் திற்கும், வண்டிற்கும், பிறபொருட்கும் பொது. குரு கென்பதோர் பறவைக்கும், உலைமூக்கிற்கும், வளைக் கும், பிறவற்றிற்கும் (பிறபொருட்கும்) பொது.

'மா பூத்தது'—இது வினை.
'மாவு மருது மோங்கின' இஃது இனம்.
கவசம் புக்கு நின்று மாக்கொணா வென்றது

சார்பு. ஒரு சாதிக்கண் அணைந்தசாதி, இனம், ஒரு வாற்றான் இயல் புடையது, சார்பு.

ஒன்றென முடித்த லென்பதனான் இம்மா வயிரம், வெளிறென வேறுபடுக்கும் பெயருங் கொள்க.

கழிப்பூக் குற்றுக் கானலல்கி,

(கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்) என்றாற் போலச் சிலபொருளை யொழித்துச் சில பொருண் மேனிற்ற லுரையிற் கொள்க.

இனமுஞ் சார்பும் பின்வரும் வினையொடுங் கூடி யல்லது பொருண் முடியாமையின் அவையும் வினை வேறு பட்டன வேயாம். (53)

54) மேலதற்கோர் புறநடை

ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்.

இது, மேலிற் சூத்திரத்திற்கோர் புறநடை கூறு கின்றது.

(இ-ள்) ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன் றும்—முற்கூறிய வினைவேறு படூஉம் பலபொருளொரு சொல் வினையான் வேறுபட நில்லாது பொதுவினை கொண்டு பொதுமைப்பட நின்றுழியும் வினை (யான்) வேறுபட்டாற் போல வின்ன திதுவென வேபடநிற்ற லும் வழக்கி னகத்துண்டு. (எ-று)

மா வீழ்ந்த தென்பது வீழ்தல்வினை யெல்லா வற்றிற்கும் பொதுவேனு மிவ்விடத் திக்காலத் திவன் சொல்லுகின்றதிம் மாவினை யென வொன்றினை யுணர்த்தி நின்றவாறு காண்க. என்றது, வினைவேறு

படூஉம் பலபொரு ளொரு சொல், லொருகால் வினை வேறுபடாத பலபொரு ளொரு சொற்போல நிற்கு மென்றவாறு, (54)

55) வினை வேறுபடாப் பலபொரு ளொரு சொல்

வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

இது, நிறுத்த முறையானே வினைவேறு படாப் பல பொருளொரு சொல்லாமாறு கூறுகின்றது,

(இ-ள்) வினைவேறு படாஅப் பலபொருளொரு சொல்—வினையான் வேறுபடாத பலபொருளொரு சொல், நினையுங்காலைக் கிளந்தாங்கியலும்—ஆராயுங் காலத் தின்ன திது வெனக் கிளக்கப்பட் டவ்வாராய்ச்சி யுடைய விடத்து நடக்கும். (எ—று)

'கன்றுநீரூட்டுக' என்றவழிக் கேட்டா னின்ன கன்று என்ப தறிய வாராதவழி 'யான்கன்று, பூங்கன்று' எனக் (என்று) கிளந்தே சொல்லுக வென்றவாறு.

'நினையுங்காலை' என்றதனாற் கருமச் சிதைவுள் வழிக் கிளந்து கூறுக வென்பது கொள்க.

'கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறார்' (குறுந் தொகை) என்றவழிக் கருமச் சிதைவில்வழிக் கிளக்க (கிளத்தல்) வேண்டாவாயினவாறு காண்க.

அன்றி,

ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்'

எனவொரு சூத்திரமாக்கி, வேறுபடாத வினை கொண்ட வழி வேறுபடாது தோன்றும் வினையான் வேறுபடாத பலபொருளொரு சொல், என்று பொருள்

கூறி, வினைவேறு படும் பலபொருளொருசொல்லாகிய மா வென்பது தானே வீழ்ந்ததென்னும் பொதுவினை கொண்டவழி வினைவேறு படாதாய் நின்றதற்கு 'மாமரம்வீழ்ந்த' தெனக்கிளந்து கூறுக வென்றார் சேனாவரையர். அங்ஙனம் பொருள் கூறின், 'வினை வேறுபடாப் பலபொருளொரு சொல்' என வேறோர் சொல்லன்றி யாயிருவகைய வென்பதனோடு மாறுபடு மென மறுக்க. (55)

### மரபு வழுக் காத்தல்

(56) குறித்தோன் கூற்றந் தெரித்து மொழி கிளவி.

இது, மரபுவழுக் காக்கின்றது.

(இ-ள்) குறித்தோன் கூற்றம்-ஒருபொருள் வேறு படக் குறித்தோன் கூற்றாற்றன் முதலியவற்றான் விளங்காதாயின், தெரித்து மொழி கிளவி — அப் பொருளைத் தெரிவித்துச் சொல்லுஞ் சொல்லாகக் கூறுகவென்றவாறு.

அரிதாரச் சாந்தங் கலந்தது போல
உருகெழத் தோன்றி வருமே—முருகுறழு
மன்பன் மலைப்பெய்த நீர்:

எனத்தெரித்து மொழிக. கலந்தது போலவருமே யிலங் கருவியன்பன் மலைப்பெய்தநீர்', எனத்தெரித்து மொழியாகக் கால் வழுவாம்.

'ஊட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை'

என்ற தூட்டா ததனை யூட்டியது போலக் கூறலின், வேறோருவம விலக்கணமாம்.

### வெண்பா

'பல்லார்தோ டோய்ந்து வருதலால் பூம்பொய்கை
நல்வய லூரநின் றார்புலால்—புல்லெருக்க

மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையால்
காதற்றாய் நாறு மெமக்கு'

இதுவுந் தெரித்து மொழிந்தது,

ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது"

எனத்தெரிந்து மொழியா தாயிற்றாயினுந் தலைவன் றவறும் புதல்வன்மே லன்புங் காரணமாகக் கூறலும் வழுவன்றென்றலு மொன்று. (60)

57) சில உயர்திணைப்பெயர் அஃறிணை முடிபு கோடல்

குடிமை யாண்மை யிளமை மூபபே
யடிமை வன்மை விருந்தே குழூவே
பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற் சொலென்
*றாவறு மூன்று முட்படத் தொகைஇ
யன்ன பிறவு மவற்றொடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லா
முயர்திணை மருங்கி னிலையின வாயினு
மஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

இது, திணை வழூக் காக்கின்றது.

(இ-ள்) குடிமை யாண்மை யிளமை மூப்பே யடிமை வன்மை விருந்தே குழூவே பெண்மை யரசே மகவே குழவி தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி காதற்சிறப்பே செறற் சொல் விறற்சொலென் றாவறு மூன்று முட்பட அன்ன பிறவும்அவற்றொடுசி வணித்தொகைஇ—குடிமை முதலாக விறற் சொல் லீறாகச் சொல்லப்பட்ட வப்பதி னெட்டு முளப்பட வவைபோல்வன பிறவு மவற்றோடு

* முளப்படத் (பா.போ)

பொருந்தித் தொக்கு, முன்னத்தி னுணருங் கிளவியெல்லாம்-சொல்லுவான் குறிப்பொடு படுத்துயர்திணைப் பொருளை யுணரப்படுஞ் சொற்களெல்லாம், உயர்திணைப் பொருளையுணரப்படுஞ் சொற்களெல்லாம் உயர்திணை மருங்கினிலையின வாயினும் உயர்திணையிருபாற்கண்ணும் பெரும்பான்மை நிலைபெற்றனவாயினும், அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும் —அஃறிணைப் பொருளை யுணர்த்தி நின்றவழி போல வஃறிணை முடிபே கொள்ளுமென்றவாறு.

என்னை யுயர்திணைப் பொருளுணர்த்திய வாறெனின், இக்குடிமை முதலியனவெல்லாம் பெரும்பான்மையு முயர்திணைக்குப் பண்பேயாய் நின்றப்பண்பினை யுணர்த்தி யஃறிணையாய் நில்லா தப்பண்புச் சொற்றன் பண்பையுந் தன்னையுடைய பொருளையுமொருங்கு தோற்றுவித்துப் பிரியாது நிற்றலி னுயர்திணைப் பொருளே யுணர்த்திற்றாம், இங்ஙனம் நிற்குமென் றுணர்தல் சொல்லுவான் குறிப்பினானன்றி யுயர்திணைப் பொருளிற் றீர்ந்தின்னவாறு நிற்குமென்று வேறோராற்றா னுணர்த லின்லென்றற்கு முன்னத்தி னுணரு மென்றார். இவற்றுள் விரவுப் பெயரா யஃறிணைப் பண்பையுணர்த்துவன வுளவேனு மவையுஞ் சொல்வான் குறிப்பானொருகா லுயர்திணைப் பண்பே யுணர்த்துமென்று கருதி, யுயர்திணைமருங்கி னிலையின வாயினு மென்றார். உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் மேற்கூறு படுத்துதும்.

இனிக் குடிமை யாண்மை முதலியவற்றை யாகு பெயரென்பாரு முளர். குடிமை யென்னுங் குணப்பெயராகுபெயராய்க் குடிமகனை யுணர்த்திற்றேற் குடிமை நல்லனென வுயர் திணையான் முடியும்; அன்றிக் குடிமையெனத் தனக்குரிய பண்பை யுணர்த்தி நிற்குமேற் பின்ன ரஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலுமென

வேண்டா; தானே யஃறிணையான் முடியும். ஆதலி னாகுபெயரென்றலும் பண்புணர்த்தி நிற்கு மென்றலும் பொருந்தாமை யுணர்க. இக்குடிமை முதலியவற்றிற்கு 'நன்று தீதென்றும், வந்தது போயிற்றென்று மேற்ற வஃறிணை வினை கொடுத் தொட்டுக.

இனி யிவை யுயர்திணைப் பண்பா யப்பொருளையு மொருங் குணர்த்தி நிற்குமாறு:—

குடிமையாவது, —குடிப்பிறப்பிற் கேற்ற வொழுக் கம், அஃது, 'ஒழுக்க முடைமை குடிமை' யென்றதனா னுணர்க. 'மடிமை குடிமைக் கட்டங்கி' னென வுயர் திணை யிருபாலையு முணர்த்திற்று.

ஆண்மை யாவ தாளுந் தன்மை. அஃது,
ஆயிடை யிருபே ராண்மை செய்த பூச

லென வுயர்திணை யிருபாலையு முணர்த்திற்று. இன்னும் 'ஊராண்மைக் கொத்த படிறுடைத்து' எனவும்,

வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யானும் வலியராய்த்—தாளாண்மை

எனவும் வரும். இது,

வேளா ணெதிரும் விருந்தின் கண்ணும்
வாளா ணெதிரும் பிரிவி னானும்' (களவியல்)

எனவும்

'உட்குடையா ளூரா ணியல்பினாள்'

எனவும் விகாரமாகியும் நிற்கும். இவ்வாண்மை, யாளுந்தன்மையே யன்றி யாண்பாலாகிய தன்மையு முணர்த்து மென்றற்கு.

'ஆண்மை சுட்டிய மெல்லாப் பெயரும்'

என்றாசிரியர் விரவுப்பெயர்க்க ணுடம்பொடு புணர்த்தோதினார். இவ்விரண்டு பண்பும்.

பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே,

யென்னு மெய்ப்பாட்டியற் சூத்திரத்தாற் றலைவற்குந் தலைவிக்கு மொப்ப வுரிய வென்றே யோதுகின்றாராதலி னீண்டு மிருபாற்கு மொப்பவே யோதினார்.

இனி 'யாண்மையை' யாள்வினை, யென்று முரைப்ப. இவ்வாண்மையு மேற்கூறும் பெண்மையு முயர்திணை யாண்பாலையும் பெண்பாலையு முணர்த்தாதென்று கருதி

'ஆண்பா லெல்லா மாணெனற் குரிய
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய'

வென வஃறிணைக்கே யோதியவற்றையே,

'பெண்ணு மாணும் பிள்ளையு மவையே.'

யெனக்கிளந்து கூறாதவழி உயர்திணையை யுணர்த்து மென்று மரபியலுட் கூறுவர். அன்றியும்,

'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்'

என்றும், பாடாண் பகுதியென்றும் பிறாண்டு மாண்மை யென்னா தாணென்றே சூத்திரஞ் செய்ததனானும் ஆண்மக்கள் பெண்மக்களென்னும் வழக்கானு முணர்க. இனியாண்மையை விரவுப்பெயரெனின், முற்காட்டிய வுதாரணங் கட்கும் விரவுப்பொரு ளஃறிணைப் பெயர்க்கு மேலாமை யுணர்க.

'ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த'

வென்பதற்கும் பிறவற்றிற்கும் 'ஆளுந்தன்மை' தோன்ற வென்றே பொருளுரைத்துக் கொள்க.

இளமையாவது, காமச் செவ்வி நிகழ்வதோர் காலம்.

'இளமை கழிந்த பின்றை வளமை
காமந் தருதலு மின்றே'

என உயர்திணை யிருபாலு முணர்த்திற்று.

மூப்பு, 'மூப்புடை முதுபதி' என உயர்திணை யிருபா லையு முணர்த்திற்று.

இளமையும் மூப்பும் பொருண்மேல் நில்லாது பண்பின் மேல் நிற்பி னஃறிணையையும் உணர்த்தும்.

அடிமை, யென்ப 'தடிமை புகுத்தி விடும்' என உயர் திணை இருபாலு முணர்த்தும்.

வன்மை யாவ தொரு தொழிலை வல்லுதல்.

அது, சொல்வன்மை நன்று.

என உயர்திணை யிருபாலு முணர்த்தும். ஈண்டு வன்மை, வலியன்று.

விருந்து, 'விருந்தெதிர் கோடலு' மென உயர்திணை யிருபாலு முணர்த்திற்று.

'ஆங்கவை விருந்தாற்றப் பகலல்கி.'
என அஃறிணைக்கும் இது வரும்.

குழு, 'குழுவின் பெயரே, யெனவு' மைம்பெருங் குழுவு மெண்பே ராயமு' மெனவு முயர்திணை யிருபாலு முணர்த்தும்.

பெண்மையாவது, கட்புல னாயதோர் அமைதித் தன்மை. அது 'பெண்மை யடுத்த மகளென் கிளவி' யென்பதனா னுணர்க. இது மகளென்பதும் பெண் பாலுணர்த்தப் பெண்மை யென்பதும், பெண்பா லுணர்த்து மேற் கூறியது கூறலா (மாதலின்) மாசிரியர்க்கிதுவே பொருளாயிற்று.

ஆண்மை யடுத்த மகள் (மகன்)
யென்பதற்கு மிஃதொக்கும். அது
பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கி
னென்பதனாலும்,

'அறனியலா ன் இல்வாழ்வா ன் என்பா ன் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்' (குறள்)

என்பதனாலு முணர்க. இப்பெண்மை யமைதித்தன்மை (யுயர்திணை)யே யன்றிப் பெண்பாலாகிய தன்மையு முணர்த்துமென்பது கருதி, யாசிரியர்,

'பெண்மை சுட்டிய வெல்லாப் பெயரும்'

என விரவுப் பெயர்க்க ணுடம்பொடு புணர்த் தோதினார். உயர்திணை யாண்பாற் குரித்தன்றிப் பெண்பாற்கே வரினு மதுவு முயர்திணையே யாதனோக்கி,

'உயர்திணை மருங்கி னிலையின வாயினும்'

என்றார்.

அரசு, 'அரசுபடக் கடந்தட்டு' என உயர்திணை யாண்பா லுணர்த்திற்று. இதுபெண்ணரசி யேந்தின, ளென ஈறு வேறாய வழிப்பெண்பா லு முணர்த்தும்.

இஃது,

'அரசுவா வீழ்ந்த களத்து, (களவழி)

என வஃறிணைக்கும் வரும்.

இனி, மகவுங் குழவியும்,

'குழவியு மகவு மாயிரண் டல்லவை'
கிழவ வல்ல மக்கட் கண்ணே'
யென வஃறிணைக் கண்ணே யன்றி யுயர்திணை

யிருபாற்கும் வருமென்றார்.

தன்மை திரிபெயர், அலி.

உறுப்பின் கிளவி, குருடு, முடம். இவை யிருபாற்கு மொக்கும். விரவுப் பெயர்க்காயின் முடவன் முடத்தி யெனவரும்.

காதல்– 'யானை வந்தது, பாவை வந்தது' என வொப் பின்றிக் காதல் பற்றி நிற்கும். அது,

'போர்யானை வந்தீக வீங்கு' எனவரும்.
'தன்னினை முடித்தலால்'
'தேமல ரங்கட் டிருவே புகுதக'

என வுவப்புங் கொள்க.

சிறப்பு, கண்போற் சிறந்தாரைக் கண்ணென்றலும், உயிர்போற் சிறந்தாரை யுயிரென்றலும் ஆம். அஃது,

'ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்
போல வருமெம் முயிர்' எனவரும்.

செறற் சொல்–செறுதலைப் புலப்படுக்கும் 'பொறி யறை கெழிஇயிலி' அது *பொய்ச் சீத்தை யென்றாற் போல்வது.

'தன்னினம் முடித்தலான்'
'ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்." (திருக்குறள்)
என விழிபுங் கொள்க.

விறற் சொல்–விறலை யுணர்த்தும் 'பெருவிறல், அருந் திறல்' போல்வன.

---

* போ சீத்தை (பா. பே)

அன்ன பிறவு மென்றதனான் 'வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு, எனவொருபாற்குரிய காட்டலுமொன்று. இருபாற் குரியன வந்துழிக் காண்க.

இவை யெல்லாம் பண்பென்று விளக்கிய, பண்பு வாய் பாட்டா லோதினார். இவை யுயர்திணைப் பண்புப் பெயரா யப்பொருளையு மொருங் குணர்த் திற்றேனு (உணர்த்தின வேனும்) மஃறிணைச் சொற் கொண்டு முடியுமென வழுவ மைத்தார். (57)

இதுவுமது

(59) கால முலக முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன
வாவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன.

இதுவுந் திணை வழுக் காக்கின்றது

(இ-ள்) கால முலக முயிரே யுடம்பே பால்வரை தெய்வம் வினையே பூதம் ஞாயிறு திங்கள் சொல் லென வரூஉம் ஆயீரைந்தொடு அன்னபிறவும்-கால முதலாகச் சொல்லீ றாகச் சொல்லப்பட்ட அப்பத்து மத்தன்மையன பிறவு மாகிய, ஆவயின் வரூஉம் கிளவி யெல்லாம்-அவ்வுயர்திணைக் கண்வரும் சொல்லெல் லாம், உயர்திணை மேன பால் பிரிந் திசையா-உயர் திணைச் சொல்லாயினு முயர்திணைக்கட்பால் பிரிந் திசையா; வஃறிணைப் பாலவா யிசைக்கு மென்றவாறு.

இச்சூத்திரத்துக் கூறியவற்று ளுலகமு முயிரு முடம்பு மொழிந்தன வெல்லாந்தெய்வத்தையே * யுணர்த்திற் றாகலிற் றெய்வமென்பதனை,

* உணர்த்தின ஆதலின். (பா. பே)

'தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்'

என்பதனா லுயர்திணை யென்பதுபெற்றாம். இவை யெல்லாந் தெய்வமென்னு முயர்திணைப் பொருளை* யுணர்த்திற் றேனுந்தெய்வ மென்னுஞ் சொல்லஃறிணை வாசக மாதலின் அதற் கேற்ப வஃறிணை முடிபே கொள்ளு மென்றார்.

இச் சொற்கள் கூறுகின்ற பொழுதே தத்த முயர் திணைப்பாற் பொருளே தோற்றுவித்து நிற்றலி னாகு பெயரன்மை யுணர்க.

இவர்க்குக் காலமாயிற் றென்றது காலக் கடவுளை. உலகம் பசித்த தென்ற துலகத்தாரை. உயிர்போயிற்று உடம்பு நுணிகிற்று இவையு முயர்திணை முடிபு கொள்ளாவென விலக்குதலி னீண் டுயர்திணைக்கே யுரிய வாயின. என்னை?

'அறஞ் செய்து துறக்கம் புக்கான்'
'உயிர் நீத்து ஒருமகன் கிடந்தான்'

என உயிரு முடம்பும் வரின் வேறின்றி யவராக வுணரப் பட் டுயர்திணைக்கேற்ற முடிபு கோடலின் மக்களே யாயின. இவை யிங்ஙன முணர்த்தலி னாகுபெயரன்று.

தெய்வம் செய்தது, இதனைப் பால் வரை தெய்வ மென்றாரின்ப துன்பத்திற்குக் காரணமாகிய விருவினை யும் வகுத்தலின்.

'வினைவிளைந்தது' இது இருவினைத் தெய்வம்.

'பூதம் புடைத்தது' ஞாயிறு பட்டது திங்களெழுந் தது. சொன்னன்று இது நாமகளாகிய தெய்வம்.

பிறவுமென்றதனாற் பொழுது நன்று, யாக்கைதீது, விதி வலிது, கனலிகடுகிற்று, மதி நிறைந்தது, வெள்ளி யெழுந்தது வியாழம் நன்று எனவரும்.

* யுணர்த்தின வேனும். (பா. பே)

'கால முலக' மென்பன வடசொல்லன்று. ஆசிரியர் வடசொல்லை (சொற்களை) யெடுத்தோதி யிலக்கணங் கூறாராகலின். உலகமென்பது மக்கட் டொகுதியை யுணர்த்தியவழி யுயர்திணையாயு மிடத்தை யுணர்த்திய வழி யஃறிணையாயும் வருதலி னொருசொல்லிருபொருட் கண்ணுஞ் சென்ற தெனப்படாது இருசொல்லெனவே படும். அங்ஙன மக்கட்டொகுதி யையுணர்த்துங்கா லுரிய பெயராயே யுணர்த்திற் றாகுபெயரன்று. இங்ஙனம் வருவன வற்றைப் பலகா லெடுத்தோ தாமை யிலேசாகக் கருதி ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும், என வெழுத்தொப்புமை பற்றியொரு சொல்லென்றார். உலோக மென்றது வடமொழித் திரிபு. (58)

குடிமை யென்னுஞ் சூத்திரத்திற்குப் புறநடை

(59) நின்றாங் கிசைத்த லிவணியல் பின்றே.

இது குடிமை யாண்மைத் தொடக்கத்திற்கோர் புறநடை

(இ-ள்) நின்றாங் கிசைத்தல்—ஈறுதிரியாது நின் றாங்கு நின்றுயர்திணையா யிசைத்தல், இவணியல் பின்று—காலமுதலிய சொற்களிடத் தியல்பில்லை (எ-று)

எனவே 'குடிமை, யாண்மை, முதலிய சொற்களிடத் தியல்பு ண்டாம் என்றவாறு.

குடிமை நல்லன், ஆண்மை நல்லன், மூப்புத்தீய னென வொட்டுக. (59)

60) காலம் என்னும் சூத்திரத்திற்குப் புறநடை
இசைத்தலு முரிய வேறிடத் தான.

(இது கால முலகத் தொடக்கத்திற்கோர் புறநடை)

(இ-ள்) இசைத்தலும் உரிய — கால முலக முதலிய சொற்களு முயர்திணையா யிசைத்தலு முரிய,வேறிடத்

தான ஈறு திரிதற் கேற்பன விறுதிரிந்து வாய்பாடு வேறு பட்ட விடத்தென்றவாறு.

காலன் கொண்டான், உலகர் பசித்தார். எனவீறு திரிவன வற்றோ டொட்டுக. (60)

61] அருத்தா பத்தி

எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.
இஃது, அருத்தா பத்தி கூறுகின்றது

(இ-ள்) எடுத்தமொழி—இனமாகிய பொருட்க ணொன்றை விதந்துவாங்கிக்கூறியவழி யச்சொல் இனஞ் செப்பலு முரித்து — தன்பொருட் கினமாகிய பிற பொருளைக் குறிப்பா னுணர்த்துதலு முரித்தென்ற வாறு.

உம்மை யெதிர்மறை யாகலின் உணர்த்தாமையும் உரித்தாயிற்று.

அறஞ் செய்தான் துறக்கம் புகும்

என்றவழி யினப்பொரு ளாகிய

மறஞ் செய்தா னிரயம் புகும்

என்ப துணர்த்திற்று.

இழிவறிந்து உண்பான்கண் இன்பம் எய்தும்.
என்றவழிக்

'கழிபே ரிரையான் இன்பம் எய்தான்'

என்பதும் இனப் பொருளை யுணர்த்திற்று.

'கீழ்ச் சேரிக்கோழி அலைத்தது' என, மேற்சேரிக் கோழியலைப்புண்டது மது.

ஆ வாழ்க! அந்தணர் வாழ்க!

என்பன வினஞ் செப்பாதன. அருத்தாபத்தி யினஞ் செப்பு மாறு, தன்னோடு மறுதலைப்பட்டு நிற்ப தோன் றுள் வழியாயிற்று. மறுதலைப்பாடு பல வுள்வழிச் செப் பாது. ஆவிற்கு மறுதலை, யெருமை, யொட்டக, மெனப் பலவுள, அந்தணர்க்கு மறுதலை யரசர் வணிகர் வேளாளரெனப் பிறருமுளர். அதனா னங் ஙனம் பலமறுதலை யுள்வழிச் செப்பாது. *(61)*

**62]** திணைவழுக் காத்தல்.

கண்ணுந் தோளு முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக்கியலு மெழுத்தலங் கடையே.

இதுவுந் திணை வழுக் காக்கின்றது.

(இ-ள்) கண்ணுந் தோளு முலையும் பிறவும்- கண்ணுந்தோளு முலையு மவை போல்வன பிறவும்' பன்மை சுட்டிய சினைநிலைக்கிளவி — பன்மையைக் குறித்து நின்ற சினைநிலையை யுணர்த்திய சொற்கள், தம் வினைக்கியலும் எழுத்தலங்கடை — அவை தமக் குரிய பன்மைவினைக் கேற்ற வகர வீற்றாற் கூறக் கரு தாது தம்முதல்வினைக் கேற்ற வொருமை யீற்றானும் பன்மை யீற்றானுங் கூறக்கருதியவழி, பன்மை கூறுங் கடப்பாடில — தமக்குரிய பன்மையாற் கூறப்படும் யாப்புறவுடைய வல்ல வென்றவாறு.

(உ-ம்) கண் ணல்லள், தோணல்லள், முலை நல்லள் எனவும்

கண்ணல்லர், தோணல்லர், முலைநல்லர் எனவும்,

கண்ணொந்தாள், தோணொந்தாள், முலை நொந்தாள் எனவும் வரும்.

பிறவு மென்றதனாற் புருவங் காது முதலியனவுங் கொள்க.

மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் எனவும் ஒருமைச் சினைப்பெயர் நின்றுயர்திணை கொண்டனவும்,

நிறங் கரியள், கவவுக் கடியள் எனப் பண்புந் தொழிலும் நின்றுயர்திணை கொண்டனவுந் தன்னின முடித்தலாற் கொள்க.

கண்ணொந்தது, முலையெழுந்தது, என்றாற் போல்வன சாதி யொருமையுணர்த்து வனவும் உணர்த்தலு மிதனாற் கொள்க.

கோடு கூரிது கரி, குளம்பு கூரிது குதிரை, எனப் பன்மைச் சினைப்பெயர் நின்று, முதல் வினையாகிய வொரு மையான் முடிவனவுங் கொள்க.

தொல்காப்பியஞ் சொல்லதிகாரம்,
முதலாவது கிளவியாக்கம் முற்றும்.
ஆகச் சூத்திரம் 62

# இரண்டாவது, வேற்றுமை யியல்

63) வேற்றுமையின் றொகை. (1)

**வேற்றுமை தாமே யேழென மொழிப**

இவ் வோத்துச் செயப்படு பொருண் முதலியன வாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துணர்த்துதலின் வேற்றுமை யோத்தென்று காரணப்பெயர் பெற்றது. முன்னர் நான்கு சொற்கும் பொதுவிலக்கண முணர்த்திய வதிகாரத்தானே யிப்பொழுது விலக்கணங் கூறுகின்ற வோத்தினையுஞ் சேரக் கூறினார். ‘அப்பொது விலக்கண மென்னை யெனின்? வேற்றுமை தாமும் பெயரு மொருசார் வினைச்சொல்லு மிடைச் சொல்லு முரிச்சொல்லுமாகிய பொதுவிலக்கண மாத லுடைமையானும்,

‘எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே’

எனவும்,

‘அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே’

எனவும்,

‘ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப’

எனவும்,

‘பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா’

எனவும். (தொழிற்பெயர் காலம் தோன்றும் எனவும்) மேற்கூறுஞ் சிறப்புடைப் பெயர்க்குப் பொதுவிலக்கண மீண்டுக் கூறுதலுடைமையானு மிவ்வோத்துப் பொது விலக்கணமே கூறியதாயிற்று.

'ஆயின்' வேற்றுமை மயங்கியலும் விளிமரபு மிடை வைத்த தென்னை? யெனின், இவ்வேற்றுமையின் மயக்கம் யாப்புடைமைத்தான் வேறோ ரோத்தாக்கி விளியிவைபோற் சிறப்பின்மையின் வேறோ ரோத்தாக்கி வைத்தார். இங்ஙனம் வைத்துப் பின்னர்ச் சிறந்த பெயர்வினை யிடையுரிகளை முறையே கூறி யிவற்றுளெஞ்சிநின்ற விலக்கணத்தை யெச்ச வியலுட் கூறினார் என்றுணர்க.

பொருண்மை சுட்டன் முதலிய வாறு பொருளையுங் குறித் தவற்றாற் றான் வேறுபட நிற்றலானும், முடிக்குஞ் சொல்லைத் தான் விசேடித்து நிற்றலானும் எழுவாயும் வேற்றுமையாயிற்று.

இச் சூத்திரம், வேற்றுமையினைத் தொகுத்துணர்த்துகின்றது. (இனைத்து)

(இ-ள்) வேற்றுமை தாமே யேழென மொழிப—வேற்றுமையாவன வேழென்று சொல்லுவர் தொல்லாசிரிய ரென்றவாறு

தாமே யென்பது சந்தவின்பஞ்செய்து நின்றது. (1)

இதுவுமது

64) விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே.

இது ஒழிந்த வேற்றுமையுங் கூறித் தொகை கூறுகின்றது.

(இ-ள்) விளிகொள் வதன்கண் விளியோடு — விளியேற்கும் பெயர்க்கண்ணதாகிய விளியோடு முற் கூறியவற்றைத் தலைப்பெய்ய, எட்டே — எட்டு வேற்றுமையா மென்றவாறு.

விளிகொள் வதன்கண் விளி யென்றதனாற் பிறிதோரிடைச்சொல்லை யேலாது தானே திரிந்துமியல்பாயும் நிற்கும் பெயரதிறுதி விளியென்பது பெற்றாம். (2)

வேற்றுமைகளின் பெயரும் முறையும்

65] அவைதாம்,
பெயரை யொடுகு
இன்னது கண்விளி யென்னு மீற்ற.

இஃது, அவற்றின் பெயரு முறையு முணர்த்துகின்றது.

(இ-ள்) அவைதாம் — எட்டெனப்பட்ட வேற்றுமை யாவன, விளியேன்னுமீற்ற - விளிவேற்றுமையை யிறுதி யாகவுடைய, பெய ரை யொடு கு இன் னது கண்-பெயரு மையு மொடுவுங் குவ்வுமின்னு மதுவுங் கண்ணுமா மென்றவாறு.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்' என் பதனா னொடுவு மதுவு மோதினாரேனும், மூன்றா வதற்குச் சிறுபான்மை யோடு மானு, மாறாவதற் ககர விறு மதுவுங்கொள்க. (3)

எழுவாய் வேற்றுமை.

66 அவற்றுள்
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.

இது முறையானே யெழுவாய் வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள்—மேற்கூறிய வேற்றுமை யெட் டினுள், எழுவாய் வேற்றுமை—முதல்வேற்றுமையாவது, பெயர் தோன்றும் நிலையே-பெயர்ப்பொருள றுவகைப் பட்ட பயனிலையுந்தன்கட் டோன்ற நிற்கும் நிலைமை யென்றவாறு.

அது, உருபும் விளியு மேலாது நிற்கும் நிலையதாயிற்று

(உ-ம்) மக்கள், ஆ எனவரும்.

இதனை முற்கூறிய தென்னை? யெனின், 'சாத்தன் குடத்தைக் கையால் வனைந்து கொற்றற்குக் கொடுத் தான்' என வினை முத னின் றேனையவற்றை நிகழ்த் துதல் வேண்டுதலி னவ்வினை முதலாகிய வெழுவாயை

மு.ற்கூறினார். அன்றியு மேலிரண்டாவது மூன்றாவ தென் றாளுமிடத் திதனை முதல் வேற்றுமை யென்றே யாள வேண்டுதலினப் பொருடருதற்கு முன்னின்ற சூத்திரத்திற்பெயரென்று கூறியவதற் 'கெழுவாய் வேற் றுமை' யென்று வேறோர் பெயர் கொடுத்தார். இதற் கிப்பெயர் கூறிய வதனானே யுருபும் விளியு மேற்பன வற்றைப் பெயரென்று வழங்குதல் பெற்றாம். அஃதீறு பெயர்க்காகு மென்றத னானுமுணர்க. (4)

67] எழுவாய் பயனிலை ஏற்குமாறு

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினை நிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே.

இது, அவ்வெழுவா யாறு பயனிலையு மேற்குமென் கின்றது.

(இ-ள்) பொருண்மைசுட்டல்-ஓர் பொருளது பண்பு முதலியன சுட்டாதப்பொருட்டன்மைய தூண்மைத் தன்மையே சுட்டி நிற்க வருதல், வியங்கொளவருதல்-தா னேவலைக் கொள்ளவருதல், வினைநிலை யுரைத்தல் - தனது தொழிலினைச் சொல்ல வருதல், வினாவிற் கேற் றல் - தான் வினாவுதற்குப் பொருந்தி வருதல், பண்பு கொள வருதல் - தனது பண்பினைத் தான் கொள்ள வருதல், பெயர்கொள வருதல் - வினை முதலியவற்றைக் கொள்ளாது தானே பெயரைக் கொண்டு முடிய வரு தல், என்று அன்றி யனைத்தும் - என்று சொல்லப்பட்ட வவ்வனைத்து வரவும், பெயர்ப் பயனிலையே-அவ் வெழு வாய் வேற்றுமையது பயனாகிய நிலைமை யென்றவாறு.

தன்னை முடித்தற்குப் பின்வருஞ் சொல்லின் பொருண்மையைத் தானவாவிப் பெயர் நிற்கு நிலை வேறுபாட்டைப் பயனிலை யென்றார்.

(உ-ம்) ஆவுண்டு, ஆசெல்க, ஆகிடந்தது, ஆயாது? ஆஎவன்? ஆவெளிது? ஆ கரிது, ஆவிது. (ஆபல)

எனவரும்.

தன்னின முடித்த லென்பதனான்
ஆவில்லை ஆவல்ல.
என வினைக் குறிப்புங் கொள்க.

பொரு ளென்னாது பொருண்மை யென்றார் அப் பொருளினது தன்மை யுணர்த்துதற்கு. பொருட்டன்மையாவது அப்பொருள்களின் சாதித்தன்மை, ஆவென்னும் பொருள் கெட்டதேனும் மவ்வாவினது சாதித் தன்மை யெக்காலத்துங் கெடாது நிற்கு மென்பதுணர்த்துதற் காவுண்டென்றார். கட்புலனாகிய வா கெடவும் அச்சாதித்தன்மை கெடாதென்பது தோன்றப் 'பொருண்மை சுட்ட' லென்று சூத்திரஞ் செய்தார்.

வினைநிலை யுரைத்தல், தன்றொழில் வியங்கொள வருதன் மேற் றற்கட் (மேலதன்கண்) டொழி னிகழ்வதாக வொருவனேவப்படுதல். இரண்டிற்கு மிதுவே வேறுபாடு.

வினைநிலை யுரைத்தலும், பண்புகொள வருதலும்; பெயர் கொள வருதலும் முடிக்குஞ்சொல்லாதலே யன்றி முடிக்கப்படுஞ் சொல்லாதலு முடைய. வியங்கோளும் வினாவும் முடிக்குஞ் சொல்லா யல்லது நில்லா. வினைக் குறிப்பு முடிக்குஞ் சொல்லாயல்லது வாராது.

'ஆபல' வென்பது பிறிதோர் சொன்-னோக்காதாவென் பதனோ டமைந்து மாறும்.

முன்னின்ற சூத்திரத்திற்றோன்றும் நிலையென்றதனானே 'ஆயன் சாத்தன் வந்தா' னெனப் பண்பொட்டாகாது விட்டி சைத்து நின்று மற்றோ ரெழுவாயின் பயனிலையோடு தானும் பயனிலை கோடலும், ஆயன்வந்தான் சாத்தனென வினைப்பின்னும் நிற்றலும்

சாத்தன் றலைவனாயினானெனப்பயனிலைக் கடையாய் நிற்றலுஞ், சாத்தன்கணல்ல னெனச் சினைவினை முதற் கேற்றிக் கூறலு, மிம்மணிநிறம் நன்றெனப் பண்பின் றொழிலைப் பண்படைந்த பொருட்கேற்றிக் கூறலு மிக்குதிரை நடை நன்றெனத் தொழிலின் றொழிலைத் தொழிலடைந்த பொருட் கேற்றிக்கூறலும் இவ்வாறு நீரொழுகுமென விடத்து நிகழ் பொருளின் றொழி லிடத் திற் கேற்றிக் கூறலு மிறைவனருளா லெம்முயிர்காக்கு மிறைவனருளலின் யாமுயிர் வாழ்துமென வெழுவாய்க் குப் பயனிலையாய் வந்தபெயர் தானும் எழுவாயாய்ப் பயனிலை கோடலும், அஃதுரு பேற்றலுமாசெல்க, செல்க வா வென முன்னும் பின்னும் பயனிலை நிற்ற லும் பிறவுங் கொள்க.

'சிறுமை பெருமையிற்காணாது துணிந்தே'யெனவுங்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி

யெனவும் வரும்.

பண்புகளும் பொருளியை பின்றேனும் பெயர்கொள வரு தற்பாற்படுதலும் 'ஆசிரியன், பேரூர்கிழான் செயிற் றியன் இளங்கண்ணன், சாத்தன் வந்தான் எனப்பல பெயர் ஒருங்கெழுவாயாய் நின்று ஒருபயனிலை கோடலு மிதனாற் கொள்க. இன்னுமெழுவாய் வேற்றுமையின் விகற்பமெல்லாம் வழக்கி னகத்தறிந்து இவ்விலேசான் முடித்துக் கொள்க. (5)

68) தொகைப் பெயரும் பயனிலை கொள்ளல்
பெயரி னாகிய தொகையுமா ருளவே
யவ்வு முரிய வப்பா லான.

இது, தொகைப் பெயரும் பயனிலை கொள்ளு மென் கின்றது.

(இ-ள்) பெயரினாகிய தொகையுமா ருளவே— பெய ரும் பெயருந்தொக்க தொகையுமுள வும்மையாற் பெய ரும் வினையுந் தொக்க தொகையு முள; அவ்வு முரிய அப்

அவ்விரண்டினுள் பெயரும் பெயருந் தொக்க தொகையும் உரிய வல்வெழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளு மிடத்தென்றவாறு.

'அவ்வு முரிய', வென்ற திரண்டற்கும் பொது வேனு மேற்புழிக் கோடலா னொன்றற்கே யாயிற்று.

(உ-ம்) யானைக்கோடு கிடந்தது.

மதிமுகம் வியர்த்தது.
கொல்யானை நின்றது.
கருங்குதிரை ஓடிற்று.
உவாஅப் பதினான்கு கழிந்தன.
பொற்றொடி வந்தாள்.

எனவரும்.

நிலங் கடந்தான், குன்றத் திருந்தா, னெனப் பெயரொடு வினைதொக்கன எழுவாயாய்ப்பயனிலை கொள்ளாது முற்றாய் நிற்குமென்றுணர்க. இதனாற் றொகை யிருவகைய வென்பதுங் கூறினாராயிற்று. (6)

69] எழுவாய் புலப்பட்டும் புலப்படாதும் நிற்றல்
எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப.

இஃது, அவ்வெழுவாய் புலப்பட்டும் புலப்படாதும் நிற்கும் என்கின்றது.

(இ-ள்) எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி - மூன்றிடத்து எழுவாயும் செவிப்புலனாகத் தோன்றி நின்று அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப — பயனிலை கோடல் செவ்விது என்ப ஆசிரியர்.

எனவே, யவ்வாறு தோன்றாது நின்று பயனிலை கோடலும்உண்டு; அது செவ்விது அன்று என்றவாறாம்.

'அவ்வியல் நிலையல்' என்பது எவ்வியல் நிலையலோ? எனின் மேற்கூறிய ஆறு பயனிலையுங் கொண்டு நிற்றல்.

செவ்விது, அப்பயனிலை கோடலில் திரியாவாய்ப் பய னிலைப் பட்டு நிற்றல் செவ்விது எனவே பிறிது ஏற்றற் குச் செவ்விய ஆகாமையும் உடைய, அவைநீயிர் என் பதும், அவ்வாய்க் கொண்டான் என்பதும் உருபு ஏற் றற்குச் செவ்விய அல்ல.

கருவூர்க்குச் செல்லையோ சாத்தா? என்றவழிச் 'செல்வல்' எனவும், 'யான் எது செய்வல்? என்றவழி, 'இது செய்' எனவும், இவன் யார்? என்றுழிப் 'படைத் தலைவன்' எனவும். செப்பியவழி, யான், நீ, இவன், என்னும் எழுவாய் வேற்றுமை வெளிப்படாது நின்று செல்வல் இது செய் படைத்தலைவன் என்றும் பய னிலை கொண்டவாறு காண்க.

(7)

70] உருபு நிற்குமிடம்

கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப.

இஃது, உருபு நிற்கு மிடங் கூறுகின்றது.

(இ-ள்) கூறிய முறையி னுருபுநிலை திரியாது- மேலை ஒடு கு இன் னது கண்ணென்று கூறிய முறை மையை உடைய யுருபுகடத்தம் நிலை திரியாது, பெயர்க் கீறாகு மியற்கைய வென்ப-பெயர்க்கீறாகு மியல்புடைய வென்று கூறுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்.) சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின் சாத்தனது, சாத்தன்கண்,
எனவரும்.

இவ் விடைச் சொற்கள் பெயர்க் குறுப்பாகாது தாமென வேறுணரப்பட் டிறுதி நிற்றலி னிலைதிரியா தென்றார். எனவே, வினைக்குத் தாமென வேறு படாது நிற்கு மென்பதாயின.

71] பெயர்க்கு ஓர் இலக்கணம்.

பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே.

இது, பெயர்க்கோ ரிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) பெயர்க்கிளவி—பெயர்ப் பெயராகிய சொல்லும், நிலைக்கிளவி—அப்பெயரது நிலையிலே நிற்றலையுடைய சொல்லும், காலந் தோன்றா—காலந்தோன்றாவாய் நிற்கும், தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே — ஒரு பொருளது புடைபெயர்ச்சியாய்க் காலந்தோன்றுதற்குப் பொருந்து மொரு கூற்றுத் தொழிற் (பெயர்) பேரல்லாத விடத் தென்றவாறு.

'பெயர் தொழினிலை' யென்பன வாகுபெயர். பெயர், பொருள்; தொழினிலைக், காலம்; ஒட்டும், பொருந்தும்.

இதனாற் றிணையும் பாலுங் காலமு மிடனுந் தோன்றுந் தொழிற்சொற் படுத்த லோசைப்பட்டு நின்றாற் றொழிற்பெயராய் நின்று பயனிலை கொண்டு முருபேற்றுங் காலத்தைத் தோற்றுவித்தலும்; பெயர்ப் பெயரும், பெயரது நிலையிலே நிற்றலையுடைய சொல்லுங் காலத்தை யாண்டுந் தோற்றுவியாமையும் கூறினார்.

இடுகுறியாய்ச் 'சாத்தன், கொற்ற' னெனவரும் பெயர்ப் பெயரும், புடைபெயர்ச்சி மாத்திர முணர்த்தி நிற்கும் உண்டல் தின்றலென வரும் வினைப்பெயரும், பூசல் வேட்டை யென்றாற் போலப் புடைபெயர்ச்சி விளக்காது நிற்கும், வினைப்பெயரும், உண்டான் தின்றா னென்றாற் போலக் காலந்தோன்றி வினை முதன்மே னின்ற படுத்த லோசையா னாந் தொழிற் பெயரு மோசை வேறுபாட்டானன்றி 'யுண்டவ னுண்ணுமது' வென்றாற்போலத் தானே பெயராய்க்

காலந்தோன்றி வினைமுதன் மேனிற்குந் தொழிற் பெயரும்.

'கொலைவர் கொடுமரந் தேய்த்தார்'

அவ னேறிற்றுக் குதிரை.

என்றாற் போலச் செயப்படு பொருட்கண் காலங் காட்டி நின்ற தொழிற் பெயரும் 'யான் சொன்னவ, னுண்பது நாழி யென்றாற்' போலச் செயப்படு பொருண்மேற் பெயராயக் காலந்தோன்றி நிற்குந் தொழிற் பெயரும் பிறவாற்றாய் வரும் பெயர் வேற்று மையு முணர்க. (9)

72] இரண்டாம் வேற்றுமையின் பொருள்

இரண்டா குவதே,
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்று மதுவே.

இது, முறையே யிரண்டாவ திப்பொருட்கண் வரு மென்கின்றது.

**(இ-ள்)** ஐயெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி இரண்டாகுவதே—'பெய ரைஒடு குஇன் னது கண்' என்னுஞ் சூத்திரத்து ஐ எனப் பெயர் பெற்ற வேற்று மைச் சொல் லிரண்டாவதாம். அது எவ்வழிவரினும் — அஃதி யாண்டு வரினும், வினையே வினைக்குறிப் பவ் விரு முதலிற்றோன்றும் வினைச் சொல்லினும் வினைக் குறிப்புச் சொல்லினும் பிறந்த செயப்படு (பொருளா கிய) பொரு ளவ்விரண்டு காரணத்தின் கண்ணுந் தோன்று மென்றவாறு.

பெயரிய வென்பது 'கவிரம் பெயரிய' வென்றாற் போல நின்றது.

வினை வினைக்குறிப் பென்பன வீண்டாகுபெயர், அம் முதனிலைகளாற் பிறந்த வச்சொற்களை யுணர்த் தலின்.

முதலென்றது காரணத்தை 'ஆயெட்டென்ப தொழின் முதனிலையே' யென்றமையா லக்காரணங்க ளெட்டுள வெனும் ஏற்புழிக் கோட லென்பதனாற் செயப்படுபொருளே யீண்டுக் (கோடும்) கொடுக்கும்

காரியத்தினை நிகழ்த்துவிப்பது காரணம்.

ஒருவினை முதல் செய்யுந் தொழிலினை யுறுவது செயப் படுபொருள்.

(உ-ம்) குடத்தை வனைந்தான்
குழையை யுடையன்

எனவரும்.

'எவ்வழி வரினு' மென்றதனான்

புகழை நிறுத்தல்
புகழை யுடைமை

என வினைப்பெயரிற் புடைபெயர்ச்சி பற்றியும் முடியும்.

இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவது மெய்தப் படு வதுமெனச் செயப்படுபொருண் மூன்றாம். அவை, முறையே யில்லதனை யுண்டாக்கலு முன்னுள்ளதனைத் திரித்தலுந் தொழிற் (பெயர்) பயனுறுந் துணையாய் நிற்றலுமாம். இவ்வுருபை முடித்தற்கு மேலிற்காப்பு முதலிய வாய்பாடு பற்றிவரும் பொருள்களை யிம் மூன்று கூற்றானும் பகுக்கின்றார். ஈண்டு வினைமாத் திரையும் வினைப்பெயருமாகப் பகுப்பர்.

(ஈண்டுக்) குடத்தை வனைந்தா னென்றது மேல் வரு மிழை யென்னுமியற்றப்படும் பொருளது. அஃது எயிழை 'இழைத்தானெனவரும்' என்ற தெயிலை யிழைத் தலைச் செய்தானென்னும் பொருட்டு. இழையென்னும் வினைமாத்திரையை யுணர்த்தும் முதனிலைப்பெயர் நின்று முன்ன ரிழைத்தலென வினைப்பெயரையுந் தோற்று வித்து இழைத்தலை யென்னு முருபையு மேற்

பித்துச் செய்தானென வினையொழிந்த காரணங்களே யானும் நிகழுங்காரியத்தினையுந் தோற்றுவித்து நிற்றலி னிழையென்னு முதனிலைப் பெயரை வேற்றுமைப் பொருளாக வெடுத்தோதினார். இப்பொருட்கண் தோன்றிய செய்தானென்னுங் காரியத்துட னல்ல தெயிலை யென்னு மிரண்டாவது முடியாமையு முணர்க. என்னை, செய்தற்கிழைத்தல் செயப்படு பொருணீர்மைத் தாய்க் காரணமாய் நிற்றலானு மொழிந்த காரணங்க டன்கணிகழ்ந்து காரியமாந் தன்மை யிழைத்தற் கின்றாகலானு மென்பது. இவ்வாறே மேலிற் சூத்திரத் தொழிந்த பொருள்களையும் விரிக்க.

இனி, வினைக் குறிப்பிற்குங் குழையை யுடையா னென்புழி யுடையனெனக்கருதுதல் வினைக்கருத்தை நிகழ்த்துகின்றான் வினைமுதல்; அக்குழை யவன் கருத்து நிகழ்த்தப்படும் பொரு ளாய்க் கிடக்கின்ற தன்மை செயப்படுபொருள். இவ்வாறே யொழிந்தனவுங் குறிப்பாற் காண்க. (10)

73] இரண்டாவதன் பொருள் பற்றிய வாய்பாடுகள்
காப்பி னொப்பி னூர்தியி னிழையி
னோப்பிற் புகழிற் *பழியி னென்றா
பெறலி னிழவிற் காதலின் வெகுளியிற்
செறலி னுவத்தலிற் கற்பி னென்றா
வறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற் பிரித்தலி
னிறுத்தலி னளவி னெண்ணி னென்றா
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னோக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்றா
வன்ன பிறவு மம்முதற் பொருள
வென்ன கிளவியு மதன்பால வென்மனார்.

இஃது அதனை முடிக்கவரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

*பழிப்பின். (பா.பே).

(இ-ள்) காப்பின் சிதைப்பின் என்றா—காப்பு முதலாகச் சிதைப்பீறாகச் சொல்லப்பட்ட விருபத்தெட்டுப் பொருளும், அன்னபிறவு மம்முதற் பொருள வென்னகிளவியும்-அவைபோல்வன பிறபொருளுமாகிய அச் செயப்படு பொருண்மேல் வருமெல்லாச் சொல்லும், அதன் பாலவென்மனார்—அவ்விரண்டாம் வேற்றுமையின் கூற்றனவென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) (1) எயிலை இழைத்தான் இவ்வியற்றப்படுவதொரு தன்மைத்தாகலி னொரு வாய்பாடே கூறினார்.

(2) கிளியை யோப்பும், பொருளையிழக்கும்—இவற்றிற்கு வேறுபாடொரு தொழி லுறுவிக்கப்பட்டுத் தானே போதலுந் தொழிற் பயனுற்ற மாத்திரையா யொருவன் கொண்டு போகப் போதலும்.

நாணையறுக்கும், மரத்தைக் குறைக்கும்—இவற்றிற்கு வேறுபாடு சிறிது இழவாமல் வேறுபடுத்தலும், சிறிதிழக்க வேறுபடுத்தலும் பெருமையைச் சுருக்குதலும்.

நெல்லைத் தொகுக்கும், வேலியைப் பிரிக்கும்.—இவற்றிற்கு வேறுபாடு, விரிந்தது தொகுத்தலும் விரித்தலும்.

அறத்தையாக்கும், நாட்டைச் சிதைக்கும்—இவற்றிற்கு வேறுபாடு, மிகுத்தலுங் கெடுத்தலும்.

இவ்வெட்டும் வேறுபடுக்கப் படுவன.

(3) ஊரைக்காக்கும், தந்தையையொக்கும், தேரையூரும், குரிசிலைப் புகழும், நாட்டைப்பழிக்கும், புதல்வனைப்பெறும், மனைவியைக் காதலிக்கும், பகைவரை வெகுளும், செற்றாரைச்செறும், நட்டாரையுவக்கும், நூலைக்கற்கும், பொன்னை நிறுக்கும், அரிசியை யளக்கும், அடைக்காயை யெண்ணும், ஊரைச்சாரும்

நெறியைச்செல்லும், சூதினைக் கன்றும், கணையை நோக்கும், கள்ளரையஞ்சும் எனப்பத்தொன்பது மெய்தப்படுவன.

இவை தாந் தொழிலுறுவனவுந் தொழிற்பயனுறு வன வுமாய் வரும் வேறுபாடு முணர்க. வெகுடலுஞ் செறலுங் கொலைப் பொருளாயவழி வேறுபடுக்கப்படு வனவாம். செறல் வெகுளியது காரியம்; உவத்தல், காதலது காரியம்.

இனிச் செய்வான் கருத் தில்வழி நிகழுஞ் செயப்படு பொருளுஞ், செய்வானும் செயப்படு பொருளுந் தானே யாய் நிற்பனவுங் கொள்க.

(உ-ம்) சோற்றைக் குழைத்தான்
சாத்தன் றன்னைக் குத்தினான்

எனவரும்,

இன்னுமிச் செயப்படு பொருட்டன்கட் டொழி னிகழ்ந்தும் நிகழாதும் வரும்; அறுத்தன் முதலியன தன் கண்ணிகழ்வன; சார்தன் முதலியன தன் கண்ணிகழா தன.

'அன்னபிறவு' மென்றதனாற் பகைவரைப் பணித் தான்; சோற்றை யட்டான்; குழையை யுடையன் பொருளையிலன் என்றாற் போல்வன கொள்க.

இச்சூத்திரந் தொகுத்த *மொழியான் வகுத்தனர் கோடல். **(11)**

74) மூன்றாம் வேற்றுமையின் பொருள்
மூன்றாகுவதே
யொடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே.

இது முறையானே மூன்றாவ திப்பொருட்கண் வருமென்கின்றது.

---

*மொழியின் (பா. பே.)

(இ-ள்) ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி மூன்றாகுவதே — மேலொடுவெனப் பெயர்கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொன் மூன்றாவதாம், அது வினைமுதல் கருவி அனைமுதற்று—அது வினைமுதலுங் கருவியுமாகிய வவ்விரண்டு காரணத்தையும் பொருளாக வுடைத் தென்றவாறு.

மேலதனி னியறன் முதலியன வானுருபிற் கேற்ப வுடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலி னவற்றிற்கு முற்கொண்ட வோடென்பதற்கும் ஆல்என்பதற்கும் வினை முதல் கருவி கொள்க. ஆனாலயத் திரிந்தும் நிற்கும்.

'வினைமுதல் கருத்தா' வென்பன வொன்று. கருத்தா நின்று தன்னை யொழிந்த கருவிமுதலிய காரணங்க ளேழனை யுங்காரியத்தின் கணிகழ்த்துதலி, னதனை வினைமுதலென்றார்.

இஃது, இயற்றும் வினைமுதலு மேவும் வினை முதலுமென விருவகைப்படும். 'கொடியொடு துவக் குண்டா' னென்பதியற்றும் வினைமுதல். அது, கொடி தன்னோடு துவக்கு தலைச் செய்யப்பட்டான் சாத்த னென்னும் பொருட்டு. கொடியினது நிகழ்ச்சி, யீண்டுக் கருவி. கொடி சாத்தனைத் தொழிலுறு விக்குங் காற்றா னவனை நீங்கா வுடனிகழ்ச்சியை விளக்கிற்று ஒடு வென்னுருபு. அரசனா லியற்றப்பட்ட தேவகுலம்' என்பதேவும் வினைமுதல்.

இனி, 'கருவி' காரண, மேது, நிமித்த', மென்பன, தம்முள் வேறுபா டுடைய வேனு மொத்த *பொருட்டு. அக்காரணம். முதற்காரணமுந் துணைக்காரணமுமென விருவகைப்படும். முதற் காரணமாவது காரியத்தோ டொற்றுமையுடையது, துணைக் காரணமாவது, அம் முதற் காரணத்திற்குத் துணையாகிய வினைமுதலிய வெட்டும். அக்கருவியாவது, வினைமுதற்றொழிற்

* பொருளன (பா, போ.)

பயனைச் செயப்படு பொருட்கணுய்ப்பது. அதுவு யியற்றுதற் கருவியாகிய காரகக் கருவியும், அறிதற் கருவி யாகிய ஞாபகக் கருவியு மென விருவகைப்படும். 'ஊசி யொடு குயின்ற தூசும் பட்டும்' என்பது காரகக் கருவி. அது, ஊசி கொண்டு சாத்தன் குயிலுதலைச் செய்யப் பட்ட தூசும் பட்டு மென்னும் பொருட்டு, சாத்தன் றொழிற்பயனை யூசி தூசிலும் பட்டிலும் நிகழ்த்திற்று. இது துணைக்காரணம். மண்ணானியன்ற குடம்-முதற் காரணம். இதுவுங்காரகக்கருவி. உணர்வினானுணர்ந் தான்: புகையினா லெரியுள்ள துணர்ந்தான்—இவை ஞாபகக் கருவி. இவற்றிற் குணர்வு முதற் காரணம். காரகமாவது தொழிலை யியற்றுவிப்பது. ஞாபகமாவ தறிவிப்பது.

இனி, ஆல் அகத்தியனாற் றமி ழுரைக்கப் பட்டது: வேலா லெறிந்தான் எனவும், ஓடு.

'உலகத்தோ டொட்ட வொழுகல்'
'காவோ டறக்குளம் தொட்டானும்'
'நாவிற் றிருந்த புலமா மகளோடு நன்பொற
பூவிற் றிருந்த திருமா மகள்'

எனவும் வரும்.

'இதுநனிபயக்கு மிதனா னென்னும்'

இஃது, ஆன் வந்தது என வரும். (12,

75] மூன்றாவதன் பொருள் பற்றிவரும் வாய்பாடுகள்

அதனி னியற லதற்றகு கிளவி
யதன்வினைப் படுத லதனி னாதல்
அதனிற் கோட லதனொடு மயங்க
லதனோ டியைந்த வொருவினைக் கிளவி
யதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
யதனோ டியைந்த வொப்ப லொப்புரை
யின்னா னேது விங்கென வரூஉ
மன்ன பிறவு மதன்பால வென்மனார்.

இஃது, அதனை முடிக்கவரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) அதனினியறல்-ஒன்றனானொன்று பண்ணப் படுதலென்னும் பொருண்மை, அதற்றகுகிளவி — ஒன்றினா னொன்று தகுதலென்னும் பொருண்மை, அதன் வினைப்படுதல் ஒன்றனா னொன்று தொழிலுறுத லென்னும் பொருண்மை, அதனினாதல் - ஒன்றினானொன்று ஆதலென்னும் பொருண்மை, அதனிற் கோடல்—ஒன்றானோ டொன்றைக் கோடலென்னும் பொருண்மை, அதனோடு மயங்கல்—ஒன்றனோ டொன்று மயங்குத லென்னும் பொருண்மை, அதனோ டியைந்த வொரு வினைக் கிளவி—ஒன்றனோ டொன்றியைந்த ஒரு வினை யாத லென்னும் பொருண்மை, அதனோடியைந்த வேறு வினையாகவினைக்கிளவி-ஒன்றனோடொன்று இயைந்த வேறுவினையாத லென்னும் பொருண்மை, அதனோ டியைந்த வொப்பல் ஒப்புரை—ஒன்றனோடொன்றி யைந்த ஒப்பல்லாத ஒப்பினை யுரைத்தல் என்னும் பொருண்மை, இன்னானேது—இன்னு மானுமாகிய வேதுப் பொருண்மை, என வரூஉம்—என்று சொல்லப்பட்டு வரும் பத்தும், அங்கு வரூஉ மன்ன பிறவும்-வினை முதலுங்கருவியு மாகிய பொருளிடத்து வருமவை போல்வனபிற பொருள்களும், அதன்பால வென்பனார் —அம் மூன்றாவதன் கூற்றனவென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

(உ-ம்) மண்ணா னியன்ற குடம்
வாயாற் றக்கது வாய்ச்சி
அறிவா னமைந்த சான்றோர்.

இவை கருவி.

நாயாற் கோட் பட்டான்
சாத்தனான் முடியுமிக் கருமம்

இவை வினைமுதல்

வாணிகத்தா னாயினான்
காணத்தாற் கொண்ட வரிசி

இவை கருவி, ஆனுருபான் வந்தன.

எண்ணொடு விராய வரிசி
ஆசிரியனொடு வந்த மாணாக்கன்
'மலையொடு பொருத மா அல் யானை' (மலைக்கு வினையின்மையி னிது வேறு வினையாயிற்று)

'பொன்னொ டிரும்பனையர் நின்னொடு பிறரே'
பொன்னோ டிரும்பை யுவ மித்தலை யொப்பார்
'நின்னோடு பிறரை யுவமிக்கு மிடத்தென்றவாறு.

இவை வினைமுதல் ஒடு வுருபான் வந்தன.

முயற்சியின் பிறத்தலா னொலி நிலையாது—இத னுண் முயற்சியி னென்பது காரகவேது; 'பிறத்தலா னொலி நிலையா தென்பது ஞாபகவேது. ஐந்தாவதற் குரிய வேதுவு மீண்டோதினா ரேதுவை வரையறுத் தற்கு.

அன்ன பிறவுமென்றதனாற்

கண்ணாற் கொத்தை — இதுசினை வினை முதற்கேறியது.

'உறழ் மணியானுயர் மருப்பின'

'பெண்டகையாற் பேரமர்க் கட்டு'—இவை யா னொடு வாயின.

'மனத்தொடு வாய்மை மொழியில்' இது ஒடு வானாயிற்று

மதியோ டொக்கு முகம் — இஃது ஒப்பு.
சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது—இது கட் புலனாக வொருவினை யொடு.

இவை முதலியன கொள்க. இவற்றின் வேறுபாடுய்த் துணர்க. (13)

76] நான்காம் வேற்றுமையின் பொருள்

நான்கா குவதே,
குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெப்பொரு ளாயினுங் கொள்ளு மதுவே.

இது, முறையானே நான்காவ திப்பொருட்கண் வரு மென்கின்றது.

(இ-ள்) கு எனப்பெயரிய வேற்றுமைக் கிளவி நான்காகுவதே — மேற் கு வெனப் பெயர் கொடுத்தோதப்பட்ட வேற்றுமைச் சொன் னான்காவதாம், அது எப்பொருளாயினுங் கொள்ளும் — அது யாதானு மொரு பொருளாயினு மதனைத் தானேற்று நிற்கு மென்றவாறு.

(உ-ம்) அந்தணற் காவைக் கொடுத்தான்.

எனவரும்

மாணாக்கற்கு நூற்பொரு ளுரைத்தான்.
எனக் கொடைப் பொருளவாகிய சொல்லானன்றிப்
பிறவாய் பட்டாற் கூறுவனவும்,
மாணாக்கற் கறிவு கொடுத்தான்.
எனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான் கட்
செல்லா தாண்டுத் தோன்றும் பொருளு மடக்குதற்
கெப்பொரு ளாயினு மென்றார். (14)

77] நான்காவதன் பொருள் பற்றி வாய்பாடுகள்

அதற்குவினை யுடைமையி னதற்குடம் படுதலின்
அதற்குப்படு பொருளி னதுவாகு கிளவியி
னதற்கியாப் புடைமையி னதற்பொருட் டாதலி
னட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியு மதன்பால வென்மனார்.

இது, அதனை முடிக்கவரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) அதற்கு வினையுடைமை - ஒன்றற் கொன்று பயன்படுதல், அதற் குடம்படுதல் — ஒன்றற் கொரு பொருளை மேற்கொடுப்பதாக வுடம்படுதல், அதற்குப் படுபொருள் — ஒன்றற் குரிமை யுடையவாகப் பொது வாகிய பொருளைக் கூறிடப்படுதல், அதுவாகு கிளவி — உருபேற்கும் பொருடானேயாய்த் திரிவதோர் பொருண்மை, அதற்கியாப் புடைமை—ஒன்றற்கொன்று பொருத்த முடைத்தாதல், அதற்பொருட்டாதல் — ஒரு பொருளினை மேற் பெறுதல். காரணமாக வொரு தொழினிகழ்தல், நட்பு — ஒன்றற் கொன்று நட்பாதல், பகை—ஒன்றற் கொன்று பகையாதல், காதல்—ஒன்றற் கொன்று காதலுடைத்தாதல், சிறப்பு-ஒன்றற் கொன்று சிறத்தல், என்ற கிளவியும்-என்று சொல்லப்பட்ட பொருள்களும், அப்பொருளும் — அன்ன பொருள்களும், அதன்பால வென்மனார் அந்நான்க னுருபின் கூற்றன வென்று கூறுவர் புலவர் என்றவாறு.

(உ-ம்) கரும்பிற்கு வேலி;
நிலத்திற் கணியென்ப நெலலுங் கருமபும்
என்ப துமது. வினையு, பகாரம்.
சாத்தற்கு மக ளுடம்பட்டார்.
'சான்றோர் கொலைக் குடம்பட்டா' ரென்ப துமது
சாத்தற்குக் கூறு கொற்றன்.
கடிசூத்திரத்திற்குப் பொன்.

பொன் கடிசூத்திரமாய்த் திரியுமாதலின துவாகு கிளவி யென்றார். கிளவி, பொருள்.

கைக் கியாப்புடையது கடகம்.
உண்டி வெய்யோர்க் குறுபிணி யெளிதென்ப துமது.
கூழிற்குக் குற்றேவல் செய்யும்.
அவற்கு நட்டான்.
'அவற்குத் தமன் என்பது மது.
'அவற்குப் பகை'.
'கள்வார்க்குத் தள்ளுமுயிர் நிலை' என்பது மது.
நட்டார்க்குக் காதலன்
புதல்வற் கன்புறும் என்பது மது.
வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர்.
'கற்பார்க்குச் சிறந்தது செவி' யென்பது மது.
அப்பொருளு மென்றதனானே,
இச் சொற்குப் பொருள் இது.
அவர்க்குச் சோறுண்டு
நினக்குவலி யான் (நினக்குவலிவாள்)
அவ்வூர்க் கிவ்வூர்க் காதம்
'மனைக்குப் பாழ் வாணுத லின்மை'
போர்க்குப் புணைமன்.
பிணிக்கு மருந்து.
நட்டார்க்குத் தோற்றலை நாணாதோன்.
தன்சீ ரியல்நல்லாள் தானவற் கீன்ற மைந்தன்
அவர்க்குத் தக்கா ளிவள்
உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்

என்றாற் போல்வன கொள்க. (15)

ஐந்தாம் வேற்றுமையின் பொருள்

78] ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யிதனி னிற்றிது வென்னு மதுவே

இது, முறையானே ஐந்தாவதிப் பொருட்கண் வருமென்கின்றது.

(இ-ள்) இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி யைந்தாகுவதே—மேலின்னெனப் பெயர் கொடுத்தோதிய வேற்றுமைச் சொல்லைந் தாவதாம்; அது இதனி னிற்றிது வென்னும்—அது இப்பொருளி னித்தன்மையா யிருக்கு மிப் பொரு ளென்னும் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு,

ஐந்தாவது பொருவு மெல்லையும் நீக்கமு மேதுவு மென நான்கு வகைப்படும். உறழ் பொருவு முவமப் பொருவு மெனவிருவகைப்படும். உறழ்த லொன்றினா னொன்றை மிகுத்தல். ஏதுவு ஞாபக வேதுவுங் காரக வேதுவுமென விருவகைப் படும். ஞாபகவேது முன் கூறிற்று. காரக வேது, வச்ச மாக்க மென்பன வற்றாற் பெறப்படும். நீக்கப் பொருண்மை, தீர்தல் பற்று விடுதலென்பனவற்றாற் பெறப்படும். ஏனையிரண்டு மிதனினிற்றிது, வென்பதனாற் பெறப்படும். அவ்விரண் டினையும் அஃதிரு முறையானுணர்த்து மாதலின். எல்லைப்பொருள்,

கருவூரின் கிழக்கில்வூர்
இதனி னூங்கு எனவரும்.

இவையு மிற்றென்னும் பொருட்டு. (16)

79) ஐந்தாவதன் பொருள் பற்றி வரும் வாய்பாடுகள்

வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை யச்ச மென்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்றா
முதுமை யிளமை சிறந்த லிழித்தல்
புதுமை பழமை யாக்க மென்றா

வின்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவு மதன்பால வென்மனார்.

இது, அதனை முடிக்கவரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது

(இ-ள்) வண்ணம் ......... விடுதலென்று — வண்ண முதலாகப் பற்றுவிடுத லீறாகச் சொல்லப்பட்ட பொருள் களும், அன்ன பிறவு மதன்பால வென்மனார் - அவை போல்வன பிறபொருள்களு மைந்தாம் வேற்றுமைத் திறத்தன வென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

வண்ணம், வெண்மை, கருமை முதலியன. வடிவு, வட்டஞ் சதுர முதலியன. அளவு, நெடுமை, குறுமை முதலியன. சுவை, கைப்பு, புளிப்பு முதலியன. நாற்றம், நறு நாற்றம் தீ நாற்றம் முதலியன.

(உ-ம்) காக்கையிற் கரிது களாம்பழம் — இதனி னென்பது காக்கை; இற்றென்பது, கரிது, 'இது' வென் பது களாம் பழம்.

இதனின் வட்ட மிது.
இதனி னெடி திது.
இதனிற் றீவி திது.
இதனிற் றண்ணி திது.
இதனின் வெய்ய திது.
இதனி னன் றிது.
இதனிற் றீ திது.
இதனிற் சிறி திது.
இதனிற் பெரி திது.
இதனின் வலி திது.
இதனின் மெலி திது.
இதனிற் கடி திது.
இதனின் முதி திது.

இதனி னிளை திது.
இதனிற் சிறந்த திது.
இதனி னிழிந்த திது.
இதனிற் புதி திது.
இதனிற் பழை திது.
இவனி னில னிவன்.
இவனி னுடையவ னிவன்.
இதனி னாறு மிது.
இதனிற் பல விவை.
இதனிற் சில விவை.

இவற்றிற் கிருவகைப் பொருவும் விரிக்க.
அச்சம்—கள்ளரி னஞ்சும்.
ஆக்கம்—வாணிகத்தி னாயினான்.
கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந் தேரென்பதுமது.
தீர்தல்—ஊரிற் றீர்ந்தான்; 'தலையினிழிந்த மயிரனை யர்' எனவரும்.

பற்று விடுதல்—காமத்திற் பற்று விட்டான் எனவரும்.

அன்ன பிறவு மென்றதனான்,
அவனின் அளியன் இவன்
அதனிற் சேய்த் திது.
இகழ்ச்சியிற் கெட்டான்.
மகிழ்ச்சியின் மைந்துற்றான்.

என்பன போல்வன கொள்க. (17)

ஆறாம் வேற்றுமையின் பொருள்

80] ஆறா குவதே,
யதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னி னும் பிறிதினும் இதன திதுவெனு
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே.

இது, முறையானே ஆறாவதிப் பொருட்கண் வரு மென்கின்றது.

(இ-ள்) அது வெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி யாறாகுவதே—மேலது வெனப் பெயர்கொடுத் தோதப் பட்ட வேற்றுமைச் சொல் லாறா குவதாம், அது—அவ் வேற்றுமைச் சொல், தன்னினும்—ஒரு பொருளின துடைமைப் பொருளாய் நிற்குந் தன்னோ டொற் றுமை யுடைய பொருளானும், பிறிதினும்—ஒரு பொருளின துடைமைப் பொருளாய் நிற்குந் தன்னின் வேறாகிய பொருளானும், 'இதன திது' வெனும்—இப் பொருளினுடைய திப்பொருளென்பது பட நிற்கும். அன்ன கிளவிக் கிழமைத்து-அன்ன பொருளாற் றோன்றுங் கிழமையைப் பொருளாக வுடைத்தென்ற வாறு.

ஈண்டுத் தன் னென்ற துரு பேற்கும் பொருளை, அன்ன வென்றா ரிதன விவை யென்னும் பன்மை யுருபு, மாதென்னு மொருமை யுருபு மடங்குதற்கு.

(உ-ம்) சாத்தன வாடை
தனாது வெள்வேல்
யானை (வளவன்) மன்னவன் கொல்லி மீமிசை

எனவரும்.

ஒன்று பல குழீஇயதும், வேறுபல குழீஇ யதும், ஒன்றியற் கிழமையு, முறுப்பின் கிழமையும் மெய்திரிந் தாயது மெனத் தற்கிழமை யைந்து வகைப்படும்.

'ஐம்பா லுரிமையு மதன் தற் கிழமை'
யென்பதகத் தியமாதலின்

பொருளின் கிழமையும், நிலத்தின் கிழமையுங் காலத்தின் கிழமையு மெனப் பிறிதின் கிழமை மூவகைப் படும. (18)

81] ஆறாவதன் பொருள்பற்றி வரும் வாய்பாடுகள்
இயற்கையி னுடைமையின் முறைமையின் கிழமையிற்
செயற்கையின் முதுமையின் வினையி னென்றா
கருவியிற் றுணையிற் கலத்தின் முதலி
னொருவழி யுறுப்பிற் குழுவி னென்றா
தெரிந்து மொழிச் செய்தியி னிலையின் வாழ்ச்சியிற்
றிரிந்துவேறு படூஉம் பிறவு மன்ன
கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி
யாறன் பால வென்மனார் புலவர்.

இது, அதனை முடிக்க வரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) இயற்கை............வாழ்ச்சியின்—இயற்கை முதலாக வாழ்ச்சி யீறாகச் சொல்லப் பட்டனவும், திரிந்து வேறு படூஉ மன்ன பிறவும்—ஒருசாரன திரிந்து வேறுபடு மவை போல்வன பிறவுமாகிய, கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி-முற்கூறிய கிழமைப் பொருட்கட் டோன்றுஞ் சொல்லெல்லாம், ஆறன் பால வென்மனார் புலவர் - ஆறாம் வேற்றுமைத் திறத்தன வென்று கூறுவர் புலவரென்ற வாறு.

(உ-ம்) (1) எண்ணது குப்பை—இஃது ஒன்று பல குழீ இயதற் கிழமை. (3) படையது குழாம்—இது வேறு பல குழீ இயதற் கிழமை. இவ்விரண்டுங் குழூஉக்கிழமை

சாத்தன தியற்கை.
நிலத்த தகலம்—இவை யியற்கைக் கிழமை
சாத்தனது நிலைமை
சாத்தன தில்லாமை இவை நிலைக்கிழமை
இந்நான்கு மொன்றியற் கிழமை.
உறுப்பாவது, ஒருபொருளி னேகதேச மென்ப
[தறிவித்தற்

கொருவழி யுறுப்பென்றார். அவை,

யானையது கோடு

புலியதுகிர் இவை யுறுப்பின் கிழமை

செயற்கையாவது தன்றன்மை திரிந்து வேறோர் தன்மையாதல் அவை

சாத்தனது செயற்கை.

சாத்தனது கற்றறிவு.

முதுமைக் கிழமை.

அரசனது முதுமை.

அரசனது முதிர்வு.

இது, அறிவின் முதிர்ச்சி யென்ப தறிவித்தற் கிளமை கூறுபராயினார்.

வினைக்கிழமை.

சாத்தனது வினை.

சாத்தனது செலவு.

இவை மெய்திரிந்தாய தற்கிழமை.

உடைமைக் கிழமை,

சாத்தன துடைமை

சாத்தனது தோட்டம்

முறைமைக் கிழமை

மறியது தாய்

மறியது தந்தை

கருவிக் கிழமை,

இசையது கருவி

வினைக்கலத்தது திகிரி

துணைக் கிழமை,

அவனது துணை

அவன திணங்கு

கலமாவ தோலை.

நிலத்த தொற்றிக் கலம்

சாத்தனது விலைத் தீட்டு.

இஃது இரு பொருட்குரிமை யுடைமையின், உடைமையின் வேறாயிற்று.

முதற் கிழமை,
ஒற்றியது முதல்
ஒற்றியது பொருள்

தெரிந்து மொழிச்செய்தி தெரிந்து மொழியான் செய்யப்படுதலிற் றெரிந்து மொழிச் செய்தியாயிற்று.

கபிலரது பாட்டு
இது 'பாரியது பாட்டுஎன' நிற்றலி னிரு
பொருட் குரியதாம்
பரணரது பாட்டியல்
இதுவுமது. இவைபொருட் பிறிதின் கிழமை
(கிழமைக்கிழமை
முருகனது குறிஞ்சிநிலம்
இது நிலப்பிறிதின் கிழமை
வெள்ளியது ஆட்சி
இது காலப் பிறிதின் கிழமை
வாழ்ச்சி
காட்டது யானை
இது பொருட்பிறிதின் கிழமை
யானையது காடு
இது நிலப்பிறிதின் கிழமை
வாழ்ச்சி, வாழ்தலை யுணர்த்துங் கால்
தற்கிழமையுமாம்.
அன்னபிறவு மென்றது
எட்சாந்து
கோட்டு நூறு
இவை முழுதுந் திரிந்தன
சாத்தன தொப்பு
தொகையது விரி

பொருளது கேடு,
சொல்லது பொருள்,
இவை சிறிது திரிந்தன (19)

82) ஏழாம் வேற்றுமையின் பொருள்

ஏழாகுவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தின்
அனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே

இது, முறையானே ஏழாவதிப் பொருட்கண் வருமென் கின்றது.

(இ-ள்) கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி ஏழாகுவதே—மேற் கண்ணென்று பெயர்கொடுத் தோதப் பட்ட வேற்றுமைச்சொல் லேழாவதாம், அது வினை செய் யிடத்தினிலத்திற் காலத்தின் அனைவகைக் குறிப்பிற் றோன்றும்—அது வினை செய்யா நிற்ற லாகிய விடத்தின் கண்ணும் வினை நிகழாது வரை யறையுடைய தோரிடமாகிய நிலத்தின் கண்ணும் வினை நிகழாது வரையறைப்பட்டு நிற்குங் காலமாகிய விடத்தின் கண்ணுமென மூவகைக் குறிப்பின் கண்ணுந் தோன்று மென்றவாறு.

எனவே ஏழாவ திடப்பொருட்டாயிற்று.

(உ-ம்) தட்டுப்புடைக்கண் வந்தான்,
மாடத்தின் கணிருந்தான்,
கூதிர்க்கண் வந்தான் எனவரும்.

இவையிடமு மிடத்து நிகழ் பொருளும் வேறாய் வந்தன
குன்றத்துக் (குன்றத்தின் கண்) குவடு.

இஃது அவ்விரண்டு மொன்றாய் வந்தது

குறிப்பிற் றோன்றுமென்ற தவற்றை யிடமெனக் கருதிய வழியே யவ்வேழனுருபு தோன்றுவ தல்லுழித் தோன்றாதென்றவாறு. (20)

ஏழாம் வேற்றுமையின் உருபுகள்.

கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை எனா அ
முன்னிடை கடைதலை வலமிடமெனா அ
வன்ன பிறவு மதன்பால வென்மனார்.

இஃது இவ்வேழாவதற்கு முடிக்கவரும் பொருள் வேறுபாடின்றி யுருபின் பாகுபாடே யுடை மையி னுருபின் பாகுபாடே கூறுகின்றது.

(இ-ள்) கண்—கண்ணென்னும் பொருளும், கால்... புடை-கால் முதலாகப் புடையீறாக வோதப்பட்ட வுருபுகளும் தேவகைஎனா—தேவகை யென்னுந் திசைக் கூற்றுப் பொருண்மையும், முன், இடமெனா—முன் முதலாக விடமீறாக வொதப் பட்ட வுருபுகளும், அன்ன பிறவும்—அவைபோல்வன பிற வுருபுகளும், அதன்பால வென்மனார்—ஏழா வதன் கூற்றன வென்று கூறுவர் புலவரென்றவாறு.

இச்சூத்திரத்தாற் கூறிய வுருபுகளோரிடத்தின் ஏக தேசத் தினை வரையறுத் துணர்த்தும் வழி, யாறா வதனை யுணர்த்தியு மோரிடத்தினை வரையறுத் துணர்த்தாது கண்ணென்பது போல விடமென முழு துணர்வு செல்ல நின்றவழி யேழா வதனையே யுணர்த் தியும் நிற்குஞ் சிறப்பின்மை கருதி வேறாக வெடுத் தோதினார். ஏழாவதற் கிம் மூவகைப் பொருட் பாகுபா டின்றி, வேறுபொருட் பாகுபாடின்மையின், முன்னை யன போலப் பொருள் பகுத்தோதாராயினார். (பொரு ளினைப்)

ஆசிரியர் 'கூறிய முறையி னுருபு' 'இறுதியு மிடையு மென்னுஞ் சூத்திரங்களாற் பெயரிறுதிக்கும் முடிக்குஞ்' சொற்கும் முன்னிற்ப துருபென்று கூறினமையாற் பொருளிடை நில்லாமையும் பெற்றாம்.

சிறந்த கண்ணென்னு முருபை முற்கூறி யீண்டுக் கண்ணென்பதனைச் சிறப்பில்லா வுருபுகளோ டெடுத் தோதினார், கண்ணகன் ஞாலமென்புழி யக்கண் ஞாலந் தன்னையே யுணர்த்தி யோரிடத்தினை வரை யறுத்துணர்த்தாது நிற்பதோரிடச் சொல்லென்ப துணர்த்துதற்கு.

தேவகை யென்னும் பொருள் வரையறைப்படாது சொல்லுவான் குறிப்பிற்றாய் நிற்றலி னிடத்துளடக்கா ராயினார்.

இவ்விரண்டு பொருட்கும் வேறோர் சூத்திரஞ் செய்யாது இவ்வுருபுகளுடனே யோதினார், சூத்திரஞ் சுருங்குதற்கு.

(உ-ம்) ஊர்க்கா லிருந்தான்.
ஊர்ப்புறத் திருந்தான்.
மாடத்தகத் திருந்தான்.
ஊருளிருந்தான்.
சான்றோருழைச் சென்றான்.
மாடத்துக் கீழிருந்தான்.
மாடத்துமே லிருந்தான்.
ஏர்ப்பின் சென்றான்.
காட்டுச் சாரோடுங் களிறு.
ஊரய லிருந்தான்.
ஊர்ப்புடை யிருந்தான்.
வடக்கண் வேங்கடம்.
தேர்முன் சென்றான்.
சான்றோ ரிடை யிருந்தான்.

கோயிற் கடைச் சென்றான்.
தந்தைத்தலைச் சென்றான்.
கைவலத்துள்ளது கொடுக்கும்.
கையிடத்துப்பொருள் எனவரும்.

'அன்ன பிற'வால் வருவன.
குடத்தில் விளக்கு.
ஊரிலே யிருந்தான்.
கிழவோள் தேளத்து.
கிழவி மாட்டு.

எனவும்,
பொருட்கண்ணுணர்வு.
மலர்க்கண்ணாற்றம்.
ஆகாயத்துக்கட் பருந்து.

எனவும் வரும்.

இன்னும்,
மணியின்கண் ணொளி.
கையின்கண் விரல்.
நிறத்தின் கண்ணெழில்
ஆடற் கண்ணழகு.

எனக்கிழமையுஞ் சினையும் பண்பும் வினைப்பெயரும் பற்றி வரும்.

இனிக் கண்கான் முதலியன வுருபை விளக்குதற் கவ்வுருபின் பொருளாய் நின்று, கண்ணென்னுமுருபு விரித்துக் கொண்டு நிற்கும், எனின், கண்ணென்னு முருபின் பொருளாவது, கண்ணென்னு மிடைச் சொல்லா லுணர்த்தப் படுமிடப் பொருண்மை, யென்று பொருளுரைத்தாற், பின்வருகின்ற விடப் பொருண்மையை முன்னுங் கூறிற்றே யாமாதலிற் கூறியது கூறிற்றாம். அல்லதூஉங் கண்ணகன் ஞாலமென் புழிக் கண்ணென்னு மிடைச் சொல்லா னுணர்த்து மிடப்

பொருண்மைக்கு மிடத்துக் கண்ணெனக் கண்ணென் னுமுருபு மீண்டுங்கூறல் வேண்டும்.

அலலதூஉம்

'கண்ணின்று கூறுதல் ஆற்றான் அவனாயின்' என்பதற்கு,

என்கணின்று, எனத் தோன்றா எழுவாயாய் நின்று கண்ணென்னு முருபு ஏற்று நின்றதாம்,

அல்லதூவும்,

வடக்கண் வேங்கடம்

என்புழிக் கண்ணென்னு முருபு விரித்தலி னொழிந்த வற்றிற்கு மொவ்வாதாம்.

அல்லதூஉம்

ஆலின் கீழ்க்கிடந்த ஆ
மரத்தின் மேலிருந்த குரங்கு

என்பன முதலியவற்றிற்குக் கண்ணெனு முருபு கொடுத்துலகம் வழங்காமையு முணர்க. முன்னரிரண்டா வது முதலிய வுருபுகளை முடித்தற் கெடுத்தோதிய காப்பு முதலிய பொருள்களைப் போல வுருபைமுடித்து நில்லா தீண்டுக்கூறிய பொருள்கள் கண்ணென்னு முருபையே யுணர்த்தி நின்றன வென்றலிற் சேனா வரையரு மிப்பொருள்களை யுருபென்றே கூறினா ராயிற்று, அங்ஙனங் கூறி யத்துச் சாரியைக் கொடுத்து தாரணங்காட்டவே, யுருபின் பின்னரு மத்துச் சாரியை வருத றாமு நேர்ந்தா ராயிற்று. (21)

## தொகையை விரிக்கும் முறை

84] வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கு
மெல்லாச் சொல்லு முரிய வென்ப

இது, வேற்றுமைத் தொக்குழி விரிக்குமாறு மதற்கின மாகிய வன்மொழி தொக்குழி விரிக்குமாறுங் கூறுகின்றது.

(இ-ள்) வேற்றுமைப் பொருளை ஈற்று நின்றியலும் தொகைவயின் பொருளை விரிக்குங்காலை--வேற்றுமைத் தொகை வயின்நின்ற பொருளை யன்மொழித் தொகை வயி னின்ற பொருளை விரிக்குங் காலத்து, பொருள் புணர்ந்து-அவ்வேற்றுமைப் பொருளோடு மன்மொழிப் பொருளோடும் புணர்ந்து, பல்லாறாகப் பிரிந்திசைக்கு மெல்லாச் சொல்லு முரியவென்ப—பல நெறியாகப் பிரிந்தொலிக்கு மெல்லாச் சொல்லும் விரித்தற்குரிய வென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

மேலும், ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையோ என்பர்.

கருங்குழற் பேதை, பொற்றொடி யரிவை மட்குடம் என்னும் வேற்றுமைத் தொகைகள், கருங் குழலையுடைய, பேதை, பொற்றொடியை யணிந்த வரிவை, மண்ணானியன்ற குடம் என விரிந்தவாறு காண்க.

'தாழ் குழல் பொற்றொடி' 'மட்காரண' மென்னு மன் மொழித்தொகைகள், தாழ்குழலை யுடையாள், பொற்றொடியை யணிந்தாள், மண்ணாகிய காரணத்தா னியன்றதென விரிந்தவாறு காண்க. (22)

ஆகச் சூத்திரம் (84)
இரண்டாவது
வேற்றுமை யியன் முடிந்தது

# மூன்றாவது
# வேற்றுமை மயங்கியல்.

---

இரண்டாவது ஏழாவதோடு மயங்குதல்

85] கரும மல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.

என்பது சூத்திரம்

இது, தன்பொருளிற் றீராது பிறிதொன்றன் பொருட்கட் செல்லும் பொருண் மயக்கமுந், தன் பொருளிற் றீர்ந்து செல்லு முருபு மயக்கமும் என்னுமிரு வகை மயக்கமு முணர்த்தலின் வேற்றுமை மயங்கிய லென்னும் பெயர்த்தாயிற்று.

இச்சூத்திர மிரண்டாவதன் பொருளு மதிகாரத் தானின்ற வேழாவதன் பொருளும் மயங்கும் மயக்கங் கூறுகின்றது.

*(இ-ள்)* கரும மல்லாச் சார்பென் கிளவிக்கு-கருமச் சார்ச்சி யல்லாத 'அரசரைச் சார்ந்தா' னெனவரும் சார்பென்னும் பொருண்மைக்கு, கண்ணென் வேற்றுமை யுரிமையுமுடைத்து—ஏழாம் வேற்றுமை யுரித்தாய் வருதலு முடைத் தென்றவாறு.

*(உ-ம்)* 'தூணினைச் சார்ந்தா' னென்றாற் போல மெய்யுற லின்றி யரசர்கட் சார்ந்தா னெனவரும்.

இதனு ளரசரது சார்தற் கிடமாகிய வரு டன் பொருள தனி னீங்காதே பிறிதின் பொருளாகிய செயப் படுபொருட்கட் சென்ற தேழாவது. தூணின்கட் சார்ந்தா னென்பது வழக்கமின்று, ஆசிரியர் மறுத்தலின்

*(1)*

இதுவும் அது

86] சினை நிலைக் கிளவிக் கையுங் கண்ணும்
வினை நிலை யொக்கு மென்மனார் புலவர்.

இதுவு மவ்விரண்டன் மயக்கங் கூறுகின்றது.

(இ-ள்) சினைநிலைக் கிளவிக்கு—சினைப்பொருண் மேனிற்குஞ் சொல்லிற்கு, ஐயுங்கண்ணும் வினைநிலை யொக்கு மென்மனார் புலவர்-இரண்டாவது மேழா வதும் வினைகூறும் நிலைமைக்க ணொக்கு மென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) கோட்டைக் குறைத்தான்.
கோட்டின்கண் குறைத்தான்.

எனவரும்.

அறுத்தல் குறைத்தன் முதலிய விரண்டாவதன் பொருட்கணேழாவது வந்ததேனும், வழக்குப்பயிற்சி நோக்கி, வினைநிலை யொக்கு மென்றார். (2)

இதுவும் அது

7] கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே

இதுவும் அது.

(இ-ள்) கன்றலுஞ் செலவும்—கன்றற் பொருண் மேல் வருஞ் சொல்லும் செலவுப் பொருண் மேல்வருஞ் சொல்லும், ஒன்று மார்வினையே—இரண்டாவதற்கு மேழாவதற்கு மொரு தொழில வென்றவாறு.

(உ-ம்) சூதினைக் கன்றினான்.
சூதின்கட் கன்றினான்.
நெறியைச் சென்றான்.
நெறிக்கட் சென்றான்.

எனவரும்.

பொருள் பற்றி யோதினமையாற்
சூதினை யிவறினான்
சூதின் கணிவறினான்

நெறியை யடைந்தான்
நெறிக்க ணடைந்தான்

எனவும் வரும்.

இஃது, இரண்டாவதன் பொருளையெடுத் தோத லின், வேறு கூறினார்; வழக்கின்கட் பயின்று வருதலி னேழா வதனையு மொப்பக் கூறினார். சினைமுதன் மயக்கங் கூறுகின்ற தற்கிடையே இச்சூத்திரம் வைத் தார், இரண்டாவது மேழாவது மதிகாரத்தாற் பெறு கின்ற விலேசு நோக்கி. (3)

உருபு மயக்கமாய் வருவனவற்றைக் கூறுமாறு

88) முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே

இஃது, உருபு மயக்கமாய் வருவனவற்றைக் கூறுமாறு கூறுகின்றது.

(இ-ள்) முதற்சினைக்கிளவிக்கு — முதற்சொல் லொடு தொடர்ந்த சினைச்சொல்லிற்கு, அதுவென் வேற்றுமை முதற்கண் வரின்—ஆறாம் வேற்றுமை முதற்கண்ணே எருமாயின், சினைக்கு ஐவரும்—சினைச் சொல்லின்க ணிரண்டாம் வேற்றுமை வருமென்றவாறு.

(உ-ம்) யானையது கோட்டைக்குறைத்தான். என வரும் இஃது, ஒருதொடர்க்க ணிரண்டுருபு வருதலின் மயக்கமாயிற்று.

பொருண் மயக்கம்

89) முதல்மு னைவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருத றெள்ளி தென்ப.

இது, பொருண்மயக்க முணிர்த்துகின்றது.

(இ-ள்) முதல் முனைவரின்—அம்முதற்சினைக் கிளவிக் கண் முதற்சொன்முன் னிரண்டாம் வேற்றுமை வரின், சினை முன் கண்ணென் வேற்றுமை வருத

றெள்ளிதென்ப—சினைச் சொன்மூன் கண் என் வேற்றுமை வருதல் தெள்ளிது என்று கூறுவர், புலவ ரென்றவாறு.

(உ-ம்) யானையைக் கோட்டின்கண் குறைத்தான்
இது, பொருண் மயக்கம் தெள்ளிதென்றதனான்
யானையைக் கோட்டைக் குறைத்தான்.

என வைகாரம் வருதலும், முன்னர்க்கூறிய வெல்லாம் பண்புந் தொழிலும் பொருட் டொடர்ச்சியும் பற்றி வருதலுங் கொள்க.

மணியது நிறத்தைக் கெடுத்தான்.
மணியை நிறத்தின்கட் கெடுத்தான்.
மணியை நிறத்தைக் கெடுத்தான்.

என முற்கூறியது மிவையும், ஒரு தொடரின் இரண்டுருபு மயங்கலின் உருபு மயக்கம்.

தலைமகனது செலவை யழுங்கு வித்தல்
தலைமகனைச் செலவின் கண் அழுங்கு வித்தல்
தலைமகனைச் செலவை யழுங்கு வித்தல்
சாத்தனை நூலை யோது வித்தான்
யாற்றை நீரை விலக்கினான்

எனவரும் இவை மூன்று முருபு மயக்கம் (5)

முதலுஞ் சினையுஞ் சொல்லுவான் குறிப்பின வாதல்

90] முதலுஞ் சினையும் பொருள்வேறு படாஅ
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே,

இது, முதல் சினைகளை யாராய்கின்றது

(இ-ள்) முதலுஞ் சினையும் பொருள்வேறுபடாஅ— முதலுஞ் சினையு முதலாயது முதலேயாய்ச் சினையா யது சினையேயாய்ப் பொருள்கடம்முள் வேறுபட நில்லா,

நுவலுங்காலைச் சொற்குறிப்பினவே — சொல்லுங்காற் சொல்லுவானது சொல்லுதற் குறிப்பினான் முதலென்றுஞ் சினையென்றும் வழங்கப்படுமென்றவாறு.

(உ-ம்) கோட்டது நுனியைக் குறைத்தான்.
கோட்டை நுனிக்கட் குறைத்தான்.
கோட்டை நுனியைக் குறைத்தான்.

எனவொரு முதலின் சினையை முதலாகக் குறித்த வழியது தான் முதலாக நின்றவாறு காண்க. படையென்பதனை முதலாகப் பார்க்கும் வழிப் படையினதியானை யென முதல் சினையாய் நிற்கும். (6)

பிண்டப் பெயரும் அவ்விலக்கணம் பெறல்

91) பிண்டப் பெயரு மாயிய றிரியா
பண்டியன் மருங்கின் மரீஇய மரபே.

(இ-ள்) பிண்டப் பெயரு மாயிய றிரியா—பலபொருட் டொகுதியை யுணர்த்தும் பெயரும் முதற் சினைப்பெயரியல்பிற்றிரியா, பண்டியன் மருங்கின் மரீஇய மரபே—அவ்வாறவற்றை முதலுஞ் சினையுமாக வழங்குதல் மேற்றொட்டு வழங்கிவாரா நின்ற கூற்றான் மருவிய முறை யென்றவாறு.

(உ-ம்) குப்பையது தலையைச் சிதறினான்.
குப்பையைத் தலைக்கட் சிதறினான்.
குப்பையைத் தலையைச் சிதறினான்.

எனவரும்.

இது, முதல் சினையதிகாரத்தினிலக்கண மல்லா மரூஉக் கூறினார். இது, வேறுபல குழீஇய படை முதலியவற்றிற்கு மொக்கும். (7)

ஒடு உருபு

உயர்ந்த பொருளுணர்த்தும் பெயர்வழி வருதல்

(92) ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே.

இது, மூன்றாவதன்கட் சொல்லுதல் வகைமை கூறு கின்றது.

(இ-ள்) ஒரு வினை யொடுச் சொல்—அதனோ டியைந்த வொருவினைக் கிளவியென மூன்றாவதற் கோதிய வொருவினை யொடுச்சொல், உயர்பின் வழித்து—உயர்ந்த பொருளை யுணர்த்தும் பெயர்வழித் தோன்று மென்றவாறு,

(உ-ம்) அரசனோ டிளையா வந்தார்.

எனவரும்.

இது உயர் பொருளு மிழிபொருளும் பற்றி மயங்கி வருதலி னீண்டுக் கூறியவழி, பொருளை விலக்கினார்.

சாத்தனொடு கொற்றன் வந்தான்.

என உயர்பில்வழி யெண்ணொடு வந்தது.

குலம், தவம், கல்வி, வினை, யுபகரம் முதலிய வற்றானுயர்பு கொள்க.

'நாயொடு நம்பிவந்தா' னென்றாற் போல்வன விழி பொருட்கண்ணும் பெயர்க்கண்ணு மொருவினை யொடுச் சொல் வந்ததாலெனின், அது யாதானு மோராற்றா னுயர்புண்டாயி னல்ல தவ்வாறு கூறார்.? கூறுபவாயி னஃதொரு வினையொடுச் சொலலெனப் படாது. 'கைப்பொருளொடு வந்தானென்றாற் போல்வன; பிறிதோர் பொருடந்த வொடு; அது பொருளுண்டாக வந்தா னென்றலின். (8)

ஏதுப்பொருள் மூன்றாவதன் கண்ணும் ஐந்தாவதன் கண்ணும் வருதல்.

93) மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய
வாக்கமொடு புணர்ந்த வேதுக் கிளவி
நோக்கோ ரனைய வென்மனார் புலவர்.

இது, மூன்றாவதற்கு மைந்தாவதற்கு மேது வொத்த கிழமையவென்கின்றது.

(இ-ள்) மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய— மூன்றாம் வேற்றுமைக் கண்ணு மைந்தாம் வேற்றுமைக் கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட, ஆக்கமொடு புணர்ந்த வேதுக்கிளவி-ஆக்கத்தோடு கூடிய வேதுச் சொல், நோக்கோரனைய வென்மனார் புலவர்— அவ்வேதுப் பொருண்மையை நோக்கும் நோக்கொரு தன்மைய வென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) வாணிகத்தா னாயினான்.
வாணிகத்தா னாயபொருள்.
வாணிகத்தி னாயினான்.
வாணிகத்தி னாயபொருள்.

எனவரும்

எனவே, ஞாபக வேதுவின்கண் வரு மின்னு மானு மொத்த வுரிமை யில வென்பது பெற்றாம். இஃது, உருபும் பொருளும் மயங்கிற்று. (9)

நோக்குஅல் நோக்கத்திற்கு ஏதுவும் செயப்படு பொருளும் ஒத்த உரிமைய ஆதல்.

94) இரண்டன் மருங்கி னோக்க னோக்கமவ்
விரண்டன் மருங்கி னேதுவு மாகும்.

இது, நோக்கு அல் நோக்கத்திற் கேதுவுஞ் செயப்படு பொருளு மொத்த வுரிமைய வென்கின்றது.

(இ-ள்) இரண்டன் மருங்கின் நோக்குஅல் நோக்கம்— இரண்டாவதற் குரித்தாக வோதிய கண்ணா னோக்கும் நோக்கமின்றி மனத்தா னோக்கும் நோக்கம், அவ்விரண்டன் மருங்கி னேதுவுமாகும்—அம் மூன்றாவதற்கு மைந்தாவதற்கு முரிய வேதுப் பொருண்மையுமா மென்றவாறு.

(உ-ம்) "வானோக்கி வாழுமுலகு" (குறள்) என்புழி, வானை நோக்கி வாழுமென விரியும்வழி—வானானாய பயனைக் கருதி யுயிர்வாழும்; எனவும், வானினாய பயனைக்கருதி யுயிர் வாழுமெனவுஞ் செயப்படு பொருளு மேதுவு மொப்பப் பிறந்து நிற்றலிச் சூத்திரத்திற்குக் கருத்து. இஃது உருபும் பொருளும் மயங்கிற்று. (10)

95) ஆறாவதன் பொருளில்வரும் உயர்திணைத் தொகையில் நான்கன் உருபு விரிதல்.

அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகையி
னதுவெ னுருபுகெடக் குகரம் வருமே.

இஃது, ஆறாவதற் கோதிய முறைப் பொருட்க ணான் காவது விரியுமாறும், ஆற னுருபுகெட வதனுடைமைப் பொருள் விரியுமாறுங் கூறுகின்றது.

(இ-ள்) உயர்திணைத் தொகைவயின் குகரம் வரும்—உயர்திணைப் பொரு ளிரண்டு சேர்ந்தவிடத் துருபு விரிப்புழி நான்கனுருபு விரியும், அதுவென் வேற்றுமை யதுவெனுருபு கெடவரும்—அஃதன்றி யவ் வுயர்திணைத் தொகைவயினாறாம் வேற்றுமையை விரிப்புழி யவ்வது வெனுருபு தான் கெட்டுப் போக வதனுடைமைப் பொருள் விரியுமென்ற வாறு.

(உ-ம்) 'நம்பிமக' னென்னுந் தொகை
நம்பிக்கு மக னென விரியும்

இஃதுருபு மயக்கம்

இனி, 'நின்மகள் பாலு முண்ணாள் பழங்கண்கொண்டு'
'யாமெம் மகனைப்பா ராட்ட' (கலி)
'என்னணியியற் குறுமக ளாடிய' (நற்றிணை.)

என்பனவற்று ளது வெனுருபுகெட, வதனுடைமைப் பொருள் விரிந்தவாறு காண்க. இவை யுருபுநிலைக் களத்துப் பொருள் மயங்கின. இவற்றிற்கு, நான்கனுருபு

விரிப்பி னினக்கு மகளா கியவ ளெனக்கு மகனாகிய வனை யெனக்கு மகளாகிய குறுமகளென வாக்கங் கொடுத்துக் கூறல்வேண்டும்; ஆண்டம் முறைமை செயற்கையாம்; ஆகலினது பொருளன்மை யுணர்க (11)

96] இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு
தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயி னான.

இஃதிரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) தடுமாறு தொழிற் பெயர்க்கு—தனக்கே யுரித்தாய் நில்லாது ஒருகா லீற்றுப் பெயரொடுஞ் சென்று தடுமாறும் தொழிலோடு தொடர்ந்த பெயர்க்கு, இரண்டும் மூன்றுங் கடிநிலையில—இரண்டாவதும் மூன்றாவதுங் கடியப் படா, பொருள்வயினான—அவ் வேற்றுமைத் தொக்கு அவற்றின் பொருணிற்கு மிடத் தென்றவாறு.

(உ-ம்) 'புலி கொல் யானை' என்புழிப் புலி செயப் படு பொருளாயவழி யிரண்டாவதும் அது வினை முதலாயவழி மூன்றாவதும் விரியும். அது, புலியைக் கொன்ற யானை, புலியாற் கொல்லப்பட்ட யானை எனவரும்.

வினைத்தொகைக்கண்ணும் செயப்படுபொருள் பிறக்கு மோவெனின் 'செய்குன்று, உறைபதி' என்றாற் போல்வன வற்றுட் பிறந்தவாறு காண்க. இஃதுருபு மயக்கம். (12)

97] மேலதற்கு ஓர் புறநடை

ஈற்றுப் பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப வுணரு மோரே.

இது, மேலதற்கோர் புறநடை

(இ-ள்) ஈற்றுப் பெயர் முன்னர்—தடுமாறுந் தொழிலொடு புணர்ந்த விருவகைப் பெயருளிறுதிப்பெயர் முன்னர் வந்த, மெய்யறி பனுவலின்—பொருள் வேறுபாடுணர்த்துஞ் சொல்லான், வேற்றுமை தெரிப வுணருமோரே—அப் பொருள் வேற்றுமை தெரிவா ருணர்வோரென்றவாறு.

(உ-ம்) புலிகொல் யானை யோடா நின்றது.
புலிகொல் யானை யோடா நின்றன
புலிகொல் யானைக் கோடு வந்தன.

எனவரும்.

முன்புலியைக் கொன்ற யானை பின் பிறி தொன்றானிறந்துழியும் புலிகொல்யானைக் கோடுவந்தன வென்ப. இது குறிப்பா னுணரப்படு மென்றற் குணருமோரே யென்றார். இன்னு மிதனானே புலிகொல்யானை கிடந்த தென்புழிச் சொல்லுவான் குறிப்பா னுணர்தலுங் கொள்க. (13)

98] ஓம்படைப் பொருளில் இரண்டாவதும்
மூன்றாவதும் மயங்கல்.

ஓம்படைக் கிளவிக் கையு மானுந்
தாம்பிரி விலவே தொகவருங் காலை.

இது, இரண்டாவதும் மூன்றவதும் மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஓம்படைக் கிளவிக்கு—பாதுகாத்தலாகிய பொருண்மைக்கு, ஐயு மானுந் தாம் பிரிவில-இரண்டாவதும் மூன்றாவது மொத்த வுரிமைய, தொகவருகாலை-அவ்வேற்றுமை தொக்கவழி யென்றவாறு,

(உ-ம்) புலி போற்றி வா.

என்புழிப் புலியை போற்றிவா, வெனவிரியும் வழிப் புலியானகிய வேதத்தை போற்றிவா வென விரண்டுருபும் பொருளு மொப்பவிரிந்துழி, யிரண்டும் மயங்கியவாறு காண்க

இனனுருபு பிரிவுடைத்தாய்ப் புலியிற் போற்றிவா வெனச் சிறுபான்மை வரும். (14)

99] வாழ்ச்சிக் கிழமையில் ஆறாவதும் ஏழாவதும் மயங்கல்.

ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்
கேழு மாகு முறைநிலத் தான.

இது, ஆறாவதும், ஏழாவதும், மயங்குமாறு கூறு கின்றது.

(இ-ள்) ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு- ஆறாம் வேற்றுமைக்க ணோதிய வாழ்ச்சிக் கிழமைக்கு, உறைநிலத்தான வேழுமாகும்—உறை நிலப்பெயர்பின் மொழியாய வழியேழாவதும் வருமென்றவாறு.

(உ-ம்) காட்டதியானை
காட்டின் கண் யானை

எனவரும்.

அந்நிலத்து வாழ்வதனை 'அதனது' எனப்படும். அது பற்றுக் கோடாக வுண்டாய், அஃது இன்றி விடிற் றான்வாழ்த லில்லாமையின், யானைக் காடென்பது றை நிலப் பெயர். முன் மொழியாய் வருதலின் யானைக் கண்காடு என ஏழனுருபு விரியாதாயிற்று. இது பொருண் மயக்கம்.

கொடைப் பொருளில் நான்காவதும் ஆறாவதும் மயங் கல்.

100] குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி
யப்பொரு ளாறற் குரித்து மாகும்.

இது, நான்காவதன் பொருளா றாவதற்குச் செல்லு மென்கின்றது.

(இ-ள்) குத் தொக வரூஉங் கொடையெதிர் கிளவி— நான்கனுருபு தொகவருங் கொடையை விரும்பி மேற் கோடலை யுணர்த்துந் தொகைச் சொல்லினது, அப் பொருள் - அக் கொடை யெதிர்தலாகிய வவ்பொருண் மை, ஆறற் குரித்துமாகும் — ஆறாம் வேற்றுமைக் குரித்துமா மென்றவாறு.

(உ-ம்) நாகர் பலி

என்பது 'நாகர்க்கு நேர்ந்தபலி, நாகரது பலி' யென விரியும். நாகர்க்கு நேர்ந்தபலி யெனவே பிறர்க்காகாத பலிய வருடைமை யாயிற் றாதலி, னாறாவது முரித்தாகப் பெற்றது. சாத்தற்கு நேர்ந்த சோறென்புழியது பிறர்க்கு மாதலி, னாண்டாறாவ தேலாது. தெய்வ மல்லா தாரிலுஞ் சிறந்தார்க்கு நேர்ந்ததேல் ஆண்டு மாறாவதும் வருமென்றுணர்க. (16)

அச்சப் பொருளில் ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்கல்

**101]** அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயினான.

இஃது, ஐந்தாவது மிரண்டாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) அச்சக் கிளவிக்கு — அச்சப்பொருண் மேல் வருஞ் சொல்லிற்கு. ஐந்து மிரண்டு மெச்சமில - ஐந்தாவது மிரண்டாவது மொத்த வுரிமைய, பொருள் வயினான — வேற்றுமைத் தொக வவற்றின் பொருணின்ற வழி யென்றவாறு.

பழியஞ்சும்

(உ-ம்) என்பது 'பழியினஞ்சும், பழியை யஞ்சு மென வரும். கள்ளரி னஞ்சு மென்பதற்கு அவரின் மிகவஞ்சு மென்னும் பொருண்மையையுந் தருமேனு மப்பொருள் கொள்ளற்க. கள்ளரா னஞ்சு மென்பதே கொள்க. இஃதுருபும் பொருளு மயங்கிற்று. (17)

**102)** வேற்றுமை மயக்கமும் வழக்கிற் பிழையாமை

அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினும மெய்தடு மாறி

யிருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாந்
திரிபிடனிலவே தெரியு மோர்க்கே.

இது வேற்றுமை மயக்கத்திற்குப் புறநடை.

(இ-ள்) அன்னபிறவும்—மேல் வேற்றுமை மயக்கங் கூறப்பட்ட வேற்றுமையே யன்றி யவை போல்வன பிறவும், தொன்னெறி பிழையாது—தொன்று தொட்டு வரும் வழக்கிற் பிழையாது, உருபினும் பொருளினு மெய்தடுமாறி—உருபானும்பொருளானு மொன்ற னிலைக்களத் தொன்று சென்று, இருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாம்—பிறிதொன்றன் பொருளுந் தன்பொருளுமாகிய வீரிடத்தும் நிலைபெறும் வேற் றுமை யெல்லாம், திரிபிட னிலவே தெரியு மோர்க்கே-திரிபுடைய வல்ல தெரிந்துணர்வோர்க் கென்றவாறு.

ஏதுப் பொருட் கண்வரும் மூன்றாவதற்கு மைந்தா வதற்கும் இருவயி னிற்ற லின்மையி னவற்றை யொழித் தேனைய வற்றிற்கே யிருவயி னிற்றல் கொள்க. என்னை? வழிபோயினா ரெல்லாருங் கூறை கோட் பட்டார், என்ற வழிக் கடவுளரை யொழித் தேனை யோர்க்கே யக்கூறை கோட்பட லெய்தினாற் போல.

'அன்ன பிற, வாவன'

நோயி னீங்கினான்; நோயை நீங்கினான்.

சாத்தனை வெகுண்டான்; சாத்தனொடு வெகுண்டான்,

முறையாற் குத்துங் குத்து; முறையிற் குத்துங் குத்து, எனவரும். இது முறைக் குத்துக் குத்தினா னெனத் தொக்கு நின்றதன்க ணிரண்டும் விரிந்தன.

கடலொடு காடொட்டாது; கடலைக் காடொட்டாது, தந்தையொடு சூளுற்றான்; தந்தையைச் சூளுற்றான்,

என்றிவை தொகையாயுந், தொகையன்றியும் மயங்கி நிற்குமா றுணர்க. (18)

103] பல உருபு தொடர்ந்தடுக்கிய வழிப் படுவதோர் இலக்கணம்,

உருபு தொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
யொருசொன் னடைய பொருள்சென் மருங்கே.

இது, பலவுருபு தொடர்ந்தடுக்கிய வழிப்படுவதோ ரிலக்கணங் கூறுகின்றது,

(இ-ள்) உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி-ஒருருபும் பலவுருபுந் தம்முட் டொடர்ந் தடுக்கி வந்த வேற்றுமை யுருபை யிறுதியாக வுடைய சொற்கள், ஒரு சொன்னடைய—முடிக்குஞ் சொல்லொன்றனான் முற்றுப் பெற்று நடக்கும், பொருள்செல் மருங்கே—அவ்வொன் றனாற் பொருள் செல்லும் பக்கத்தென்ற வாறு.

(உ.ம்) 'என்னொடும் நின்னொடும் சூழாது'
துடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கைச்
சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட
வென்புழி முன்கையாற் றூதையாலும் பாவையாலும் விளையாட வென வடுக்கி முடிந்தது.
'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்' (குறள்)
யானையது கோட்டை நுனிக்கண் குறைத்தான்.
எனவரும்.

இச் சூத்திரத்தின் கருத்து, முன்னர்ப் பலவுருபு தொடர்ந்த சொற்க ளொரு சொல்லான் முடிதலு,மோருருபு தொடர்ச்சியு மொரு சொல்லான் முடிதலுங் கூறுதல் ஆயிற்று. கோட்டை நுனிக்கட் குறைத்தான் என்புழி

முன்மொழிக்கட் பொருள் நிற்றலானுந், தினையிற் கிளி யைக் கூடியு மென்புழிப் பின் மொழிக்கட் பொருள் நிற்றலானும், இவற்றை யடையென்று கூறுதல் பொருந்தா தென்றுணர்க. (19)

104] வேற்றுமை உருபு விரிந்து நிற்கும் இடம்
இறுதியு மிடையு மெல்லா வுருபும்
நெறிபடு பொருள்வயி னிலவுதல் வரையார்.

இஃது, உருபு நிற்கு மிடங் கூறுகின்றது.

(இ-ள்) இறுதியு மிடையும்—வேற்றுமைத் தொட ரிறுதிக் கண்ணும் அதனிடை நிலத்தும், எல்லாவுருபும்—ஆறுருபும், நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்—தத்தமக் கோதிய பொருட்க ணிற்றலை நீக்கார் கொள்வா ராசிரிய ரென்றவாறு.

இவற்று ளிறுதிக் கணிற்பன வற்றி னாற னுருபு இறுதிக் கண் நில்லாது; நின்றதேல், வினைக்குறிப்பா மென்றுணர்க. இதற்காக வன்றே 'ஈறு பெயர்க்காகு மியற்கைய' வென்றோதிய வதனை மீட்டு மீண்டிறுதியு மென்று வகுத்துக் கூறிற்றென்றுணர்க.

ஆறனுரு பொழிந்த வற்றிற் குதாரணம்.

கடந்தா னிலத்தை.
வந்தான் சாத்த னொடு.
கொடுத்தான் சாத்தற்கு.
வலியன் சாத்தனின்.
இருந்தான் குன்றத்துக் கண்.

எனவரும்.

இனி யிடை நிற்பன,

நிலத்தைக் கடந்தான்.

சாத்தனொடு வந்தான்.
சாத்தற்குக் கொடுத்தான்.
சாத்தனின் வலியன்.
சாத்தன தாடை.
குன்றத்துக்க ணிருந்தான்.

எனவரும். சாத்தன தாடை யென்புழி யதுவென்பது பெயராய் நிற்கும். ஆடைச் சாத்தன தென்புழி யாடை யென்னு முடைமைப்பெய ரெழுவாயாய்ச் சாத்தன தாயிற் றென்னும் பயனிலையோடு முடிதலின், வினைக் குறிப்பாயிற்று (20)

105] ஆறன் உருபிற்கு உரிய இலக்கணமும் எல்லா உருபிற்கும் பொது இலக்கணமும்.

பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.

இஃது ஆறனுருபிற் குரிய தோரிலக்கணமு மெல்லா உருபிற்கும் பொதுவிலக்கணமுங் கூறுகின்றது.

(இ-ள்) பிறிது பிறி தேற்றலும்—ஆறனுருபு தன்னை யொழிந்த வுருபினை யேற்றலும், (பெயர்க்குப் பிறிதாய் நிற்றலிற் பிறிதென்றார்.) உருபு தொக வருதலும்— இடையிலு மிறுதியிலு மாறுருபுந் தொக்கு நிற்றலும், நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப-நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்து வரும் என்று சொல்லுவர் புலவர். (எ-று)

(உ-ம்) சாத்தன தனை,
சாத்தனத னொடு,
சாத்த னதற்கு,
சாத்த னதனின்,
சாத்த னதனின்,
சாத்த னதன் கண்.

எனவரும்.

உருபு தொகுமிடத் துருபும் பொருளுமுடன்றொகு தலு, மூருபு தானே தொகுதலு முடைய.

(உ-ம்) கடந்தா ணிலம்.

இருந்தான் குன்றத்து.

எனவரும்.

நிலங் கடந்தான்-
தாய் மூவர்.
கருப்பு வேலி.
வரைவி ழருவி
சாத்தன் கை.
குன்றக் கூகை.

எனவரும். இவை யுருபு தொக்கன. 'படைக்கை' என் பது உருபும் பொருளும் தொக்கது.

சாத்தன் றனது.

எனத் தன்னையு மேற்ற லுரையிற் கொள்க. (21)

**106]** எய்தியது விலக்கல்

ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான.

இது, எய்தியது விலக்கிற்று.

(இ-ள்) ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின் மெய்யுருபு—ஐகார வேற்றுமைப் பொருளுங் கண் ணென் வேற்றுமைப் பொருளு மல்லாத பிறபொருண் மேனின்ற வுருபு, இறுதியான தொகா—தொடர்மொழி இறுதிக் கட்டொக்கு நில்லா வென்றவாறு.

(உ-ம்) அறங் கறக்கும்

என்றது, கறக்கு மறமென விறுதிக்கட் டொகாமை காண்க.

'தண்வரல் வாடையும் பிரிந்திசி னோர்க்கழலே' என வானுரு பிறுதிக்கட் டொக்கதாலெனின், அது வினைச் சொற் காரணப் பொருட்டாய் நின்றது. (22)

107] உருபுகள் தம்பொருள அன்றி மயங்குமாறு.

யாத னுருபிற் கூறிற்றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

இது, உருபுகடம் பொருளன்றி மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) யாதனுருபிற் கூறிற்றாயினும்—ஒரு தொடர் யாதானுமொரு வேற்றுமைய துருபு கொடுத்துச் சொல்லப் பட்டதாயினும், (அவ்வுரு பேற்ற சொல்லு முருபு நோக்கிய சொல்லும் பொருளியை யாதவழி) பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்—பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாருமென்றவாறு

(உ-ம்) கிளையரில் நாணற் கிழங்கு மணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத்துவர்வாய்

என்புழி, மணலு ளீன்றவென வேழாவதன் பொரு ளாயிற்று.

'கொக்கினுக் கொழிந்த தீம்பழம் கொக்கின்,
என்புழியுங் கொக்கினின்றுமென வைந்தாவதன் பொரு ளாயிற்று.

முற்கூறிய வெல்லாந் தம்மு ளியை புடைய பொருண் மயக்கமே மயங்குமாறு கூறி, இஃது ஓரி யைபு மில்லாத வுருபு மயக்கமே கூறிற்றென் றுணர்க. (23)

103] எதிர்மறைக் கண்ணும் வேற்றுமைப் பொருள் திரியாமை.

எதிர்மறுத்து மொழியினுந் தத்த மரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே.

இது, வேற்றுமைகடம் பொருண் மாறுபட்டுழியு மப் பொருள வென்கின்றது.

(இ-ள்) எதிர்மறுத்து மொழியினும்—விதிமுகத்தாற் கூறாதெதிர் மறுத்துக் கூறினும், தத்தம் மரபின் பொருணிலை திரியா—தத்தமிலக்கணத்தான் வரும் பொருணிலை திரியா, வேற்றுமைச்சொல்லே—வேற்றுமை யுருபுக ளென்றவாறு.

(உ-ம்) மரத்தைக் குறையான்.
வேலா னெறியான்

எனவரும், வினை நிகழாமையின், மரமும், வேலுஞ் செயப்படு பொருளுங் கருவியு மாகாவேனு மெதிர்மறையும் விதி வினையோ டொக்குமென வாணை கூறிற்று. (24)

109] அவ்வுருபுகளுட் சில செய்யுளுள் திரிதல்.

குஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே.

இது, அவ்வுருபுகளுட் சில செய்யுளுட் டிரியு மென்கின்றது.

(இ-ள்) குஐ ஆனென வரூஉ மிறுதி—குஐ ஆனென வரூஉம் மூன்றுருபுந் தொடரிறுதிக்கணின்றவழி, அவ்வொடுஞ் சிவணுஞ் செய்யுளுள்ளே-அகரத்தோடு பொருந்தி நிற்றலு முடைய செய்யுளு ளென்றவாறு.

(உ-ம்) 'கடிநிலை யின்றே யாசிரியர்க்க'
(ஆசிரியற்க)

'காவ லோனக் களிறஞ் சும்மே
'களிறு மஞ்சுமக் காவ லோன'
'புரைதீர் கேள்விப் புலவ ரான'

எனவரும்.

'உள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான'

என்பது வினைக்குறிப்புக் காரணம் பெற்றது. (25)

**110]** எய்தியது விலக்கல்

அஎனப் பிறந்த வஃறிணை மருங்கிற்
குவ்வு மையு மில்லென மொழிப.

இது, எய்தியது விலக்கிற்று

(இ-ள்) குவ்வும் ஐயு மஃறிணை மருங்கின் அ எனப் பிறத்தல் இல்லென மொழிப —குவ்வும் ஐயுமஃறிணைப் பெயர்க்க ணகரத்தோடு சிவணி யீறுதிரித லில்லை யென்று சொல்லுவர் புலவரென்றவாறு.

எனவே, 'புள்ளினான, வென வஃறிணைக்க ணான் பிறக்குமாறாயிற்று. (26)

**111]** நான்காவது ஏனையுருபுகளின் பொருளோடு மயங்கல்

இதன திதுவிற் றென்னுங் கிளவியு
மதனைக் கொள்ளும் பொருள்வயி னானு
மதனாற் செயற்படற் கொத்த கிளவியு
முறைக்கொண் டெழுந்த பெயர்ச் சொற் [கிளவியும்
பால்வரைக் கிளவியும் பண்பி னாக்கமுங்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியுந் தீர்ந்து 'மொழிக் கிளவியு
மன்ன பிறவும் நான்க னுருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே.

இது, நான்காவ தேனை யுருபுகளின் பொருள் களோடு மயங்கு மென்கின்றது.

(இ-ள்) இதனதிதுவிற் றென்னுங் கிளவியும்—இப் பொருளினுடைய திப்பொருள்; அது தானித் தன்மைத் தென்னு; மாறாவதன் பொருண்மையும், அதனைக் கொள்ளும் பொருள் வயினானும்-ஒன்றனை ஒன்று கொள்ளுமென்னு மிரண்டாவதன் பொருண்மையும், அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்—ஒன்றனா னொன்று தொழிற்படற்கேற்கு மென்னு மூன்றாவதன் பொருண்மையும், முறைக் கொண் டெழுந்த பெயர்ச் சொற் கிளவியும்-முறைப் பொருண்மையைக் கொண்டு நின்ற பெயர்ச் சொல்லின தாறாம் வேற்றுமைப் பொருண்மையும், பால்வரைக் கிளவியும் பண்பினாக் கமும்- நிலத்தை வரைந்து கூறும் பொருண்மையும் பண்பின்கணாம் பொருவுமாகிய வைந்தாவதன் பொருண்மையும், காலத்தினறியும் வேற்றுமைக் கிளவி யும்-காலத்தின் கணறியப்படு மேழாம் வேற்றுமைப் பொருண்மையும் பற்றுவிடு கிளவியுந் தீர்ந்துமொழிக் கிளவியும்-பற்றுவிடு பொருண்மையுந் தீர்ந்து மொழிப் பொருண்மையுமாகிய வைந்தாவதன் பொருண்மையும், அன்ன பிறவும் நான்க னுருபிற் றோன்றலாறே தொன் னெறி மரபின — அவை போல்வன பிறவும். நான்க னுருபிடத்துக் கூறுதலைப் பழைய நெறி முறைமையாக வுடைய வென்றவாறு.

(உ-ம்) யானைக்குக் கோடு கூரிது. இஃது ஆறாவது
இவட்குக் கொள்ளு மிவ்வணி. இஃது இரண்டாவது
அவற்குச் செய்யத் தகும் காரியம். இஃது மூன்றாதுவ
ஆவிற்குக் கன்று. இஃது ஆறாவது
கருவூர்க்குக் கிழக்கு. இஃது ஐந்தாவது
சாத்தற்கு நெடியன். இதுவுமது
காலைக்கு வரும். இஃது ஏழாவது
மனை வாழ்க்கைக்குப் பற்று விட்டான். இஃது ஐந்தாவது

ஊர்க்குத் தீர்ந்தான் இதுவுமது
அன்ன பிறவு' மென்றதனால்

ஊர்க்கட் சென்றான்'
ஊர்க்கண் உற்றது செய்வான்.
ஊரிற் சேயன்.

என்பன வற்றிற்கு நான்கனுருபு கொள்க. இது தொகாது நின்ற விடத்து நான்கனுருபு சென்று மயங்கலின் வேறு கூறினார். (27)

112] நான்கனுருபு ஒழிந்தனவும் தம்முண் மயங்கல்

ஏனை யுருபு மன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான.

இது நான்க னுரு பொழிந்தனவுந் தம்முண் மயங்கு மென்கின்றது.

(இ-ள்) ஏனையுருபு மன்ன மரபின மானமில— நான்கனுருபல்லாத பிறவுருபுந் தொகை யல்லாத தொடர்மொழிக் கண்ணொன்றன் பொருளிற் சிதையாம லொன்று மயங்குதற்கட்குற்ற மில, சொன் முறையான— வழக்கு முறையானென்றவாறு.

(உ-ம்) நூலது குற்றங் கூறினான்.
நூலைக் குற்றங் கூறினான்.
அவட்குக் குற்றேவல் செய்யும்.
அவளது குற்றேவல் செய்யும்.

எனவரும். பிறவு மன்ன (23)

113] வேற்றுமைப் பொருள்கள் தோன்றுமிடம்

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிதுபய னாக வென்னு

மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே.

இது, வேற்றுமைப் பொருள்க டோன்றுமிடங் கூறு கின்றது

(இ-ள்) வினையே—வினைப்பெயரையும் வினைச் சொல்லையுந் தோற்றுவிக்கும் உண் தின், செல், கொள், வனை யென்பன முதலாகிய வினையும், செய்வது, அவ் வினையைச் செய்யும் வினைமுதலும், செயப்படு பொருளே—அவ்வினை முத லதனைச் செய்ய வத் தொழிலையுறும் பொருளும், நிலனே அத்தொழிலைச் செய்கின்ற இடமும், காலம்—அத்தொழிலைச் செய்யுங் காலமும், கருவி—அவ்வினைமுதற் றொழிலினைச்செய் யுங்காலத்திற்குத் துணையாங் கருவிகளுமாகிய வாறும் இன்னதற்கு—ஒரு பொருணின் றவ்வினைமுதல் செய்யப் பட்டதனை யேற்றுக் கோடற்குபகாரமாக, இதுபயன் ஆக—அபபொரு ளதனை யேற்றுக் கொண்டதனா னவ் வினை முதற் கிப்பய னுண்டாக, என்னு மன்ன மரபின் இரண் டொடும் தொகைஇ—என்று சொல்லப்படு மத் தன்மைத் தாகிய முறைமையினையுடைய விரண்டோடுந் தொக்கு, தொழில் முதல் நிலையாயெட்டென்ப — காரியத்திற்கு முன்னிற்குங் காரணம் அவ்வெட்டென்று சொல்லுவர் புலவரென்றவாறு.

'ஆக' வென்றதனையின்னதற்காக வென்றுங் கூட்டுக.

(உ-ம்) வனைந்தான்

என்றவழி, 'வனை' யென்னும் வினையும், வனைந்த கருத்தாவும் வனையப்பட்டகுடமும், வனைதற் கிடமா கிய நிலமு மத்தொழி னிகழுங்காலமு, மதற்குக் கருவி யாகிய திகிரிகை முதலியனவும் அதனைக் கொள்வானு, மவன் கொண்டதனாற் பெறும் பயனுமாகிய வெட்டுக் காரணத்தானுந் தொழி னிகழ்ந்தவாறு காண்க. ஒழிந்த வினைகட்கு மவ்வாறு விரிக்க.

வினையை முன்வைத்தார், சொற்களையுந் தோற்றுவித்து மேனிகழுங் காரியத்திற் கேனை யேழினுஞ் சிறந்த காரணமாய் நிற்றலின். வினையுந் தொழிலும் வேறென்பதிச் சூத்திரத்தானுணர்தற்கு வினையென் றெடுத்துத் தொழின் முதனிலையே யென முடித்தார்.

வனைந்தா னென்பதற்குக் குடத்தை வனைதலைச் செய்தா னென்று பொருடந்துழிச் செய்தா னென்ற தகரங் காலங் காட்டித்தொழிலைத் தோற்றுவித்த வாறும், 'வனை' யென்னும் வினை காலங்காட்டாம னின்றவாறும், வனைதலென விரிந்துழியும் புடை பெயர்ச்சி மாத்திர மன்றிக் காலங்காட்டாம னின்ற வாறு முணர்க. காரியத்திற் கியாண்டுங் காலங்காட்டு மெழுத்துக்க ளோடு கூடிய செய்யென்பதே வாசக மென்றுணர்க. இக்காரிய வாசக மிவ்வாறன்றி. யொரு சொன் முழுவதுந் தானாய் நிற்பனவுமுள. அவை,

'கறைமிட றணியலு மணிந் தன்று' (புறம்)

என்புழிக் கறை மிடற்றை யழகு பெறுதலையுஞ் செய்த தெனவும்,

'இனியா னுண்ணலு முண்ணேன்' (கலி)

என்புழி இனியான் சோற்றை யுண்ணுதலையுஞ் செய் யேன் எனவும்,

'வாழ்தலும் வாழேன்' (கலி)

என்புழி இனி யானுயிரை வாழுதலையுஞ் செய்யேன் எனவும், வந்தவற்று 'ளணிந்தன் று' 'உண்ணேன்'வாழே' னென்பன முழுதுங் காரிய வாசகமாயே நின்றவாறு காண்க.

இனி, வனைந்தா னென்பதன்கட் செய்வ தெழுவா யாயும்,வினையுஞ் செயப்படுபொருளு மிரண்டாவதாயும், வினை முதலுங் கருவியு மூன்றாவதாயும், ஒருவனேற்றுக்

கொண்டவழி யின்னதற் கிது பய னான்காவதாயும், நிலமுங் காலமு மேழாவதாயுஞ் சேர்ந்தன. இன்னும், வனைந்தவன் கொடுத்த குட மவன் கையினின்று நீங்குத லைந்தாவதாயு மதனை யொருவனேற்றுக் கொண்ட வழி யஃதவனுடைமை யாதலா றாவதாயுஞ் சேருமாறு முணர்க. கருவிக் கணடங்கு மேதுவு மைந்தாவதற்கு வரும்.

இங்ஙன மிவ்வுருபுக ளிவ்வினைச் சொற்கட் டோன் றுதல் பற்றி யிச்சூத்திரத்தை வினையியலிற் கூறா தீண் டுக் கூறினார். 'பெயர் நிலைக் கிளவி' யிரண்டாகுவதே, யென்னுஞ் சூத்திரங்களானு மிக் கருத்துணர்க.

114] மேலதற்கு ஒரு புறநடை

அவைதாம்,
வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்.

இது, மேலதற்கோர் புறநடை.

(இ-ள்) அவைதாம் — மேற் கூறப்பட்ட தொழின் முதனிலைகடாம், வழங்கியல் மருங்கிற் குன்றுவ குன் றும் — எல்லாத் தொழிற்கு மெட்டும் வருமென்னும் யாப்புற வில்லை-வழக்கின்கட் சில தொழிலிற் குன்றத் தகுவன குன்றி வரு மென்றவாறு.

குன்றத் தகுவன செயப்படு பொருளு மின்னதற் கிது பயனென்பனவுமாம்.

(உ-ம்) கொடி யாடிற்று.
வளி வழங்கிற்று.

எனவரும். (30)

115] ஆகு பெயரின் இலக்கணம்.

முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்

பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரு
மியன்றது மொழிதலு மிருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
யனையமர பினவே யாகுபெயர்க் கிளவி

இது, குறிப்பாற் பொருளுணர்த்தும் பெயரித் துணை யென்கின்றது.

(இ-ள்) முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும் முதற் சொல் வாய்ப்பாட்டாற் கூறப்படுஞ் சினைப்பொருளை யறிவிக்குஞ் சொல்லுஞ், சினையிற் கூறு முதலறி கிளவியும்—சினைச் சொல்வாய் பாட்டாற் கூறப்படு முதற் பொருளை யறிவிக்குஞ் சொல்லும், பிறந்தவழிக்கூற லும்—நிலத்துப் பிறந்த பொருண்மேல் அந்நிலத்துப் பெயர் கூறலும், பண்பு கொள் பெயரும் பண்புப்பெயர் அப் பண்புடையதனை யுணர்த்தி நிற்குஞ் சொல்லும், இயன்றது மொழிதலும்—முதற் காரணப் பெயரா னக்காரணத்தா னியன்ற காரியத்தினைச் சொல்லு தலும், இருபெயரொட்டும்—அன்மொழிப் பொருண்மே னில்லாத விருபெயரொட்டும், வினைமுதலுரைக்குங் கிளவியொடு தொகைஇ-செய்யப்பட்ட பொருண் மேல தனைச் செய்தான் பெயரைச் சொல்லுஞ் சொல் லோடே முற்கூறிய வாறுந் தொக்கு, அனையமரபினவே யாகுபெயர்க் கிளவி — அப்பெற்றிப் பட்ட விலக்க ணத்தை யுடைய வாகு மாகு பெயரான சொல்லென்ற வாறு.

(உ-ம்) கடுத் தின்றான்.
தெங்கு தின்றான்.
இலை நட்டு வாழும்
பூ நட்டு வாழும்.
குழிப்பாடி நேரிது.

எனவரும்.

இவ்வாடை கோலிகன்.

என்பதுமது.

நீலமென மணியை யுணர்த்திற்று.
பொன்னெனக் குடத்தை யுணர்த்திற்று.
மக்கட் சுட்டென விரண்டு மில்லாததோர்

பொருளை யுணர்த்தாது மக்களை யுணர்த்திற்று நன்கு மதிக்கும் பொருள் மக்களே யாதலின்;

பொற்றொடி யென்ப தன்மொழி; யாதுபெய ரன்மை, யுணர்க.

இச் சூத்திரத்தானே யியற்கைப் பெயரேயன்றிக் குறிப்பாற் பொருளுணர்த்தும் பெயரும் பெரும்பான்மை யென்றார். (31)

116] ஆகு பெயரிலக்கணம் இருவகைய

அவைதாம்,
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலு
மொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலு
மப்பண் பினவே நுவலுங் காலை.

இஃது, அவ்வாகு பெயரிலக்கண மீருவகைய வென்கின்றது.

(இ-ள்) அவைதாம் தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலும் — மேற் கூறப்பட்ட வாகுபெயர்கடாந் தத்தம் பொருள்வயி னீங்காது நின்று தம்பொருளின் வேறல்லாத பொருளொடு புணர்தலும், ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்—பொருத்த மில்லாத கூற்றானின்று பிறிது பொருளை யுணர்த்தலும், அப்பண்பினவே நுவலுங்காலை என்று சொல்லப் படுகின்ற வவ்விரண் டிலக்கணத்தையுமுடைய சொல்லுங் காலத்தென்றவாறு

(உ-ம்) கடுத் தின்றான்.
குழிப்பாடி நேரிது.

எனவரும்.

117] ஆகுபெயரும் வேற்றுமை ஏற்கும்.

வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இஃது, ஆகுபெயரும் வேற்றுமை யேற்கு மென்கின்றது.

(இ-ள்) வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். அவ்வாகு பெயர்க ளைம் முதலிய வறுவகை வேற்றுமைப் பொருண்மை யிடத்து மியைபுடைமையைப் பாதுகாத்தறியல் வேண்டு மாசிரிய னென்றவாறு.

(உ-ம்) மக்கட் சுட்டை யுயர்திணை யென்மனார்.
தொல்காப்பியனாற் செய்யப் பட்டது.
தண்டூண் ஆதற்குக் கிடந்தது.
பாவையினு மழகியாள்
கடுவினது காய்
குழிப்பாடியுட் டோன்றியது.

எனக் காண்க. (33)

118] ஆகுபெயர் வேறுபாடு

அளவும் நிறையு மவற்றொடு கொள்வழி
யுளவென மொழிப வுணர்ந்திசி னோரே.

இஃது, ஆகுபெயர் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) அளவும்நிறையு மவற்றொடு கொள்வழி யுளவென மொழிப—அளவுப் பெயரும் நிறைப்பெயரு மாகு பயராய்க் கொள்ளுமிடமு முடையவென்று சொல்லுவர் உணர்ந்திசினோரே—உணர்ந்தோ ரென்றவாறு.

(உ-ம்) பதக்குத், தூணி
தொடி, துலாம்.

என அளக்கவும், நிறுக்கவும் பட்ட பொருட்கட் கிடந்த வரையறைக் குணப்பெய ரப்பொருட்குப் பெயராயிற்று.

நெல்லை யளந்து பார்த்தும் பொன்னை நிறுத்துப் பார்த்தும் பின்னரவற்றிற்குப் 'பதக்கு' 'தொடி' யென்ற ளவும் நிறையுமாகிய பெயர் கூறப்படுதலி னவற்றை யாகு பெய ரென்றார்.

ஒன்றென்னு மெண்ணுப் பெயரா னவ் வெண்ணப் படும் பொருளைக் கூறுவதற்கு முன்னு மப்பொரு ளொன்றாயே நிற்றலி னெண்ணுப் பெயரை யாகு பெயரோடு கூறாராயினார். (34)

119] ஆகு பெயர்க்குப் புறநடை.

கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.

இது, ஆகுபெயர்க்குப் புறநடை.

(இ-ள்) கிளந்தவல்ல வேறுபிற தோன்றினும்— சொல்லப்பட்டனவே யன்றி வேறுபிற சொற்கண்ணே யாகுபெயர்த் தன்மை தோன்றினும், கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே-சொல்லப்பட்ட (சொல்லப் பட்ட வற்ற தியல்பான்) உணர்ந்து கொள்க வென்ற வாறு.

(உ-ம்) யாழ் குழ லென்னுங் கருவிப்பெயர் 'யாழ் கேட்டான், குழல் கேட்டான்,' என் றவற்றா னாய வோசை மேலும், யானை, பாவை யென்னு முவமப்பெயர்; யானை வந்தான்; பாவை வந்தா, ளென வுவமிக்கப்படும் பொருண் மேலும்; ஏறு குத்தென்னுந் தொழிற்பெயர் இஃதோ ரேறு இஃதோர் குத்தென வத் தொழிலி னாய படுவின் மேலும், நெல்லாதல் காணமாதல் பெற்றா

னொருவன் சோறு பெற்றே னெனக் கார ணப் பொருட்பெயர் காரியத்தின் மேலும், ஆகுபெயராய் வந்தன.

'ஆறறி' யந்தண' ரென்புழி யாறென்னும் வரையரைப் பண்புப்பெய ரப் பண்பினை யுடைய வங்கத்தினை யுணர்த்தி நிற்றலு மிவ்வெண்ணுப் பெயரினை யறிகுறி யாகிய வலகு நிலைத்தானமுமப் பெயரவாய் நிற்ற லும், அகர முதலிய வெழுத்துக்களை யுணர்த்தற்குக் கருவியாகிய வரி வடிவுகளு மப்பெயர் பெற்று நிற்றலுங் கொள்க.

கடிசூத்திரஞ் செய்ய விருந்த பொன்னைக் 'கடி சூத்திர' மென்றும், தண்டு ணாதற்குக் கிடந்த மரத்தினைத் தண்டூ ணென்றும், காரியத்தின் பெயரைக் காரணத்திற் கிட்டு வழங்குவனவும், எழுத்துச் சொற்பொரு, ளென்பனவற்றிற்கு இலக்கணங் கூறிய வதி காரங்களை யெழுத்துச் சொல் பொருள். என்பன, வுணர்த்தி நிற்றலுங் கொள்க.

'பிறவென்னாது வேறென்றதனா னவை தொல் காப்பியங் கபிலம், வில்லி, வாளி யென வீறு திரிதலுங் கொள்க.

இவ்வாகு பெயர்க ளெழுவாய் வேற்றுமை மயக்க மென்றுணர்க, 'கடு' வென்பது, தனக்குரிய முதற் பொருளை யுணர்த்தாது சினைப்பொருளை யுணர்த் தலின். (35)

சொல்லதிகாரம், மூன்றாவது வேற்றுமை மயங்கியல் முற்றும்.

ஆகச் சூத்திரம். 119.

உ

# 4. விளி மரபு

120] விளியின் பொது இலக்கணம்

விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்று மியற்கைய வென்ப

என்பது சூத்திரம்.

இது, நிறுத்த முறையானே விளியுணர்த்தலினிவ் வோத்து விளிமரபென்னும் பெயர்த்தாயிற்று. இச் சூத்திரத்தான் விளியது பொதுவிலக்கணங் கூறுகின்றார்.

(இ-ள்) விளியெனப்படுப—விளியென்று சொல்லப் படுவன, கொள்ளும் பெயரொடு—தம்மை யேற்கும் பெயரொடு, தெளியத் தோன்று மியற்கைய வென்ப—விளங்கத்தோன்று மியல்பினை யுடைய வென்று கூறுவ ராசிரியரென்றவாறு.

ஈறு திரிதலு மீற்றய னீடலும் பிறிதுவந் தடைதலு மியல்பாதலு மென்னும் வேறுபாட்டாற் படுப வென் றார். கொள்ளும் பெயரெனவே கொள்ளாப் பெயரு முளவாயின. இயல்பாய் விளியேற்பனவுந் தெற்றென விளங்கு மென்றற்குத் தெளியத் தோன்று மென்றார். (1)

121] அப்பெயர்களைக் கூறுவல், எனல்

அவ்வே,
யிவ்வென வறிதற்கு மெய்பெறக் கிளப்ப.

இஃது, அப்பெயர்களைக் கூறுவ லென்கின்றது.

(இ-ள்) அவ்வே யிவ்வென வறிதற்கு—விளிகொள் ளும் பெயரும் விளிகொள்ளாப் பெயருமிவையென

மாணாக்க னுணர்தற் பொருட்டு, மெய்பெறக் கிளப்ப —பொருள்பெறவெடுத் தோதுவ ராசிரிய (ரதனால் யானுமம் முடிபே கூறுவலென்றவாறு). (2)

122] விளியேற்கும் உயர்திணைப் பெயர்கள்
அவைதாம்,
இ உ ஐ ஓ என்னு மிறுதி
யப்பா னான்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.

இது, உயர்திணைப் பெயருள் விளியேற்பன இவை யென்கின்றது.

(இ-ள்) அவைதாம் — கிளக்கப்படுவன வாகிய பெயர்தாம் எண்வகைய அவற்றுள், உயர்திணை மருங்கின் மெய்ப் பொருள் சுட்டிய விளிகொள் பெயரே - உயர்திணை யிடத்து மெய்ப்பொருளைக் கருதின விளி கொள்ளு முயிரீற்றுப் பெயர். இ. உ. ஐ. ஓ. என்னு மிறுதி யப்பால் நான்கே — இ உ ஐ ஓ என்னு மிறுதியை யுடைய வக்கூற்று நான்கு பெயருமே என்றவாறு,

'மெய்ப்பொரு' ளென்றதனா னஃறிணைப் பெயரன் மொழியா யுயர்திணைக்கண் வந்துழி யுயர்திணைப் பெயராய் விளியேற்றலும், அவ்விற்றஃறிணைப் பெயர் களு முயர்திணைப் பெயர்கள் போல விளியேற்றலுங் கொள்க.

(உ-ம்) 'சுடர்த்தொடீஇ கேளாய், (கலி)
எனவும்,
'தும்பீ' (குறுந்தொகை)
எனவும்,
சிறுமீன் கவுட்கொண்ட செந்துவி நாராய்
(ஐந்திணை யெழுபது)
எனவும்,

'கொன்றாய்' 'குருந்தே' 'கொடிமுல்லாய்' வாடினீர்
நின்றீ ரறிந்தேன் நெடுங்கணாள்-சென்றாளுக்கு'

எனவும் வரும். (3)

123] இகர ஐகார ஈறுகள் விளி ஏற்குமாறு

அவற்றுள்,
இ ஈ யாகும் ஐயா யாகும்

இது, இகர வீறு மைகார வீறும் விளியேற்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள் — முற்கூறிய நான்கீற்றுப் பெயருள், இ. ஈ. யாகும் — இகரவீற்றுப்பெய ரீகார மாயும், ஐயாயாகும்—ஐகார வீற்றுப்பெயர் ஆயாயு மீறு திரிந்து விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) நம்பி—நம்பீ!
நங்கை—நங்காய்!

எனவரும், (4)

124] ஓவும் உவ்வும் விளியேற்குமாறு.

ஓவு மூவ்வு மேயொடு சிவணும்.

இது, ஒழிந்தன விளியேற்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஓவு முவ்வு மேயொடு சிவணும்—ஓகார வீற்றுப் பெயரு முகரவீற்றுப் பெயரு மேகாரத்தோடு பொருந்திப் பிறிது வந்தடைதலாய் விளியேற்கு மென்ற வாறு,

(உ-ம்) கோ—கோவே!
வேந்து—வேந்தே! (5)

எனவரும.

125] மேற்கூறிய உகரம் குற்றிய லுகரம் எனல்

உகரந் தானே குற்றிய லுகரம்.

இது, ஐயம் அறுக்கின்றது.

(இ-ள்) உகரந்தானே குற்றிய லுகரம் - மேற்கூறப் பட்ட உகரமாவது குற்றிய லுகர மென்றவாறு.

திரு — திருவே யென குற்றிய லுகரமுஞ் சிறு பான்மை விளியேற்கும். (6)

126] ஏனையுயிர் உயர்திணையில் விளிஏலாமை.

ஏனை யுயிரே யுயர்திணை மருங்கிற்
றாம்விளி கொள்ளா வென்மனார் புலவர்.

இது, வேண்டாகூறி வேண்டியது முடிக்கின்றது.

(இ-ள்) ஏனையுயிரே — மேற்கூறப்பட்ட நான்கீறு மல்லா வுயிரீறு, உயர்திணை மருங்கிற் றாம்விளி கொள்ளா வென்மனார் புலவர்-உயர்திணைக்கண் விளி கொள்ளாவென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

இதற்குப் பயன், கணி—கணியே! கரி—கரியே! என முற்கூறிய வுயிர்கள் பிறவாறாயும் விளியேற்கு மென்றல்.

தாமென் றதனான், மகவென்றது மகவே யெனப் பிறிது வந்தும்,

'சான்றோ ரீன்ற தகரத் தகாமகா!'

வென வாகாரமாயும், ஆடூஉ வென்றது ஆடூஉ கூறா யென வியல்பாயும், ஆடூஉவே யெனப் பிறிது வந்தும் விளியேற்றல் கொள்க. (7)

127] இகர ஈற்று அளபெடைப் பெயர் விளியேற்குமாறு.

அளபெடை மிகூஉ மிகர விறுபெய
ரியற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.

இது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

(இ-ள்) அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்—அளபெடை தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கு மைந்தும் மாத்திரை பெற்று நிற்கு மிகரவீற்றுப் பெயர், இயற்கையவாகுஞ் செயற்கைய வென்ப—இ. ஈயாகாதியல்பாய் விளியேற்குஞ் செயற்கையை யுடையவென்று கூறுவ ராசிரியரென்றவாறு.

(உ-ம்) தொழீஇ இஇ

எனவரும் தொழீ இஇஇஇ என நான்கெழுத்து மைந்தெழுத்து மிட்டெழுதுப.

இகர வீற்றுப் பெயரெனவே நெட்டெழுத் தளபெடுத்ததன்று, குற்றெழுத்தே நின்று மாத்திரை பெற்றதென்றுணர்க. இது தொழில் செய்கின்றவளே யென்னும் பொருடந்து நிற்பதோர் சொல். (8)

128] முறைப்பெயரில் ஐயீறு ஆவாகவும் வருதல்,

முறைப் பெயர் மருங்கி னையெ னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே.

இது, எய்தியதன் மேற் சிறப்புவிதி.

(இ-ள்) முறைப்பெயர் மருங்கி னை யெனிறுதி—முறைப் பெயரிடத் தைகாரவீறு, ஆவொடு வருதற் குரியவு முளவே —ஆயாகாது ஆகாரத்தோடு வருதற் குரியனவு முள வென்றவாறு.

(உ-ம்) அன்னை—அன்னா!
அத்தை—அத்தா!என வரும்.

உம்மை மறுத்து நிற்றலி னன்னா யத்தா யென்றே வருமாயிற்று. (என வருதலே சிறப்பாயிற்று) இவை

விரவுப் பெயரேனு மீண் டுயர்திணைப் பெயரிடை வைத்தார். மேல் விரவுப்பெயரை யிவற்றோடு மாட்டெறிதலினம் மாட்டேற்றிற் கேற்ப விளியேற்பன வுயர்திணைப் பெயருள் (பெயர்களுள்)வேறின்மையான். (9)

129] அண்மை விளியியல்பாதல்.

அண்மைச் சொல்லே யியற்கை யாகும்.

இது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ-ள்) அண்மைச் சொல்லே யியற்கை யாகும்— நான் கீற் றண்மைக்கண் விளியேற்குஞ் சொற்க ளியற்கையாய் விளியேற்கு மென்றவாறு.

நம்பி!வாழி
நங்கை!வாழி
வேந்து!வாழி
கோ!வாழி

எனவரும். (10)

130] புள்ளி ஈற்றுள் விளி ஏற்பன.

னரலள வென்னும் அந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே.

இது, புள்ளி ஈற்றுள் விளியேற்பன கூறுகின்றது.

(இ-ள்) புள்ளி யிறுதி விளிகொள் பெயர் — புள்ளியீற்றினையுடைய விளித்தலைக் கொள்ளு முயர்திணைப் பெயர், ன, ர, ல, ள, வென்னும் அந்நான்கென்ப — ன, ர, ல, ள, வென்று கூறப்படும் அந்நான்கீற்றுப் பெயருமென்று கூறுவராசிரிய ரென்றவாறு. (11)

131] புள்ளிஈற்றுள் விளி ஏலாதன
ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா

இது, வேண்டா கூறி வேண்டியது முடிக்கின்றது.

(இ-ள்) ஏனைப்புள்ளி யீறுவிளி கொள்ளா—அந் நான்கு மல்லாத புள்ளியீற்றுப் பெயர் விளித்தலைக் கொள்ளாவென்றவாறு.

இங்ஙனம் வேண்டா கூறியதனாற் பயன் மேற் கூறுகின்ற புள்ளி யீறுகள் பிறவாற்றான் விளிகொள்வன வுளவென்பதூஉம், எடுத்தோதாப் புள்ளி யீறுகளிலும் விளியேற்பன வுள வென்பதூஉ முணர்த்துதலாம்.

முறைமைச் சுட்டா 'மகன்' மகனென்பன,
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே
யகவன் மகனே யகவன் மகனே.

எனவேகாரம் பெற்றுவருதலும், (அகவல்மகள், முறைமை சுட்டியது அன்று—அகவல்—ஓசை)

வெண்பா.

கூந்தன் மாலூர்ந்து குடமாடிக் கோவலனாய்ப் [தாய்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால்-யாங்கொளித்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு.

என, அன்னீறு ஏகாரம் பெற்று வருதலும்,

நம்பன் சிறிதே இடைதந் திது கேட்க.

என அன் ஈறு இயல்பாய் வருதலும்,

நம்பான்! எம்பெருமா!

என அன் ஈறு ஈற்று அயல் நீண்டு வருதலும்,

ஆன் ஈறு.

வாயிலோயே! வாயிலோயே!

என ஏகாரம் பெற்று வருதலும், ரகரவீறு
மாந்தர் கூறீர், என இயல்பாயும்,

இறைவரே.

என ஏகாரம் பெற்று வருதலும், லகார வீறு,

கானல்! கூறாய்

குரிசில்! கூறாய்

என வியல்பாயும்—

திருமாலே! தாழ் குழலே!'

என வேகாரம் பெற்றும்வருதலும், ளகார வீறு,

கடவுள்! வாழி

என வியல்பாயும்.

அடிகள்—அடிகளே (அடிகேள்)

எனவீற்றய லகர மேகாரமாய் வருதலு மிவை பிறவாறாய் வருதலுங் கொள்க.

இனி யெடுத் தோதாதனவற்றுள் ஆகார வீறு,

துறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ளவெல்லாநீ

என வேண்டி (ஏடி) யென்றும்

'எல்லாநீ

முன்னத் தானொன்று குறித்தாய் போற் காட்டினை'

யென வேடா வென்று மிருபாற்கும் பொதுவாய்

விளி யேற்றலும் உன் ஈறு (முன்னீறு)

தம்முன்—தம்முனே!

யென வேகாரம் பெற்றும்,

நம்முன்—நம்முனா!

யென வாகாரம் பெற்றும், இர் ஈறு,

பெண்டிர்—பெண்டிரோ!

என வோகாரம் பெற்றும்

என்னை கேளீர்!

என ஈர் பெற்றும்.

கேளிர்! வாழியோ கேளிர் நாளும்

என வியல்பாயும் யகரவீறு

விளங்குமணிக் கொடும்பூ ணாஅய்

எனவியல்பாயுமாயே! யென வேகாரம் பெற்று வருவன வுங் கொள்க.

இனி

கிழவோள் பிறள்குண மிவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கு முரிய
ளென்றும்.
கிழவோட் குவம மீரிடத் துரித்தே
கிழவோற் காயி னிடம்வரை வின்றே

யென்றும் பிறாண்டு முடம்பொடு புணர்த்துக் கூறியவோன் என்னு மீறு, தொழிலிற் கூறு மானெனி றுதி போல யகரமாய் விளி யேற்றலுங் கொள்க.

அது,

'பெருங்கல் வைப்பி னாடுகிழ வோயே!
மா அ யோய்!

என்றார் போலச் செய்யுட்களுள்ளும் வருவனவுங் கொள்க. ஓகாரமடுத்த ளகாரவிறு விளியேற்கு மேனு முணர்க.

ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணி
யென்றாற் போலு மண்மை விளியு மிதனாற்
கொள்க. (12)

132] னகார ஈறு விளி ஏற்குமாறு.

அவற்றுள்

அன்னென் னிறுதி யாவா கும்மே.

இது, முறையானே னகார விறு விளி யேற்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள் அன்னென்னிறுதி யாவா கும்மே-அந்நான் கீற்றுப் பெயருளன்னென்னும் னகர வீற்றுப் பெயர் ஆவாய் விளி யேற்கு மென்றவாறு.

(உ-ம்) துறைவன்—துறைவா!
ஊரன்—ஊரா!
சோழன்—சோழா!
சேர்ப்பன்—சேர்ப்பா

எனவரும். (13)

133] னகார விறு அண்மை விளியில் அகரம் ஆதல்.

அண்மைச் சொல்லிற் ககர மாகும்.

இது, எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தது.

(இ-ள்) அண்மைச் சொல்லிற் ககரமாகும்—அண்மை விளிக்கணன்னீறு அகரமாகு மென்றவாறு.

(உ-ம்) துறைவன் — துறைவ!
ஊரன் — ஊர!
சோழன் — சோழ!

எனவரும். (14)

134] ஆன் இறுதி இயல்பாதல்

ஆனெ னிறுதி யியற்கை யாகும்.

இது, ஆனென்பது விளியேற்குமாறு கூறுகின்றது.

(இ-) ஆனெனிறுதி யியற்கையாகும்-ஆனென்னும் னகர வீற்றுப் பெய ரியல்பாய் விளியேற்கு மென்றவாறு.

சேரமான்! மலையமான்! என்க் கூறுதற் கண்ணு மவ்வாறே நிற்கும். (15)

135] ஆன் ஈற்று வினையாலணையும் பெயர் விளி ஏற்குமாறு

தொழிலிற் கூறு மானெ னிறுதி.
யாயா கும்மே விளிவயி னான.

இது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ-ள்) தொழிலிற் கூறு மானெனிறுதி விளிவயி னான —தொழிலினா னொருபொருளறியச் சொல்லு மானீற்றுப் பெயர் விளி யேற்குமிடத்து, ஆய் ஆகும்—ஆய் ஆம் என்றவாறு.

(உ-ம்) வந்தான் — வந்தாய்!
சென்றான் — சென்றாய்!

எனவரும்.

தொழிலி னென்றதனாற் கழலா யிடையா யெனக் குறிப்பினுங் கொள்க. (16)

136] ஆன் ஈற்றுப் பண்புப்பெயர் விளிஏற்குமாறு
பண்புகொள் பெயரு மதனோ ரற்றே.

இதுவுமது.

(இ-ள்) பண்புகொள் பெயரு மதனோ ரற்றே — ஆனீற்றுப் பண்பைக் கொண்டு நின்ற பெயரும் அவ்விற்றுத் தொழிற் பெயர்போல வாயாய் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) கரியான் — கரியாய்!
தீயான் — தீயாய்

எனவரும். (17)

137] ஆன் ஈற்று அளபெடைப் பெயர் விளி ஏற்குமாறு,
அளபெடைப் பெயரே யளபெடை யியல.

இது, எய்தாத தெய்து வித்தது.

(இ-ள்) அளபெடைப் பெயரே யளபெடை யியல— ஆனீற் றளபெடைப் பெயர் இகரவீற்று அளபெடை பெயர் போல மூன்று மாத்திரையி னீண்டு இயல்பாய் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) உழா அ அன்!
கிழா அ அன்!

எனவரும்.

இது, அளபெடுத்தலி னானீற்றி னடங்காதாயிற்று.
(18)

133] னகார ஈற்று முறைப் பெயர் விளி ஏற்குமாறு.
முறைப்பெயர்க்கிளவியே யொடு வருமே.

இதுவுமது.

(இ-ள்) முறைப்பெயர்க்கிளவி யேயொடு வருமே— னகார வீற்று முறைப் பெய ரேகாரம் பெற்று விளி யேற்கு மென்றவாறு.

உ-ம்) மகன்—மகனே!
மருமகன்—மருமகனே!

எனவரும். (19)

ஐகார வீற்று முறைப் பெயர்க்குக் கூறிய உரையை யீண்டுங் கூறிக் கொள்க.

139] னகார ஈற்றுள் விளி ஏலாதன

தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவென் பெயரு
மன்றி யனைத்தும் விளிகோ ளிலவே.

இது, னகார வீற்றுள் விளியேலாதன கூறுகின்றது.

(இ-ள்) தானென் பெயருஞ் சுட்டு முதற் பெயரும் யானென் பெயரும் வினாவென் பெயரு மன்றி யனைத்தும் விளிகோளிலவே—தானென்னு மானீற்று விரவுப் பெயரும் அவனிவனுவ னென்னு மன்னீற்றுச் சுட்டு முதற் பெயரும் யானென்னும், ஆன் ஈற்றுப்பெயரும், யாவனென்னும் வினாப் பொருளை யுணர்த்து மன்னீற் றுப் பெயருமாகிய வவ்வனைத்தும் னகாரவீறே யாயி னும் விளி கொள்ளா வென்றவாறு. (20)

140] ரகார வீற்றுப் பெயர் விளியேற்குமாறு.
ஆரு மருவு மீரொடு சிவணும்.

இது, முறையானே ரகார விறுதி விளி (விறு) யேற்கு மாறு கூறுகின்றது

(இ-ள்) ஆரு மருவு மீரொடு சிவணும் — ரகார விற்றுப் பெயருள் அர், ஆர் எனநின்ற விரண்டீற்றுப் பெயரு மீரா யீறுதிரிந்து விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) பார்ப்பார்—பார்ப்பீர்
கூத்தர்—கூத்தீர்

எனவரும். (21)

**141]** ரகார ஈற்று வினையாலணையும் பெயர் விளி யேற்குமாறு.

தொழிற்பெய ராயி னேகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே.

இது, எய்தியதின்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) தொழிற்பெயராயின்—மேற்கூறிய விரண் டீறுந் தொழிற் பெயர்க்கீறாய் வருமாயின், ஏகாரம் வருதலும் வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே — முற்கூறிய வீரோ டேகாரம் வருதலுங் குற்றமின்றென்று கூறுவர் விளங்கிய வறிவினை யுடையோ ரென்றவாறு.

(உ-ம்) வந்தார்—வந்தீரே!
சென்றார்—சென்றீரே!

எனவரும். அர் ஈறு வந்துழிக் காண்க.

வழுக்கின் றென்றதனாற் றொழிற் பெயரல்லா வாரீறு களு மீரோ டேகாரம் பெறுதல் கொள்க.

(உ-ம்) நம்பியார்—நம்பியீரே.
கணியார்—கணியீரே.

எனவரும்.

இன்னு மிதனானே அர் ஈறு.

வந்தவரே! சென்றவரே!

என ஈர் பெறா தேகாரம் பெற்று வருதலுஞ் சிறுபான்மை கொள்க. (22)

142) ரகார ஈற்றுப் பண்புகொள்பெயர் விளி ஏற்குமாறு

பண்பு கொள் பெயரு மதனோ ரற்றே.

இது, எய்தியதன் மேற் சிறப்புவிதி வகுத்தது.

(இ-ள்) பண்புகொள் பெயரு மதனோ ரற்றே—அவ்விரண் டீற்றுப் பண்புகொள் பெயரு மவ்வீற்றுத் தொழிற் பெயர் போல வீரொடு சிவணியுஞ், சிறுபான்மை யீரோ டேகாரம் பெற்றும் ஈர் பெறாது ஏகாரம் பெற்றும் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) கரியர்—கரியீர்

இளையார்—இளையீர்

எனவும்,

கரியீரே இளையீரே

எனவும்,

கரியவரே இளையவரே

எனவும் வரும்.

இனி, தன்னின முடித்த லென்பதனான் சீவகசாமி யென்னு மிருபெயரெட்டுப் பண்புத் தொகை, சீவகசாமி யாரென வாரீறாய்ச் சீவகசாமி யீரே யென வீரோ டேகாரம் பெறுதல் கொள்க (23)

143) ரகார ஈற்று அளபெடைப் பெயர் விளிஏற்குமாறு

அளபெடைப் பெயரே யளபெடை யியல.

இது, எய்தாத தெய்து வித்தது.

(இ-ள்) அளபெடைப் பெயரே யளபெடையியல — ரகாரவிற் றளபெடைப் பெயர் ணகார வீற்றளபெடைப்

பெயர் போல மாத்திரை மிக்கியல்பாய் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம) சிறாஅஅர்! துடியர்! பாடுவன் மகாஅஅர்!
என வரும் அவ்வளபெடைகள் செய்யுளுட் குறைந்து வந்தன, சந்த வின்ப நோக்கி விகாரத்தாற் குறைந்து வந்தன வெனக் கொள்க. (24)

144] ரகார ஈற்றுள் விளிஏலாத பெயர்கள்
சுட்டு முதற் பெயரே முற்கிளந் தன்ன.
இது, விளி ஏலாதன கூறுகின்றது.

(இ-ள்) சுட்டு முதற்பெயரே முற் கிளந்தன்ன— அவர் இவர் உவர் என்னும் ரகார வீற்றுச்சுட்டு முதற் பெயர் னகார வீற்றுச் சுட்டு முதற்பெயர்போல விளி கொள்ளா வென்றவாறு. (25)

145] இதுவுமது.

நும்மின் றிரிபெயர் வினாவின் பெயரென்
றம்முறை யிரண்டு மவற்றியல் பியலும்.
இதுவுமது.

(இ-ள்) நும்மின் றிரி பெயர்—நும்மென்னுஞ் சொல் லினது திரிபாகிய நீயி ரென்னுஞ் சொல்லும், வினாவின் பெயர்—வினாப் பொருளை யுணர நின்ற யாவ ரென்னுஞ் சொல்லும், என் றம்முறையிரண்டு மவற்றியல் பியலும்-என்று சொல்லப்பட்ட வம்முறைமையினை யுடைய விரண்டு சொல்லு முற்கூறிய சுட்டுப் பெயர் போல விளி கொள்ளா வென்றவாறு.

“ஏனைப் புள்ளி” யென்பதனுள் ‘இர்’ ஈறு கோடலி னீண்டு நீயி’ ரென்பதனை யெடுத்தோதி விளக்கினர். (26)

**146]** லகார ளகார ஈற்றுப் பெயர்கள் விளி ஏற்குமாறு.

எஞ்சிய விரண்டி னிறுதில் பெயரே
நின்ற வீற்றய னீட்டம் வேண்டும்.

இது, லகார ளகார விறு விளி யேற்குமாறு கூறு கின்றது.

(இ-ள்) எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே உணர்த் தாது நின்ற ஏகார ளகார மென்னு மிரண்டு புள்ளியை யிறுதியாக வுடைய பெயர், ஈற்றயனின்ற நீட்டம் வேண்டும்—ஈற்றெழுத்துக் கயனின்ற வெழுத்து நீண்டு விளியேற்றல் வேண்டு மென்றவாறு.

(உ-ம் குரிசில்—குரிசீல்!
ஏந்தல்—ஏந்தால்!
தோன்றல்—தோன்றால்!
குழையள்—குழையாள்!
அணியள்—அணியாள்!
மக்கள்—மக்காள்!

எனவரும். (27)

**147]** இதுவுமது,

அயனெடி தாயி னியற்கை யாகும்

இது, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது

(இ-ள்) அயனெடி தாயி னியற்கையாகும்—அவ் விரண்டீற்றுப் பெயரு மீற்றய லெழுத்து நெட்டெழுத் தாயினியல் பாய் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்) ஆண்பால்! பெண்பால்!
எமாள்! கோமாள்! கடியாள்!

எனவரும். நமர்காள் என்பது. நமரங்கா ளறிமி 'ளெனப் பெயர்த்திரிசொல் லாய்த் திரிந்து நின்று விளியேற்றலுங கொள்க. (28)

148] ளகார ஈற்று வினைப் பெயரும் பண்புகொள்
பெயரும் ஆய் ஆதல்

வினையினும் பண்பினும்
நினையத் தோன்று மாளெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான.

இஃது. அவ்விரண்டனுள் ளகார வீற்றிற் கெய்தியது.

விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ-ள்) வினையினும் பண்பினும் நினையத் தோன்று மாளெனிறுதி (ஆள் என் இறுதி) — வினைச் சொல்லின் கண்ணும் பண்புச் சொல்லின்கண்ணு மாராயத் தோன்று மாளீற்றுப் பெயர் (ஆள் ஈற்றுப்பெயர்), விளி வயினான ஆயாகும்மே — விளிக்கு மிடத்தியல்பாகா தாயாய் விளி யேற்கு மென்றவாறு.

(உ-ம்) உண்டாள் உண்டாய்
கரியாள் கரியாய்

எனவரும்.

விளிவயினான வென்பதனை யாண்டுங் கூட்டுக. (29)

149] ளகார ஈற்று முறைப்பெயர் விளி ஏற்குமாறு
முறைப்பெயர்க் கிளவி முறைப்பெய ரியல.

இது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ-ள்) முறைப் பெயர்க்கிளவி முறைப்பெயரியல— ளகார வீற்று முறைப்பெயர் ணகார வீற்று முறைப் பெயர் போல ஏகாரம்பெற்று விளி யேற்கு மென்றவாறு.

(உ-ம்) மகள் — மகளே!
மருமகள் — மருமகளே!

எனவரும்.

150] ளகார ஈற்றுப் பெயருள் விளி ஏலாதன.

சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இது, ளகார வீற்றுள் விளி யேலாதன கூறுகின்றது.

(இ-ள்) சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும் முற்கிளந்தன்ன வென்மனார் புலவர்—அவ ளிவ ளுவ ளென்னும் ளகார வீற்றுச் சுட்டுமுதற் பெயரும் யாவ ளென்னும் வினாப் பெயரு முற்கூறிய சுட்டு முதற் பெயரும் வினாப் பெயரும் போல விளி கொள்ளா வென்றவாறு. (31)

151] லள ஈற்று அளபெடைப் பெயர் விளி ஏற்குமாறு.

அளபெடைப் பெயரே யளபெடை யியல.

இது, எய்தாததெய்து வித்தது.

(இ-ள்) அளபெடைப் பெயரே யளபெடை யியல—லகார ளகார வீற்றளபெடைப் பெயர் முற்கூறிய னகார வீற்றளப்பெடைப் பெயர் போல வளவு நீண் டியல்பாய் விளியேற்கு மென்றவாறு.

(உ-ம்)

"மாஅ அனின்னிறம் போன் மழையிருட் பட்டதே
கோஒஒள்! கொளக்கோடு கொண்டு!!"

என்பதனுள் மாஅஅல் கோஒஒள் என வந்தவாறு காண்க. (32)

152] விரவுப் பெயர் விளி ஏற்குமாறு.

கிளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை.

இது, விரவுப்பெயர் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) கிளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்—மேலுயர் திணைக்கண் விளியேற்கு மென்ற வெட்டீற்றினையு

முடைய வுயர்திணையோ டஃறிணை விரவும் விரவுப் பெயர், விளம்பிய நெறிய விளிக்குங்காலை— அவ்வீறுகளினெடுத் தோதிய முறைமையினை யுடைய விளிக்கு மிடத் தென்றவாறு.

(உ-ம்) சாத்தீ! பூண்டே! தந்தாய்!

எனவும்.

சாத்தா! கூந்தால்! மக்காள்!

எனவும் வரும்,

சாத்தி! பூண்டு! தந்தை! சாத்த!

என அண்மை விளியுங் கொள்க.

இனி விளிக்குங்காலை யென்றதனான்,

பிணா! வாராய்
அழிதூ! வாராய்

யென வெடுத் தோதாத வாகார வூகார வீற்று வீரவுப் பெயரியல்பாய் விளியேற்றலும்,

சாத்தன்! வாராய்
மகள்! வாராய்
தூங்கல்! வாராய்

எனவெடுத் தோதிய வீறுகள், கூறியவாறன்றி, யியல் பாய் விளியேற்றலும், இப் பெயர்கள் ஏகாரம் பெற்று விளியேற்றலுங் கொள்க.

உயர்திணையோ டஃறிணை விரவுமாறு

'அஃறிணை விரவுப்பெய ரியல்புமா றுளவே'

யென்புழிக் கூறினாம். (33)

153] அஃறிணைப் பெயர் விளி ஏற்குமாறு,

புள்ளியு முயிரு மிறுதி யாகிய
வஃறிணை மருங்கி னெல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉங் காலந் தோன்றிற்
றெளிநிலை யுடைய வேகாரம் வரலே.

இஃது, அஃறிணைப் பெயர் விளியேற்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) புள்ளியு முயிரு மிறுதியாகிய— புள்ளியீறு முயிரீறுமாகிய, அஃறிணை மருங்கி னெல்லாப்பெயரும்— அஃறிணை யிடத்து வருமெல்லாப் பெயர்களும், விளி நிலை பெறூஉங் காலந் தோன்றின் — விளி கொள்ளுங் காலந் தோன்றில், ஏகாரம் வரல் தெளிநிலை யுடைய— ஏகாரம் பெறுதலைத் தெற்றென வுடைய வென்றவாறு.

(உ-ம்) மரம் — மரமே!
அணில் — அணிலே!
புலி — புலியே!
கிளி — கிளியே!

எனவரும்.

தெளிநிலை யுடைய வென்றதனான்

'வருந்தினை வாழியென் னெஞ்சம்!'
'கருங்கால் வெண் குரு' கொன்று கேண்மதி
திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயால்!

என்றாற் போலப் பிறவாற்றான் விளி யேற்பனவுங் கொள்க

இனி யுயர்திணைப் பெயரு ளேகாரம் பெறாமல் விளி யேற்று நின்றனவற்றையும் வழக்குச் சொல்லாற் றெரியப் பொருள்கூற வேண்டியக்கா லிவ்வேகாரமே விரித்துக்கூற வேண்டுதலு மிதனாற் கொள்க.

'தொண்டை யோர் மருக!
மள்ளர் மள்ள! மறவர் மறவ
செல்வர் செல்வ! செருமேம் படுந!
பைம்பூட் சேஎய்!

என்றாற் போல்வன ஏகாரத்தாற் பொருள் கூறு மாறுணர்க.

*விளிநிலை பொறூஉங் காலந் தோன்றி,* னென்றார்,

முன்னிலை யாக்கலுஞ் சொல்வழிப் படுதலும் வேண் டுழியே விளியேற்கு மென்றற்கு (34)

**154]** விளி ஏற்கும் பெயர்கள் செய்மையில் அளபிறந்து ஒலித்தல்.

*உளவெனப் பட்ட வெல்லாப் பெயரு*
*மளபிறந் தனவே விளிக்குங் காலைச்*
*சேய்மையி னிசைக்கும் வழக்கத் தான.*

இது, முற்கூறிய மூவகைப் பெயர்க்கு மெய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

*(இ-ள்)* **உளவெனப்பட்ட வெல்லாப் பெயரும்**— இருதிணைக் கண்ணும் விளியேற்பனவாகச் சொல்லப் பட்ட வெல்லாப் பெயரும். **விளிக்குங்காலை யளபி றந்தன** -விளிக்கு மிடத்துத் தத்த மாத்திரையி னிறந்தி சைத்தனவாம், **சேய் மையினிசைக்கும் வழக்கத்தான**— சேய்மைக்க ணொலிக்கும் வழக்கின்க ணென்றவாறு.

*(உ-ம்) நம்பீஇ! சாத்தாஅ!*
எனவரும்.
*சேரமாஅன்! மலையமாஅன்!*
என்பன அளபிறந் திசைக்கும் வழி யியல்பன்றி யீற்றய னீண்டனவாம். (35)

**155]** அம்ம என்னும் இடைச்சொல் விளி ஏற்குமாறு

*அம்ம வென்னு மசைச்சொ னீட்ட*
*மம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்*
*விளியொடு கொள்ப தெளியு மோரே*

இஃது, 'அம்ம' வென்னு மிடைச்சொல் விளியேற்கு மாறு கூறுகின்றது.

(இ-ள்) அம்ம வென்னு மசைச்சொன்னீட்டம்— அம்ம வென்று கூறப்படு முரைப் பொருட் கிளவி யினது நீட்டமாகிய, 'அம்மா' வென்னுஞ் சொல், அம்முறைப் பெயரொடு சிவணாதயினும்—முற்கூறிய விளியேற்கு முறைமையினையுடைய பெயர்களோடு பொருந்தா திடைச்சொல்லாய் நிற்பினும், விளியொடு கொள்ப தெளியுமோரே—விளியேற்கும் பெயர்களோ டிதனை யும் விளி நிலைமைத்தாகக் கொள்வர் தெளிந்த வறிவினை யுடையோ ரென்றவாறு.

(உ-ம்) 'அம்மா—கொற்றா'

எனவரும்.

'கொற்றா'! வென்ப தெதிர்முகமாக்கு மாயினுங் கேள்ா யென்பதூஉ மதனோடு கூடி யெதிர்முகமாக்கி நின்றவாறு காண்க.

'அம்ம கேட்பிக்கும்'

எனவும்,

'அம்ம வென்னு முரைப்பொருட்கிளவியும்,

எனவும்,

'உரைப் பொருட்கிளவி நீட்டமும் வரையார்'

எனவும் ஆசிரிய ரிதனைப் பொருடந்து நிற்குமென்றே சூத்திரஞ் செய்தலின் ஈண்டசைச் சொனீட்ட மென்றதற்கு

'யாவென் சினைமிசை யுரையசைக் கிளவிக்கு'

என்றாற் போல, வெதிர் முகமாக்குஞ் சொல்லி னீட்டம் என்று பொருளுரைத்துக் கொள்க. (36)

156] உயர்திணைப் பெயருள் விளி ஏலாதன

**தநநு எ என வவைமுத லாகித்**
**தன்மை குறித்த னரளவெ னிறுதியு**
**மன்ன பிறவும் பெயர்நிலை வரினே**
**யின்மை வேண்டும் விளியொடு கொளலே.**

இஃது, உயர்திணைப் பெயருள்விளி யேலாதன கூறு கின்றது.

(இ-ள்) தநநுஎ என அவை முதலாகி—தநநுவென்னு முயிர் மெய்யையும் எ என்னு முயிரையும் முதலாக வுடையவாய், தன்மை குறித்த னரளவெ னிறுதியும்—ஒருவனது கிழமைப் பொருண்மையைக் குறித்து நின்ற னரள வென்னு மூன்று புள்ளியை யிறுதியாக வுடைய சொல்லும், அன்ன பிறவும் பெயர்நிலை வரினே—அவை போல்வன பிறவுமாகிய பெயராகிய நிலைமையை யுடைய சொற்கள் வரின், விளியொடு கொளல் இன்மை வேண்டும் மேல் விளி யேற்கு மென்னப்பட்டபெயரோடு கோடலை யில்லாமை வேண்டு மாசிரியன் என்றவாறு.

(உ-ம்) தமன், தமர், தமள்
நமன், நமர், நமள்
நுமன், நுமர், நுமள்
எமன், எமர், எமள் எனவும்,
தம்மான்! தம்மார்! தம்மாள்
நம்மான்! நம்மார்! நம்மாள்
நும்மான்! நும்மாள்! நும்மார்
எம்மான்! எம்மார்! எம்மாள்

எனவும் வரும்.

'பிறவு' மென்றதனான்,
மற்றையான், மற்றையார், மற்றையாள்
பிறன், பிறர், பிறள், என வரும்.
'வேண்டு' மென்றதனான்,
எம்பீ!

'எம்மானே!' தோன்றினா யென்னை யொளித்தியோ! வென்றாற் போலச் சிறுபான்மை விளியேற்பனவுந் 'தமர்' முதலியன கள்ளென்னு மிடைச் சொல்லோடு கூடிய வழி, ளகார வீறுபோல வீற்றய னீண்டு,தமர்காள்! நமர்காள்! எனவும், நமரங்கா ளெனப் பெயர்த்திரி சொல்லாய்த் திரிந்து நின்று விளியேற்பனவுங் கொள்க.' 'எம்பி' யென்னுங் கிளை முதற் பெயரைத் தன்னின முடித்தலாற் கொள்க. (37)

நாகான்வதுவிளி மரமும்புற்று.

ஆக இயல், நான்கிற்கும் சூத்திரம் 156.

௨

# 5. பெயர் இயல்.

157] நால்வகைச் சொற்கும் பொது இலக்கணம்.

எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே.
என்பது சூத்திரம்.

இவ்வோத்துப் பெயர்க்கிலக்கண முணர்த்தினமை யாற் பெயரியலென்னும் பெயர்த்தாயிற்று. இது முதலைந்து சூத்திரமும் பொது விலக்கணங் கூறுதலின், வேற்றுமை யிலக் கணத்தைச் சேர முன்வைத்தார். இச் சூத்திரம், நால்வகைச் சொற்கும் பொது விலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே — பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லு மிடைச் சொல்லு முரிச் சொல்லுமாகிய வெல்லாச் சொல்லும் பொருளுணர்த்துதலைக் கருதியே நிற்கும், பொருளுணர்த்து தலைக் கருதாது நிற்பன வில்லை யென்றவாறு.

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே,'

யென்றது,

இவ்வாள் வெட்டுதலைக் கருதியே யிருக்கும்.

என்றாற்போலக் கருவி கருத்தாவாய் நின்றது.

'ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே.'

யென்புழி, யிருதிணைப் பொருளையுஞ் சொற்க ளுணர்த்து மென்பதன்றித் தமிழ்ச் சொல் லெல்லா மொருதலையாகப் பொருளுணர்த்து மென்னுந் துணிபு விதி யாண்டின்மையின் இச் சூத்திரங் கூறினார்.

தாஞ் சார்ந்த சொற்களின் பொருளை யுணர்த்தியு மச் சொற்களை யசைத்தும் நிற்றலின், அசை நிலையும் பொருள் குறித்தனவே யாம்.

சொற்க ளோசை நிறைந்து நின்றே பொருளு ணர்த்த வேண்டுதலி, னிசை நிறையும் பொருளுணர்த் திற்றேயாம்.

முயற் கோடு, பொய்ப் பொருள் குறித்ததாம், இல்லையென வருதலின். (1)

153] சொல், தன்னையும் பொருளையு முணர்த்தல்,

பொருண்மை தெரிதலுஞ் சொன்மை தெரிதலுஞ்
சொல்லி னாகு மென்மனார் புலவர்.

இதுவு, மச்சொற்கள் பொருளுணர்த்து மாறு கூறுகின்றது.

(இ-ள்) பொருண்மை தெரிதலும்—சொல்லின் வே றாகிய பொருட்டன்மை யறியப்படுதலும், சொன்மை தெரிதலும் - பொருட்டன்மை யறியப்படாது அச சொற் றன்மை யறியப் படுதலு மென்றிரண்டுஞ், சொல்லி னாகு மென்மனார் புலவர்—சொல்லா னாமென்று சொல்லுவர் புலவரென்ற வாறு.

(உ-ம்) சாத்தன் வந்தான்,
பண்டு காடுமன்
உறுகால்

இவை பொருட்டன்மை தெரிந்தன.

'செய்தெ னெச்சம்'
'தஞ்சக் கிளவி,
வேறென் கிளவி,
'செய்கென் கிளவி'
'கடியென் கிளவி'

இவை சொற்றன்மை தெரிந்தன, அச்சொற் றன்னையே யறியப் படுதலின்.

'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப'

என்றாற் போல்வன, பெயர்ச் சொல்லை யுணர்த்தலிற், றன்மை தெரிதலு, முருபேற்றுழிச் செயப்படு பொருண் முதலிய பொருள்களை யுணர்த்தலிற் பொருட்டன்மை தெரிதலு முடனின்றனவாம். பிறவு மிவ்வா றுடன் வருவன வுணர்ந்து கொள்க. (2)

**159]** சொல் இருவகையால் பொருளுணர்த்தல்

தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலு
மிருபாற் றென்ப பொருண்மை நிலையே.

இதுவுமது.

(இ-ள்) பொருண்மை நிலையே—மேற் கூறப்பட்ட பொருட்டன்மை தெரிதல், தெரிபு வேறு நிலையலும்—சொன்மை மாத்திரத்தான் விளங்கி வேறுபட நிற்றலும், குறிப்பிற் றோன்றலும்— சொன்மை மாத்திரத்தாற் றோன்றாது சொல்லோடு கூடிய குறிப்பாற் றோன்றுதலுமாகிய, இருபாற் றென்ப— இரண்டு கூற்றை யுடைத்தென்று கூறுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) அவன், இவன், உவன்
வந்தான், சென்றான்.

இவை தெரிந்தன.

ஒருவர் வந்தார்.

என்றாற் போல்வனவு மாகுபெயராய் வருவனவுங் குறிப்பிற் றோன்றலாம்.

சேனாவரையர் காட்டிய
'இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து' (திருக்குறள்)
என்னு முதாரணஞ் செய்யுளாதலிற் செய்யுளியலிற்
சொல்லொடுங் குறிப்போடும் முடிபுகொ ளியற்கை
புல்லிய கிளவி யெச்ச மாகும்.

என்னுஞ் சூத்திரத்து ளாசிரியர் குறிப்பெச்ச மெனக் கூறியவாறு காண்க. (3)

160] சொற்களின் பாகுபாடு.

சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப வறிந்திசி னோரே.

இஃது அந்நால்வகைச் சொல்லினுட் சிறந்த வற்றிற்குப் பெயரும் முறையுந் தொகையு முணர்த்துகின்றது.

(இ-ள்) சொல்லெனப்படுப - சொல்லென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன, பெயரே வினையென்றாயிரண்டென்ப வறிந்திசினோரே - பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லு மெனவவ் விரண்டென்று கூறுவ ரறிந்தோ ரென்றவாறு.

பொருளும் பொருளது புடைபெயர்ச்சியு மாகிய முறைமை பற்றிப் பெயரை முற்கூறினார். (4)

161] இடைச்சொல்லும் உரிச்சொல்லும்.

இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப.

இஃது, இறந்தது காத்தது.

(இ-ள்) இடைச் சொற் கிளவியு முரிச்சொற் கிளவியும்—இடைச்சொல்லாகிய சொல்லு முரிச்சொல்லாகிய சொல்லும், அவற்று வழி மருங்கிற் றொன்று மென்ப—பெயர்வினைகளது தாந் தோன்றுதற் கிடமாகிய விடத்தே தோன்றுமென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

தாந் தோன்றுதற் கிடமாவன, அவன், அவள், உண்டான் உண்டாள், துவைத்தல், துவைக்கும் என்றார் போல்வன.

தாந் தோன்றுதற் கிடமல்லாதன, மரம், மான் என்றாற் போலும் பெயரும், (போல்வனவாகிய பெயரும்) உண், தின் என்றாற் போலு முதனிலைப் பெயர் தாமே நிற்பனவு மென்றுணர்க. 5

162] பெயர்ச் சொற்கள்.

அவற்றுட்,
பெயரெனப் படுபவை தெரியுங் காலை
யுயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
*மம்மூ வுருபின தோன்ற லாறே.

இது, நிறுத்த முறையானே பெயர்ச் சொற்குப் பெயரு முறையுந் தொகையுங் கூறுகின்றது

(இ-ள்) அவற்றுள்—மேற்கூறப்பட்ட நான்கு சொல்லுள்ளும், பெயரெனப் படுபவை தெரியுங்காலை—பெயர்ச் சொல்லென்று சொல்லப் படுவனவற்றை யாராயுங் காலை, தோன்றலாறே—அவை தோன்று நெறிக்கண். உயர்திணைக் குரிமையும்—உயர்திணைக் குரிமை யுடைமையும், அஃறிணைக் குரிமையும்—அஃறிணைக் குரிமை யுடைமையும், ஆயிரு திணைக்கு மோரன்ன வுரிமையும்-அவ்விருதிணைக்கு மொத்த வுரிமை யுடைமையும், அம்மூவுருபின அம்மூன்று வேறுபாட்டையு முடையவா மென்றவாறு.

'ஓரன்ன வுரிமைய' வென்றதற் கொரு சொல்லுதற் கண்ணே யிரண்டினையு முணர்த்தா வென்றுணர்க. (6)

* அம்மூவுருபின். (என்பது பாடம்)

163] பெயர்க் கண்ணதோர் இலக்கணம்.

இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கு
முரியவை யுரிய பெயர்வயி னான.

இதுவும், பெயர்க் கண்ணதோ ரிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) பெயர் வயினான—ஒருபாற் பெயரிடத்து முடிபாக வந்த வினைகள், இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கும்—இருதிணையி னின்றும் பிரிந்த வைம்பாற் பொருட்கும், உரியவை யுரிய—தனித்தனி கூறுமற்றானே சென்றுணர்த்தற் குரியன வுரியவா மென்றவாறு.

உம்மையா, 'லைம்பாலையுஞ் சேர வுணர்த்தாது சில பாலை யுணர்த்துதற் குரியன வுரியவா;' மென்றுங் கொள்க.

(உ-ம்) நஞ்சுண்டான் சா, மென்றவழி, நஞ்சுண்டல் சாதற்குக் காரணமென்பா, னொருபான்மேல் வைத்துக் கூறினா னாயினு, மஃதொழிந்த நான்கு பாற்குஞ் சாத லெய்தினமையை யுணர்த்திவாறு காண்க.

'பார்ப்பான் கள்ளுண்ணான், என்ப தேனை, யிருபாற்கு மெய்துவித்து நின்றது.

இனிச் சேனாவரையர் 'இருதிணைப்பிரிந்த வைம்பாற் கிளவியாதற்கும் பெயருளுரிய வுரியவா;' மென்று பொருள் கூறி,'அவன் பெண்மகன், சாத்தனென னகரவீறாடூவிற்கும், மகடூவிற்கும் அஃறிணைப் பாற்குமுரித்தாய் வருதலி, னுரியுவை, யுரிய;' வென்றார் என்பது இச் சூத்திரத்திற்குக் கருத் தென்றாராலெனின், ஆசிரியர் வினைச்சொல்லை யீற்றா லடங்கு மென்று கருதி ஈறுபற்றி யோதி, பெயர்ச் சொல்லை யீற்றான டங்காது பல்வேறு வகையுவாய் வருமென்று கருதிச் சொல்லாகத் தனித்தனியே யெடுத்தோதி

னாராதலி னிவ்வெடுத் தோதிய சொற்களா னிவர்கூறிய பொருள் விளங்குதலின், இச்சூத்திரத்திற் கிதுவே பொருளென்றுணர்க.

அன்றியும்,

'ஒருபாற் கிளவி எனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப,

என்னும் பொருளியற் சூத்திரத்தான் நஞ்சுண்டான் சாம் என்ப தடங்கு மென்று கூறலச் சூத்திரத்தின் கருத்தறியாது கூறிற்றாம். என்னை? அஃது.

'ஒத்த கிழவனுங் கிழத்தியும்'

என்ற களவியற் சூத்திரத்திற் பன்மை கூறா வழு வமைத்தற் கெழுந்த சூத்திரமாகலின். (7)

164] உயர்திணைப் பெயர்கள்.

அவ்வழி,
யவனிவன் உவனென வரூஉம் பெயரு
மவளிவ ளுவளென வரூஉம் பெயரு
மவரிவ ருவரென வரூஉம் பெயரும்
யான்யாம் நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவ ரென்னு
மாவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த வுயர்திணைப் பெயரே.

இது, முறையானே உயர்திணைப் பெயரை உணர்த்து கின்றது.

(இ-ள்) அவ்வழி-மூன்று கூற்றதாக முற்கூறிய பெயருள், அவனிவ வுவனென வரூஉம் பெயரு மவளிவ ளுவ ளென வரூஉம் பெயரு மவரிவ ருவரென வரூஉம் பெயரும்

—அவனென்பது முதலாகிய சுட்டுப்பெயர் ஒன்பதும், யான் யாம் நாமென வரூஉம் பெயரும்—யானென்னுந் தனித் தன்மைப் பெயர் ஒன்றும் 'யா'மென்னும் படர்க்கை யுளப் பாட்டுத் தன்மைப் பெயரொன்றும் 'நா'மென்னு முன்னிலை யுளப்பாட்டுத்தன்மைப் பெயரொன்றும், யாவன் யாவள் யாவரென்னு மாவயின் மூன்றோ டப்பதினைந்தும்—யாவன் முதலிய வினாப் பொருளிடத்துப் பெயர் மூன்றுமாயுள்ள வப்பதினைந்து பெயரும், பாலறி வந்த உயர்திணைப்பெயரே—ஒருவனொருத்தி பலரென்னு மூன்று பாலினையு மறிய வந்த வுயர்திணைப் பெயராம் என்றவாறு.

யான் யாம் நாமென்பன விருபாற்கும் பொது வேனுங் குறிப்பா னுணர்ந்துழி யொருபா லுணர்த்தியே நிற்றலிற் பாலறிய வந்த வுயர்திணைப் பெயராயின.

'நம்பி, பெண்டாட்டி' யென விகரவீறும், 'ஆடூஉ மகடூஉ' வென வூகார வீறுகளும், பிறவீறுகளு மிரு பாற்கு முரியவாய் வருதலி, னீறுபற்றி யோதாதி சூத்திர முதலாகப் பெயர் பற்றி யோதினார். (8)

165] உயர்திணைப் பெயர்கள்

ஆண்மை யடுத்த மகனென் கிளவியும்
பெண்மை யடுத்த மகளென் கிளவியும்
பெண்மை யடுத்த விகர விறுதியும்
நம்மூர்ந்து வரூஉ மிகரவை காரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்

மாந்தர் மக்க ளென்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ வாயிரு கிளவியுஞ்
சுட்டுமுத லாகிய வன்னு மானு
மவைமுத லாகிய பெண்டென் கிளவியு

மொப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ
யப்பதி னைந்து மவற்றோ ரன்ன.

இதுவும், அது.

(இ-ள்) ஆண்மை யடுத்த மகனென் கிளவியும் — ஆளுந் தன்மை யடுத்த வாண்மக னென்னுஞ் சொல்லும், பெண்மை யடுத்த மகளென் கிளவியும் — கட் புலனா யதோ ரமைதித் தன்மை யடுத்தபெண்மகள், என்னுஞ் சொல்லும், பெண்மை யடுத்த விகரவிறுதியும்—கட்புல னாயதோ ரமைதித் தன்மை யடுத்த விகரவீற்றுப் பெண்டாட்டி யென்னுஞ் சொல்லும், நம்மூர்ந்து வருஉ மிகர வைகாரமும்—நம்மென்னு முதனிலையை யூர்ந்து 'நமக்கின்னா' ரென வருஉ மிகர வைகார வீற்று 'நம்பி, நங்கை' யென்னுஞ் சொல்லும், முறைமை சுட்டா மகனும் மகளும்—முறைப் பொருண்மை 'கருதாத மகன் மக'ளென்னுஞ் சொல்லும், மாந்தர் மக்க ளென்னும் பெயரும்—மாந்தர் மக்களென்னும் பன்மைச் சொல்லும் ஆடூஉ மகடூஉ வாயிரு கிளவியும்—'ஆடூஉ மகடூஉ' வாகிய அவ்விரு வகைச் சொல்லும்' சுட்டு முதலாகிய அன்னு, மானும்-சுட்டெழுத்தினை முதலாக வுடைய 'அவ்வாளன் இவ்வாளன், உவ்வாளன், அன்னன், அனைய' னென்னு மன்னீற்றுச் சொல்லும் அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான், அன்னான், அனையா' னென்னு மானீற் றுச் சொல்லும், அவை முதலாகிய பெண்டென் கிளவி யும்- அச்சுட்டெழுத்தினை முதலாகவுடைய 'அப் பெண்டு, இப்பெண்டு, உப்பெண்டென்னுஞ் சொல்லும், ஒப்பொடு, வருஉம் கிளவியொடு தொகைஇ-ஒப்புமைப் பொருள் பற்றிவரும் 'பொன்னன்னான்' பொன்னன் னாள், பொன்னன்னார் என்னுஞ் சொல்லொடு தொக்கு, அப்பதினைந்துமவற்றோரன்ன-அப்பதினைந்து பெயர்ச் சொல்லும் மேற்கூறிய பெயர்போலப் பாலறிய வந்த வுயர்திணைப் பெயரா மென்றவாறு.

'ஆண்மை, பெண்மை, என்பனவற்றிற் கிவ்வாறு பொருளுரையாக்காற் கூறியது கூறலாம். இவை, 'யாளு மகன் — ஆண்மகன், பெண்ணாகிய மகள் - பெண்மக ளென விரியும். பெண்டாட்டி — பெண்மையை யாள் கின்றவள்; நம்பி, நங்கைஉயர்சொல்; மகளென்பது *பிறிதொரு சொல்லாயே நின்று பெண்மை யுணர்த் திற்று.

பெண்டன் கிளவி யென்று பாடமோதியவ் வாட்டி யிவ்வாட்டி யுவ்வாட்டி யென்பாருமுளர்.

ஊரார் பெண்டென் மொழிய'

வென்னைநின்

'பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்' எனச் சான்றோர் கூறலிற் பெண்டென்பதே பாடம். அப்பெண்டென்னுஞ் கட்டு, 'கடிசொல் இல்லை' யென் பதனாற் பெண்டென நின்றது. (9)

166] உயர்திணை ஒருபாற் பெயர்

எல்லாரு மென்னும் பெயர்நிலைக் கிளவியு
மெல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியு
மன்ன வியல வென்மனார் புலவர்.

இதுவு, முயர்திணை யொருபாற் பெயருணர்த்து கின்றது.

(இ-ள்) எல்லாரு மென்னும் பெயர்நிலைக் கிளவி யும்- எல்லாரு மென்று சொல்லப்படுகின்ற படர்க்கைப் பெயர்ச் சொல்லும், எல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்-எல்லீரு மென்று சொல்லப்படுகின்ற முன் னிலைப் பெயர்ச் சொல்லும், பெண்மை யடுத்த மக னென் கிளவியும்-கட்புல னாகிய (னாயதோர்) வன்மைத்

* பிரியாது (பா.பே)

தன்மை யடுத்த நாணுவரை யிறந்து புறத்து விளையாடும் பருவத்தாற் பாறிரிந்த பெண் மகனென்னும பெயர்ச்சொல்லும், அன்னவியல வென்மனார் புலவர்—இவை மூன்று மவைபோல பாலறிய வந்த வுயர்திணைப் பெயராமென்றவாறு.

பெண்மகனென்பதத் தன்மையாரை யக்காலமவ் வாறே வழங்கினா ராயிற்று. இங்ஙனங் கூறலின். (10)

167] இதுவும் அது.

நிலப்பெயர் குடிப்பெயர் குழூவின் பெயரே
வினைப்பெய ருடைபபெயர் பண்புகொள் [பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினை நிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கி னாடியற் பெயரே
யின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரோ
டன்றி யனைத்து மவற்றியல் பினவே.

இதுவுமது.

(இ-ள்) நிலப்பெயர் — ஒருவன் றான்பிறந்த நிலத்தினாற் பெற்ற பெயர்களும், குடிப்பெயர் — ஒருவன் றான் பிறந்த குடியினாற் பெற்ற பெயர்களும் குழூவின் பெயரே-தாந் திரண்டொரு துறைக்க ணுரிமை பூண்ட பல்லோர்மே லெக்காலத்தும் நிகழூம் பெயர்களும், வினைப்பெயர் — தாஞ் செய்யுந் தொழிலினாற் பெற்ற பெயர்களும், உடைப்பெயர்-தன்னுடைமையாற் பெற்ற பெயர்களும், பண்புகொள் பெயரே-தனதோர் பண்பினாற் பெற்ற பெயர்களும், பல்லோர்க் குறித்த முறை நிலைப் பெயரே - பல்லோரைக் கருதின தமது முறைமையாற் பெற்ற பெயர்களும், பல்லோர்க் குறித்த சினைநிலைப்பெயரே — பலலோரைக் கருதின சினை

நிலைமையாற் பெற்ற பெயர்களும், பல்லோர்க்குறித்த திணை நிலைப்பெயரே—பல்லோரைக் கருதின குறிஞ்சி நில முதலிய வைந்திணை நிலைமையாற் பெற்ற பெயர் களும், கூடிவருவழக்கி னாடியற்பெயரெ—இளந்துணை மகார் தம்மிற்கூடி விளையாடல் குறித்த பொழுதைக்குத் தாமே படைத்திட்டுக் கொண்ட பெயர்களும், இன்றிவ ரென்னு மெண்ணியற் பெயரோடு—இத்துணையரெனத் தமது வரையறை யுணரநின்ற வெண்ணாகிய வியல்பு பற்றிப் பொருளுணர்த்தும் பெயருடனே, அன்றி யனைத்து மவற்றியல் பினவே - அவ்வனைத்து பெயர் களும் மேற்கூறிய பெயர்கள் போலப் பாலறிய வந்த வுயர்திணைப் பெயரா மென்றவாறு.

(உ-ம்) அருவாளன், சோழியன், எனவும்; சேரமான் மலையமான், பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர், எனவும்; அவையத்தார், அத்தி கோசத்தார், வணிக கிராமத்தார், மாகத் தார் எனவும்; வருவார், செல்வார், தச்சர், கொல்லர், தட்டார், வண்ணார், எனவும்; அம்பர் கிழான், பேரூர்கிழான், குட்டுவன், பூழியன் வில்லவன், வெற்பன், சேர்ப்பன், எனவும்; கரியான், கரியாள், செய்யான், செய் யாள், எனவும்; தந்தையர், தாயர் எனவும்; பெருங்காலர், பெருந்தோளர், அலைகாதர், எனவும்;குறவர்,இறவுளர், வேட்டுவர், ஆயர், பொதுவர், நுளையர், திமிலர், பரதவர், களமர், உழவர், எயினர், மறவர், எனவும்; பட்டிபுத்திரர் கங்கை மாத்திரர், எனவும்; ஒருவர் இருவர் முப்பத்து மூவரெனவும்; அருவாட்டி, சோழிச்சி, மலையாட்டிச்சி, பார்ப்பனி, அரசிவாணிச்சி, வெள்ளாட்டிச்சி கொல்லிச்சி தட்டாத்தி, வண்ணாத்தி, அம்பருடைச்சி பேரூர் கிழத்தி (யென்றாற் போலும்) எனவும் வரும்.

மற்றடூஉப் பெயர்கள் டகரவொற்றிட்டியும், இச்சுப் பெற்றும், தகர வொற்றிரட்டியு மிரண்டிடை நிலை யெழுத்துக்களைப் பெற்றும், பெறாதும் வருமாறுணர்க. இவை யிங்ஙன மிடைநிலை யெழுத்துக்களும் பெற்றுப் பாலுணர்த்துதற்குரிய விகாரமும் பெற்று நிற்கு மென்பது.

'சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்'

என்னு மதிகாரப் புறநடையாற் கொள்க. (11)

[168 உயர்திணைப் பெயர்க்குப் புறநடை

அன்ன பிறவு முயர்திணை மருங்கிற்
பன்மையு மொருமையும் பாலறி வந்த
வென்ன பெயரு மத்திணை யவ்வே.

இது, உயர்திணைப் பெயர்க்குப் புறனடை கூறுகின்றது.

(இ-ள்) அன்னபிறவும்—மேற்கூறிய பெயர் போல்வன பிறவுமாயுள்ள, உயர்திணைமருங்கிற் பன்மையு மொருமையும் பாலறி வந்த வென்ன பெயரும்—உயர் திணைக்கட் பன்மையு மொருமையுமாகிய பால்களை யறியவந்த வெல்லாப் பெயர்களும், அத்திணை யவ்வே—அவ்வுயர்திணைப் பெயராமென்றவாறு.

(உ-ம்) அன்னள், அனையாள், அவ்வாட்டி, ஏனாதி, காவிதி, எட்டி, வாயிலான் பூயிலான், வண்ணத்தான். சுண்ணத்தான் பெண்டிர், பெண்டுகள், அடியான், அடியாள், அடியார் வேனிலான், பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள், மற்றையார் என்னுந் தொடக்கத்தன வெனக் கொள்க. இன்னும்,

'எல்லேம் பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே'
'வல்லேம் யிருந்தேமே வாய்ந்தமன் றிதுவென'
'விருவேமும் வல்லே மிருவர்நம் படாதீர்'

என்னும் பெயர்களுங் கொள்க. (12)

169] அஃறிணைப் பெயர்கள்

அதுவிது உதுவென வரூஉம் பெயரு
மவைமுத லாகிய வாய்தப் பெயரு
மவையிவை யுவையென வரூஉம் பெயரு
மவைமுத லாகிய வகரப் பெயரும்
யாதுயா யாவையென்னும் பெயரு
மாவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த வஃறிணைப் பெயரே.

இது, முறையானே அஃறிணைப் பெயர் கூறுகின்றது.

(இ-ள்) அது இது உது வென வரூஉம் பெயரும்— 'அது' இது, உது, வென்று சொல்லப்பட்டு வரும் சுட்டு முதற் பெயர்களும், அவைமுதலாகிய ஆய்தப்பெயரும்— அப்பெயர்க்கு முதலாகிய சுட்டெழுத்தே தமக்கு முதலாக வாய்தத் தோடு கூடி யஃ திஃ துஃ தென்று சொல்லவரு மாய்தத் தொடர் மொழிக் குற்றுகர வீற்றுப் பெயர்களும் அவை யிவை யுவையென வரூஉம் பெயரும்—அவை யிவை யுவையெனவருஞ் சுட்டு முதற் பெயர்களும், அவை முதலாகிய வகரப்பெயரும்—அப்பெயர்க்கு முதலாகிய சுட்டெழுத்தே தமக்கு முதலாக வகர வொற்றோடு கூடி யவ்வில் வுவ் வென்று சொல்லப்படும் வகர வீற்றுப் பெயர்களும், யாது யா யாவை யென்னு மாவயின் மூன்றோடப்பதினைந்து பெயரும்-யாதுயா யாவை யென்று சொல்லப்படுகின்ற வவ்வினாப் பொருளிடத்து மூன்று பெயர்களோடுங் கூடிய வப்பதினைந்து பெயர் களும், பாழறி வந்த வஃறிணைப் பெயரே—ஒருமைப் பன்மைப் பாலறிய வந்த வஃறிணைப் பெயரா மென்ற வாறு. (13)

170] அஃறிணை ஒருசார்ப் பெயர்கள்

பல்ல பலசில வென்னும் பெயரும்
முள்ள வில்ல வென்னும் பெயரும்

வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரு
மினைத்தெனக் கிளக்கு மெண்ணுக்குறிப் [பெயரும்
மொப்பி னாகிய பெயர்நிலை யுளப்பட
வப்பா லொன்பது மவற்றோ ரன்ன.

இதுவும், அஃறிணை யொருசார்ப் பெயர்களைக் கூறுகின்றது.

(இ-ள்) பல்ல பல சில வென்னும் பெயரும்—பல்ல பல சில வென்று சொல்லப் படுகின்ற பெயர்களும், உள்ள வில்ல வென்னும் பெயரும்—உள்ள வில்லவென்று சொல் லப் படுகின்ற பெயர்களும், வினைப்பெயர்க் கிளவியும்—"வருவது, வருவன' வென்றாற், போலும் வினைப்பெய ராகிய சொற்களும், பண்பு கொள் பெயரும்—கரியது கரியண வென்றாற் போலும் பண்பினைக் கொண்ட பெயர்களும், இனைத்தெனக் கிளக்கு மெண்ணுக் குறிப் பெயரும்-ஒன்று, பத்து, நூறென்றாற் போலச் சொல்லப் படுகின்ற வித்துணை யென வரையறை யுணர்த்தி யெண்ணப்படும் பொருண்மேனிற்கும் பெயர்களும், ஒப்பினாகிய பெயர்நிலை யுளப்பட—பொன்னன்னது, பொன்னன்ன வென்றாற், போல வுவமத்தினாற் பெற்ற பெயர்ச் சொல்லுட்பட, அப்பா லொன்பது மவற்றோ ரன்ன—அக்கூற் றொன்பதும், மேற்கூறிய பெயர் போலப் பாலறிய வந்த வஃறிணைப் பெயர்களா மென்ற வாறு. (14)

171] அஃறிணை இயற்பெயர்

கள்ளொடு சிவணு மவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே.

இதுவு, மஃறிணை யியற்பெயரே கூறுகின்றது,

(இ-ள்) கள்ளொடு சிவணு மவ்வியற் பெயரே—கள்ளென்னும் வாய் பாட்டோடு பொருந்து மவ் வஃறிணை யியற் பெயர்கள், பலவறி சொற்குக் கொள் வழி யுடைய—பலவற்றை யறியுஞ் சொல்லாதற்குக் கொள்ளு மிடமு முடைய வென்றவாறு.

(உ-ம்) ஆ, நாய், குதிரை, ஒட்டகம், புலி, புல் வாய், தெங்கு, பலா, மலை, கடல்

என்னுந் தொடக்கத்துச் சாதிப்பெய ரிரு பாற்கும் பொதுவாய் நின்றன. கள்ளொடு சிவணி,

ஆக்கள், குதிரைகள், தெங்குகள், கடல்கள், மலைகள், எனப்பன்மை விளக்கி நின்றன.

'வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயி னும்'

எனவும்.

'பிறந்தவர்க ளெல்லா மவாப்பெரிய ராகி'

எனவும்,

'கற்றனங்கள் யாமுமுடன் கற்பனக ளெல்லாம்'

எனவும்,

'எங்கள் வினை யாலிறைவன் வீடியவஞ் ஞான்றே'

எனவும்,

கள்ளீறு பலரை யுணர்த்தி நின்றனவா லெனின், இவற் றுட், பலரை யுணர்த்துதற் கோதிய விறுகளே பலரை யுணர்த்தியே நின்றன. கள்ளென்ப திசை நிறைத்து நின்ற தெனப்படுமவ் வீறுகளை யொழிந்து நின்று கள்ளென்பது பலரை யுணர்த் தாமையின். இனி, இவ் வீறுகளை யொழியத் தாமே பலரை யுணர்த்துவன வுளவேல்,

'கடிசொல் லில்லைக் காலத்துப் படினே'

என்பதனாற் கொள்க. அஃதிக்காலத்துப் பெண்டுக ளென்றாற் போல வருவன போலும். (15)

172] அஃறிணைப் பெயர்க்குப் புறநடை

அன்ன பிறவு மஃறிணை மருங்கிற்
பன்மையு மொருமையும் பாலறி வந்த
வென்ன பெயரு மத்திணை யவ்வே.

இது, அஃறிணைப் பெயர்க்குப் புறநடை கூறுகின்றது.

(இ-ள்) அன்ன பிறவு மஃறிணை மருங்கின்-முற் கூறிய பெயர் போல்வன பிறவுமாகிய வஃறிணைக்கண் பன்மையு மொருமையும் பாலறிவந்த-பன்மையு மொரு மையு மாகிய பால் விளங்க வந்த, என்ன பெயரு மத்திணை யவ்வே — எல்லாப் பெயரு மவ்வஃறிணைக் குரிய பெயரா மென்றவாறு.

(உ-ம்) பிறிது, பிற
அனையது, அனையன
மற்றையது, மற்றையன
பல்லவை, சில்லவை
உள்ளது, இல்லது
உள்ளன, இல்லன
அன்னது, அன்னன

எனவரும். நிலம் நீர், தீ, வளி, ஆகாயம், உண்டல், தின்றல், கருமை, செம்மை என்பனவு மப்பாற் படும். (16)

173] அஃறிணை இயற்பெயர் பால் உணர்த்துமாறு

தெரிநிலை யுடைய வஃறிணை யியற்பெய
ரொருமையும் பன்மையும் வினையொடு வரினே.

இது, அஃறிணை யியற்பெயர் பாலுணர்த்துமாறு கூறுகின்றது.

(இ-ள்) அஃறிணை யியற்பெயர் - கள்ளோடு சிவணாத வஃறிணை யிருபாற்கு முரியபெயர், ஒருமையும் பன்மையுந் தெரி நிலையுடைய—ஒருமைப் பாலும் பன்மைப் பாலும் விளங்கும் நிலைமையுடைய, வினையொடு வரினே-அதற்கேற்ற வினையோடு தொடர்ந்த வழி யென்றவாறு.

(உ-ம்) ஆ வந்தது, ஆ வந்தன
யானை வந்தது, யானை வந்தன.
குதிரை வந்தது, குதிரை வந்தன.

எனவரும்.

கள்ளொடு சிவணிய வியற் பெயரை வேறு கூறினார், வினையானன்றிப் பெயர்தாமே பன்மை விளக்கலின். (17)

174] விரவுப்பெயர் பால் தெரிய நிற்குமாறு.

இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமையிற்
றிரிபுவேறு படூஉ மெல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையோ டல்லது பாறெரி பிலவே.

இது, நிறுத்த முறையானே விரவுப்பெயர் கூறுகின்றது.

(இ-ள்) இருதிணைச் சொற்கு மோரன்ன வுரிமையின் இருதிணைச் சொல்லாதற்கு மொத்த வுரிமையவாதலின், திரிபு வேறு படூஉ மெல்லாப் பெயரும்-உயர்திணைக்கட் சென்றுழி உயர்திணைப் பெயராயும் மஃறிணைக்கட் சென்றுழி யஃறிணைப் பெயராயும் வேறுபடூஉம் விரவுப் பெயரெல்லாம், நினையுங்காலை—ஆராயுங் காலத்து, தத்த மரபின் வினையோ டல்லது பாறெரி பிலவே—அவ்வத்திணையை யுணர்த்துதற்

குரிய முறைமை யினையுடைய வினைச்சொல்லோ டியைந்தல்லது திணை விளங்க நில்லா வென்றவாறு,

(உ-ம்) சாத்தன் வந்தான்.
சாத்தன் வந்தது.
முடவன் வந்தான்.
முடவன் வந்தது.

எனவரும்.

நினையுங்காலை யென்றதனாற்
சாத்த னொருவன்.
சாத்த னொன்று.

எனப் பெயரோடு வந்து பால் விளக்கலும் கொள்க. இன்னும் இதனானே, முற்கூறிய வஃறிணையியற் பெயர்களும்

ஆ வொன்று.
ஆ பல.

எனப் பெயராற் பாலறியப் படுதலுங் கொள்க. இன்னு மிதனானே,

முலை யெழுந்தது
மோவா யெழுந்தது.

என்றாற் போல்வன தன் சினை வினையாற் பால் தெரியாமையுங் கொள்க. (18)

175] விரவுப் பெயர் விரவு வினையானும் திணையறி யப்படல்

நிகழூஉ நின்ற பால்வரைக் கிளவியி
னுயர்திணை யொருமை தோன்றலு முரித்தே
யன்ன மரபின் வினைவயி னான.

இது, அவ்விரவுப் பெயர் விரவு வினையானுந் திணை யறியப்படு மென்கின்றது.

இ-ள்) நிகழூஉ நின்ற பால்வரைக் கிளவியின் — நிகழ் காலமே பற்றிவருஞ் செய்யு மென்னு முற்றுச் சொல்லான், உயர்திணை யொருமை தோன்றலு முரித்தே—உயர்திணை யொருமைப்பா றோன்றுதலு முரித்து, அன்ன மரபின் வினை வயினான அவ்வொரு மைப்பா றோன்றுதற் கேற்ற வினையிடத் தென்றவாறு.

(உ-ம்) சாத்தன் யாழெழூஉம், குழலூதும், பாடும். எனவும்.

சாத்தி சாந்தரைக்கும், பூத்தொடுக்கும்.
எனவும் வரும்.

இனி, ஒன்றெனமுடித்த லென்பதனான் வியங் கோளானு முயர்திணை யொருமை தோன்றுதலுங் கொள்க.

சாத்தன் யாழெழுக!
சாத்தி சாந்தரைக்க!

எனவரும்.

சாத்தன் புற்றின்னும்
சாத்தி கன்றீனும்

என வஃறிணை யாயும் வருமாலெனின், சாத்தன் புற்றின்னு மென்பது புல்லரிசிச் சோற்றைத் தின்னு மென் றுயர்திணைக்கு மேற்றலி னஃறிணைக்கே யஃது யாகாமையினது கொள்ளார். சாத்தி கன்றீனு மென் பது கன்றென்னுஞ் சார்பா னஃறிணை தோன்றிற்று அதனாற் கொள்ளார். (19)

176] விரவுப் பெயர்க்குப் பெயரும் முறையும் தொகை யும்.

இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர் கிளவி தாமே தானே
யெல்லா நீயிர் நீயெனக் கிளந்து

சொல்லிய வல்ல பிறவு மாஅங்
கன்னவை தோன்றி னவற்றொடுங் கொளலே.

இது, அவ்விரவுப் பெயர்க்குப் பெயரு முறையுந் தொகையுங் கூறுகின்றது.

(இ-ள்) இயற்பெயர் — சாத்தன் கொற்றனென வழங்குதற் பயத்தவாய் நிமித்தமின்றிப் பொருள் பற்றி வரு மியற்பெயர், சினைப்பெயர்-'பெருங்காலன்' முடவனென'ச்' சினை யுடைமையாகிய நிமித்தம் பற்றி முதன் மேல்வரும் பெயர், சினை முதற்பெயர் - 'சீத்தலைச் சாத்தன், கொடும்புற மருதி' எனச் சினைப்பெயரோடு தொடர்ந் தல்லது பொருளுணர்த்தாது வரு மியற் பெயராகிய முதற்பெயர், முறைப் பெயர்க் கிளவி— தந்தை தாயெனப்' பிறவியா னொருவரோ டொரு வர்க்கு வரு மியைபு பற்றி வரும்பெயராய் முறை யுடைப் பொருண்மேல் வரும் பெயர், தாமே தானே யெல்லா நீயிர் நீயெனக் கிளந்து சொல்லியவற்றோடு— தாந்தா னெல்லா நீயிர் நீ யென்று தொல்லாசிரியனால் விதந்தோதப் பட்டனவற்றோடே, அல்ல அன்னவை பிறவு மாங்குத் தோன்றின் கொளல்—எடுத் தோதா தனவா யவை போல்வன பிறவு மவ் விரவுதலிடத்தே தோன்றுமாயின வற்றையுங் கொள்க வென்றவாறு.

'அன்ன பிற'வாவன, 'மக. குழவி' போல்வனவுங் 'காடன், காடி, நாடன், நாடி, தரையன், திரையன், மலையன்' போல்வனவு, 'முதியா' னெனப் பிராயம் பற்றி வருவனவுஞ் 'சுமைய' னெனத் தொழில் பற்றி வருவனவும், பிறவுமாம். (20)

177] விரவுப் பெயரின் பாகுபாடு

அவற்றுள்,
நான்கே யியற்பெயர்; நான்கே சினைப்பெயர்;
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே;

முறைப்பெயர்க் கிளவி யிரண்டா கும்மே;
யேனைப் பெயரே தத்தம் மரபின.

இது, தொகுத்தன வற்றை விரிக்கின்றது

(இ-ள்) அவற்றுள்—முற்கூறிய விரவுப்பெயருள், இயற் பெயர் நான்கே—இயற்பெயர் நான்கு வகைப் படும், சினைப் பெயர் நான்கே—சினைப்பெயர் நான்கு வகைப்படும், சினை முதற்பெயர் நான்கே—சினை முதற் பெயர் நான்கு வகைப்படும், முறைப்பெயர்க் கிளவி யிரண்டாகும்மே—முறைப் பெயராகிய சொல் லிரண்டு வகைப்படும்; ஏனைப் பெயரே தத்தம் மர பின—ஒழிந்த வைந்து பெயரும் பொருண்மை சுட்டா தொரோ வொன்றாய் நின்ற பெயரைச் சுட்டி நிற்கு மிலக்கணத்தன; என மொழிமனார்—என்று கூறுவ ராசிரிய ரென்றவாறு. (21)

178] இயற்பெயர் நான்கின் பெயரும் முறையும்.

அவைதாம்,
பெண்மை யியற்பெய ராண்மை யியற்பெயர்
பன்மை யியற்பெய ரொருமை யியற்பெயரென்
றந்நான் கென்ப வியற்பெயர் நிலையே.

இது, இயற்பெயர் நான்கென்றவற்றின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

(இ-ள்) அவைதாம்—அவ்வாறு பகுக்கப்பட்டன தாம் யாவையெனின், இயற்பெயர் நிலையே—இயற் பெயரது நிலைமையை, பெண்மை யியற்பெய ராண்மை யியற்பெயர் பன்மை யியற்பெய ரொருமை யியற்பெய ரென் றந்நான் கென்ப—பெண்மை யியற்பெயரு மாண்மை யியற் பெயரும் பன்மை யியற்பெயரும் ஒருமை யியற்பெயரு மென்று கூறப்பட்ட வந்நான்கு மென்று சொல்லுவ ராசிரிய ரென்றவாறு. (22)

**179]** சினைப் பெயர் நான்கின் பெயரும் முறையும்.

பெண்மைச் சினைப்பெய ராண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச்சினைப் பெயரென்
றந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே.

இது, 'சினைப்பெயர் நான்' கென்றவற்றின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

(இ-ள்) சினைப்பெயர் நிலை—சினைப்பெயரது நிலைமையை, பெண்மைச் சினைப்பெய ராண்மைச் சினைப்பெயர் பன்மைச் சினைப்பெய ரொருமைச் சினைப்பெயரென் றந்நான்கென்ப—பெண்மைச் சினைப் பெயரு மாண்மைச் சினைப்பெயரும் பன்மைச் சினைப் பெயரு மொருமைச் சினைப்பெயரு மென்று கூறப்பட்ட வந்நான்கு மென்று கூறுவராசிரியரென்றவாறு. (23)

**180]** சினை முதற்பெயர் நான்கின் பெயரும் முறையும

பெண்மை சுட்டிய சினை முதற் பெயரே
யாண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
யொருமை சுட்டிய சினைமுதற் பெயரென்
றநநான் கென்ப சினைமுதற் பெயரே.

இது, சினை முதற்பெயர் நான்கென்றவற்றின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

(இ-ள்) சினை முதற்பெயரே—சினை முதற்பெயரது நிலைமையை, பெண்மை சுட்டிய சினை முதற்பெயரே யாண்மை சுட்டிய சினை முதற்பெயரே பன்மை சுட்டிய சினை முதற்பெயரே யொருமை சுட்டிய சினை முதற் பெயரென் றந்நான்கென்ப—பெண்மை சுட்டிய சினை முதற் பெயரு மாண்மை சுட்டிய சினைமுதற்பெயரும் பன்மை சுட்டிய சினைமுதற்பெயரு மொருமை சுட்டிய சினை முதற்பெயரு மென்று கூறப்பட்ட வந்நான்கு மென்று கூறுவராசிரிய ரென்றவாறு. (24)

181] முறைப்பெயர் இரண்டின் பெயரும் முறையும்.

பெண்மை முறைப்பெய ராண்மை முறைப்
[பெயரென்
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே.

இது, முறைப்பெய ரிரண்டென்றவற்றது பெயரு முறையுங் கூறுகின்றது.

(இ-ள்) முறைப் பெயர் நிலையே — முறைப் பெயரது நிலைமையை, பெண்மை முறைப்பெய ராண்மை முறைப்பெய ரென்றாயிரண் டென்ப — பெண்மை முறைப்பெயரு மாண்மை முறைப்பெயரு மென்று கூறப்பட்ட வவ்விரண்டு மென்று கூறுவராசிரிய ரென்றவாறு. (25)

182] பெண்மை சுட்டிய விரவுப்பெயர்

பெண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருத்திக்கு மொன்றிய நிலையே

இது, பெண்மைப் பெயரெல்லாந் தொகுத்துத் திணைக் குரிமை கூறுகின்றது.

(இ-ள்) பெண்மை சுட்டிய வெல்லாப்பெயரும் - பெண்மையியற் பெயரும் பெண்மைச் சினைப்பெயரும் பெண்மைச் சினை முதற்பெயரும் பெண்மை முறைப் பெயரும், ஒன்றற்கு மொருத்திக்கு மொன்றிய நிலையே — அஃறிணைப் பெண்ணொன்றற்கும் உயர்திணை யொருத்திக்கும் பொருந்திய நிலைமையினை யுடையவா மென்றவாறு

(உ-ம்) சாத்தி வந்தது; சாத்தி வந்தாள்.
முடத்தி வந்தது; முடத்தி வந்தாள்.
முடக்கொற்றி வந்தது; முடக்கொற்றி வந்தாள்,
தாய் வந்தது; தாய் வந்தாள்.

எனவரும், முடஞ் சினையாகிய காலை யுணர்த்திற்று,

ஆயென்பது மது யா யென்பது மத் தன்மையோ டொட்டுதலின், முறைப்பெய ரெனினு, முயர் திணையாம். (26)

183] ஆண்மை சுட்டிய விரவுப்பெயர்

ஆண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவற்கு மொன்றிய நிலையே.

இது ஆண்மைப் பெயரெல்லாந் தொகுத்துத் திணைக் குரிமை கூறுகின்றது.

(இ-ள்) ஆண்மை சுட்டிய வெல்லாப் பெயரும் — ஆண்மையியற் பெயரு மாண்மைச் சினைப்பெயரு மாண்மைச் சினைமுதற் பெயரு மாண்மை முறைப் பெயரும், ஒன்றற்கு மொருவற்கு மொன்றியநிலையே- அஃறிணையா ணொன்றற்கு முயர்திணை யொருவர்க் கும் பொருந்திய (நிலைமையை யுடையனவாம்) நிலை யினை யுடையவா மென்றவாறு.

(உ-ம்) சாத்தன் வந்தது,
சாத்தன் வந்தான்,
முடவன் வந்தது,
முடவன் வந்தான்,
முடக்கொற்றன் வந்தது,
முடக்கொற்றன் வந்தான்,
தந்தை வந்தது,
தந்தை வந்தான்,

எனவரும்.

நுந்தை என்பது மது, எந்தை யென்பது தன்மை யோடொட்டுதலி, னுயர் திணையாம். (27)

**134]** பன்மை சுட்டிய விரவுப் பெயர்.

பன்மை சுட்டிய வெல்லாப் பெயரும்
ஒன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.

இது, பன்மைப்பெய ரெல்லாவற்றையுந் தொகுத்துத் திணைக்குரிமை கூறுகின்றது.

(இ-ள்) பன்மைசுட்டிய வெல்லாப் பெயரும்—பன்மையியற் பெயரும் பன்மைச் சினைப்பெயரும் பன்மைச் சினை முதற்பெயரும், ஒன்றே பலவே யொருவ ரென்னு மென்றிப் பாற்கு மோரன் னவ்வே-அஃறிணை யொருமையு மத்திணைப் பன்மையு முயர்திணை யொருமையு மென்று சொல்லப்படு மிம் மூன்று பாற்கு மொருதன்மைய வென்றவாறு.

ஒன்றென்றதனை யஃறிணை யாணொன்றனையு மொருவ ரென்பதனை யுயர்திணையா ணொருமையும் பெண்ணொருமையுமாகக் கொள்க.

(உ-ம்) யானை வந்தது
யானை வந்தன
யானை வந்தான்
யானை வந்தாள்

நெடுங்கழுத்தல் வந்தது, வந்தன, வந்தான், வந்தாள், பெருங்கல் யானை வந்தது, வந்தன, வந்தான், வந்தாள், எனவரும்.

'வெண்குடைப் பெருவிற' லென்பது, செங்குடை முதலியவற்றோ டியையு நீங்காது, வெண்குடையோ டியைபின்மை மாத்திரை நீக்கி நின்றாற்போலப் 'பன்மை சுட்டிய' வென்பது மொருமையையும் நீக்காது பன்மை சுட்டுதலோ டியைபின்மை மாத்திரை நீக்கி நின்றது. இது, இயைபின்மை நீக்கமாம். கருங் குவளை யென்பது, செம்மை முதலியவற்றோ டியைபு நீக்குதலிற் பிறிதினியைபு நீக்கமாம், எனவே. விசேடித்த

லிருவ கையவாயின. எனவே பலபால்களையு முணர்த்தி நிற்றலிற் பன்மை சுட்டிய வென்றா ரென்றுரையாசிரியர் கூறியதே சேனாவரையர்க்குங் கருத்தன் றாயிற்று. (28)

185) ஒருமை சுட்டிய விரவுப் பெயர்.

ஒருமை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவர்க்கு மொன்றிய நிலையே

இது, ஒருமைப் பெயரெல்லாவற்றையுந் தொகுத்துத் திணைக்குரிமை கூறுகின்றது.

(இ-ள்) ஒருமை சுட்டிய வெல்லாப் பெயரும்—ஒருமையைக் கருதி வருமொருமையியற்பெயரும் ஒருமைச் சினைப் பெயரு மொருமைச்சினை முதற் பெயரும், ஒன்றற்கு மொருவர்க்கு மொன்றிய நிலையே-அஃறிணையொருமைக்கு முயர் திணை யொருமைக்கும் பொருந்திய நிலைமையை யுடையவா மென்றவாறு,

(உ-ம்) கோதை வந்தது, வந்தான், வந்தாள்,
செவியிலி வந்தது, வந்தான், வந்தாள்.
கோடுபுற மருதி வந்தது, வந்தான், வந்தாள்.

எனவரும்.

பெண்மைப் பெயரு மாண்மைப்பெயரு மொருமையை யுணர்த்து மாயினு மிவை பெண்மை யாண்மை யென்னும் வேறுபாடுணர்த்தாது ஒருமை யுணர்த்தலினிவற்றை யொருமைப் பெய ரென்றார். (29)

186] 'தாம்' என்னும் விரவுப் பெயர்.

தாமென் கிளவி பன்மைக் குரித்தே.

இது, தாமென்னும் பெயரிருதிணைக் கண்ணு முரித்தாமாறு ணர்த்துகின்றது.

(இ-ள்) தாமென் கிளவி பன்மைக் குரித்தே—தா மென்னும் பெயரிரு திணைக்கண்ணும் பன்மைப்பாற் குரித் தென்றவாறு.

(உ-ம்) தாம் வந்தார்
தாம் வந்தன. (30)

எனவரும்.

187] தான் என்னும் விரவுப் பெயர்.

தானென் கிளவி யொருமைக் குரித்தே.

இது, தானென்பதிருதிணைக்கு முரித்தாமாறு கூறுகின்றது.

(இ-ள் தானென் கிளவி யொருமைக் குரித்தே —தானென்னும் பெயரிரு திணைக்கண்ணு மொருமைப்பாற் குறித்தென்றவாறு.

(உ-ம்) தான் வந்தான்.
தான் வந்தாள்.
தான் வந்தது.

எனவரும். (31)

183) எல்லாம் என்னும் விரவுப் பெயர்.

எல்லா மென்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே

இது, எல்லா மென்ப திருதிணைக்கு முரித்தாமாறு கூறுகின்றது.

(இ-ள்) எல்லாமென்னும் பெயர்நிலைக் கிளவி- எல்லா மென்னும் பெயராகிய நிலைமையினை யுடைய சொல்நுதலிய நிலைத்தாகும்மே- இருதிணைக் கண்ணும் பன்மை யிடத்தைக் கருதிய நிலைமைத்தாய் வருமென்ற வாறு,

(உ-ம்) எல்லாம் வந்தேம், வந்தீர், வந்தார், வந்தன எனவரும்.

மேனி யெல்லாம் பசலையாயிற் றென்பது
எஞ்சாப் பொருட்டாய தோருரிச் சொல். (23)

189] எல்லாம் என்பது உயர்திணையில் பெரும்பான்மை தன்மைப் பன்மையில் வருமென்பது.

தன்னுள் ளுறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்க மில்லை.

இது, எய்தியது ஒரு மருங்கின் மறுக்கின்றது.

(இ-ள்) உயர்திணை மருங்கின் தன்னுள்ளுறுத்த பன்மைக் கல்ல தாக்க மில்லை-எல்லா மென்னுஞ் சொல் லுயர்திணைக்கண் வருங்காற் றன்மைப் பன்மைக் கல்லது பெரும்பான்மை வாரா தென் றவாறு

எனவே சிறுபான்மை முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் வருமாயிற்று.

(உ-ம்) 'கண்டனி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குதிர்
ஊடினீ! ரெல்லா முருவிலான் றன்னாணை
கூடுமி னென்று குயில் சாற்ற

என முன்னிலைக் கண்ணும்,

'நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாஞ்
சிறு பாக ராக"

எனப் படர்க்கைக் கண்ணும் வந்தன (33)

190] நீயிர் நீ யென்பன திணை உணர்த்தாமை

நீயிர் நீயென வரூஉங் கிளவி
பாறெரி பிலவே யுடன்மொழிப்பொருள

இது, நீயிர் நீ யென்பவற்றைத் திணைக்குரிமை கூறுகின்றது.

(இ-ள்) நீயிர் நீயென வருஉங் கிளவி — நீயி ரெனவும் நீ யெனவும் வரும் பெயர்ச்சொற்கள், பாறெரி பிலவேயுடன் மொழிப் பொருள-திணைப்பகுதி தெரிய நில்லா; இருதிணைப் பொருளு மொருங்கு தோன்று தலைப் பொருண்மையாக வுடைய வென்றவாறு.

(உ-ம்) நீயிர் வந்தீர்
நீ வந்தாய்.

என வினையானுந் திணைதெரியாமை காண்க. இவற்றிற்குத் தத்தமரபின் வினையின்று. (34)

**191]** நீ என்பது பாற்கு உரித்து ஆமாறு.

அவற்றுள்,
நீயென் கிளவி ஒருமைக் குரித்தே.

இது, நீ யென்பது பாற் குரித்தாமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவற்று ணீயென் கிளவி யொருமைக் குரித்தே — முற்கூறிய விரண்டு பெயருள் நீ யென்னும் பெயர் ஒருவ னொருத்தி யொன்றென்பன வற்றிற் கெல்லாம் பொதுவாகிய வொருமைக் குரித்தா மென்ற வாறு.

(உ-ம்) நீ வந்தாய்

எனவரும். (35)

**192]** நீயிர் என்பது பாற்கு உரித்து ஆமாறு

**ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே.**

இது, நீயி ரென்பது பாற் குரித்தாமாறு கூறு கின்றது.

(இ-ள்) ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே — ஒழிந்த நீயி ரென்னும் பெயர் பல்லோர்க்கும் பலவற்றிற்கும் பொதுவாகிய பன்மைக் குரித்தா மென்றவாறு.

(உ-ம்) நீயிர் வந்தீர்,

எனவரும். (36)

193] ஒருவர் என்பது உயர் இருபாற்கும் பொதுவாதல்.

ஒருவ ரென்னும் பெயர் நிலைக் கிளவி
யிருபாற்கு முரித்தே தெரியுங் காலை.

இது, உயர்திணை யதிகாரத்தி னொழிபு கூறு கின்றது. இது பொதுவாய் நிற்றலி னீண்டுக் கூறினார்.

(இ-ள்) ஒருவரென்னும் பெயர்நிலைக் கிளவி — மேலின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரென்றவற்று ளொருவ ரென்னும் பெயர்நிலைமையை யுடையசொல், தெரியுங்காலை யிருபாற்கு முரித்தே — ஆராயுங் காலத் துயர் திணைப்பாலு ளொருபாலு ணர்த்தா தொருவ னொருத்தி திணைப்பாலு ளொருபாலு ணர்த்தா தொருவ னொருத்தியென்னு மிருபாற்கும் பொதுவாய் நிற்கு மென்றவாறு.

(உ-ம்) ஒருவர் வந்தார்.

எனவரும். (37)

194) 'ஒருவர்' என்பது பன்மை வினை கொள்ளல்.

**தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும்.**

இது, ஒருவ ரென்பதன் முடிபு கூறுகின்றது.

(இ-ள்) தன்மை சுட்டில் — முற்கூறிய வொருவ ரென்னுஞ் சொன் முடியுந் தன்மையைக் கருதில். பன் மைக் கேற்கும் — தான் காட்டுகின்ற பொருண்மைக், கேற்ப வொரு

மைச் சொல்லோடு முடியாது ரகர வீற்றதாய் நின்ற சொற்றன்மைக்கு ஏற்பப் பன்மைச் சொற் பெற்று முடியுமென்றவாறு.

(உ-ம்) ஒருவர் வந்தார்
ஒருவரவர்

இது பால் பற்றிய மரபு வழுவமைதி, (38)

**195]** 'நீயிர், நீ, ஒருவர்' என்பனவற்றின் பால் தெரியு மாறு.

இன்ன பெயரே யிவையெனல் வேண்டின்
முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல்.

இது, நீயிர் நீ யொருவ ரென்பனவற்றிற் கோரி லக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) இன்ன பெயரே யிவையெனல் வேண்டின்— நீயிர் நீ யொருவ ரென்பன வின்ன பாற் பெயரென்ற றியலுறின், முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல் - இடமுங் காலமும் பற்றிச் சொல்லுவான் குறிப்போடு கூட்டி மேலோதின முறையானே திணையும் பாலு முணர்க வென்றவாறு.

(உ-ம்) விலங்கு வாராத தோரிடத்திருந்து 'நீயிர் வந் தீர்; நீவந்தாய்' என்றால் உயர்திணை யெனவும், (மக்கள் வாராத தோர் இடத்திருந்து) அங்ஙனங் கூறினா லஃறிணை யெனவு முணரப்படும்

'நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடை'
யென்றவழிப் பெண்பா லென்பதூஉம்,
'நீயே பிறர்நாடு கொள்ளும் காலை'
யென்றவழி யாண்பா லென்பதூஉம்,
'இன்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ'

யென்றவழி யஃறிணை யென்பதூஉ முணரப்படும்.

ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுக லாற்றி னென்றவழிச் சொல்லுவானோடு கேட்டான் ஆடூஉ ஒருமைக் குறித்தா னென்பது விளங்கும். (39)

**196]** பெண்மகன் என்னும்பெயர் பெண்பாற்குரிய வினைகொளல்

மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி
மகடூஉ வியற்கை தொழில்வயினான.

இது, உயர்திணை யொழிபு கூறுகின்றது.

(இ-ள்) மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி—மகடூஉப் பொருண்மைக்கட் பாறிரிந்து வரும் பெண்மக னென்னும் பெயர், தொழில்வயினான மகடூஉ வியற்கை — தொழில் கொள்ளு மிடத்து மகடூஉ வியற்கை — தொழில் கொள்ளு மிடத்து மகடூஉ விற்குரிய தொழில் கொள்ளு மென்றவாறு.

(உ-ம்) பெண்மகன் வந்தாள்.

எனவரும்.

இது, பொருள் பற்றி முடிபு கூறிற்று. (40)

**197]** ஆகார ஈறு செய்யுளில் ஓகாரமாதல்

ஆவோ வாகும் பெயருமா ருளவே
யாயிட னறிதல் செய்யு ளுள்ளே.

இது, பெயரீறு செய்யுளுட் டிரியு மென்கின்றது.

(இ-ள்) ஆ வோ வாகும் பெயருமா ருளவே—ஆகார மோகாரமாயத் திரியும் பெயர்களுமுள, ஆயிட னறிதல் செய்யுளுள்ளே—அத்திரியு மிடமறிக செய்யுளு ளென்றவாறு.

(உ-ம்) வில்லோன் காலன கழலே; தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்
யார்கொ லளியர் தாமே;

'கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
னிழைநெகிழ் பருவரல் செப்பா தோயே.

எனவரும்.

'அழாஅன் கிழாஅன்' என்னு மளபெடைப் பெயரள பெடுத்தாலா வோ வாகா. (41)

193] விரவுப் பெயர் செய்யுளுள் வரும் முறைமை

இறைச்சிப் பொருள்வயிற் செய்யுளுள் கிளக்கு
மியற்பெயர்க் கிளவி யுயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கிற் றோன்ற லான.

இது, விரவுப் பெயர் செய்யுளுள் வரு முறைமை கூறுகின்றது.

(இ-ள்) செய்யுளு ளிறைச்சிப் பொருள்வயிற் கிளக்கு மியற் பெயர்க் கிளவி—செய்யுளுட் கருப் பொருளைக் கூறும் வழிக் கிளக்கப்படு மிருதிணைக்கு முரியபெயர், நிலத்துவழி மருங்கிற் றோன்றலான-நால்வகை யொழுக்கங்களினிடமாகிய விடத்தே யவற்றிற் குறுப்பாய்த் தோன்றலின், உயர்திணை சுட்டா—உயர் திணையை யுணர்த்தா தஃறிணையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு
வதுவை வந்த வன்பறழ்க் குமரி'

என்புழிக் 'கடுவன்' மூலனென்பன வுயர்திணை யாண்பா லுணர்த்து மன்னீற்றுப் பெயர மஃறிணை யாண்பாலையு முணர்த்தி நிற்றலின் விரவுப் பெயராயி

னும். ஈண்டுப் பொருட் குபகாரப்படு மிறைச்சிப் பொரு ளாய் நிற்றலி னஃறிணைப் பெயராம். 'குமரி' யென் பதூஉம் விரவுப் பெயர். (42)

**199]** எய்தியது விலக்கல்

திணையோடு பழகிய பெயரலங் கடையே
இது, எய்தியது விலக்கிற்று.

(இ-ள்) திணையொடு பழகிய பெயரலங் கடையே— கருப்பொரு ளுணர்த்தும் விரவுப்பெய ருயர்திணை சுட்டா தஃறிணை சுட்டுவது திணைதோறு முரிமை பூண்டு வழங்கப் பட்டு வரும் பெயரல்லாத விடத் தென்றவாறு.

எனவே, திணை தோறு முரிமை பூண்டு வழங்கப் பட்டு வரும் பெயர், உயர்திணையும் சுட்டிவரு மென் பதாம்.

(உ-ம்) 'அவளும்'

செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு,
'திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே'

என வரும்,

ஒரெருத்தையுங் 'காளை, விடலை' யெனப் படுதலின் விரவுப் பெயராயிற்று. (43)

தொல்காப்பியம்
2-வது சொல்லதிகாரம்.
ஐந்தாவது.
பெயரியன் முடிந்தது.
ஆகச்சூத்திரம். (199)

# 6. வினை இயல்:

200] வினைச் சொற்குப் பொது இலக்கணம்.

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

என்பது சூத்திரம். இது, நிறுத்த முறையானே வினை யிலக்கண முணர்த்தினமையி, னிவ்வோத்து 'வினை யிய' லென்னும் காரணப்பெயர் பெற்றது. இச்சூத்தி ரம், வினைச் சொற்கெல்லாம் பொதுவிலக்கணங் கூறு கின்றது. (உணர்த்துகின்றது.)

(இ-ள்) வினையெனப் படுவது வேற்றுமை கொள் ளாது - 'வினைச்சொல்' லென்று சொல்லப்படுவது வேற்றுமையோடு பொருந்தாது, நினையுங்காலைக் காலமொடு தோன்றும் — ஆராயுங் காற் காலத்தோடு புலப்படு மென்றவாறு.

'வினை' யென்றது, முதனிலையை. இஃது ஆகுபெய ராய்த் தன்னாற் பிறக்கின்ற சொல்லை யுணர்த்திற்று.

(உ-ம்) உண், தின், கரு, செய், என்பன வினை,
உண்டல் தின்றல் கருமை செம்மை என்பன
வம்முதனிலையாற் பிறந்த வினைப்பெயர்.
உண்டான், தின்றான், கரியன், செய்யன்.

என்பன வம்முதனிலையாற் பிறந்த வினைச்சொல். இங் ஙனம் வினையாற் பிறத்தலின் வினையியலென்றார் (1)

201] காலம் மூன்று

காலந் தாமே மூன்றென மொழிப.

இது, முற்கூறிய காலமினைத் தென்கின்றது.

(இ-ள்) காலந்தாமே மூன்றென மொழிப—மேற் றோற்றுவாய் செய்யப்பட்ட காலந்தாம் மூன்றென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

202] காலத்தின் பெயரும் முறையும் தொகையும்

இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றா
வம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளு
மெய்ந் நிலை யுடைய தோன்ற லாறே.

இது, அக்காலத்திற்குப் பெயரு முறையுந் தொகை யுங் கூறி, அதுதான் குறிப்பிற்கும் உண்டு என்கின்றது.

(இ-ள்) இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றாவம் முக்காலமும்—இறப்பும் நிகழ்வு மெதிர்வு மென்று சொல்லப்படுமம் மூன்று காலமும், குறிப்பொடுங் கொள்ளு மெய்ந்நிலையுடைய — வினைக்குறிப்போடும் பொருந்து முண்மை நிலைமையை யுடைய, தோன்ற லாறே—வினைச்சொல்லான் அக்காலங்க டோன்றும் நெறிக்கண் ணென்றவாறு.

(உ-ம்) உண்டான்.

உண்ணா நின்றான்

உண்பான்.

எனக் காலமூன்றுந் தோன்றி நின்றவாறு காண்க.

கரியன், செய்யன்.

என்பன வினைக்குறிப்பு.

இறப்பாவது, தொழிலது கழிவு; நிகழ்வாவது, தொழிற்றுடங்கி முற்றுப்பெறாம னடக்கின்ற நிலைமை; எதிர்வாவது, தொழில் பிறவாமை.

தொழிலாவது பொருளினது புடைப் பெயர்ச்சி, இஃதிரண்டு கணம் காலத்நின்க ணில்லாமையி னிகழ்ச்சி யென்ப தொன்றின்றாயினும், உண்ணா நின்றானெனப் பஃறொழிற் பகுதிபற்றி நிகழ்ச்சியு முடைத்தாயிற்று. இதனானே, நிகழ்கால மின்றெனடாரும் நிகழ்கால மொன்றுமே யுண்மெடன்பாருமெனப் பலபகுதிய ராசிரிய ரென்பது கொள்க. (3)

**203] வினைச் சொற்களின் பாகுபாடு,**

குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் லெல்லா
முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின தோன்ற லாறே.

இது, வினைச் சொற்களது பாகுபாடு கூறுகின்றது.

(இ-ள்) குறிப்பினும் வினையினும் நெறிபடத் தோன்றிக் காலமொடு வரூஉம் வினைச்சொல் லெல்லாம் — குறிப்புப் பொருண்மைக் கண்ணுந் தொழிற் பொருண்மைக் கண்ணு முறைப்படத் தோன்றிக் காலத் தோடு வருமெல்லா வினைச்சொல்லும், உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையுமாயிரு திணைக்கு மோரன்ன வுரிமையும் — உயர்திணைக்குரிமையுடைமையும் அஃறிணைக் குரிமை யுடைமையும் அவ்விரண்டு திணைக்கு மொப்ப வுரிமை யுடைமையுமென, அம் மூவுருபின தோன்றலாறே - அம்மூன்று கூற்றினை யுடையவாந் தோன்றும் நெறிக்கண் ணென்றவாறு.

(உ-ம்) உண்டான், கரியன்,
சென்றது, செய்யது,
வந்தனை, வெளியை

என வரும். 'காலமொடு வரூஉம்,' எனப் பின்னுங் கூறினார், குறிப்பிற்குங் கால முண்டென்பது வலியுறுத் தற்கு.

இம்முக் காலத்தும் வருதற்குரிய காலங் காட்டு மெழுத்துக்களை யாசிரிய ரெடுத் தோதா ராயினார். பின் னுள்ளோர் காலங்கட் குரியவாக வெடுத்தோதிய வெழுத் துக்க டம்முண் மயங்கியும் வருதலின். ஆசிரியர், அங்ஙன மயங்குதல் பற்றி யெடுத்தோதாமையின், உரையாசிரியரு மவ்வெழுத்துக்களைச் சிறிதே காட்டினார்.

இனிப் பின்னுள்ளோர் காட்டினா ரென்பது பற்றி யும், யாமு மவ் வெழுத்துக்களைப் பிரித்துக் காட்டுதும், சேனாவரையர், அவ்வாறு பிரித்துக் காட்டுகின்றவர், 'நெறிப்படத்தோன்றி' யென்பதனாற் பிரித்துக் காட்டு வர். அது பொருந்தாது, ஆசிரியரெடுத் தோதாமன் மயங்கு மென்றுபோதலின். இதனைச் செய்யுண் மருங் கினு மென்னு மதிகாரப் புறநடையிற் பிரித்தனர் காட்ட லென்பதனாற் பிரித்துக் காட்டுதும். அது மேற்கண்டு கொள்க.

204] உயர்திணைத் தன்மைப் பன்மை வினைமுற்று.

அவைதாம்
அம்மா மெம்மே மென்னும் கிளவியு
மும்மொடு வரூஉங் கடதற வென்னு
மந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே

இது, முறையானே யுயர்திணை முற்றுவினை கூறு கின்றது.

(இ-ள்) அவைதாம் - மேற்பகுக்கப்பட்ட வினையின் முப்பாற் பாகு பாடுமாகிய வவைதா மாமாறினிச் சொல் லுவல், அம்மா மெம்மே மென்னுங் கிளவியும் — அம்மா மெம்மே மென்னும் மீற்றவாகிய சொல்லும், உம்மொடு வரூஉம் கடதற வென்னு மந்நாற் கிளவியொடு — உம் மென்னு மிறுதி இடைச்சொல்லி னுகரங் கடதற வென்னு மொற்றின் மேலேறி கும்மும் டும்மும் தும்மும் றும்மும்

என்னு மீற்றவாகிய வந்நான்கு சொல்லும், ஆயெண் கிளவியும்—ஆகிய வவ்வெட்டுச் சொல்லும், பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே—சொல்லுவான் றன் னோடு பிறரையுங் கூட்டிப் பன்மையினைச் சொல்லும் தன்மைக் குரிய சொல்லாமென்றவாறு.

இச்சூத்திர முதலாக முன்னிலை வியங்கோ ளீறாக முற்றுணர்த்துகின்றார், வினையெச்சமும் பெயரெச்ச மும் ஒழித்து, இச்சூத்திரத்தாற் பன்மைத் தன்மையு மேலைச் சூத்திரத்தா னொருமைத்தன்மையு முணர்த்து கின்றார்.

முன்னர் நின்ற நான்கு மிறந்த காலம் பற்றி வருங் கால் அம், ஆம், என்பன தன்னொடு முன்னின் றாரை யுந் தமராய வழிப் படர்க்கையாரையு முளப்படுத்திக் கடதற வென்னுங் காலவெழுத்தின்முன் அம்அன் பெற்றும், ஆம் அன் பெறாதும் வரும்.

எம் ஏம் என்பன படர்க்கை யாரை யுளப்படுத்தி, யக்கால வெழுத்தின் முன்னர் எம்அன் பெற்றும் ஏம் அன் பெற்றும் பெறாதும் வரும்.

(உ-ம்) நக்கனம், உண்டனம், உரைத்தனம், தின் றனம் நக்கிலம், உண்டிலம், உரைத்திலம், தின்றிலம்,நக்கனமல்லம், உண்டனமல்லம், உரைத்தன மல்லம், தின்றனமல்லம்.

எனவும்.

நக்காம், உண்டாம், உரைத்தாம், தின் றாம், நக்கிலாம், உண்டிலாம், உரைத்தி லாம், தின்றிலாம், நக்காமல்லாம், உண்டாமல்லாம், உரைத்தாமல்லாம், தின்றாமல்லாம்.

எனவும்,

நக்கனெம், உண்டனெம், உரைத்தனெம், தின்றனெம், நக்கிலெம். உண்டிலெம், உரைத்திலெம், தின்றிலெம், நக்கெனமல்லெம், உண்டனமல்லெம், உரைத்தனமல்லெம், தின்றனமல்லெம்,

எனவும்,

நக்கனேம், நக்கேம்.
உண்டனேம், உண்டேம்.
உரைத்தனேம், உரைத்தேம்.
தின்றனேம், தின்றேம்.

நக்கிலேம், உண்டிலேம், உரைத்திலேம், தின்றிலேம். நக்கேமல்லேம், உண்டேமல்லேம், உரைத்தேமல்லேம், தின்றேமல்லேம்.

எனவும் வரும்.

இனி யம்மா (அம் ஆம்) மெனபனவற்றிற்கு,

(உ-ம்) நீயும் யானு முண்டனம்.
நீயும் யானு முண்டாம்.
நீயும் யானு மவனு முண்டனம்.
நீயும் யானு மவனு முண்டாம்.

எனவரும் ஏனையவற்றோடு மொட்டுக.

இனி யெம்மே (எம் ஏம்) மென்பன வற்றிற்கு.

(உ-ம்) யானு மவனு முண்டெனம்
யானு மவனு முண்டனேம்
யானு மவனு முண்டேம். எனவரும்.

அந் நான் கீறு மேனை யெழுத்தின் முன்னர் ஙகாரமும் ழகாரமு மொழித் தின்பெற்று வரும்.

(உ-ம்) அஞ்சினம் தப்பினம்
எனவும்,
உரிஞனம், எண்ணினம், பொருநினம்,
திருமினம், பன்னினம். எனவும்
போயினம், வாரினம், சொல்லினம் மேவினம், எள்ளினம்.

எனவும் வரும். ஒழிந்த மூவிற்றோடு மொட்டுக.

கலக்கினம், தெருட்டினம், அருத்தினம், அரற்றினம், என்பன, ககரவீறும், டகரவீறும், தகரவீறும், றகர விறும் முதனிலைச் சொல்லாய் நின்று இன் பெற்றன.

இனி, இவை நிகழ்காலம் பற்றிவருங்கால் நில்நின் றென்பனவற்றோடு வந்து முற்கூறியவாறே நிற்கும். நில்லென்பது லகரம் னகரமாய்த் தனக்கேற்ற றகரம் பெற்று நிற்கும்.

இனி 'நின்,கின்' னென நிற்கு மென்றுமாம்.

(உ-ம்) உண்ணா நின்றனம், உண்கின்றனம்.
உண்ணா நின்றிலம், உண்கின்றிலம்,
எனவும்,
உண்ணா நின்றாம், உண்கின்றாம்,
உண்ணா நின்றிலாம், உண்கின்றிலாம்,
எனவும்,
உண்ணா நின்றனெம், உண்கின்றனெம்,
உண்ணா நின்றிலெம், உண்கின்றிலெம்,
எனவும்,
உண்ணா நின்றனேம், உண்கின்றனேம்,
உண்ணா நின்றேம், உண்கின்றேம்,
உண்ணா நின்றிலேம், உண்கின்றிலேம்,
எனவும் வரும்.

உண்ணா கிடந்தாம், உண்ணாவிருந்தாம்.

எனக்கிட விரு வென்பனவும் நிகழ்காலத்துவரும.

உண்கிஃறே மெனக் 'கிறு' வென்பது நிகழ்கால முணர்த்துத லிக்கால வழக்கு.

இனி, இவை யெதிர்காலம் பற்றி வருங்காற் பகர மும் லகரமும் பெற்றுவரும். வகர மேற்புழிக் குகரமு முகரமு மடுத்து நிற்கும்.

(உ-ம்) உண்பம், உண்குவம், உரிலுவம், திருமுவம் உண்ணலம். எனவும்,

'உண்பாம், உண்குவாம், உண்ணாம், எனவும்,

உண்பெம், உண்குவெம், உண்ணலெம் எனவும்,

உண்பேம், உண்குவேம், உண்ணேம், எனவும் வரும்.

இனி, அம்மீறு வருங்கால்,
அந்த ணாளனை நகுகம் யாமே
எனவும்
பாடுகம் வம்மின் போதுகம்
எனவும்.
பாடுகம்வா வாழி தோழி.

எனவுங் ககர மெதிர்காலமு முணர்த்தி வரும்.

கூறுவன், சொல்லுவன், போதுவன்.

எனவரும் வகரமும் எதிர்காலம் உணர்த்தும்.

இனி, யும்மொடு வருஉங் கடதற
உண்கும், உண்டும், வருதும், சேறும்
எனவரும்.

யானும் நீயு முண்கும்.
யானு மவனு நீயு முண்கும்.

என எல்லாவற்றோடு மொட்டுக.

இக் கட தறக்கள் முதனிலையை யடுத்து வருங்கா லிறப்பு மீற்றினை யடுத்து வருங்கா லெதிர்வு முணர்த் தும்; இனி இவற்றுட் சிறுபான்மை நிகழ்கால முணர்த்து வனவுமுள. அது, (நிகழ்காலம்)

'சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி
யாமவ ணின்றும் வருதும்.'

எனவரும்.

இனி, 'உறினுதும், திருமுதும்,' என வேனை யெழுத் தின் முன் னுகரம் பெற்று வரும். (5)

**205]** **உயர்திணைத் தன்மை ஒருமை வினைமுற்று.**

கடதற வென்னு
மந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ
டென்னே னல்லென வரூஉ மேழுந்
தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே.

இது, தனித் தன்மையாகிய முற்றுக் கூறுகின்றது.

(இ-ள்) கடதற வென்னு மந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோடு—கடதற வென்னு மந்நான்கு மெய்யை யூர்ந்த குற்றிய லுகரத்தினை யீறாகவுடைய நான்கு சொல்லும், என்னேனல்லென வரூஉமேழும்-என் ஏன் அல், என்று சொல்ல வருகின்ற மூன்றீற்றுச் சொல்லு மாகிய வவ்வேழும், தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே—பிறரை யுளப்படுத்தாது தன்வினையை யுணர்த்துந் தன்மைச் சொல்லா மென்றவாறு.

குற்றுகரம் நான்கும், பெரும்பான்மையும் எதிர் காலத்துஞ் சிறுபான்மை யேனைக் காலத்தும் வரும்.

**(உ-ம்) உண்கு, உண்டு,** வருது, சேறு, **உரினுகு,** திரு முகு என ஈறு போல வெதிர்காலங் காட்டின.

(உ-ம்) கழிந்தது பொழிந்தென வான்கண மாறினுந்
தொல்லது விளைந்தென நிலம் வளங் கரப
பினும்

என்புழிப் பொழிந்தெனவும் விளைந்தெனவும் இறந்த கால முணர்த்தின. நிகழ்காலம் வந்துழிக் காண்க.

'அழா அற்கோ வினியே நோய் நொந் துறைவி' யென்னுங் குறுந்தொகைப் பாட்டினு ளழுதென்னு முடன்பாட்டிற் கழா அற்கென வெதிர் மறை வந்தது.

இனி, யோசை வேற்றுமையாற் ககர உகரமும் றகர உகரமும் வியங்கோண் முற்றாயும் நிற்கும்.

(உ-ம்) நெடுந்தேர்
தாங்குமதி வலவ! வென்றி ழிந்தனன்
'தாங்குநின் னவல மென்றீர்.

எனவும்.

நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ' கூறு.

எனவும் வரும்.

என் ஏனென்பன மூன்று காலமும் பற்றிவரும். இவை காலவெழுத்துப் பெறுங்கால் என் னீற்றெம்மீற் றோடு (என் ஈறு ஈற்றோடும்) மேனீறே மீற்றோடும் (என் ஈறு எம் ஈற்றோடும்) ஒக்கும்.

(உ-ம்) உண்டனென், உண்டிலென், உண்டென
னல்லென் உண்ணாநின்றனென் உண்
கின்றனென், உண்ணா நின்றிலென்,
உண்கின்றிலேன்.

எனவும்,

உண்பென், உண்குவென், உண்ணலென்.

எனவும்.

உண்டனேன், உண்டேன், உண்டிலேன், உண்டனே னல்லேன், உண்ணா நின்றனேன். உண்ணா நின்றேன், உண்கின்றனேன், உண்கின்றேன், உண்ணாநின்றிலேன், உண்கின்றிலேன், உண்பேன், உண்குவேன், உண்ணேன். எனவும் வரும்.

இனிப்பகர வகரங்கள் நிகழ் காலத்தும் வரும்.
கூடநீர் நின்றபெற்றி கண்டிப்பா னோக்குவேற்
கென்புழிப் பார்க்கின்றேற் கெனப் பொருடந்த
வாறுணர்க

பகரம் வந்துழிக் காண்க.

அல்லீறு, பகர வகரம் பெற்றெதிர் காலத்தும் வரும். 'உண்பல், வருவல்' எனவரும். உண்ணா நிற்பலெனச் சிறுபான்மை நிகழ்காலமும் பெறும். ஒழிவல் தவிர்வல் எனவரும் மறை வாய்பாடு மறிக (ஒழி, தவிர், மறை)

வினைகொண்டு முடியுஞ் செய்கென்பதனை யும் மீற்றோ டியைய வைத்தமையாற் செய்கு மென்பதூஉங் காண்கும் வந்தேம் என வினைகொண்டு முடியும். (என்பதுபெற்றாம்) (6)

206] செய்கு என்னும் வாய்பாட்டு வினைமுற்று
வினைகொண்டு முடிதல்

அவற்றுள்
செய்கென் கிளவி வினையொடு முடியினு
மவ்விய றிரியா தென்மனார் புலவர்.

இஃது அவற்றுட் ககர வுகர வீற்றுக்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள்—முற்கூறிய வொருமைத் தன்மை வினை யேழனுள், செய்கென் கிளவி வினையொடு முடியினும்—செய்கென்னு முற்றுச் சொற் பெயரோடு முடி

யாது வினையோடு முடியினும், அவ்விய றிரியா தென் மனார் புலவர்—அம்முற்றுச் சொல்லாந் தன்மையிற் றிரியா தென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) காண்கு வந்திசிற் பெரும!
எனவரும் நோகோ யானே எனப் பெயர்கோடல் சிறு பான்மையாம். (7)

207] உயர்திணைப் படர்க்கை ஒருமை வினைமுற்று·
அன்னா னள்ளா ளென்னும் நான்கு
மொருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இது, படர்க்கை யொருமை முற்றுணர்த்து கின்றது.

(இ-ள்) அன்னா னள்ளா ளென்னும் நான்கும்-அன், ஆன், அள், ஆள், என்னு மீற்றை யுடைய நான்கு சொல் லும், ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே—ஒருவ னொருத்தி யென்னு முயர்திணை யொருமைப் பாடலிடத் துப் படர்க்கையை யுணர்த்துஞ் சொல்லா மென்றவாறு.

இந் நான்கீறு மூன்று காலமும் பற்றி வருங்கா லன்னு மள்ளு மம்மீற்றோடு மானு மாளு மாமீற்றோடு மொக்கும்.

(உ-ம்) உண்டனன், உண்டிலன்,
உண்ணா நின்றனன், உண்கின்றனன்,
உண்ணா
நின்றிலன், உண்கின்றிலன்,
உண்பன், உண்குவன், உண்ணலன்.
எனவும்,
உண்டான், உண்டிலான், உண்ணா
நின்றான்,
உண்ணாநின்றான், உண்கின்றான்,
உண்ணா
நின்றிலான், உண்கின்றிலான்.
உண்பான், உண்குவான், உண்ணான்,
எனவும்,

உண்ட னள், உண்டிலள்,
உண்ணா நின்றனள், உண்கின்றனள், உண்ணா
நின்றிலள், உண்கின்றிலள்,
உண்பள், உண்குவள், உண்ணலள்

எனவும்,

உண்டாள், உண்டிலாள்,
உண்ணா நின்றாள், உண்கின்றாள், உண்ணா
நின்றிலாள், உண்கின்றிலாள்,
உண்பாள், உண்குவாள், உண்ணாள்,

எனவும் வரும்.

உண்டன னல்லன், உண்டா னல்லன்,
உண்டன ளல்லள், உண்டா ளல்லள்,
எனப் பிற வாய்பாட்டான் வருமுறையு மறிக, (8)

208] உயர்திணைப் படர்க்கைப் பன்மை வினைமுற்று

அர் ஆர் பஎன வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இது, படர்க்கைப் பன்மை முற்றுணர்த்துகின்றது.

(இ-ள்) அர் ஆர் பஎன வரூஉம் மூன்றும்—அர் ஆர் ப என்னு மீற்றெழுத்தினை யுடையவாய் வரும் மூன்று சொல்லும் பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே-பல்லோரிடத்துப் படர்க்கைப் பன்மையை யுணர்த்துஞ் சொல்லா மென்றவாறு.

அர் ஆர் என்னும் இரண்டீறும், மூன்று காலமும் பற்றி வரும். இவை காலவெழுத்துப் பெறுங்கா லன் னீற்றோ டாரீறும் ஆனீற்றோ டாரீறு மொக்கும்.

(உ-ம்) உண்டனர், உண்டிலர், உண்ணா நின்றனர் உண்கின்றனர், உண்ணா நின்றிலர், உண் கின்றிலர்.
உண்பர், உண்குவர், உண்ணலர்.
எனவும்,

உண்டார். உண்டிலார்,
உண்ணா நின்றார், உண்கின்கின்றார்,
உண்ணா
நின்றிலார், உண்கின்றிலார்.
உண்பார், உண்குவார், உண்ணார்.
எனவும் வரும்.

உண்டன ரல்லர், உண்டாரல்லர் எனவரும் மறை விகற்பமு மறிக.

பகர மெதிர்காலம் பற்றி வருங்கால் உகரமும் குகரமும் அடுத்து மடாதும் நிற்கும்.

(உ-ம்) உரிநுப, வருகுப.

எனவும், உண்ப எனவும்வரும். 'ஒழிப' தவிர்ப, என மறையும் வரும். உண்ணா தொழிப, என்பதெல்லா வற்றிற்கும் பொது. இது, உண்ணா நிற்பவென நிகழ் காலத்தும் வரும். (9)

209] செய்மார் என்னும் வாய்பாட்டு வினைமுற்று வினை கொண்டு முடிதல்,

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியு மென்ப.

இதுவும், பன்மைக் குரிய வீறும் அதன் முடிபு வேற்றுமையுங் கூறுகின்றது.

(இ-ள்) மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை— முன்னை யனவே யன்றி மாரீற்றுச் சொல்லும்

பல்லோரை யுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம், காலக் கிளவியொடு முடியுமென்ப—அஃது அவை போலப் பெயர்கொள்ளாது வினைகொண்டு முடியு மென்றவாறு.

மார்உகர மடுத்து மடாது நிற்கும்.

(உ-ம்) எள்ளுமார் வந்தாரே யீங்கு
ஆர்த்தார் கொண்மார் வந்தார்
எனவரும. இது எதிர்காலம்.

'நிலவன் மாரே புலவர்'
'பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே'
'நோயமலி வருத்தங் காணன்மா ரெமரே'

என்பன, 'நிலவுக, பாடுக, காண்க., என்னும் வியங் கோட் கெதிர்மறை யென்றுணர்க.

இனி, நிலவுவாா, பாடுவார், காண்பார், என்பன சில வியங்கோண் முற்றென்று கூறி யதற்கெதிர்மறை யாய் நிலவா தொழிவார், பாடாதொழிவார், காணா தொழிவாரென ஏவற் பொருண்மையை யுணர்த்தி நின்றன வென்றலு மொன்று. (10)

210] உயர்திணை வினைமுற்றின் தொகை

பன்மையு மொருமையும பாலறி வந்த
வந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த வுயர்திணை யவ்வே.

இது, விரிந்தது தொகுத்துத் தெரிநிலை வினைக ளுயர் திணைக்குரிய வென்கின்றது.

(இ-ள்) பன்மையு மொருமையும் பாலறி வந்த மூன்று தலை யிட்ட வந்நாலைந்தும்—பன்மையு மொரு மையு மாகிய பாலறிய வந்த விருபத்து மூன்றீற்று வினைச்சொல்லும், முன்னுறக் கிளந்த உயர்திணை

யவ்வே—கிளவியாக்கத்துக் கூறப்பட்ட வுயர்திணையை யுடையனவா மென்றவாறு.

ஈண்டுக் கூறியதனாற் பயன், 'அன்னான்' முதலிய இடைச் சொற்பற்றி யுயர்திணைப் பட்ர்க்கை வினை முற் றுணர்த்துதல்; ஆண்டுக் கூறியதனாற் பயன், வழுக்காத்தற் கவற்றி னீறுகளைத் தொகுத் திலக்கண வழக்குணர்த்துத லென்றுணர்க. (11)

211] உளப்பாட்டுத் தன்மை வினைமுற்றின் திரிபு.
அவற்றுள்,

பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே.

இது, உளப்பாட்டுத் தன்மைக்குத் திரிபு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுட் பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி—முற்கூறப்பட்ட விருபத்து மூன்று சொற்களுள் பன்மையை யுணர்த்துந் தன்மைச் சொல், எண்ணியன் மருங்கிற்றிரிபவை யுள — எண்ணுதல் நடக்கு மிடத் தஃறிணையை யுளப்படுத்தித் திரிவன வுளவென்றவாறு.

(உ-ம்) யானுமென் னெஃகமுஞ் சாறும்.

இஃ தஃறிணையை யுளப்படுத்தல் தன்மைச் சொல்லே யென்னுஞ் சூத்திரத்தான் வந்தது. (12)

212] யார்? என்னும் குறிப்பு முற்று உயர்திணை முப்பாற்கு முரித்தாதல்.

யா அ ரென்னும் வினாவின் கிளவி
யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே.

இது, உயர்திணை வினைக்குறிப்பினு ளொன்று கூறுகின்றது.

(இ-ள்) யா அரென்னும் வினாவின் கிளவி யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே—யாரென்னும் யார்? என்னும்) வினைப்பொருளை யுணர்த்துஞ் சொல் லுயர்திணை மருங்கின் மூன்று பாற்கு முரித்தென்றவாறு.

(உ-ம்) அவன் யார்?
அவள் யார்?
அவர் யார்?

இது, வினைக்குறிப்பாயினும் பல்லோர் படர்க்கையை யுணர்த்தும் ஆரீற்றான் மூன்று பாலையு முணர்த்துதலி னவற்றோடு வையா தீண்டு வைத்தார். உயர்திணைக் குரித்தெனவே யஃறிணைக் குரித்தன்றிச் சிறுபான்மை வருதல் கொள்க. அஃது,

வெண்பா

ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்
கோதைகூட் டுண்ணிய தான்யார்மன் போ—தெல்லாந்
தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
றூதொடு வாராத வண்டு.?

என உண்ணிய வண்டு தான் யாரென அஃறிணைக்கண் வந்தது.

இது திணைவழு வமைதியென்றலு மொன்று. (13)

**213]** ஆன், ஆள், ஆர், ஈற்று ஆ, செய்யுளுள் ஓவாதல்.

பாலறி மரபி னம்மூ வீற்று
மாவோ வாகுஞ் செய்யு ளுள்ளே.

இஃது, அவ்விருபத்து மூன்றீற்றினுண் மூன்றீறு செய்யுளுட்டிரியு மென்கின்றது.

(இ-ள்) பாலறி மரபி னம்மூ விற்றும்—பால்விளங்க வருமியல்பையுடைய 'ஆன், ஆள், ஆர்' என்னும் மூன் றீற்றின் கண்ணும், ஆவோ வாகுஞ் செய்யுளுள்ளே- ஆகார மோகாரமாஞ் செய்யுளிடத் தென்றவாறு.

(உ-ம்) 'வினவி னிற்றந் தோனே'
'நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே'
'வாடா வள்ளியங் காடிறந் தோரே?
எனவரும்,

வந்தோம், சென்றோம்' என்னும் வழக்கு ஏமீற்றின் சிதைவென மறுக்க. (14)

214] 'ஆய்' என்னும் ஈற்று ஆவும் செய்யுளுள் ஓவா தல்.

ஆயென் கிளவியு மவற்றோடு கொள்ளும்.

இது, விரவு வினையு மம்முடிவு பெறு மென்கின்றது.

(இ-ள்) ஆயென் கிளவியு மவற்றோடு கொள்ளும்—முன்னிலை யீற்று ளாயென்னு மீறும் மேற் கூறப்பட்டன போல ஆகார மோகாரமாஞ் செய்யுளு ளென்ற வாறு.

(உ-ம்) 'வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப'!
எனவரும்.

இவ் விரவு வினை யுயர்திணை மேல் வந்தா லா வோ வாம் என்றற்கும் ஆ ஓ ஆதல் அதிகாரப் படுத லானு மீண்டுக் கூறினார். இவை தொழிற் பெய ராயிற் பெயரியலு ளடங்கும். (15)

215] உயர்திணைக் குறிப்பு வினைமுற்று

அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானுங்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானு

மொப்பி னானும் பண்பி னானுமென்
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்.

இது, நிறுத்த முறையானே யுயர்திணை வினைக் குறிப் புணர்த்துகின்றது.

(இ-ள்) அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும் — ஆறாம் வேற்றுமைய துடைமைப் பொருட்கண்ணும், கண்ணென் வேற்றுமை நிலத்தினானும்-ஏழாம் வேற்றுமையது நிலப்பொருண்மைக் கண்ணும், ஒப்பினானும்-உவமத்தின் கண்ணும், பண்பினானும் — பண்பின் கண்ணும், என்றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்-என அப்பொருட் பகுதிபற்றி வருஞ் சொல்லகத்துக் காலங் குறிப்பாற் றோன்று மென்றவாறு.

உடைமை யென்பது உடைமைத் தன்மையு முடைப் பொருளு மென விருவகைப்படும். உடைமைத் தன்மை யாவது, தன் செல்வத்தை நினைந் தின்புறுவதற் கேது வாகிய பற்றுள்ளம். அஃது,

'ஆங்கவை யொருபா லாக'

என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்து 'உடைமை யின் புறல்' என்பதனா னுணர்க. உடைமைப் பொருளாவது ஒன்றற்கு ஒன்றுரிமை செய்து நிற்பது. அஃது, இப் பொருளினுடைய திபபொருளென்று, மிப்பொரு ளிப் பொருளினுடையதா யிருந்த தென்றும், இப்பொருளை யுடையதா யிருந்த திப்பொருளென்றும், மூவகைப்படும். அவை முறையே சாத்தன தாடையென வாறனுருபாயு மாடை சாத்தன தெனவுங் குழையன் கச்சின னெனவும் வினைக்குறிப்பாயும் நிற்கும். உருபுணர்த்தும் வழி யாடை முதலியன பின்னிற்கு மாறுங் குறிப்புணர்த்தும் வழி யாடை முதலியன முன்னிற்குமாறு முணர்க. குழைய னென்புழி, மேல்வந்து முடிக்கும் வினைமுதற் பெயரைத் தோற்று வித்து நிற்கும் அன்னென்னும்

பால் காட்டு மீறு நின்று உடைமைப் பொருளைத் தனக்குரிமை செய்யு முடைமையை விரித்து நிற்குமென் றுணர்க.

இனி, 'இல்லத்தன், புறத்தன்' எனவும், 'பொன்னன் னன், புலி போல்வன்' எனவும, 'கரியன், செய்யன்' எனவும் வரும். கரிய னென்ப திவ்வண்ணமா யிருப்பா னென்னும் பொருளுணர்த்தி முதனிலையாய் நிற்றலிற், பண்பாம் கருமைய னென்பது பண்புப்பெய ருடமைப் பொருளாய் நின்று, 'கருமையை யுடைய' னென வுரு பேற்று நிற்றலினுடைமைப் பொருளாம். இவ்வாற னுடைமைப் பொருட் கிரண்டாவது விரியுமா றென்னை? யெனின்.

வனைந்தா னென்னுந் தெரிநிலை முற்றுச்சொற் செய்தானென்னுங் காரியத்தினை நிகழ்த்துங் காரணங்க ளெட்டினையு முள்ளடக்கி வினைமுதலோ டமைந்து மாறி நின்று அவாய் நிலைதோன்றிய காலத்துச் செயப் படுபொருண் முதலிய வேழினையும் விரித்து நிற்குமாறு போல, உடைய னென்னும் வினைக்குறிப்பு முற்றுச் சொல்லு முடையனாயிருந்தா னென விரிந்துழி யுணரப் படுங் காரியத்தினை நிகழ்த்துங் காரணங்களெட்டி னையு முள்ளடக்கி வினைமுதலோ டமைந்து மாறி நின் றவாய்நிலை தோன்றிய காலத்துச் செயப்படு பொருண் முதலிய வேழினையும் விரித்து நிற்கு மாதலா னுடைய னென்பதனு ளடங்கி நின்ற செயப்படு பொருள் குழையை யென வுருபை விரித்தல் அதற்கியல் பென்றுணர்க இத் தெரி நிலையுங் குறிப்பு மிங்ஙன முருபை விரித்து நிற்றலி னன்றே யாசிரியர்,

'ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்று மதுவே'

என்றது?

தெரிநிலை வினைத் தொழிற் பெயர் காலந் தோன்றி நின்றாற் போலக் 'கச்சினான், இல்லத்தான்' என்றாற் போலுங் குறிப்புப் பெயருங் காலந் தோன்றி நிற்கு மென்றுணர்க.

'தன்னினம் முடித்த' லென்பதனால் 'ஐயாட்டை யான்' துணங்கையன் எனச் சிறுபான்மை காலமும் வினை செய் இடமும் பற்றி வருவனவுங் கொள்க.

'ஒப்பினானு' மென்பதற்கு உதாரண மாகிய பொன்னன்னா னென்ப, தொப்புமைக் குணப் பண் பாதலிற், வினைக்குறிப்பிற்கும் பண்பிற்கும், குணப் பண்பிற்கும் உரியவாக மேற் கூறுகின்ற 'வன்மை' முதலியவற்றோடு வைக்க, வெனின், இக்குண முவ மைக்கும் பொருட்கு மொப்ப நிற்றலி னீண்டு வைத்தார், அவற்றின் வேறென்று கருதி. (16)

216] இதுவுமது

அன்மையி னின்மையி னுண்மையின் வன்மையின்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு
மென்ன கிளவியுங் குறிப்பே காலம்.

இதுவுமது.

(இ-ள்) அன்மையி னின்மையி னுண்மையின் வன்மையின்—அன்மை யின்மை யுண்மை வன்மை யென்னும் பொருள்பற்றி வருவனவும், அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு மென்ன கிளவியும் — அவை போல்வன பிறவுமாய்க் குறிப்புப் பொருண்மையோடு பொருந்து மெல்லாச் சொல்லும், காலங்குறிப்பே — காலங் குறிப்பா னுணரப்படுஞ் சொல்லா மென்றவாறு.

பண்பாவது, ஒரு பொருடோன்றுங் காலத்துடன் றோன்றி அது கெடுந்துணையு நிற்பது.

குறிப்பாவது, பொருட்குப் பின்றோன்றிச் சிறிது பொழுது நிகழ்வது.

அன்மையாவது, எப்பொருளு மல்ல னிறைவன், என்றாற் பண்பை யுணர்த்தியும் அவைதா மிவனல்லன் என்றாற் குறிப்பை யுணர்த்தியும் நிற்கும். இதற்கு உடம்பாடாவ னென்பதாம்.

இனி, உண்மைக் கின்மை மறையென்றுணர்க. உண்மைதான் மூவகைய; அவை, ஆவுண்டு என உண்மையை யுணர்த்தியும்

'எவ்வுயிர்க் கண்ணு மிறைவ னுளன்'

எனப் பண்பை யுணர்த்தியும்,

'மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை யுளன்.

எனக் குறிப்பை யுணர்த்தியும் நிற்கும்'

இன்மையாவது,

'பொய்யர் நெஞ்சிற் புனித னிலன்'

எனப் பண்பை யுணர்த்தியும்,

'மாற்றோர் பாசறை யிலன்

எனக் குறிப்பை யுணர்த்தியும் நிற்கும், இவ்வின்மை தான், 'குழையிலன்; கச்சிலன்' என உடைமைக்கு மறையாயும் நிற்கும். இவற்றிற்குப் பொருளுரைக்குங்காற் குழையை யுடைய னல்லனென அன்மை பெருமாறு முணர்க.

வன்மை யென்றது, வலிபு மொன்றனை வல்லுதலு மாம். அது மெய் வலியனெனப் பண்பை யுணர்த்தியுஞ் சொலல் வல்லனெனக் குறிப்பை யுணர்த்தியும் நிற்கும். இதற்கு மறைவல்ல னல்ல னென்பதாம். அல்லள் அல்லர், இல்லள், இல்லர், உள்ளள், உள்ளர், வல்லள், வல்லர், என வொட்டுக. இவ்வன்மை முதலிய நான்கினது பண்பையுங் குறிப்பையும் ஈண்டுங் கொள்க.

அன்ன பிறவு மென்றதனான் நல்லன், நல்லள், நல்லர். தீயன், தீயள், தீயர், உடையன், உடையள், உடையர் என்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

இவ்விரண்டு சூத்திரத்தாற் கூறியவற்றை யம், மா மெம் மே மென்பன முதலாயவற்று ளேற்பனவற்றோடு படுத்தொட்டிக் கொள்ளுமாறு மேற் கூறுப. (17)

217] உயர்திணைக் குறிப்பு வினைமுற்றின் ஈறு.

பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யுயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

இது, முற்கூறிய வினைக் குறிப்பிற் கீறாமாறு கூறுகின்றது.

(இ-ள்) பன்மையு மொருமையும் பாலறிவந்த — பன்மையு மொருமையுமாகிய பால்களை யறிய வந்த, அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங் காலக் கிளவி— அத்தன்மைத்தாகிய முறைமையினையுடைய காலங் குறித்துக் கோடலோடு வரும் வினைச் சொற்கள், உயர் திணை மருங்கின் மேலைக்கிளவி யொடு வேறுபாடில— உயர்திணை யிடத்து மேற் கூறிய தெரிநிலை வினை ஈறுகளோ டீறு வேறுபா டின்றித் தமக்கேற்பன வற்றைக் கொள்ளு மென்றவாறு.

அவை,

அம், ஆம், எம், ஏம், என், ஏன் என்னுந் தன்மை யீறாறும்,

அன், ஆன், அள், ஆள், அர், ஆர் என்னும் படர்க்கை யீறாறுமாம்.

(உ-ம்) கரியம், கரியாம்,
கரியெம், கரியேம்.
கரியென், கரியேன்,
எனவும்,
கரியன், கரியான்.
கரியள், கரியாள்,
கரியர், கரியார்
எனவும் வரும்,

'உடையம்' நிலத்தும், பொன்னன்னம், அல்லம், என வொழிந்தனவற்றோடு மொட்டுக. (18)

218] அஃறிணைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று
அ ஆ வஎன வருஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை

இது, முறையானே அஃறிணைத் தெரிநிலை வினை கூறுகின்றது.

(இ-ள்) அ ஆ வ என வருஉ மிறுதி யப்பான் மூன்றே—அகர முமாகாரமும் வகர வுயிர்மெய்யுமாகிய விற்றை யுடைய வக்கூற்று மூன்று சொல்லும், பல வற்றுப் படர்க்கை —அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினையாமென்றவாறு

அகர மிறந்தகாலம் பற்றி வருங்காற் 'க, ட, த, ற' வென்னு மந்நான்கின் முன் 'அன்' பெற்றும் பெறாதும் ஏனையெழுத்தின் முன் ஙகார மகார மொழித் தின் பெற்றும், யகரத்தின் முன் சிறு பான்மை யின்னே யன்றி யன்பெற்றும் பெறாதும் வரும்.

(உ-ம்) தொக்கன, தொக்க, தொக்கில.
உண்டன, உண்ட, உண்டில.
வந்தன, வந்த, வந்தில,
சென்றன, சென்ற, சென்றில.

எனவும்,

அஞ்சின, தப்பின.

எனவும்,

உரிஞின, நண்ணின, பொருநின, செருமின திருமின, துன்னின.

எனவும்,

போயின, சேரின, சொல்லின, மேவின துள்ளின.

எனவும்,

போயன, போய

எனவும் வரும்.

இனி, அகரம் நிகழ்காலம் பற்றி வருங்கால் நில், கின்று என்பன வற்றோ டன்பெற்றும் பெறாதும் வரும்.

(உ-ம்) உண்ணா நின்றன, உண்ணா நின்ற, உண்ணா நின்றில. உண்கின்றன, உண் கின்ற, உண்கின்றில.

என வரும்.

இனி, அகர மெதிர்காலம் பற்றி வருங்காற் பகர வகரத்தோ டன்பெற்றும் பெறாதும் வரும்.

(உ-ம்) உண்பன, உண்ப, உண்ணல, வருவன, வருவ.

எனவரும்.

உரிநுவன, உரிநுவ என வுகரம் பெற்றுஏனை யெழுத்தின் கண் வருதலு மேற்புழிக் கொள்க.

இனி, ஆகாரங் காலவெழுத்துப் பெறா தெதிர் காலத்துப் பயின்று மறையாய் வரும்.

(உ-ம்) உண்ணா, தின்னா,

எனவரும்.

இனி, வகர மெதிர்காலத்திற் குரித்தாய்க் குகரம் பெற்றும் பெறாது மேற்றவழி யுகரம் பெற்றும்வரும்.

(உ-ம்) உண்குவ, திண்குவ, உண்ணல.

எனவும்,

ஓடுவ, தாவுவ,

எனவும்,

உரிநுவ, செருமுவ,

எனவும் வரும்.

உண்டனவல்ல, உண்டனவில்லை.

எனபபிற வாய் பாட்டு மறையு மறிக. (19)

219] அஃறிணை ஒருமைத் தெரிநிலை வினைமுற்று
ஒன்றன் படர்க்கை தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

இது, ஒருமை வினை கூறுகின்றது.

(இ-ள்) ஒன்றன் படர்க்கை—ஒன்றனை யுணர்த்தும் படர்க்கை வினையாவது, தறட வூர்ந்த குன்றிய லுகரத்திறுதி யாகும்—தறட வென்னு மொற்றுக்களை யேறி நின்ற குற்றிய லுகரத்தினை யீறாகவுடைய சொல்லா மென்றவாறு.

தகர வுகர மிறந்த காலத்து வருங்காற் கடத றக்கள் அகரம் பெற்றும் ஏனை யெழுத்தின் முன் இகரமும் யகர வுயிர் மெய்யும் பெற்றும், யகர வுயிர் மெய்யே பெற்றும் வரும்.

(உ-ம்) புக்கது, புக்கிலது.
உண்டது, உண்டிலது.
வந்தது, வந்திலது.
சென்றது, சென்றிலது.

எனவும்,

எஞ்சியது, தப்பியது

உரிஞியது, நண்ணியது, பொருநியது
செருமியது, துன்னியது

எனவும்,

போயது, கூரியது, சொல்லியது,
மேவியது, துள்ளியது

எனவும் வரும்.

இனி, 'நில், கின், றென்பன வற்றோடு நிகழ் காலத்தின் கண் அகரம் பெற்று வரும்.

(உ-ம்) நடவா நின்றது, நடவா நின்றிலது.
நடக்கின்றது, நடக்கின்றிலது.
உண்ணா நின்றது, உண்ணா நின்றிலது.
உண்கின்றகு, உண்கின்றிலது,

என வரும்.

இனி, எதிர் காலத்தின்கண் உயிர் மெய்யான பகர வகரம் பெற்று, 'உண்பது, செல்வது' என வரும்.

றகர வுகரம், 'க, ட, த, ற' வென்பனவற்றின் முன் அன்னும், இன்னும், பெற்றும். ஏனை யெழுத்தின் முன்இன் பெற்றும், அவ்வின் னின் னகரந் திரிந்தும் இறந்த காலம் பற்றி வரும்.

(உ-ம்) புக்கன்று, புக்கின்று.
உண்டன்று, உண்டின்று.
வந்தன்று, வந்தின்று.
சென்றன்று, சென்றின்று,

என வரும்.

கூயின்று, கூயிற்று, போயின்று, போயிற் றென ஏனை யெழுத்தோடு மொட்டிக் கொள்க.

வந்தின் றென்ப தில்லினது லகரம் னகரமாய்த் திரிந்த வெதிர்மறை வினையாதல்,

வந்தில, வந்திலன், வந்திலள், வந்திலர்

என்று மேனைப்பாற் சொல்லா னறிக.

இந்த றகர வுகரம்,

'தாலி களைந்தன்று மிலனே'

எனவும்,

'லியந்தன்று மிலனே யிழிந்தன்று மிலனே'

யெனவு முயர்திணைக் கண்ணும் வந்தாலெனின், அவை 'களைந் தான், வியந்தான், இழிந்தா' னென்பன வற்றிற்கு மறையாய்க் 'களைந்திலன், வியந்தில, னிழிந் தில' னென நிற்கின்றவை 'களைந்தன்று மிலன், வியந் தன்று மிலன், இழிந்தன்று மிலன்' என முற்று வினைத் திரி சொல்லாய் நின்றன.

இனி, டகர வுகரம் மூன்று காலத்திற்குமுரிய வினைக் குறிப்பாய்க் 'குண்டு கட்டு, குறுந்தாட்டு' என வரும்.

மேற் குறிப்பினைத் தெரிநிலை வினையோடு மாட் டெறியு மாதலின் இத் தெரிநிலை வினையுட் டகர வுகர வீறில்லது கண்டாண்டு (கண்டு ஆண்டு) மாட்டே றேலாதென வீண்டே கூறினாரென வுணர்க.

கிளவியா கத்துத் திணையும் பாலு மறிவிப்பா னிவ் வீறுகளை விதந்தோதினார், ஈண்டிவை யின்ன இடம் பற்றி யுணர்த்து மென்றார். (20)

220] அஃறிணை வினைமுற்றின் தொகை

பன்மையு மொருமையும் பாலறி வந்த
வம்மூ விரண்டு மஃறிணை யவ்வே.

இது, விரிந்தது தொகுத்துத் திணைக்குரிமை கூறு கின்றது

(இ-ள்) பன்மையு மொருமையும் பாலறிவந்த-பன் மையு மொருமையுமாகிய பாலறிய வந்த, அம்மூவிரண்டு மஃறிணை யவ்வே—அவ்வா றீற்றுச் சொல்லு மஃறிணை யுடையனவா மென்றவாறு. (21)

221] எவன்? என்னும் குறிப்பு முற்று
அஃறிணை இருபாற்கும் உரித்தாதல்.

அத்திணை மருங்கி னிருபாற் கிளவிக்கு
மொக்கு மென்ப வெவனென் வினாவே

இது, அஃறிணை யிருபாற்கு முரியதோர் வினைக் குறிப்புக் கூறுகின்றது.

(இ-ள்) எவனென் வினா—எவனென்னும் வினாச் சொல் அத்திணை மருங்கினிருபாற் கிளவிக்கு மொக்கு மென்ப—அஃறிணையிடத் தொருமை பன்மையாகிய விருபாற் பொருண்மைக்கும் மிகுதி குறைவின்றி ஒக்கு மென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) அஃதெவன்? அவையெவன்?
எனவரும்

னகரவீறா யிருபாற்கும் பொதுவாய் வருதலின் வேறே கூறினார். 'நுமக்கிவ னெவனா?' மென்பது, முறைபற்றி நிற்றலி னஃறிணைக்கண் வந்ததாம்.

படுத்த லோசையான் எவனென்பது பெயருமாம்*
(22)

* இதன்பின் 'அஃது இக்காலத்து 'என்' என்றும், 'என்னை?' என்றும் மருவிற்று,' என்னும் வாக்கியம் பழையபதிப்பில் [உள்ளது.

222] அஃறிணை குறிப்பு வினைமுற்று.

இன்றில வுடைய வென்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியு முளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியு
மொப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்.

இஃதஃறிணை வினைக் குறிப்புக் கூறுகின்றது.

(இ-ள்) இன்றில உடையவென்னுங் கிளவியும் இன்று இல உடைய வென்னுஞ் சொற்களும், அன்றுடைத்தல்ல வென்னுங்கிளவியும்—அன்று உடைத்தல்ல வென்னுஞ் சொற்களும், பண்புகொள் கிளவியும்—பண்பைத் தனக்கடியாகக் கொண்ட சொல்லும், உள வென் கிளவியும்—உளவென்னுஞ் சொல்லும், பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்—நிறப்பண்பாலுங் குணப்பண்பாலு முளதாகிய சினையொடு முதலை யுணர்த்துஞ் சொல்லும், ஒப்பொடு வருஉங் கிளவி யொடு தொகைஇ—உவமப் பொருள் பற்றி வருஞ் சொல்லோடே தொக்கு, அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்—அக் கூற்றுப் பத்துச் சொல்லும் காலங் குறித்துக் கோடலோடு வினைச் சொல்லாக் கொள்ளப் படு மென்றவாறு.

(உ-ம்) இன்று, இல,
உடைத்து, உடைய,
அன்று, அல்ல,
உள.

என்பன ஒருமையும் பன்மையுமாகிய வாசகத்தை யுணர்த்தி நின்றன. அல்லன பொருளுணர்த்தி நின்றன.

உண்டென்னுஞ் சொல் உண்மையை யுணர்த்துங் காலின் றென்னுஞ் சொல்லும் அதற்கு மறையாய், 'முயற்குக் கோடின் றெனப் பொய்மை யுணர்த்தியும் அவ்வுண்டென்னுஞ் சொற் பண்பை யுணர்த்துங் கால் அவ்வின் றென்னுஞ் சொல்லும் அதற்கு மறையாய இக் குதிரைக் கெக்காலமு நடையின்றெனப் பண்பை யுணர்த்தியும், அவ்வுண்டென்னுஞ் சொற் குறிப்பை யுணர்த்துங்கா லின்றென்னுஞ் சொல்லு மதற்கு மறை யாய் இக்குதிரைக் கீண்டு நடையின்றெனக் குறிப்பை யுணர்த்தியு நிற்கும். 'பொருண்மைசுட்ட,' லென்பதனா லுண்மையை யுணர்த்துதலும் உண்டென் கிளவி யுண்மை செப்பின் என்பதனான் வினைக்குறிப்பும் பண்பு முணர்த்தினமையும் பெற்றாம்.

இனி 'உள' வென்னும் பன்மைக் கில வென்னும் பன்மை மறையாம். இதற்குள தென்னு மொருமையீறு சிறுபான்மையாதலிற் கூறிற்றிலர். அது தான், 'மா வுள' வெனப் பண்பை யுணர்த்தியும் ஈண்டு நெல்லுள தெனக் குறிப்புணர்த்தியும் நிற்கும்.

இனி, 'அறஞ் செய்வார்க்குத் துன்பங்களில,' எனப் பண்புணர்த்தியும், ஈண்டுழுந்தில, எனக் குறிப்புணர்த்தி யும் நிற்கும்.

இனி, உடைத்து, உடையவென ஒருமையும் பன்மையுமாய்ப் பெரும்பான்மை யுறுப்பின் பிறிதின் கிழமையும் பற்றிவரும்.

இவ்வெருது கோடுடைத்து.
இவ்வெருதுகள் கோடுடைய.

எனப்பண்பை யுணர்த்தியுங், குருதிபடிந் துண்ட காகங்குக்கிற் புறமுடைத்து உடைய; வெனக் குறிப் புணர்த்தியும் நிற்கும.

'இன்றில வென்பன இவ்வுடைமைக்கு மறுதலை யாய்க் 'கோடின்று; கோடில' வெனநிற்கும். இவற் றிற்குப் பொருளுரைக்குங்காற் கோடுடைத் தன்று; கோடுடைய வல்ல,' என 'அன்று, அல்ல' வென்னும் வாசகம் வருமாறு முணர்க.

இனி, 'அன்று, அல்ல' வென்பன வொருமையும் பன்மையு முணர்த்தும். 'உழுந்தன்று பயறு; உழுந் தல்ல பயறு,' எனப் பண்புணர்த்தியும், வேலன்று வென்றி தருவ தெனவும், படையல்ல வென்றி தருவன,' வெனவுங் குறிப்புணர்த்தியும் நிற்கும்.

ஒன்றென முடித்தலான் நன்று தீது நல்ல தீய வெனன்பனவுங் கொள்க.

பண்பு கொள் கிளவி: கரிது, கரிய
பண்பினாகிய சினைமுதற் கிளவி: வெண்கோட்டது, வெண்கோட்டன : நெடுஞ் செவித்து, நெடுஞ் செவிய.
ஒப்பொடு வருஉங் கிளவி: பொன்னன்னது, பொன்னன்ன
என வரும்.

இனி,

'அறிந்த மாக்கட் டாகுக தில்ல'
'மெல்விரன் மந்தி குறைகூறுஞ் செம்மற்றே!'
மேற்று, வைகிற்று.
'அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே.'

என்பன பிறிதின் கிழமையாகிய வுடைமைப் பொருள் பட நின்றன.

'வடா அது, தெனா அது'

என்பன ஏழனுருபின் பொருள்பட வந்தன.

மூவாட்டையது, செலவிற்று

என்பன காலமுந் தொழிலும்பற்றி வந்தன. இவையெல்லாம் உரையிற் கோடலாம். (23)

223] அஃறிணைக் குறிப்பு வினைமுற்றின் ஈறு.

பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

இஃது, அவ்வினைக் குறிப்பிற் கீறாமாறு கூறுகின்றது.

(இ-ள்) பன்மையு மொருமையும் பாலறி வந்த—பன்மையு மொருமையுமாகிய பால்களையறிய வந்த, அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங் காலக் கிளவி— அத்தன்மைத் தாகிய முறைமையினையுடைய காலங் குறித்துக் கோடலோடு வரும் வினைச்சொற்கள், அஃறிணை மருங்கின் மேலைக்கிளவியொடு வேறுபாடில-அஃறிணையிடத்து மேற்கூறிய தெரி நிலை வினை யீறுகளோடு வேறுபாடில வென்றவாறு.

அகரமுந் தகர றகர வுகரமும் பெரும்பான்மை யவ்வீறு பற்றிப் பாலுமிடமு முணர்த்துதன் முற்காட்டியவற்றுட் காண்க.

இனி, ஆகார மிம்மணி நல்ல வென்னு முடன்பாட்டுக் குறிப்பிற் 'கிம்மணி பொல்லா' வெனவரும்.

இனி, வகரம்,

கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை?
யென்புழிக் 'கதத்தினை யுடைய' வெனவரும்.

இனித்தெரிநிலை யுடன் கூடிய டகர வுகரம் பூணை யுடைத் தென்னும் பொருண்மைக்கண், பூட்டு எனவும்' இடத்தென்னும் பொருண்மைக்கண்

'வகை தெரிவான் கட்டே யுலகு'

எனவும், எந்நாள தென்னும் பொருண்மைக்கண், எந் நாட்டாகும் நும் போரே?

எனவும், 'விளைவினை யுடைத்' தென்னும் பொருண் மைக்கண்

'வேலி யாயிரம் விளையுட்டாக:'

எனவும், குழிவினை யுடைய கண்ணை யுடைத்,' தென்னும். பொருண்மைக்கட்

'குண்டு கட்டு,'

'எனவும் பொருளிடங் காலந் தொழி லுறுப்'பென்னு மைவகைப் பெயரு மடியாக வரும்.

ஓடவற்று; ஓடவல்ல.
ஓடவல்லாது; ஓடவல்லா.

என்பனவுங் கொள்க (24)

224] விரவு வினையின் பெயரும் முறையும் தொகையும்

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
யின்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னு
மம்முறை நின்ற வாயெண் கிளவியும்
பிரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய.

இது நிறுத்த முறையானே விரவுவினை யுணர்த்து கின்றவற்றின் பெயரு முறையுந் தொகையுங் கூறு கின்றது.

(இ-ள்) முன்னிலை—எதிர்முகமாய் நின்ற பொரு ளினது தொழிலுணர்த்து முற்றுச் சொல்லும், வியங் கோள் படர்க் கைப்பொருண்மே லேவற் பொருண்மை யைக் கொண்டு வரும் முற்றுச் சொல்லும், வினையெஞ்சு

கிளவி-முடிக்கும் வினையை யொழிபாகவுடைய வினைச் சொல்லும், இன்மை செப்பல்—இன்மை யென்னும் பண்பினையுணர்த்து மில்லை யென்னும் வினைக் குறிப்பு முற்றுச் சொல்லும், வேறென் கிளவி—வேறென்னும் வேறுபாடு தன்னை யுணர்த்திநிற்கும் வினைக் குறிப்பு முற்றுச் சொல்லும், செய்ம்மன—'மன' விற்றெச்சமாய் எதிர் கால முணர்த்துஞ் செய்ம்மன வென்னுஞ் சொல் லும், செய்யும்—முற்று மெச்சமுமாய் உம் மீற்றானிகழ் காலமுணர்த்துஞ் செய்யு மென்னுஞ் சொல்லும், செய்த—அகர வீற்றெச்சமா யிறந்தகால முணர்த்துஞ் செய்த வென்னுஞ் சொல்லும், என்று மம்முறை நின்ற வாயெண் கிளவியும்—என்று சொல்லப்பட்ட வவ்வடை வின் கணின்ற வவ்வெட்டுச் சொல்லும், பிரிபு வேறு படூஉஞ் செய்தியவாகி—பொதுமையிற் பிரிந்தொருகா லுயர்திணையையு மொருகா லஃறிணையையு முணர்த்தி வேறுபடுந் தொழிலை யுடையவாய், இரு திணைச் சொற்கு மோரன்ன வுரிமைய—இருதிணையை யுணர்த் துஞ் சொல்லாதற்கு மொத்தவுரிமையவா மென்ற வாறு.

'என் செய்யா நின்றா னென்று வினாய வழி' உண்ணா நின்றானெனச் செப்புதலிற் செய்யென்னும் வாசக மெல்லாத் தொழிலினையு மகப்படுத்தி நிற்றல் பெற்றாம். இரு திணைக்கும் பொது வாயதோர் பொருளின்மையா னதனானிகழும் விரவுத் தொழி லென்ப தொன்றின்றா லெனின், அவ்விரவுத் தொழிலைக் கூறுகின்றவ னதனை நிகழ்த்திய வினை முத லுயர்திணை யஃறிணை யென்பதுணர்ந்தே கூறுமாயினும், பால் காட்டு மீறின்மை காரணத்தாற் கேட்டோருணர்வு இரு திணை வினைமுதன் மேலு மொருங்கு சேறலான், அவ்வினை முதற் பொதுமையா னிகழும் விரவுத் தொழிலு முளவாயின. (25)

225] முன்னிலை ஒருமை வினை முற்று

அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இஐ, ஆயென வரூஉ மூன்றும்
ஒப்பத் தோன்று மொருவர்க்கு *மொன்றற்கும்.

இது, முறையானே முன்னிலை யொருமைவினை கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள் முன்னிலைக் கிளவி—அவ்வெட்டனுண் முன்னிலைச் சொல்லாமாறு சொல்லுவல், இஐ ஆயென வரூஉம் மூன்றும்—இ ஐ ஆ யென்று சொல்ல வருகின்ற மூன்றீற்றுச் சொல்லும், ஒருவர்க்கு மொன்றற்கு மொப்பத் தோன்றும்—உயர்திணை யாண் பாலும் பெண் பாலுமாகிய வொருமைப் பாற்கு மஃறிணை யொருமைப் பாற்கு மிகுதி குறைவின்றி யொப்பத் தோன்று மென்றவாறு.

இகரம், 'ட,த,ற' வூர்ந் தெதிர் காலம் பற்றி வரும்.

(உ-ம்) உண்டி, உரைத்தி, தின்றி.
இவற்றை 'உண்பை, உரைப்பை, தின்பை' என விரிக்க.

இனி
உரைக்கிற்றி.

'நன்றுமன் னென்னிது நாடாய் கூறி'

என நிகழ்வு பற்றியும் வரும்.

இவை தா மெடுத்த லோசையாற் கூறும் வழி,

உண்பாய், உரைப்பாய், தின்பாய்,

என வேவற் பொருண்மையு முணர்த்தும்.

---

*ஒருவர்க்கும் (பா.பே.)

இனி,

ஐய! சிறிதென்னை யூக்கி'

எனவும்,

'ஈதன்மாட் டொத்தி பெரும!'

எனவும் ககரமுந் தகரமும் பெற்ற இகர மேவல் கண்ணியே நிற்கும். இதற்குப் 'பிரிந்துறை சூழாதி,' யென்பது மறை.

இனி, ஐகாரம் அம்மீற்றுக் குரிய வெழுத்துப் பெற்றும் ஆயீறா மீற்றிற் குரிய வெழுத்துப் பெற்றும், மூன்று காலத்தும் வரும்.

(உ-ம்) உண்டனை, உண்ணாநின்றனை, உண்பை, உண்குவை, கரியை,

எனவும்,

உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய், கரியாய்

எனவும் வரும்.

'உரிஞினை, உரிஞினாய், என வேனை யெழுத்தோடு மொட்டுக.

உரையென்றா லேவற் கண்ணுமாறு முணர்க. 'உண்ணா நிற்றி' யென்ப, தெதிர்காலத்துப் பிறந்த நிகழ்காலம்.

இனி,

உண்டிலை, உண்ணா நின்றிலை, உண்ணலை,

எனவும்,

உண்டிலாய், உண்ணா நின்றிலாய், உண்ணவாய்,

எனவும் மறைவரும். (26)

226] முன்னிலைப் பன்மை வினைமுற்று

இர் ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினுஞ்
சொல்லோ ரனைய வென்மனார் புலவர்.

இது, முன்னிலைப் பன்மை கூறுகின்றது.

(இ-ள்) இர் ஈர் மின்னென வரூஉ மூன்றும்—இர், ஈர், மின்னென்று சொல்ல வருகின்ற மூன்றீற்றுச் சொல்லும், பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்—உயர் திணைக் கட் பல்லோரிடத்தினு மஃறிணைக்கட் பல வற்றிடத்தினும், சொல்லோ ரனைய வென்மனார் புலவர்—சொல்லுதலை யொரு தன்மையாக வுடைய வென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

'இர்' ஈறு 'அர்' ஈற்றுக்குரிய வெழுத்தும் (ஈர், ஈறு' 'ஆர்' பெற்றும், ஈரீறு ஆரீற்றுக் குரிய வெழுத்தும் பெற்று மூன்று காலத்தும் வரும்.

(உ-ம்) உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்பிர், உண்குவிர்.

எனவும்,

உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர். உண்குவீர்

எனவும் வரும்.

'மின்' பிறவெழுத்துப் பெறாது, ஏற்றுழி யுகரம் பெற்றெதிர் காலத்து வரும்.

(உ-ம்) உண்மின்களே, அடுமின்சோறே, உரிஞுமின் எனவரும்,

இதற்கு 'உண்பீர், அடுவீர், உரிஞுவீ ரென விரிக்க.

'காளங் கடத்தி ரெனக் கேட்பின்'
என்புழிக் 'கடவா நின்றீ' ரென நிகழ் காலத்துத் தகரம் வந்தது. இஃது எதிர் காலத்தும் வரும்.

இனி, முன்னிலை வினைக்குறிப்பு, உயர்திணை வினைக்குறிப்பிற் கோதிய பொருள்பற்றி ஐயும் ஆயும் இருவு மீரு மேன்னும் நான்கீற்றவாய்,

கழலினை; நாட்டை; பொன்னன்னை, கரியை.
கழலினாய், நாட்டாய், பொன்னன்னாய், கரியாய்.
கழலினிர், நாட்டினிர், பொன்னன்னிர், கரியிர்.
கழலினீர், நாட்டினீர், பொன்னன்னீர், கரியீர்.
எனவரும்.

'போறி' யென்பது, 'போன்றனன், போன்றா னென்பது போலவந்த தெரிநிலைவினை.

இனி,

உண்டிலிர், உண்ணாநின்றிலிர், உண்ணலிர்,
உண்டிலீர், உண்ணாநின்றிலீர், உண்ணலீர்,
உண்ணன்மின்
என மறைவரும்.

மேலெச்ச வியலுண் 'முன்னிலை முன்ன' ரென்னுஞ் சூத்திரத்தாற் பெற்ற முன்னிலைகளுண் மொழிக்கீறா மெனப் பட்ட 'நட, வா, விரி, ஈ, கொடு, , கூ, மே, கை, நொ' போ, வெள,' வென்னு முயிரீறு பதினொன் றும், 'உரிஞ், மண, பொருந், திரும், தின், தேய், பார், செல், தெவ், தாழ், கொள், ளென்னும் புள்ளி யீறு பதி னொன்றும், 'போக்கு, பாய்ச்சு, ஊட்டு, நடத்து, எழுப்பு, தீற்று, வெஃகு' என எழுவகையாகிய குற்றிய லுகரவி றொன்றுமாக வெழுத்துவகை யிருபத்து மூன்று மெடுத்த லோசை யான் முன்னிலை யேவ லொருமை

முற்றாய் நிற்கும். இவை தாமே படுத்த லோசையா னச்செய்கைமேற் பெயர்த் தன்மைப் பட்டு முதனிலை யாயும் நிற்கும். அங்ஙன முதனிலையாய் நிற்குங்கால் 'நடந்தான், வந்தான், விரிந்தான், ஈந்தான், கொடுத் தான், கூவினான், மேவினான், கைத்தான், நொந்தான், போயினான், வெளவினான் என உயிரீறு பதினொன் றும், உரிஞ்னான், மண்ணினான். பொருநினான், திருமி னான், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென் றான், தெவ்வினான், தாழ்ந்தான், கொண்டான். எனப் புள்ளி யீறுபதினொன்றும், போக்கினான், பாய்ச்சி னான், ஊட்டினான், நடத்தினான், எழுப்பினான் தீற்றினான், வெஃகினான்' எனக் குற்றிய லுகர வீறொன்றுமாக முற்றுச் சொல் விரிந்து நின்றவா றுணர்க.

'நடந்து வந்தான், வந்துபோனான், விரிந்து கிடந் தான், ஈத்து வந்தான் எனவும், நடந்த சாத்தன், வந்த சாத்தன், விரிந்த சாத்தன், ஈத்த சாத்தன் எனவும். உரிஞி வந்தான். பொருநி வந்தான்,' எனவும், உரிநின சாத்தன், பொருநின சாத்தன் எனவும், வினை யெச்சத் திற்கும் பெயரெச்சத்திற்கும் இவ்வாறே யொழிந்த முதனிலைகளையும் விரித்துக் கொள்க.

முற் காட்டிய முன்னிலை யேவ லொருமை முற் றுக்க ளொருவனை நோக்கி யொன்றனை யொரு தொழிலைச் செய்வியென்னும் பொருண்மைக்கண் 'நடத்துவி, நடப்பி, வருவி, விருவி, விருப்பி, ஈப்பி, கொடுப்பி, கூவுவி, மேவுவி, கைப்பி, நொவ்வுவி, போக் குவி, வெளவுவி, உருநுவி, மண்ணுவி, பொரு நுவி, திருமுவி, தின்பி, தேய்ப்பி, பார்ப்பி, செலுத்துவி, தெவ்வுவி, தாழ்த்துவி, கொள்ளுவி, வெஃகுவி, என வெதிர்காலத்திற் குரிய வகரமும் பகரமும் முன்னிலைக் குரிய விகர மேறி யிடைநிலைக்குரிய வெழுத்துக்களும் பெற்று எடுத்த லோசையான் நிற்கு மென்றுணர்க.

இன்னு மவைதாம் படர்க்கை யிடத்துப் பால் காட்டு முற்றாய், 'நடத்துவித்தான், நடப்பித்தான், வரு வித்தான் விரிவித்தான், விரிப்பித்தான், ஈப்பித்தான், கொடுப்பித்தான் கூவுவித்தான், மேவுவித்தான், கைப் பித்தான், நொவ்வுவித்தான், போக்குவித்தான், வெளவு வித்தான், உரிஞ்சுவித்தான், மண்ணுவித்தான், பொருநு வித்தான், திருமுவித்தான், தின்பித்தான், தேய்ப்பித் தான், பார்ப்பித்தான், செலுத்துவித்தான், தெவ்வுவித் தான் தாழ்த்துவித்தான், கொள்வித்தான், அஃகுவித் தான், (வெஃகுவித்தான்) எனவருங்காலிடை நிலையாகிய வெழுத்துக்களும் பெற்று முன்னரெடுத்த லோசையா யிடை நின்ற வீறாகிய விகரம் படுத்த லோசைப்பட்டிடை நிலையாய் நிற்கு மென்றுணர்க.

இனி, நடத்துவிப்பி, வருவிப்பி, நடப்பிப்பி, எனவும் வருமென்று கூறி யிவற்றை யிருமடி யேவலென்பாரு முளர். இவற்றை யிரு காலேவுதல் கூறியது கூறலா மாதலி, னிவையிழிவழக்கென்று மறுக்க.

இனி, உண்ணும், தின்னு மெனப் பன்மைக்கண் வரும் உம் மீறும், உண்ணலென வருமல்லீற்று மறை யும், மறாலென வரு மாலீறும், அகையே லமர் தோழி யமே லென வரு மேலீறும் உண்டுகாண் சொல்லிக்கா ணென வரும் காணீறு மாகிய சொல்வகையைந்தும் முன்னிற் சூத்திரத் தெதிர்கால மொன்றினும் வரும் இகரம் முற்கூறிய முறையன்றிக் கூற்றினாற் கொள்க

முற் கூறிய வெழுத்து வகை யிருபத்து மூன்றுஞ் சொல் வகையைந்து மாகிய விருபத்தெட்டும் முன்னிலை யேவலொருமை முற்றென்றுணர்க நடவாய், வாராய்,. உண்ணாய், தின்னாய், என்னுஞ் சொற்கள் ஆயீறு கெட்டு, நட, வா, உண், தின் எனநிற்கு மென்று சேனாவரையர் கூறினாரா லெனின், அது பொருந்தா

மை யெச்ச வியலுட் செய்யா யென்னு முன்னிலை வினைச் சொல்லென்னுஞ் சூத்திரத்துட் கூறுதும். (7)

227] முன்னிலை ஒழிந்த ஏனை வினைகள்.

எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி
யைம்பாற்கு முரிய தோன்ற லாறே.

இது முன்னிலை யொழிந்தவற்றி னிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) எஞ்சிய கிளவி-முன்னிலை வினை யொழித்து ஒழிந்த வேழு வினைச்சொல்லும், இடத் தொடு சிவணியைம்பாற்கு முரிய—மூன்றிடத் தொடும் பொருந்தி ஐந்து பாற்கு முரியவாம, தோன்றலாறே- அவை தத்தம் பொருட்கட்டோன்று மிடத் தென்றவாறு.

மேல் விலக்குவன ஒழிந்தன வீண்டுக் காட்டுதும்.

(உ-ம்) அவன் செல்க, அவள்செல்க, அவர்செல்க,
அதுசெல்க, அவைசெல்க.
எனவும்,

உழுது வந்தேன், உழுது வந்தேம்
உழுது வந்தாய், உழுது வந்தீர்.

உண்டுவந்தான், உண்டு வந்தாள், உண்டு வந்தார், உழுது வந்தது, உழுது வந்தன
எனவும்,

யானில்லை, யானும்நீயுமில்லை, யானுமவனு மில்லை, யானும் நீயுமவனு மில்லை.

நாமில்லை, யாமில்லை
நீயில்லை, நீயிரில்லை

அவனில்லை, அவளில்லை, அவரில்லை, அது வில்லை, அவையில்லை.
எனவும்.

யான் வேறு, யானும்நீயும் வேறு, யானும்வனும்
', யானும் நீயு மவனும் வேறு.

நாம் வேறு, யாம் வேறு.
நீ வேறு, நீயிர் வேறு.

அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு
[அவை வேறு.

எனவும்;

யான் உண்மன, யானும் நீயும் உண்மன, யானு
ு முண்மன, யானும் நீயு மவனு முண்மன,
ண்மன, யாமுண்மன, நீ யுண்மன, நீ யிருண்மன,
ுண்மன, அவளுண்மன, அவருண்மன, அதுவுண்
அவை யுண்மன

எனவும்,

யானுண்ணு மூண்
யானும் நீயு முண்ணு மூண்
யானுமவனு முண்ணு மூண்
யானும் நீயு மவனு முண்ணு மூண்
நா முண்ணு மூண்
யா முண்ணு மூண்
நீ யுண்ணு மூண்
நீயி ருண்ணு மூண்
அவனுண்ணு மூண்
அவளுண்ணு மூண்
அவருண்ணு மூண்
அது வுண்ணு மூண்
அவை யுண்ணு மூண்

எனவும்

அவன் வரும், அவள் வரும், அது வரும், அவைவரும்

எனவும்

யானுண்ட வூண்
யானும் நீயு முண்ட வூண்
யானு மவனு முண்ட வூண்
யானும் நீயுமவனு முண்ட வூண்
நாமுண்ட வூண்
யாமுண்ட வூண்
நீயுண்ட வூண்
நீயிருண்ட வூண்
அவனுண்ட வூண்
அவளுண்ட வூண்
அவருண்ட வூண்
அதுவுண்ட வூண்
அவையுண்ட வூண்

எனவும் வரும்

வியங்கோளும், மனவீறு மெதிர் கால முணர்த்தும். இன்மை செப்பலும், வேறெனபதும் மூன்றுகாலமு முணர்த்தும்.

'உண்மன 'வென்பது' யானுண்ணும் நீயுண்ணும் அவனுண்ணு மென்னும் பொருண்மை யுணர்த்தி யெச்ச நீர்மைத் தாயிறந்த வழக்கிற்றாய் வரும். இச் செய்யு மென்னும் வாசகத்துக்கு அக்காலத்து மனவென்னும் வாசகத்தானும் வழங்கு தலினாசிரியர் மனவென்பதனை யீண்டு வேறாக வோதி வெழுத்தோத்தி னுள்ளுஞ் செய்ம் மன வென்னுந் தொழிலிறு சொல்லுமென்றார் (28)

228] வியங்கோள் முற்றுத் தன்மை முன்னிலைகளில் வாராது என்பது.

அவற்றுண்
முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி.

இஃதெய்தியது விலக்கிற்று

(இ-ள்) அவற்றுண் — மேலெஞ்சிய கிளவியென்னப் பட்ட வேழனுள், வியங்கோட்கிளவி — ஏவற் பொருண்மை முற்ற முடித்தலை யுணர்த்துஞ் சொல், முன்னிலைத் தன்மை யாயீரிடத்தொடும் மன்னாதாகும் —முன்னிலையுந் தன்மையுமாகிய அவ்விரண்டிடத்துப் பொருளோடு மஃறிணைக்கட் பெரும்பான்மையும் நிலைபெறாது உயர்திணைக்கட் பெரும்பான்மையும் நிலைபெறு மென்றவாறு.

எனவே, படர்க்கைப் பொருட்கண் இரு திணைச் சொற்கு மோரன்ன வுரிமையவாம். இதற் குதாரண முன்னர்க் கூறிக் காட்டினாம்.

நோயுமின்பமு மென்னும் பொருளியற் சூத்திரத்திற்

'சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்'

என்றும், 'ஞாயிறு திங்க' ளென்னுஞ் செய்யுளியற் சூத்திரத்திற்

'சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்'

என்றும் அஃறிணை யேவற் பொருண்மையை முற்ற முடியாமையைக் கூறுகின்ற வாசிய ரவற்றிற் கேற்ப வீண்டும் முன்னிலைக்கண் வரூஉ மஃறிணை யேவற் பொருண்மையை முற்ற முடியா தென்ப துணர்த்து தற்கு மன்னா தாகு மென்றார். எனவே யஃறிணைக் கண் வரு முன்னிலை லியங் கோட் கோரன்ன வுரிமை யின்றென் றாராயிற்று. தன்மை யஃறிணைக்கின்மை கூறல் வேண்டா வாயினு முயர்திணைக்கட் சிறு பான்மை வழங்குதல் பற்றி யுடனோதினார்.

முற் கூறிய நட வா முதலிய விருபத்து மூன்றீற்று

முன்னிலை யேவ லொருமையு மஃறிணைக்கண் வருங்கா லேவல் வினையை யுணர்ந் தவை முற்ற முடியா வென்ப தனை யுணர்த்துமதனை யேவுதன் மரபன்று என்று கருதி யாசிரிய ரிங்ஙன மோதினார்.

அவைதாங், கூறுகின்றவர் கருத்தான் ஏவல் கண்ணியே வரும். உயர்ந்தா னிழிந்தானை யின்னது செய்க வென விதித்த லேவல் கண்ணியது. இழிந்தா னுயர்ந்தானை இன்னது செய்ய வேண்டுமென வேண்டிக் கோட லேவல் கண்ணிற்று. இனி, யுயர் திணைப் பொருளாகிய, முன்னிலைக் கண் வாழ்க, வாழிய வென வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தது மேவல் கண்ணிற்று.

'கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்,'

என வேண்டிக் கோடற் பொருண்மைக் கண் வந்தது மேவல் கண்ணிற்று.

'இனி' உயர்திணைத் தன்மைக்கண்,
'யானும் நின்னோ டுட னுறைக,

என வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல் கண்ணிற்று. இது சிறுபான்மை யென்ப துணர்த்துதற்கு முன்னிலையை முற்கூறினார்.

இனி, யெழுத்தோத்தினுள்,

'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்

எனவகரவீற்று ளெடுத் தோதினமையாற் பொருந்திய மெய்ய்ய யூர்ந்தகரவீறாய் லருதலு, முடம்பொடு புணர்த்த லென்பதனால்

'வழா அ லோம்பல்'

எனவும்,

'இற்றெனக் கிளத்தல்'

எனவும்,

எனவும், வந்த அல் ஈறும்

'மரீஇய தொரா அல்'

எனவரும். ஆலீறுமாய் வருதலும், ஒன்றென முடித்த லென்பதனால் வாழியர் என ஆர் ஈறும் மறைக்கட் 'காணன்மா (ரெம) ரென்னு மாரீறும்,

'வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்'
என உம் மீறும்.

அஞ்சாமை யஞ்சுவ, தொன்றின்'

என வைகார வீறுமாய்வருதலுங் கொள்க.

இன்னு மிதனானே,
'மகனெனன் மக்கட் பதடியென'

லென உடம்பாடும் மறையுமாய் வருதலுங் கொள்க.

இன்னு மிதனானே,
'நாடா கொன்றோ காடா கொன்றோ'

வென்பனவற்றையும் 'நாடேயாக காடேயாக' வென விதன்பாற் படுத்துக. இவற்று ளேவல் கண்ணாதது இதுவென வுணர்க (29)

229] செய்யும் என்னும் முற்றுப் பொருந்தாத இடம்
பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
யவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா.

இதுவுமது.

(இ-ள்) பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையவ் வயின் மூன்றும்—பல்லோர் படர்க்கையும் முன்னிலையுந்

யுந் தன்மையுமாகிய வவ்வெஞ்சிய கிளவிக்கண்வரு மூன்றும் நிகழுங் காலத்துச் செய்யு மென்னுங் கிளவி யொடு கொள்ளா — நிகழுங் காலத்து வருஞ் 'செய்யு' மென்னு முற்றுச் சொல்லோடு பொருந்தா வென்ற வாறு.

(உ-ம்) 'ஓதல் வேண்டு மொளி மாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர் (திருக்குறள்)
'என்குறை சொல்லல் வேண்டு மார்வல!'
யான் பொருதல் வேண்டும்.

என வருவனவற்றிற்குத் 'தவிர்வாராக' வெனவுஞ், 'சொல்வாயாக, வெனவும் 'பொருவேனாக' வெனவும் பொருளுரைக்க. (30)

230] வினை எச்சங்களின் வாய்பாடு.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
வவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி.

இது, முறையானே வினையெச்ச முணர்த்துகின்ற வற்றுட் சிறந்தன தொகுத் துணர்த்துகின்றது.

(இ-ள்) செய்து செய்யூச் செய்பு செய்தெனச் செய் யியர் செய்யிய செயின் செயச் செயற்கென வவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி — செய்தென்பது முதலாகச் சொல்லப்பட்ட அக்கூற் றொன்பது வாய் பாடும் முற்கூறிய வினையெச்சமா மென்றவாறு.

இது, 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்., செய்யென்னும் வாய்பாட்டினை யுகரமு, மூகாரமும்' புகரமு, மெனவு, மியரு, •மியவு, மின்னும், அகரமுங், குகரமு, மென்னு மிறுதி யிடைச் சொல்லான் வேறு

படுத்தினார் செய்து என்ப திறந்த காலம் பற்றி வருங் காற் குற்றுகரத்தான் ஊரப்பட்ட கடதற வென்னு நான்கும் இகரவிறும், யகர விறுமென அறுவகைத்தா மேனும், இகரவிறும், யகரவிறுஞ் செய்து என்னும வாசகத்தைத் தந்தே நிற்றலிற் பொருண்மையானொன் றாக வடக்கப் பட்டன.

(உ-ம்) நக்கு, உண்டு, வந்து, சென்று,
எஞ்சி, தப்பி,
உரிஞி, ஓடி,
ஆய், போய்.

எனவரும்.

இவற்று ஞுகர மிகரமாய்த் திரிந்ததெனின், 'உரிஞி' யென்பதனை 'ஞகாரை யொற்றிய' வென்னுஞ் சூத்தி ரத்தான் 'உரிஞ்' எனநிறுத்தி, நிலைமொழித் தொழிலா கிய வுகரம் பெறுமென விதித்தலின், 'உரிஞு' வென்னும் முற்றுகரந் திரிந் துரிஞி யெனநின்ற தென்றல் பொருந் தாமை யுணர்க.

இனி, 'ஆகு,' போகு' வெனக் குற்றுகர விற்றான் முதனிலை, யாயிற்றெனில், 'ஆகினான், போகினான்' என முற்றும் அதன் கண்ணே தோன்றுதல் வேண்டும் அங்ஙனம் வழங்காமையின் 'ஆ, போ, வென்பன முத னிலையாயக் காலங்காட்டும் யகர வொற்றுப்பெற்று ஆயினான், போயினான்' என முற்றுமதன் கண்ணே தோன்றுதலின், 'ஆகு, போகு' வெனக் குற்றுகரவீற்று முதனிலை யின்றா மென்றுணர்க.

இதனானே வினையெச்ச முற்றாய்த் திரியு மென் பது முணர்க. அவை, தூயினான், தாயினான். மேயி னான், ஏயினான் சினைஇயினான். முனைஇயினான் உரை இயினான், மரீஇயினான், உடீஇயினான், கடை

இயினான் தழீஇயினான், குழீஇயினான், பராயினான், விராயினான், நிலாயினான், கலாயினான், என வரும். இவை யிங்ஙன முற்றாய்த் திரிதலின் பெயர் கொண்டு முடிவன வாயின. ஆய் போய் யென்பன,

,வினை யெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய'

என்பதனாற் றிரிந்து நிற்குமென்பது கோடலிற் றிரிந்து நின்றன. அச்சூத்திரத்து வினையெச்சம்முற்று வினை கொள்ளுமாறுங் காட்டுதும். முன்னர்க் காட்டிய வுதாரணங்களுள் உகர மிகரமாய்த் திரியாமையு மிவ்வாறே பிரித்துணர்ந்து கொள்க.

'விருந்தின்றி யுண்ட பகலும்' (திரிகடுகம்)

எனவும்,

'நாளன்று போகி'

யெனவும் வருவன செய்தெ னெச்சக் குறிப்பு. செய்து; என்பதற்கு,

ஓடா நின்று போயினான்

எனவும்.

'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல் கான் றெழுதரும்' (பெரும்பாண்)

எனவும்,

'தலைப்பெயற் கரும்பீன்று'

முளிமுதற் பொதுளிய முட்புறப்பிடவமும், (புறம்)

எனவும் நிகழ்கால வாய்பாடுஞ் சிறுபான்மையுள தென் றுணர்க.

'நக்கு' வென்பது 'நகு' வென்னு முதனிலைக்கண் விரிந்த நகுத லென்னும் வினைப்பெயரடியாகச் செய் தென்னும் வினையெச்சந் தோன்றி நகுதலைச் செய் தென்னும் பொருடந்து நின்றது.

இனி, ஊகாரம்,

உண்ணூ வந்தான்,

எனவும்,

'படுமகன் கிடக்கை காணூ வீன்ற ஞான்றினும்'

எனவும்,

நிலம்புடையூ, வெரு தரும் வெம்படு குஞ்சரம், எனவும் பின்வருந் தொழிற் கிடையின்றி விரைவுணர்த்தி முன்வரும். தொழின் மேலிறந்த காலம் பற்றிவரும்.

'உண்ணா' வெனவும்.
'கல்லாக் கழிப்பர்' எனவும்'
'நிலங் கிளையா நாணி நின்றோள்'

எனவு மாகாரம் வினையெச்சமாய் வருதல்,

செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்விய றிரியா தென்மனார் புலவர் ?

என்பதனாற் பெறப்படும்.

இனிப் பகரவுகரம்.

பல்கால்

வாக்குபு தரத்தர வருத்தம் வீட
வார வுண்டு' (பொரு)

எனவும்,

'புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த' (முருகு) எனவும், பெரும்பான்மை யிறந்த காலத்து வரும். அப்புகரம் 'நகுபு' வெனக் குகரமு மேற்புழிவரும். 'அப்புகரம் நகுபு வந்தான் என்புழி நகாநின்று வந்தான் என்று முடிக்கும் சொல்லால் உணரப்படும் தொழிலோடு உடன் நிகழ்ந்து நிகழ் காலத்தும் வரும்' அது,

'வாடுபு வனப் போடி' (கலி)

எனவரும். 'உரினுபு' என உகரமும் 'கற்குபு' எனக் குகரமும் ஏற்புழி வரும்.

இனி, 'என' வென்பது 'க. ட, த, ற' வூர்ந் திறந்த காலம் பற்றி முடிக்குஞ் சொல்லா னுணரப்படுந் தொழிற்குத் தன் முதனிலைத் தொழில் காரணமாய விரைவுப் பொருளுணர்த்தும்.

(உ-ம்) சோலை புக்கென வெப்பம் நீங்கிற்று.
உண்டெனப் பசி கெட்டது.
உரைத்தென வுணர்ந்தான்.
மருந்து தின்றெனப் பிணி நீங்கிற்று.

என வரும் 'எஞ்சியென வெனவும். 'உரிஞியென, வெனவும், ஏனையெழுத்தோடு மொட்டுக.

இனி, 'இயர், இய' வென்பன,
உண்ணியர், தின்னியர்.

எனவும்,

உண்ணிய, தின்னிய,

எனவும் எதிர்காலம் பற்றிவரும்.

போகியர், போகிய

வென வேற்றுமைக் குகரமும் பெற்றுவரும்.

இனி, இன் எதிர்காலம் பற்றிக் காரணப் பொருட்டாய் வரும்.

(உ-ம்) மழைபெய்யின் குளம் நிறையும்.
மெய்யுணரின் வீடெளிதாம்.

எனவரும்.

நடப்பின், உரைப்பின்

என வேற்றுமைப் பகரமும் பெறும். இது,

'நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே'

யென உம் ஈறாதலும்,

'அற்றா லளவறிந் துண்க,

என ஆல்ீறாதலும்,

'வினை யெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய,

என்பதனாற் பெறப்படும்.

'அவாவுண் டே லுண்டாம்'

என்னும் ஏலும்,

'அவனெள்ளு மேனும் வரும்'

என்னும் ஏனு மிதன் குறிப்பு

'ஒன்றானுந் தீச்சொல்,

என்புழி ஆயினு மென்பது ஆனுமெனக் குறைந்து நின்றது.

'நுணங்கிய கேள்விய ரல்லால்'

என்பது அன்றி யென்னுஞ் செய்தெ னெச்சக் குறிப் புணர்த்துவதோர் வாய்பாடு அல்லவாயி னெனப் பொரு ளாயி னிதன் குறிப்பாம்,

இனி, யகர (அகர) மிறந்த காலத்துக் கண்

மழை பெய்யக் குளம் நிறைநதது

எனக் காரணப் பொருளாயும்

குளம் நிறைய மழை பெய்தது

எனக் காரியப் பொருளாயும் வரும். இனி, நிகழ்காலத் துக்கண்

ஞாயிறு பட வந்தான்

என்பது, 'நிகழா நிற்க வந்தான்', என்னும் பொருட்டாய் வரும்.

'வாழச் செய்த நல்வினை யுலகம்'

என்பது மது.

இனி யெதிர்காலத்துக் கண்

உண்ண வந்தான்

எனவதற் பொருட்டாய் வரும்,

உரைப்ப, உரைக்க

வென ஏற்புழிப் பகரமுங் ககரமும் வரும்.

இனி,

'நுன்னிப்

பெரிய வோதினுஞ் சிறிய வுணரா'

வென அகரம் வினைக்குறிப்புப் பற்றி வருவனவும்

செவ்வன் றெரிகிற்பான்

எனவும்,

புதுவதி னியன்ற வணியன்

எனவும்,

புதுவது புனைந்த வெண்கை யாப்பு

எனவும்,

'பொய்கைப்பூப் புதி தீன'

எனவும்,

'பெருங்கை யற்றபெண் புலம்பு'

எனவும்,

'சிறுநனி நீதுஞ்சி யேற்பினு'

மெனவும்,

'ஒல்லைக் கொண்டான்'

எனவும், அகர வீறன்றிப் பிற வீறுகளான் முடிக்குஞ் சொல்லை விசேடித்து வருவனவும்,

'வினையெஞ்சு கிளவி வேறுபல் குறிய'

வென்பதனாற் பெறப்படும். இது மறைக்கட

'கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி

என மல்லீறாயும்.

'கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்'

என மகர வைகார வீறாயும் வரும்.

இனிக் குகரம்,

உணற்கு வந்தான்,

என வெதிர் காலத்து வரும்.

'உண்டான், உண்டவன்' என்னுந் தொழிற் பெயர்கள் 'உண்டாற்கு உண்டவற்கு' என நான்கனுருபை யேற்புழிச் செயற்கென்னு மெச்சப் பொருட்கு மயக்க மின்மையும், உணலென்னும் வினைப்பெயர் குகர மடுத்துழி யுண்டலைச் செய்தற்கென்னும் பொருட்கு தெச்சப் பொருட்டாயே நிற்றலின் வினைப்பெயர் நான்கனுருபு பெற்று நின்ற தென்னும் மயக்க மிதற் கின்மையு முணர்க, ஏற்றுக்கு வந்தா னென்ப' தெக்காரியஞ் செய் தற்கு வந்தா னென்னும் பொருட்டாயிவ் வெச்சக் குறிப்பாய் நிற்கும், எவற்றுக் கென்பது மது.

இவ் வினையெச்சங்கட் கெஞ்சி நிற்கும் வினைகளு மறு வகைப்படும், அவை, தெரிநிலை முற்றுங், குறிப்பு முற்றும் பெயரெச்சமும், பெயரெச்சக்குறிப்பும், வினை யெச்சமும், வினையெச்சக் குறிப்புமாம்;

ஓதி வந்தான் இது தெரிநிலை முற்று
ஓதி நல்லன் இது குறிப்பு முற்று
ஓதிப் பெற்ற பொருள் இதுபெயரெச்சம்
ஓதி நல்ல சாத்தன் இதுபெயரெச்சக் குறிப்பு
உழுது பயன் கொண்டு இது வினை யெச்சம்
உழுதன்றி யுண்ணான் இது வினை யெச்சக் குறிப்பு
(31)

231] இதுவுமது

*பின்முன் கால்கடை வழிஇடத் தென்னு*
*மன்ன மரபிற் காலங் கண்ணிய*
*என்ன கிளவியு மவற்றியல் பினவே.*

இதுவு மொருசார் வினையெச்ச முணர்த்துகின்றது.

(இ-ள்) *பின்முன் கால்நடை வழியிடத் தென்னுங் கிளவியும்* — பின்னு முன்னுங் காலுங் கடையும் வழியு மிடத்து மென்னு மீற்றவாகிய சொற்களும், *அன்ன மரபிற் காலங் கண்ணிய வென்ன கிளவியும்*-அம்முறைமை போலக் காலத்தைக் குறித்த எல்லாச் சொற்களும், *அவற்றியல்பின* — முற்கூறிய வொன்பதும் போல வினையெச்சத்திற்கு வாய்பாடா மியல்பை யுடைய வென்றவாறு,

(உ-ம்) பின்,

நீயிர் பொய் கூறியபின் மெய் கூறுவர் யார்?
இளமையுந் தருவதோ விறந்த பின்னே?

என இறப்பும்,

நீ யிவ்வாறு கூறுகின்றபி னுரைபப துண்
டோ?

வென நிகழ்வும் பற்றி வரும்.

முன்,

'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை'

யென இறப்புப் பற்றி வரும்

இவை, பின்னர், பின்னை, முன்னர், முன்னை, யெனத் திரிந்தும் வரும்.

கால், 'வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத் தக்கால்' என இறப்பும்,

'அகன்றவர் திறத்தினி நாடுங்கால்' (கலி)

என நிகழ்வு மெதிர்வும் பற்றி வரும்.

கடை,

'தொடர் கூரத் துவாமை வந்தக் கடை'

யென இறபபுப் பற்றி வரும்.

'வழி, விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே'

யென இறப்பும்,

'அவளாடுவழி யாடுவழி யகலேன் மன்னே'

யென நிகழ்வும், உரைக்கும்வழி என நிகழ்வும் எதிர் வும் பற்றி வரும்.

இடத்து,

'களையுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து'

என விறப்பும், 'உரைக்கு மிடத்து' என நிகழ்வு மெதிர் வும் பற்றியும் வரும்.

'அன்ன மரபி' னென்றதனாற் 'பான், பாக்கு, வான், வாக்கு' என்பனவுங் கொள்க.

(உ-ம்) 'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்' 'திருவிற்றான் மாரி கற்டான் றுவலைநாட் செய்வதே போல்'

'புணர்தரு செல்வந் தருபாக்குச் சென் றார்,' 'கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்' கொள்வாக்கு வந் தான்.

என வரும்.

'அல்லது, அல்லால்' என வருங் குறிப்பெச்சமுங் கொள்க. இவை பெயர்த் தன்மையு முடையவாய் நின்று முன் வந்த வினையின் காலத்தை யுணர்த்தி நிற்றலின், வேறோதினார்.

'வேபாக் கறிந்து,'

என்பது, வேதலை யறிந்து என்னும் பொருடருதலின், எச்ச மன்று, இவற்றைக் 'காலங் கண்ணிய' வென்றது.

கூதிர் போயபின் வந்தான்.

எனவும்,

நின்ற விடத்து நின்றான்.

எனவும் 'பின்' முதலியன பெயரெச்சத்தோடு வந்துழி யிறப்பு முதலியன கண்ணாமையின். (32)

232] வினைமுதல் வினைகொண்டு முடியும் வினை
யெச்சம்
அவற்றுண்
முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின.

இது, முதல் நின்ற மூன்றற்கும் முடிபு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுண் முதனிலை மூன்றும்—முற் கூறிய பதினைந்தனுண் முதற்கணின்ற 'செய்து. செய்யூ, செய்பு' வென்னு மூன்றும், வினைமுதல் முடிபின—அவ் வெச்ச வினையை நிகழ்த்தின கருத்தாவினது வினையை யுணர்த்துஞ் சொல்லினையே பின் முடிபாகக் கொண்டு முடிதலை யுடைய வென்றவாறு.

(உ-ம்) உண்டு வந்தான்.
உண்ணூா வந்தான்.
உண்குபு வந்தான்,

எனவும்,

கற்று வல்ல னாயினான்.
கல்லூா வல்ல னாயினான்.
கற்குபு வல்ல னாயினான்.

எனவும் வரும்.

'ஒன்றென முடித்த' லென்பதனாற் 'செய்யா' வென்பதற்கும். 'உண்ணா வந்தா' னென விம்முடிவு கொள்க.

இனி, செய்தே னெச்சக் குறிப்பாகிய 'இன்றி யன்றி' யென்பனவும்,

'தம்மின் றமையா நந்நயந் தருளி' (நற்)
'தொல்லெழில் வரைத்தன்றி வயவு நோய்
நலிதலின்' (கலி)

என வினைமுதல் வினையால் முடியும். (33)

233] மேலே கூறிய மூன்றற்கும் முடிபு வேற்றுமை

அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற்
சினையொடு முடியா; முதலொடு முடியினும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்.

இதுவு மம்மூன்றிற்கும் முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) அம்முக் கிளவியும்—வினைமுதன் மூடிபின வென்ற வம்மூன்று சொல்லும், சினை வினை தோன் றிற் சினையொடு முடியா-சினைப் பொருளிடத்து வினையெச்சமாய்த் தோன்றிற் றமக்குரிய சினை வினை கொண்டு முடியா; முதல் வினைகொண்டே முடியும். வினைமுதலோடு முடியினும் — அவ் வெச்சங்கடாந் தத்தமக் குரிய வினைமுதலா னன்றிப் பிறவினை முத லான் முடியினும் பிறவாற்றான் முடியினும் ஓரனைய வென்மனார் புலவர் — தத்தமக் குரிய வினைமுதல் கொண்ட தன்மையோ டொரு தன்மையை யுடைய வென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

'சினையொடு முடியா,' வெனவே. முதலொடு முடிதல் பெறுதும். உம்மை எதிர்மறை.

(உ-ம்) கண் ணொந்து கிடந்தான்.

வயிறு நொந்து கிடந்தான்

எனவும்.

கண் வடியூக் கிடந்தான்,

எனவும்,

வயிறு குத்துபு கிடந்தான்.

எனவும்,

'கண்டுயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்' (புறம்)
'தாளொற்றித் தப்பி விழ்ந்தார்
தறிவலை மானிற் பட்டார்' (சீவகசிந்தாமணி)

எனவும் சினைப்பொருட்கண் வந்த வினையெச்சங் காரண காரியப் பொருட்டாய் வினை முதலோடு முடிந்தன.

'அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்பு வானில், (குறள்)
'காமன் கணையொடு கண்சிவந்து புலந்தாள்:'

என்பன காரண காரிய மின்றி யங்ஙனம் வந்தன.

இனி 'தலைவன் பிரிந்து வருந்தினாள்' எனவும்,

மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர் பட்ட ஆறுமயங் கருஞ்சுரம்? (கலி)

எனவும்,

'உடம் புயங் கியானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறாகச் சார்ச்சார லோடி
நெறிமயக் குற்ற' (கலி)

வெனவும் காரண காரியப் பொருட்டாய்த் தமக்குரிய வினை முதலா னன்றிப் பிறவினை முதலான் முடிந்தன.

ஞாயிறு பட்டு வந்தான்.
ஞாயிறு படூஉ வந்தான்.
ஞாயிறு படுபு வந்தான்.

என்பன காரண காரியமின்றி யங்ஙனம் வந்தன.

'உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ விரிநிழற் றுஞ்சிய செந்நா யேற்றை'
யென்பதுமது.

இனி, 'ஆ கிடந்து செறு விளைந்தது,' என்ற திடத்து நிகழ் பொருளின் றொழிலிடத்திற் கேற்றிச் செறுவின் வினையொடு முடிந்தது. இதற்கு வினைமுதல் தானே செயப்படுபொருளாயிற்று.

'பூணணிந்து விளங்கிய புகழ்சான் மார்ப்' (பதிற்று) என அணிந்தென்னும் முதல்வினை சினைவினைகொண் டது, உண்டுபசி கெட்டது மது. இவை, காரண காரியப் பொருட்டாய்ப் பிறவாற்றான் முடிந்தன.

ஏனை வினையெச்சங்கட்கு வினைமுதல் வினையும் பிற வினையு மொப்ப வுரியவாய் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார். இம்மூவகை யெச்சமும் வினைமுதல்

வினைகொள்ளுங்காற் காரணகாரியப்பொருட்டாகாது வருதலினதனையும் வேறுகூறிச் சினைவினைமுதல் வினையோடு முடியுங்காற்பெரும்பான்மை காரண காரியப் பொருட்டாய் வருதலானும், முதல் வினை தான் பிற வினை முதலான் முடியும் வழிப் பெரும் பான்மை காரண காரியப் பொருட்டாயே வருதலானும் இரண்டு சூத்திரத்தாற் கூறினார்.

வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய, என்ற சூத்திரத்தான் வினையெச்சங்களெல்லாம்பெயர் வேறுபட்டு மீறு வேறுபட்டுஞ் சிறுபான்மை வரு மென்று பொதுவாகக் கூறினாராதலி னதன் கண்ணே பிறவினைமுதல் கொண்டனவற்றையு மடக்குதல் பொருந்தாது.என்னை? அவை வழக்கிடத்துஞ் செய்யு ளிடத்தும் பெரும்பான்மை வருதலானும், வினைமுதல் 'முடிபின' வென்ற விதி பிற வினைமுதல் கொள்ளா மையை வலியுறுத்தி நிற்றலிற் சூத்திரவிதியே வேண்டு மாதலானு மென்பது. (34)

234] ஒழிந்த வினையெச்சங்கள் இருவினையும் கொண்டு முடியும் என்பது

ஏனை யெச்சம் வினைமுத லானு
மான்வந் தியையும் வினைநிலை யானுந்
தாமியன் மருங்கின் முடியு மென்ப.

இது, ஒழிந்த வெச்சங்கட்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) ஏனையெச்சம்—முதனிலை மூன்று மல்லாத பிறவினையெச்சம், வினைமுதலானும்—வினைமுதல் வினையானும், ஆன்வந் தியையும் வினைநிலையானும்- ஆண்டு வந்து பொருந்தும் பிறவினையானும், தாமியன் மருங்கின் முடியுமென்ப—வரையறை யின்றித் தாமி யலு மாற்றான் முடியுமென்று சொல்லுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) மழை பெய்தெனப் புகழ் பெற்றது.
மழை பெய்தென மரங் குழைத்தது.

எனவும்,

மழைபெய்யிய ரெழுந்தது.
மழை பெய்யியர் பலிகொடுத்தான்.

எனவும்,

மழை பெய்ய முழங்கும்.
மழை பெய்யிய வான் பழிச்சுதும்.

எனவும்,

மழை பெய்யிற் புகழ் பெறும்.
மழை பெய்யிற் குளம் நிறையும்.

எனவும்,

மழை பெய்யப் புகழ் பெற்றது.
மழை பெய்ய மரம் குழைத்தது.

எனவும்,

மழை பெய்தற்கு முழங்கும்.
மழை பெய்தற்குக் கடவுள் வாழ்த்தும்.

எனவும்,

இறந்தபின் னிளமை வாராது.'
கணவ னினிதுண்டபின் காதலி முக
மலர்ந்தது.

எனவும்,

கடுத் தின்னாமுன் துவர்த்தது.
மருந்து தின்னாமுன் நோய் தீர்ந்தது.

எனவும்,

'உரைத்தக்கால் உரை பல்கும்,
'வலனாக வினையென்று வணங்கிநாம்
விடுத்தக் கால்
'ஒளியிழாய் நமக்கவர் வருதுமென்
றுரைத்ததை' (கலி)

எனவும்,

நல்வினைதா னுற்றக் கடை யுதவும்.
நல்வினைதா னுற்றக்கடை தீவினை வாரா.

எனவும்,

நல்வினைதா னுற்ற வழி யுதவும்,
நல்வினைதா னுற்ற வழித் தீவினை வாரா.

எனவும்,

நல்வினைதா னுற்றவிடத் துதவும்.
நல்வினைதா னுற்றவிடத்துத் தீவினை
வாரா

எனவும் வரும்

கற்பா னூல் செய்தான்.
செல்வந் தருபாக்கி யாம் விரும்புதும்.
நமது நலன் நுகர்வான் யாம் விரும்புதும்

இவை பிறவினை கொண்டன. இவை வினை முதல் வினை கொண்டவாறு முன்னர்க் காட்டினாம். (35)

235] வினையெச்சங்கள் அடுக்கியபோது முடியுமாறு.

பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே.

இஃது, வினையெச்சங்க ளடுக்கிய வழிப்படுவதோர் முறைமை கூறுகின்றது.

(இ-ள்) வினையெஞ்சு கிளவி சொன்முறை முடியாது- வினையெச்சமாகிய சொற்களொன்றற் கொன்று முடிக்கும் வினை வந்து முடியாது, பன்முறை யானு மடுக்குந வரினும்- ஒரு வாய் பாட்டா னன்றிப் பல வாய் பாட்டானு மடுக்கி வரினும், முன்னது முடிய முடியுமன் பொருளே — முன்னின்ற வெச்சம் முடிய வேனையவும் பொருண் முடிந்தனவா மென்றவாறு.

(உ-ம்) உண்டு தின்றோடிப் பாடி வந்தான்.
உண்டு பருகூஉத் தின்குபு வந்தான்.
உழுதுண்பானொடு விரைஇ வந்தான்.

எனவரும்.

'பசந்த மேனியொடு படரட வருந்தி
மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடி முலையள் பெரிதழிந்து

குப்பைக் கீரை கொய்க ணகைத்த
முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்
றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கைய ளறம்பழியாத்
துவ்வா ளாகிய வென்வெய் யோளும்' (புறம்)

எனச் செய்தெ னெச்சத்திடையே யவ்வினை யெச்ச முற்று மதன் குறிப்பெச்சமு முடனடுக்கி முடிந்தனவும் பிறவும் 'பன்முறையானு' மென்றதனாற் கொள்க.

'வினை யெச்சம் பன்முறையா னடுக்கி யொருசொல் லான், முடியு' மெனவே, பெயரெச்ச மொரு முறையா னடுக்கி யொரு சொல்லான் முடியு' மென்பதாம்.

'நெல்லரியு மிருந்தொழுவர்' (புறம்)

என்னும் புறப்பாட்டினுட், 'பாயுந்து, தூங்குந்து, தரூஉந்து, பாயு' மென்னும் பெயரெச்ச மடுக்கி 'மிழலை' யென்னு மொரு பெயர் கொண்டு முடிந்தன. ஆண்டு 'நல்லூர்க் கெழீஇய' வென்னும் பெயரெச்ச மிடைநிலையாய் வந்தது. (36)

236] பெயரெச்சங் கொண்டும் முடியுஞ் சொற்கள்.
நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
வவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய
செய்யும் செய்த வென்னுஞ் சொல்லே.

இது, 'செய்யுஞ், செய்த' வென்னும் பெயரெச்சத் திற்குப் பொருண் முடிவு கூறுகின்றது.

(இ-ள்) செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே— செய்யுஞ் செய்த வென்னுஞ் சொற்க ளின்னதற் கிது

பயனென்னும் இரண்டொழித்து, நிலனும் பொருளுங் காலமுங் கருவியும் வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட வவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய — நிலப் பொருளுஞ் செயப்படு பொருளுங் காலப் பொரு ளுங் கருவிப் பொருளும் வினை முதற் பொருளுமென்ற வைந்துடனே வினைப்பொருளுங் கூடச் சொல்லப்பட்ட வவ்வறுவகைப் பொருட்கு மொத்த வுரிமையினை யுடையவா மென்றவாறு.

(உ-ம்) வாழுமில்.
கற்கும் நூல்.
துயிலுங் காலம்.
வளையுங் கோல்
ஓதும் பார்ப்பான்.
உண்ணு மூண்'

எனஉம்மீறு கால வெழுத்துப் பெறா தாறு பொருட்கு முரித்தாய் வந்தது.

புக்க வில்
உண்ட சோறு
வந்த நாள்
வென்ற வேல்
ஆடிய கூத்தன்
போயின போக்கு

என அகர வீறு 'கடதற'வும் யகர னகரமுமூர்ந்து ஆறு பொருட்கும் உரித்தாய் வந்தது.

இவற்றுள் வினைமுதற் கிளவி யொழிந்தன வற் றிற்கு வினைமுதற் பொருண் முன் வந்தே பின்வரு வினையோடு முடிந்து பொருடருதலும், வினைமுதற் கிளவி யாயி னது பின்வரு வினையோடு முடிந்தே பொருடருதலுங் கொள்க. இவற்றிற்குச் செய்யாநிற்கு மெனவும் 'செய்யாநின்ற' வெனவும் வரும் வாய்பாட்டு வேற்றுமை யொன்றென முடித்தலாற் கொள்க.

'மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ!
நின்முகங் காணு மருந்தினே னென்னுமால்'

என்புழி, 'நோய் தீர்தற்குக் காரணமாகிய மருந் தென' வருங்காரணத்தைக் கருவிக்கண்ணும், 'நின் முகத்தைக் காண்டல் காரணமாக வதன் காரியமாகப் பிறந்த வருளை மருந்தாதற் றன்மையாக வுடையனென' வருங் காரியத்தினைப் பொருளின் கண்ணு மடக்கி யொன்றென முடித்தலா னமைத்துக் கொள்க.

'தேரோடும் புறங்காணே னாயினேன்' என்பதூஉம்,

'நிலம்பூத்த மரமாயின்'

என்ப தூஉங் காரணத்தின் கண்ணும்,
'ஆறு சென்ற வியர்'

என்றதனை 'யாறு சேறலான் வந்த விய' ரெனக் காரியத்தின் கண்ணு மடக்குக.

'ஆர் களிறு மிதித்த நீர்'
எள் ளாட்டின எண்ணெய்
உண்ட வெச்சில்

என்பனவுங் காரியத்தின் கண்ணு மடக்குக.

'குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி'
'நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ'

என்பன, பூத்த பூவானியன்ற கண்ணி, நூலாத நூலா னியன்ற கலிங்கமென ஒற்றுமை நயம் பற்றிச் செயப் படு பொருண்மே னின்றன.

'பொச்சாவாக்
'கருவியாற் போற்றிச் செயின்'

என்பது கருவிக்க ணடங்கும்.

அரசன் ஆ கொடுக்கும் பார்ப்பான்
அரசன் ஆ கொடுத்த பார்ப்பான்

எனவும்;

ஆடை யொலிக்குங் கூலி.
ஆடை ஒலித்த கூலி.

எனவும் ஒத்த வுரிமைய வன்றிச் சிறுபான்மை பின்னை தற்கிது பயனென்பன வற்றின் கண்ணும் வரும். இன்னும்,

பழ முதிருங் கோடு
பழ முதிர்ந்த கோடு

எனச் சிறுபான்மை தீர்தற் பொருண்மை பற்றி வருதலுங் கொள்க.

இனி, செய்த வென்பதன் குறிப்பாய்
இன்ன, அன்ன, என்ன

எனவும்,

கரிய, செய்ய

எனவும் வருவனவுங் கொள்க. அவை,

இன்ன தன்மையி னருமையின்
அன்ன தன்மையு மறிந்தீயார்

எனவும்,

'என்ன கிளவியும் பண்பின் றொகையே'

யெனவும், கரிய மலர் நெடுங்கண்' எனவும், செய்ய கோல், எனவும் வந்தவாறு காண்க. (37)

237] 'செய்யும்' என்பதற்கு ஓர் முடிபு வேற்றுமை.

அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே.

இது செய்யு மென்பதற் கோர் முடிவு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) அவற்றொடு வருவழி—அந்நிலம் முதலிய பொருள்களோடு வருங்கால், செய்யு மென் கிளவி—செய்யுமென்னுஞ் சொல், முதற்கண் வரைந்த மூவீற்று முரித்து—மேல் விலக்கப் பட்ட 'பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை' யென்னு மூவகைக்கு முரித்தா மென்றவாறு.

அவை 'எஞ்சிய கிளவி' யென்பதனுட் காட்டினாம்,

ஈண்டுக் கூறிய விதி யெச்சத்திற்கும், ஆண்டு விலக்கியது முற்றிற்கு மென்றுணர்க. இனி அவற்றிற்கு வேறுபாடு கூறுதும்.

இரு திணைக்கும் பொதுவாகிய 'செய்யும்' என்னுஞ் சொல், உண்ணுமென நின்றுழித் தானே தன் றொடர்ப் பொருளுணர்த்த லாற்றாது நின்று, தன்னை அவன் அது வென்னும் வினை முதல் வந்து திணையும் பாலும் விளக்கத் தன்றொடர்ப் பொருளுணர்த்தி யெடுத்த லோசையான் மற்றோர் சொன் னோக்காது செப்பு மூயினாற் போல அமைந்து மாறி நிற்றன் முற் றிற் கிலக்கணம்; அச் செய்யு மென்னுஞ் சொல் வாழு மில்லெனப் படுத்த லோசையாற் கூறிய வழி அம் முடிக்குஞ் சொல்லானமையாது நன்றென மற்று மோர் சொன் னோக்கி நிற்ற லெச்சத்திற் கிலக்கணம்.

இனி, அம்மீறு முதலிய முற்றுச்சொற்க ளெங்ஙன முற்றி நிற்கு மெனின்,

'எத்திறத் தானும் பெயர்முடி பினவே'

என்பதனான் வினைமுதலோடு முடிந் தீண்டுக் கூறிய வாறே முற்றி நிற்கும் என்க. 'பெயர்பற்றி நில்லாது, தாமேயுந்' தொடர்ப் பொருளுண ர்த்தி முற்றி நிற்கு மெனச் சேனாவரையர் கூறினாரா லெனின், சாத்தற்குச் சோறிடுக வெனவொருவனேவிய வழி யவ் வேவப்

பட்டானவற்கதனை யீத்து வந்துண்டா னென்றவழி, 'யான்கூறிய சாத்தனுண்டான்' என, அவ்வினைமுதற் றொடர்ப்பொரு ளவன் மனத்தின்கணுணர்த்தி நிற்ப தல்லது, நன்மக்கள் குழீஇயவழி ஒருவன் வந்து நின் றுண்டா னென்றவழி யவ் வினைமுதற் றொடர்ப்பொரு ளுணாத்தாது பான்மாத்திர முணர்த்தி நிற்குமென்பது கருதி,

எத்திறத் தானும் பெயர்முடி பினவே'
என்னாராகலி,னது பொருத்த மின்று என்க. (38)

238] இருவகை எச்சமும் எதிர்மறை வினையையும் கொண்டு முடிதல்.

பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியு
மெதிர்மறுத்து மொழியினும் பொருணிலை
[திரியா

இஃது, இருவகை யெச்சத்திற்கு மெதிர்மறைவினை யும் முடிவா மென்கின்றது.

(இ-ள்) பெயரெஞ்சுகிளவியும் வினையெஞ்சுகிளவி யும்—பெயரெச்சமாகிய சொல்லும் வினையெச்சமாகிய சொல்லும், எதிர்மறுத்து மொழியினும் — செய்தற் றொழி லினை யெதிர்மறுத்துச் சொல்லினும், பொருள் நிலை திரியா — தத்தமெச்சமாகிய பெயரையும் வினை யையுங் கொண்டல்ல தமையாத நிலைமையின் வேறு படா வென்றவாறு.

(உ-ம்) உண்ணா வில்லம்
உண்ணாச் சோறு
உண்ணாக் காலம்
வளையாக் கோல்
ஓதாப் பார்ப்பான்
உண்ணா ஊண்

எனவரும். உண்ணாது வந்தான், உண்ணாமைக்கு வந்தான். எனவும் வரும்.

'உண்ணா' வென்பது, 'உண்ணும், உண்ட' வென்று மிரண்டற்கு மறை. 'உண்ணாத' வென்ப, 'துண்ட' வென்பதற்கு மறை.

'உண்ணாது' என்பது, உண்டு, உண்ணூ, உண்ணா உண்குபு, என்பனவற்றிற்கு மறை. இதனானே, 'செய்பு' என்ப திறந்தகால மூணர்த்துதல் பெற்றாம்.

இனி, செய்தென வென்பது வினைமுதலோடு வருவழி, 'மழை பெய்யா தறம் பெறாதாயிற்று' எனச் செய்தென்பதன் மறையே வருதலும், அது பிறவினையோடு வருவழி, 'மழை பெய்யாமன் மரங்குழையாதாயிற்று,' என இறந்தகால மூணர்த்துஞ் செய்தெனச்சத் தெதிர்மறையே தனக்கு மறையாய் வருதலுங் கொள்க. இவ்விரண் டெச்சத்திற்குஞ் 'செய்யாமை' என்பதுஉம் மறை.

இனி, உண்ணாமைக் கென்பது, 'உண்ணியர், உண்ணிய, உண்ணற்கு, என்பன வற்றிற்கு, 'மூண்ண' வென வெதிர் கால மூணர்த்துஞ் செயவென வெனச்சத் திற்கும் மறையாம்.

இனி, செயின் என்பதற்கு,

மழை பெய்யாவிடி னறம் பெறாது

மழை பெய்யாவிடின் மரங் குழையாது.

எனப்பிற சொல்லான் மறைவரும்.

இனி, உண்ணாத பின், உண்ணாதமுன், உண்ணாக் கால், உண்ணாக்கடை, உண்ணாவழி, உண்ணாவிடத்து எனவும் வரும்.

இனி, 'கொள்ளா தொழிவான்' என ஏனையவற்றிற்கும் வரும்.

இனி, கரிய சாத்தற்குச் 'செய்ப சாத்த னெனவும், நல்ல சாத்தற்குப் பொல்லாச் சாத்த னெனவும் வரும். பெயரெச்சக் குறிப்பு மறை விகற்பமு மறிக.

இனி, 'சோறுண்டா யிருந்தது, சோறாவ தாயிருந் தது, என்பன வற்றிற்குச் சோறின்றிச் சோறன்றி யென வினையெச்சக் குறிப்பு மறையாதலுங் கொள்க.

'எதிர்மறுத்து மொழியினுந் தத்த மரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே'

என்று வேற்றுமை யெதிர் மறுத்து வருமெனவே, யவ் வேற்றுமை யேற்ற சொன் முற்றுச் சொல்லே யாதலின், முற்றுச் சொற்கும் மறை வருமென்பது கூறினாராயிற்று.

இனிச் செய்யு மென்னும் முற்றிற்கும் 'உண்ணான வன் உண்ணாது அது' என வரும் மறை யொன்றென முடித்தலாற் கொள்க. (39)

239] எச்சங்களின் இடை நிகழும் முடிபு வேற்றுமை

*தத்த மெச்சமொடு சிவணுங் குறிப்பி
னெச்சொல் லாயினு மிடைநிலை வரையார்.

இஃதவ்வெச்சங்களினிடை நிகழும் முடிபு வேற் றுமை கூறுகின்றது.

(இ-ள்) தத்தமெச்சமொடு சிவணுங் குறிப்பினெச் சொல் லாயினும்—தத்த மெச்சமாகிய வினையொடும் பெயரொடும் பொருளியையுங் கருத்தினையுடைய வெவ் வகைச் சொல்லாயினும், இடைநிலை வரையார் — அவ் வெச்சத்திற்கு மவற்றான் முடிவனவாகிய தமக்கு மிடைநிற்றலை நீக்கார் கொள்வராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) உழுது சாத்தன் வந்தான்
உழு தேரோடு வந்தான்

---

*தத்த மெச்சமொடும் (பா. பே.)

கொல்லுங் காட்டுள் யானை
கொன்ற காட்டுள் யானை

என வரும்.

ஒரு தலையாக வெச்சத்தோ டியையாது, முடிக்கப் படுஞ் சொல்லோ டியைந்து கவர் பொருட் படுவன சிவணாக் குறிப்பினவாம். அவை,

உண்டு விருந்தொடு வந்தான்,
வல்ல மெறிந்த நல்லிளங் கோசர் தந்தை
மல்லல் யானைப் பெருவழுதி"

யென்புழி, 'விருந்தோடுண் டெனவும்,' வல்ல மெறிநத கோசர் எனவுங் கவர் பொருட் பட்டு வரும்.

'எச்சொல்லாயினு' மென்றதனால்,

உழுதோடி வந்தான்
'கவளங் கொள்ளாக் களித்த யானை'

யெனவெச்சமு மிடைநிலை யாதல் கொள்க.

அறத்தை யரசன் விரும்பினான்
உண்டான் பசித்த சாத்தன்

என வேனைத் தொடர்க்கண்ணும் பிறசொல்லிடை நிற்ற லொன்றெனை முடித்தலாற் கொள்க. (40)

240] செய்யும் மென்னும் பெயரெச்ச ஈறு கெடுமாறு

அவற்றுட்
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகர
மவ்விட னறித லென்மனார் புலவர்.

இது செய்யு மென்பதற் கீறு கெடுமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள்—முற்கூறிய இருவகை யெச்சங் களுள், செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு—செய்யுமென்னும் பெயரெச்சத்திற்கு, ஈற்றுமிசை யுகரம் மெய்யொடுங் கெடும்—ஈற்றெழுத்தின் மேனின்ற வுகரந் தன்னா லூரப்பட்ட மெய்யொடும் கெடும். அவ்விடன் அறிதல் என்மனார் புலவர்—அக்கெடுமிட மறிகவெனக் கூறுவர் புலவரென்றவாறு.

'வாவும் புரவி வழுதியோ டெம்மிடை'
'யான் போகும் புழை'

யென்பன 'வாம்புரவி' போம்புழை என நின்றன.

'செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு'
'ஈற்றுமிசை யுகரம் மெய்யெடுங் கெடும்'

எனவே, செய்யு மென்னும் முற்றுச் சொற்கு ஈற்று மிசை யுகரம் மெய்யொடுங் கெடும், மெய்யொழித்துங் கெடு மென்பது பெறுதும்.

(உ-ம்) 'அம்பலூரும் அவனொடு மொழிமே'
'சாரல்நாட' 'வென் றோழியுங் கலுழ்மே'

எனவரும். (41)

241] இறந்த கால வினையெச்சம் ஏனைக்காலச்
சொல்லோடும் இயையும்
செய்தெ னெச்சத் திறந்த கால
மெய்திட னுடைத்தே வாராக் காலம்.

இது, இறந்த காலச்சொல் லேனைச்சொல்லோ டியையு மென்கின்றது.

(இ-ள்) செய்தே னெச்சத் திறந்தகாலம் — செய தென்னும் வினையெச்சத்தி னிறந்த காலந் தன்னிறந்த காலத்தினை நீங்காது நின்று, வாராக் காலமெய்திட னுடைத்து — முடிக்குஞ் சொல்லி னெதிர்காலத்தைப் பொருந்து மிடனுடைத் தென்றவாறு.

(உ-ம்) நீ யுண்டு வருவாய்.

என்பது 'நாளை யுண்டு வருவா' யென்னும் பொருளு ணர்த்தவும், வருதற் றொழிலுக்குண்டற் றொழின்முன் னிகழ்ந்து' ஆண்டுந் தன்னிறந்த காலமே யுணர்த் திற்றாம்.

கொடி யாடித் தோன்றும்.

என்புழித் தோற்றமு மாட்டமு முடனிகழ்தலின், செய்தென்பது நிகழ்காலத்திற்கு முரித்தாதல் வாராக் காலமெனவே யடங்கும்.

'வறனீந்தி நீசெல்லும் நீளிடை நினைப்பவும்' என்பதும் அது.

ஒன்றென முடித்தலாற், 'செய்யூ, செய்பு,' என்பன வற்றிற்கு மொழிந்த வெச்சங்கட்கு மிம்மயக்கங் கொள்க. (42)

242] நிகழ் காலச்சொல் ஏனைக்காலங்களையும் உணர்த்தல்

முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை
யெம்முறைச் சொல்லும் நிகழூங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச் சொற்கிளத்தல் வேண்டும்.

இது, நிகழ்காலச் சொல்லேனைக் காலங்களையு முணர்த்து மென்கின்றது.

(இ-ள்) முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை யெம்முறைச் சொல்லும்—மூன்றுவகைப்பட்ட நிலைமை யினையுடைய காலத்து முளதா மியல்பை யுடைய வெவ்வகைப்பட்ட பொருளையும், நிகழூங் காலத்து மெய்நிலைப் பொதுச் சொற் கிளத்தல் வேண்டும்—நிகழ் காலத்திற் குரித்தாய் நின்று மேனைக் காலங்களையு முள்ளடக்கி நிற்கும் பொருணிலைமை யினையுடைய செய்யுமென்னுஞ் சொல்லாற் சொல்லு தலை விரும்பு மாசிரிய ரென்றவாறு.

முக்காலத்திற்கும் பொதுவாய் முற்றுமெச்சமுமாய் நிற்றலை நோக்கிப் பொதுச்சொல் லென்றார்.

(உ-ம்) மலை நிற்கும்.
தீச் சுடும்.
ஞாயி றியங்கும்.
திங்க ளியங்கும்.

எனவும்,

'வெங்கதிர்க் கனலியொடு மதிவலந் திரிதரும்
தண்கடல் வரைப்பு,' (பெரும்பாண்)

எனவும் வரும்.

தீச்சுடு மென்றாற் பண்டு மின்றும் மேலுஞ் சுடு மென்பதனை யொட்ட விளக்கியவாறு காண்க.

'மெய்ந்நிலை' யென்ற தேனை நிகழ் காலச் சொல்லோ டொவ்வாமையை யுணர்த்துதற்கு. (43)

243] விரைவின் கண் காலம் மயங்கல்.

வாராக் காலத்தும் நிகழுங் காலத்து
மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள வென்மனார் புலவர்.

இது, விரைவின்க ணெதிர்வும் நிகழ்வு மிறப்பொடு மயங்கு மென்கின்றது.

(இ-ள்) வாராக் காலத்து நிகழுங் காலத்து மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி—எதிர்காலத்தும் நிகழ்காலத்து மொருபடியாக வருகின்ற வினைச் சொல்லாகிய சொல்லின் பொருண்மையை, இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்-தொழிலிறந் தின்றே னுஞ் சொல்லுவான் கருத்து வகையாற் றொழிலிறந் தனவாகக் கருதிக்கூறல், விரைந்த பொருள வென்ம

மனார் புலவர்—விரைவுப் பொருண்மையினை யுடைய வென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) சோறு பாணித்த வழி யுண்ணா திருந் தானைப் போதல் வேண்டுங் குறை யுடையானொருவன், இன்னு முண் டிலையோ? வென்ற வழி, யுண்டேன்; போந்தே னென்னும். 'உண்ணா நின் றானு முண்டேன் போந்தே,' னென்னும். (44)

244] சிறப்பின் கண்ணும் காலம் மயங்கல்.

மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
யப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.

இது, மிக்க தொன்றன் கண்ணே யிறப்பு மெதிர் வும் நிகழ்வோடு மயங்கு மென்கின்றது.

(இ-ள்) மிக்கதன் மருங்கின் வினைச் சொற் சுட்டி — இருவினைகள் பலவற்றுள்ளுஞ் சிறந்த விரு வினைக் கண்ணே நிகழும் வினைச்சொல்லை நோக்கி, அப்பண்பு குறித்த வினை முதற் கிளவி—திரிவின்றிப பயக்கும் அம்மிக்க தனது பண்பைக் குறித்து வரும் வினைமுதற்சொல், செய்வதில் வழி — சுட்டிச் சொல்லப் படுவதோர் வினைமுத லில்லாத விடத்து, நிகழுங் காலத்து மெய்பெறத் தோன்றும் பொருட்டாகும்மே— நிகழ் காலத்தான் யாப்புறத் தோன்றும் பொருளை யுடைத்தா மென்றவாறு.

(உ-ம்) தவஞ் செய்தான்; செய்வான்.
தாயைக் கொன்றான், கொல்வான்.

செய்வான், கொல்வான் என்பன முதலியன மிக்கு வினைச்சொல்.

சுவர்க்கம் புகாநிற்பன்.
நிரயம் புகாநிற்பன்,

என்பன வப் பண்பு குறித்த வினைமுதற் கிளவி. இவை,

சுட்டி யொருவர் பெயர் கொள்ளாமல், 'யாவன் றவஞ் செய்தான்' அவன் சுவர்க்கம் புகும். யாவன் றாயைக் கொன்றான், அவனி ரயம் புகும்.

எனவும்,

ஒருவன் றவஞ் செய்யிற் சுவர்க்கம் புகும்
ஒருவன் தாயைக் கொல்லி னிரயம் புகும்

எனவும் வரும்.

இங்ஙனம் பொது வகையாற் கூறாது,

சாத்தன் றவஞ்செய்து துறக்கம் புக்கான்.
சாத்தன் தவஞ் செய்யிற் றுறக்கம் புகுவன்

எனச் சுட்டி யொருவர் பெயர் கொண்டவழி யேனைக் காலங்களாற் கூறப்படுதலிற் செய்வ தில்வழியென்றார்.

வினைச்சொ லென்றா ரேனுந்,
தவஞ் செய்தான்
தாயைக் கொன்றான்

என்பன வினைப்பெயராய் வருதலுங் கொள்க. (45)

245] இது செயல் வேண்டும் என்பது சாரிடத்துப் பொருள் தரல்

இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி
யிருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்.

இது, முற்றுச் சொற்பொருட்டும் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) இது செயல் வேண்டு மென்னுங் கிளவி — இக்காரியத்தினைச் செய்தல் வேண்டு மென்று சொல்லப்படும் முற்றுச்சொல், தன்பாலானும் பிறன்பாலானு மிருவயினிலையும் பொருட்டாகும்மே — அக்காரியத்தினைச் செய்வான் றன்னிடத்து மவன் செயலை வேண்டியிருப்பான் பிறனொருவ னிடத்து மென்ற விரண்டிடத்தும் நிலைபெறும் பொருண்மையை யுடையதாமென்றவாறு.

(உ-ம்) சாத்தன் ஓதல் வேண்டும்.

என்புழி, 'வேண்டு' மென்னு முற்றுச்சொல் ஒருவழிச் சாத்தனென்ப தெழுவாயாய் வேண்டு மென்னும் பயனிலையோடு முடிந்துழி யவ் வேண்டுதல் சாத்தனதாயும், சாத்தனென்னு மெழுவாய் ஓதுதலென்னும் வினைப்பெயர் கொண்டவழி இவ் வேண்டுதல் தந்தைதாய மேலும் நின்றவாறு காண்க. (46)

246] வற்புறுத்தலில் வினா எதிர்மறைப் பொருள் தரல்

வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்தே.

இதுவும் வினைச்சொல் பொருள்படும் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்- ஒருவ னின்னாங் குரைத்தா னென்றொருவன் மனங் கொண்டிருந்தவழித் தா னவ்வின்னாங் குரையாமையை யவன் மனத்து வலியுறுத்துதற்கு வரும் வினாவினை யுடைய வினைச் சொல், எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்து—அவ்வுரையாமையை யுணர்த்துகின்ற நிலைமையை மறுத்துத் தானுரைத்தானாக உடம்பட்டமையை யவற் குணர்த்துதற் குரிமையினையு முடைத் தென்றவாறு.

உம்மை யெதிர்மறை யாகலான், மறுத்தல் பெரும்பான்மை; நேர்தல் சிறுபான்மையாம்.

'ஆ, ஏ, ஓ' என்பன வினா

ஒருவன் கதத்தானாக களியானாக மயங்கி யின்னாங் குரைத்துப் பின் றெருண்டவழி, யவ் வின்னாங் குரைக்கப் பட்டான், நீ யென்னை வைதா, யென்றக்கால், யான் வைதேனோ? வெனத் தான் வையாமையை வலியுறுத்துதற்குக் கூறியதுதானே, 'அப்பொழுது வைதே னோகாதே'! யென நேர்ந்தமை படவும் நிற்கும்: இனித் தான் வைதமையை வலியுறுத்துதற்கு வரும் வைதேனே'! என்னுஞ் சொல் வைதிலே னென்னு மெதிர்மறையை யுணர்த்தி நிற்கு மென்றலுமாம். (47)

247] இயற்கையிலும் தெளிவிலும் காலம் மயங்கல்.

வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
யிறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்று
மியற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை.

இஃது, எதிர்வு இறப்போடும் நிகழ்வோடும் மயங்கு மென்கின்றது.

(இ-ள்) வாராக் காலத்து வினைச்சொற் கிளவி — எதிர் காலத்திற்குரிய வினைச்சொல்லின் பொருண்மை, இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்று மியற்கையுந் தெளிவுங் கிளக்குங்காலை—வழங்கலாற்றா னிஃதிப் பெற்றித் தெனப் பெற்றியா னறிந்திருந்த வியல் பாகலு மிது நிகழி னிது நிகழுமென நூனெறியாற் றெளியப் படுதலுஞ் சொல்லு மிடத்து இறந்த காலச் சொல்லானும் விளங்கத் தோன்று மென்றவாறு.

(உ-ம்) இக்காட்டுட் போகிற் கூறை கோட்படுவ னெனற்பாலது, கூறை கோட்பட்டான் கூறை கோட் படுகின்றா, னெனக் கூறுத லியற்கை.

எறும்பு முட்டை கொண்டு (தெற்றி ஏறியது) திட்டை ஏறியது, கண்டுழி மழை பெய்வதாம், என்னாது மழைபெய்தது, மழை பெய்கின்றது. எனக் கூறுதறெளிவு. (48)

248] செயப்படு பொருள் வினைமுதல் போல வருதல்.

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே.

இது, வினைச்சொற்கண் மரபு வழுவமைதி கூறுகின்றது.

(இ-ள்) செயப்படு பொருளை—ஒரு வினைமுதலொரு தொழில் செய்வதனை யுறுவதாகிய பொருளை, செய்தது போலத் தொழிற்படக் கிளத்தலும்—தா னத் தொழிலினைச் செய்த வினை முதல் போல அத்தொழில் அதன் மேற்படக் கூறுதலும், வழக்கியல் மரபே—வழக்கின் கண்ணே நடக்கு முறைமை யென்றவாறு.

எனவே, இலக்கண மன்றாயிற்று.

(உ-ம்) இல்லை மெழுகப்பட்டது, என்னாது, இல்ல மெழுகிற் றென்றலாம்.

இங்ஙனம் வினை முதல்வாய்பாட்டால் கிளத்தலே யன்றி, யெளிதி னடப்படுத னோக்கி யரிசிதானே யட்டதெனச் செயப்படுபொருளை வினைமுதலாகக் கூறுதலு மடங்குதற்குத் 'தொழிற்படக் கிளத்தலு மென்றார். இவை கருமக் கருத்தா.

இனி, ஒன்றென முடித்தலா னிவ்வா ளெறியுமெனக் கருவியைத்தானே செய்வதாகக் கூறுங் கருவிக்கருத்தாவும், அரச னெடுத்த வாலயமென வேவினானைக் கருத்தாவாகக் கூறு மேதுக் கருத்தாவுங் கொள்க. (49)

249] வேறு இடத்தும் காலம் மயங்கல்

இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி.

இஃதோர் பொருண்மை குறியா திறப்பு மெதிர்வும் மயங்கு மென்கின்றது.

(இ-ள்) இறப்பே யெதிர்வே யாயிரு காலமும் — இறப்பு மெதிர்வு மாகிய அவ் விரண்டு காலமும், மயங்கு மொழிக் கிளவி சிறப்பத் தோன்றும்—தம்முண் மயங்கும் மொழிப் பொருளாய் விளங்கத் தோன்று மென்றவாறு.

(உ-ம்) இவர் பண்டிப் பொழிலிடத்து விளையாடு
வர். நாளை யவன் வாளொடு வெகுண்டு
வந்தான் பின் நீ யென் செய்குவை ?

என வரும். அவை வினைப் பெயரும் வினையுமாய் மயங்குதலின், 'மயங்கும் வினைச்சொற் கிளவி' யென்னாது பொதுப்பட மயங்கும் மொழிக் கிளவி என்றார். (50)

250] நிகழ்வு ஏனையவற் றோடு மயங்கல்.

ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்.

இது, நிகழ்வு ஏனை யவற்றோடு மயங்கு மென்கின்றது.

(இ-ள்) ஏனைக்காலமு மயங்குதல் வரையார் — நிகழ்காலமும் இறப்போடு மெதிர்வோடும் மயங்குதலை நீக்கார் கொள்வா ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) இவள் பண்டிப் பொழிலிடத்து விளை
யாடும். இவள் நாளை வரும்.

என வரும்.

மூன்று காலமும் வினைப் பெயரோடு மயங்கு மென்றாரேனும், ஏற்றனவே கொள்க. (51)

தொல்காப்பியம் 2-வது — சொல்லதிகாரம்

ஆறாவது வினையியன் முடிந்தது.

ஆக இயல் ஆறற்கும் சூத்திரத் தொகை 250.

உ

# ஏழாவ திடைச் சொல்லியல்

**251]** இடைச் சொற்குப் பொது இலக்கணம்

இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

என்பது சூத்திரம் இது, நிறுத்த முறையானே யிடைச் சொல் லுணர்த்து கின்றமையி னிவ்வோத் திடைச்சொல் லோத்தென்னும் பெயர்த்தாயிற்று. இச் சூத்திரம், இடைச் சொற்கெல்லாம் பொது விலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) இடையெனப்படுப—இடைச்சொல்லென்று சொல்லப்படுவன. பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும்-பெயரும் வினையுமுணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றையே வெளிப்படுத்து நடக்கும். தமக்கியல்பில-தமக்கென வேறார் பொருளை யுணர்த்து மிலக்கண முடைய வல்ல வென்றவாறு.

முன்னும் பின்னும் நிற்குமேனும், பெரும்பான்மையு மிடையே நிற்றலி, னிடைச்சொல்லென்றார்.

(உ-ம்) 'அதுகொ' றோழி! காம நோயோ?
'வருகதி லம்மவெஞ் சேரி சேர'

எனப் பெயரும் வினையுஞ் சார்ந்து நின்று அவற்றின் பொருளை விளக்கின.

'தமக்கியல்பு' இலவெனப் பொதுப்படக் கூறிய வதனாற் சாரப்படுஞ் சொல்லின் வேறாய் நிற்றலே யன்றி, 'உண்டான், என்றிசி னோரே' அருங்குறைத்து என்பனவற்றிற் குறுப்பாய் வருதலுங் கொள்க. (1)

**252]** இடைச் சொற்களின் பாகுபாடு

அவைதாம்,
புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவும்
அசை நிலைக் கிளவி யாகி வருநவு
மிசை நிறைக் கிளவி யாகி வருநவுந்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவு
மொப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங் காலை

இஃது, அவ்விடைச் சொற்களின் பாகுபாடு கூறு கின்றது.

(இ-ள்) அவைதாம்-முற்கூறிய இடைச்சொற்கடாம், புணரிய னிலையிடைப் பொருணிலைக்குதநவும் — இரு மொழி தம்மிற் புணர்தலியன்ற நிலைமைக்கணவற்றின் பொருணிலைக் குதவிசெய்து வருவனவும், வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும் — முதனிலை நின்று காரியத்தைத் தோற்றுவிக்கு மிடத்துக் காலங்காட்டு மிடைச் சொற்களோடே பாலு மிடமுங்காட்டு மிடைச் சொற்களாய் வருவனவும், வேற்றுமைப் பொருள்வயினுரு பாகுநவும்—வேறுபாடு செய்யுஞ் செயப்படுபொருண் முதலாகியவற்றின்க ணுரும்பென்னுங் குறியவாய் வருவன வும், அசைநிலைக் கிளவியாகி வருநவும்—தமக்கோர் பொருளின்றித் தாஞ்சார்ந்தபெயர் வினைகளையசையப் பண்ணும் நிலைமையவாய் வருவனவும், இசைநிறைக் கிளவியாகி வருநவும்—செய்யுட்க ணிசை நிறைத்தலே பொருளாக வருவனவும், தத்தங் குறிப்பிற் பொருள் செய்

குநவும் — கூறுவார் தாந்தாங் குறித்த குறிப்பினாலே யவர்கள் குறித்த பொருளை விளக்கி நிற்பனவும், ஒப்பில் வழியால் பொருள் செய்குநவும்-நாடகவழக்கினா னுய்த் துணரி னன்றி யுலகியல் வழக்கினாற் காட்டப்படுவதோ ரொப்பின்றி நின்றவொப்புமைப் பொருண்மையை யுணர்த்திவரு முவம உருபுகளும், என்றப்பண் பினவே நுவலுங் காலை-என்று சொல்லப்பட்ட அவ்வேழியல் பினையுமுடைய சொல்லுமிடத் தென்றவாறு.

பொருணிலைக் குதவுவன, வெல்லா மென்பதனை வற்றுச் சாரியை யஃறிணை யாக்கியும், நம்முச் சாரியை யுயர்திணை யாக்கியும், நிற்பன போல்வன. இதனானே, காரங் கர முதலிய வெழுத்துச் சாரியையுங் கொள்க.

(உ-ம்) உண்டா னென்புழி உண்ணென்னும் முத னிலை காலங்காட்டுகின்ற டகரத்தினை யும், பாலுமிடமுங் காட்டும் ஆனினை யும் விரித்து நின்றவாறு காண்க.

உண்டென்னு மெச்ச முதலியனவும் பாலு மிடமு முணர்த்து மென்பது, வந்தான் வந்ததென்னும் வினைக ளாற் பெறுதல்.

'பிரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி'

என்பதனாற் கொள்க.

தன்னின முடித்த லென்பதனான், உண்டவ னென் றாற் போலுந் தொழிற் பெயரும், 'நம்பி, நங்கை' யென வரும் பெயர்ப் பெயரும் இவ்விடைச்சொற் பெற்று வருதல் கொள்க.

'கண்ணகன் ஞாலம்'

என்புழிக் கண் ணிடப் பொரு ளுணர்த்துதலு மூர்க்கா லென்புழிக் கா லுரு பாகலும் முற்கூறினாம்.

'அனையை யாகன் மாறே' (புறம்)
'சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே'
(நற்றிணை)

என்புழி மாறென்னு மிடைச்சொல் வினையை யடுத்துக் காரணப் பொருளுணர்த்தி நிற்றலின், மூன்றாம் வேற்றுமைப் பொருளுணர்த்தி நின்ற தல்லாமை யுணர்க. அது, மூன்றாவதன் பொருளுணர்த்திற்றேல்

'கூறாய் தோழியாம் வாழு மாறே'

என்புழி வாழுமாற்றையென விரண்டாவது விரியா தாம்.

'மந்திர விதியின்' மரபுளி வழா' (திருமுருகு)

என்புழி, முறைமையின் வழுவாத வந்தணரென வைநதாவது விரிதலானும்.

'இயல்புளிக் கோலோச்சு மன்னவன்' (குறள்)

என்புழி, 'முறைமையிலே செங்கோனடாத்து மென வேழனுருபு விரிதலானும், உளியென்பது மூன்றனுருபின் பொருட்பட வந்ததன்று; பகுதிப் பொருள் விகுதியாய் நின்று தனக்கேற்ற வுருபையேற்று நின்றது. இம் மூன்றும் புணரியலுள்ளும் வினையியலுள்ளும் வேற்றுமை யோத்தினுள்ளுங் கூறி யிடை நின்ற மூன்று மீண்டுக் கூறுகின்றார். இறுதி நின்ற வொப்பில் வழியாற் பொருள் செய்யு முவமவுருபுகள் 'அன்ன வேய்ப்ப' வென்னுஞ் சூத்திரத்தா னுவமவியலுட் கூறுப. அவை யொப்பின்றி யொப்புணர்த்துதல்,

'ஒப்பு முருவம் வெறுப்பு மென்றா'

வென்னும் பொருளியற் சூத்திரத்தா னுணர்க. 2

253] இடைச்சொல் நிலைபெறுமிடமும் வேறுபாடும்

அவைதாம்
முன்னும் பின்னு மொழியடுத்து வருதலுந்
தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலு
மன்னவை யெல்லா முரிய வென்ப.

இஃது, இன்னு மவற்றிற்கோர் பொதுவிதி கூறுகின்றது.

(இ-ள்) அவைதாம்—முற்கூறிய விடைச்சொற் கடா மிடை வருதலே யன்றி, மொழிமுன்னும் பின்னு மடுத்து வருதலும்-தம்மாற் சாரப்படுஞ் சொற்களை முன்னும்பின்னுந் தாமடைந்து வருதலும், தம்மீறு திரிதலும் — தம்மீற் றெழுத்து வேறு பட்டுவருதலும்; பிறிதவணிலையலும் — ஓரிடைச் சொல் நிற்கின்ற விடத்தே மற்றோ ரிடைச் சொல் நிற்றலுமாகிய, அன்னவை யெல்லா முரிய வென்ப-அத்தன்மையை யுடைய விலக்கணங்க ளெல்லா மிவ்விடைச்சொற்குரிய வென்று சொல்லுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) அதுமன், கேண்மியா —இவை முன் னடுத்தன
'கொன்னூர் துஞ்சினும்'
'ஓஒ வினிதே'! } இவை பின்னடுத்தன.

'உடனுயிர் போகுகதில்ல' — இது திரிந்தது.
'வருகதில் லம்மவெம் சேரி சேர'
'பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ!

இவை பிறிதுநின்றன.

அன்னவை யெல்லா மென்றதனான்
'மன்னைச் சொல்லே'
'கொன்னைச் சொல்லே'

யெனத் தம்மை யுணரநின்றவழி யீறுதிரிதலும்.

'னகாரை முன்னர்'

என வெழுத்துச் சாரியை யீறு திரிதலுங் கொள்க. (3)

254] 'மன்' என்னு மிடைச்சொல்லின் பொருள்

கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

இது, தத்தங் குறிப்பிற் பொருள் செய்வனவற்று ளொன்றன் பொருட் பாகுபாடு கூறுகின்றது.

(இ-ள்) மன்னைச்சொல் கழிவே யாக்கமொழி யிசைக் கிளவி யென்றம் மூன்றென்ப — மன்னைச் சொல் கழிவுப் பொருண்மையு மாக்கப் பொருண்மையு மெச்சமா யொழிந்து நின்ற சொற்பொருண்மையு மென்று சொல்லப்பட்ட வம் மூன்று கூற்றினை யுடைய தென்று சொல்லுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே'

'புதுமலர் கஞல இன்று பெயரின்

அதுமனெம் பரிசில் ஆவியர் கோவே!'
கூரியதோர் வாண்மன், திட்பமின்று.'

எனவரும். (4)

255] 'தில்' என்னு மிடைச்சொல்லின் பொருள்

விழைவே கால மொழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

இதுவுமது.

(இ-ள்) தில்லைச்சொல் விழைவே காலமொழியிசைக் கிளவியென் றம்மூன்றென்ப - தில்லைச் சொல்லே விருப்ப முங் காலமு மொழிந்து நின்ற பொருண்மையு மென்று

சொல்லப்பட்ட வம்மூன்று கூற்றை யுடையதென்று கூறுவ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதி லம்ம யானே; (குறுந்)

எனப் பெறுதற்கண் ணுளதாகிய விருப்பமுங் கூறிற்று.

'வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காலிற்
றமியன் வந்த' (புறம்)

இது காலங் குறித்தது.

'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' (அகம்)

என, வந்தக்கா லின்னது செய்வலென வொழியிசைக் குறித்தது. (5)

256] 'கொன்' என்னு மிடைச்சொல்லின் பொருள்

அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பா னான்கே கொன்னைச் சொல்லே.
இதுவுமது.

(இ-ள்) கொன்னைச்சொல் அச்சம் பயமிலி காலம் பெருமையென்றப்பா னான்கே — கொன்னைச்சொலச்சப் பொருள் பயமின்மைப் பொருள் காலப்பொருள் பெருமைப் பொருளென்று கூறப்பட்ட வக்கூற்று நான்கேயா மென்ற வாறு.

(உ-ம்) 'கொன்முனை யிரவூர் போல' (குறுந்தொகை)எனவச்சமும்,

'கொன்னே கழிந்தன் றிளமையும்' (நாலடி)

எனப் பயமின்மையும்,

'கொன்வரல் வாடை'

எனக் காதலன் நீங்கிய கால மறிந்து வருதலை யுடைய வாடை யெனக் காலமும்,

'கொன்னூர் துஞ்சினும்'

எனப் பெருமையு முணர்த்திற்று. (6)

257) உ-ம் என்னு மிடைச் சொல்லின் பொருள்

எச்சஞ் சிறப்பே யைய மெதிர்மறை
முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென்
றப்பா லெட்டே யும்மைச் சொல்லே.

இதுவுமது.

(இ-ள்) உம்மைச் சொல் லெச்சஞ் சிறப்பே யைய மெதிர்மறை முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென் றப்பா லெட்டே —உம்மென்னுஞ் சொல் எச்சத்தைக் குறிப்பதும் சிறப்பைக் குறிப்பதும் ஐயத்தைக் குறிப்பது மெதிர்மறையைக் குறிப்பதும் முற்றைக் குறிப்பது மெண்ணைக் குறிப்பதுந் தெரிநிலையைக் குறிப்பது மாக்கத்தைக் குறிப்பது மென வக்கூற்றெட்டா மென்ற வாறு.

எச்சம் எதிரது தழீஇயது மிறந்தது தழீஇயது மென விருவகைத்து. சாத்தனும் வந்தா னென்னு மும்மை கொற்றனும் வந்தான், என எதிரது தழீஇ யிற்று. பின் வந்த கொற்றனும் வந்தான் என்பதூஉம் முன்னின்ற சாத் தனும் வந்தா னென்பதனைத் தழுவு தலின் இறந்தது தழீஇயிற்று. இனி இவ்விரண்டினையும் எதிர்காலம் தழீஇயின வாக்கி 'இன்று சாத்தனும் வரும்; நாளைக் கொற்றனும் வரும்', என்பன

எதிரது தழீஇயின வென் றயமாம்

இன்னு மிவ்வெச்சந்தான் 'யான் கருவூர்க்குச் செல்வலென்றாற் கியானுமவ்வூர்க்குப் போதுவலென முழுவதூஉந் தழுவுவதும் அவ்வாறு கூறினாற்கியானு முறையூர்க்குப் போதுவலென ஒருபுடை தழுவுவது மெனவிரு வகைத்தாம்.

சிறப்பு, உயர்வு சிறப்பும் இழிவு சிறப்புமென விருவகைத்து.

'உப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்திடினுங்
கைப்பறாப் பேய்ச்சுரையின் காய்' (நாலடி)
'குறவரு மருளுங் குன்றத்துப படினே'

(மலைபடுகெடாம்)

'ஊர்க்கு மணித்தே பொய்கை' (குறுந்தொகை) என்பனவுயர்வு.

'அவ்வூர்ப் பூசையும் புலா றின்னாது'
என்பதிழிவு.

'ஒன்று' இரப்பான்போலிளிவந்துஞ் சொல்லு முலகம்,-
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்

நல்லார்க்கட் டோன்று மடக்கமு முடைய
னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடைய
னன்னா னொருவன்' (கலித்தொகை)

என்புழி யின்னானென்று துணியாமைக்கண் வருதலின் ஐயம்.

'பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான் யாறே' (குறுந்தொகை) யென்பது மது.

'சாத்தன் வருவதற்கு முரியன்' என்பது, 'வாரா மைக்கு முரிய' னென வெதிர்மறையை யொழிபாக வுடைத்தாய் நிற்றலி னெதிர்மறை. இஃது,

'அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே'

யெனப் பண்பு பற்றியும் வரும். இது பிறிதோர் பொருளினைத் தழுவாது ஒருபொருளின் வினையை மறுத்து நிற்றலி னெச்சத்தின் வேறாயிற்று. மேல் ஆசிரிய ரெதிர்மறை யெச்ச மென்றமையின் இஃதெச்சத்தின் கூறாம்.

'தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்.'
'யாதும் ஊரே'
'நாளு மன்னான் புகழு மன்னை'

என்பன முற்றும்மை.

'நிலனும் நீருந் தீயும் வளியு
மாகா யமுமெனப் பூத மைந்து'

என்பது எண்

'மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்'

என்பதுமது.

'இருநில மடி' தோயாதலிற் றிருமகளு மல்ல
ளரமகளு மல்ல ளிவள் யாராகும்?

என்பது திருமகளோ! அரமகளோ! வென வைபுறா தாராய்தற்கண் வருதலிற் றெரிநிலை.

ஐதேய்ந் தன்று, பிறையு மன்று'
மைதீர்ந்தன்று, மதியு மன்று;
வேயமன் றன்று, மலையு மன்று;
பூவமன்றன்று, சுனையு மன்று;

என்பது மது.

'நெடியனும் வலியனு மாயினா' னென்ப தாக்கம்.

'செப்பே வழீஇயினு வரைநிலை யின்றே'

யென்ப, திலக்கண மாக்கிக் கோடல் குறித்தமை யினாக் கமுமாம் (7)

258] 'ஓ' என்னு மிடைச் சொல்லின் பொருள்

பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
யிருமூன் றென்ப வோகா ரம்மே.

இதுவுமது.

(இ-ள்) பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழி யிசை தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ யிருமூன் றென்ப வோகாரம்மே-பிரிநிலைப் பொருண்மை வினாப் பொருண்மை, எதிர்மறைப் பொருண்மை, எஞ்சி நின்ற சொற் பொருண்மை ஆராயும் நிலைமையை யுடைய பொருண்மை என்கின்ற விவற்றை மிகுதிப் பொருண்மை யோடே தொகுத் தோகாரப் பொருண்மை யாறென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) 'யானோ தேறேனவர் பொய்வழங் கலரே —
இது தேறுவார் பிறரிற் பிரித்தலின், பிரிநிலை
சாத்த னுண்டானோ? — இது வினா.
யானோ கொள்வேன் — இது வெதிர்மறை.
கொளலோ கொண்டான் - இது கொண்டுய்
யப் போகலானாயினா னென்றலி னொழி

யிசை திருமகளோ வல்ல ளரமகளோ வல்லளிவள் யாரென்பது தெரிநிலை.

ஓஒ! வுவமன் றுறழ்வின்றி யொத்ததே! இது மிகுதி யுணர்த்தலிற் சிறப்பு.

'மாறுகொ ளெச்சமும் வினாவு மையமும்' என்னுஞ் சூத்திரத்தா லையமுங் கொண்டார். அது பத்தோ பதினொன்றோ! எனவரும். (8)

259] 'ஏ' என்னு மிடைச் சொல்லின் பொருள்
தேற்றம் வினாவே பிரிநிலை யெண்ணே
யீற்றசை யிவ்வைந் தேகா ரம்மே.

இது, பெரும்பான்மை பொருள்படுமாறுஞ் சிறு பான்மை யசைநிலையாமாறுங் கூறுகின்றது.

(இ-ள்) தேற்றம் வினாவே பிரிநிலை யெண்ணே யீற்றசை யிவ்வைந் தேகா ரம்மே — தெளிவுப் பொருண்மை, வினாப்பொருண்மை, பிரிநிலைப் பொருண்மை, எண்ணுப் பொருண்மை, ஈற்றசை யாத லென விவ்வைந்து வகைப்படு மேகாரமென்றவாறு.

(உ-ம்) உண்டேஎ மறுமை!
நீயே யுண்டாய்?
அவருளிவனே கள்வன்.
'நிலனே நீரே தீயே வளியே'
'கடல்போ றோன்றல காடிறந் தோரே' (அகம்)
எனவரும்.

ஈற்றசை யென்றதனைச் செய்யுளீற்றின்க ணன்றி

'வாடா வள்ளியங் காடிறந் தோரே' (குறுந்)
எனச் சொல்லி னீற்றினுங் கொள்க.

யானே கொண்டேஎ னென்புழி நீயே கொண்டா யென்னு மெதிர்மறைப் பொருடருதல் மாறுகொ ளெச்சமும் வினாவு மென்பதனாற் கொள்க.

**260]** 'என' என்னுமிடைச் சொல்லின் பொருள்

வினையே குறிப்பே யிசையே பண்பே
யெண்ணே பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி

இது பொருள்படு மாறு கூறுகின்றது.

(இ-ள்) வினையேகுறிப்பே யிசையே பண்பே யெண்ணே பெயரோடவ்வறு கிளவியுங் கண்ணிய நிலைத்தே யென வென் கிளவி-வினைச்சொல்லின் பொருண்மையும், குறிப்பாய் வரு முரிச்சொல்லின் பொருண்மையு, மிசைக் கண்வரு முரிச் சொல்லின் பொருண்மையும் பண்பின் கண்வரு முரிச் சொல்லின் பொருண்மையும், எண்ணுப் பொருண்மையும், பெயர்ப் பொருண்மையோடே கூடி யவ்வாறு பொருண்மையுந் தானிடை நின்று கருதிப் பின்வருஞ் சொல்லோடியைவிக்கும் நிலைமையை யுடைத்தது என வென்னுஞ் சொல்லென்றவாறு.

(உ-ம்) கார் வருமெனக் கருதி நொந்தாள்.

'துண்ணெனத் துடித்தது மனம்.'
ஒல்லென வொலித்தது.
வெள்ளென விளர்த்தது.
நிலனென நீரெனத் தீயென வளியென
'அழுக்காறென வொரு பாவி' (குறள்)

எனவரும்.

'நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து'

என்பது மிசை.

**261]** 'என்று' என்னு மிடைச் சொல்லின் பொருள்

என்றென் கிளவியு மதனோ ரற்றே.

இதுவுமது.

(இ-ள்) என்றென் கிளவியு மதனோ ரற்றே—என்றென்னு மிடைச்சொல்லு மென வென்பது போல் பொருளுங் குறித்து வருமென்றவாறு.

(உ-ம்) 'நரைவரு மென்றெண்ணி' (நாலடி.)
'விண்ணென்று விணைத்தது'
'ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு'
பச்சென்று பசத்தது.
நிலனென்று நீரென்று,
'பாரியென் றொருவனு முளன்.'
எனவரும். (11)

262] தில் என்பதற்குப் புறநடை—

விழைவின் றில்லை தன்னிடத் தியலும்.

இது, முற்கூறிய தில் லென்பதற்குப் புறநடை கூறுகின்றது.

(இ-ள்) விழைவின் றில்லை தன்னிடத்தியலும்—அம்மூன்றென்ப தில்லைச் சொல்லே யென்ற மூன்றினுள் விழைவின் கண் வருந் தில்லை தன்மைக்க ணல்லது வாரா தென்றவாறு.

'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே'

எனவே, ஏனைய எல்லாவிடத்திற்கு முரியவாயின. (12)

263] 'ஏ,ஓ' என்பவற்றிற்குப் புறநடை—

தெளிவி னேயுஞ் சிறப்பி னோவு
மளபி னெடுத்த விசைய வென்ப.

இது, ஏகார வோகாரங்கட்குப் புறநடை கூறுகின்றது.

(இ-ள்) தெளிவினேயுஞ் சிறப்பி னோவு மளபி னெடுத்த விசைய வென்ப—முற்கூறிய தெளிவின்கண் வருமேகாரமுஞ் சிறப்பின்கண் வருமோகாரமு மிரண்டு மாத்திரையின் மிக்க மூன்று மாத்திரையினையுடைய வென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) உண்டேஎ மறுமை
ஓஒ! உவமன் உறழ்வின்றி யொத்ததே! (13)

**264]** 'மற்று' என்னு மிடைச் சொல்லின்பொருள்

மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
யப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

இது, பொருள்படுமாறு மசை நிலையுங் கூறுகின்றது.

(இ-ள்) மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை யப்பாலிரண்டென மொழிமனார் புலவர்-மற்றென்னுஞ் சொல் 'முன் சொல்கின்ற தொழிய வினி வேறொன் றென்னும் பொருண்மையும் அசைநிலையாதலும் என்னும் அக்கூற்றிரண்டா மென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

(உ-ம்) இனி மற்றொன்றுரை
'மற்றறிவாம் நல்வினை யாமிளையம்'
'மற்றுங்கூடும் மனைமடி துயிலே'

எனத் தொழிலுங் காலமு மிடமும் பற்றிவரும்.

'அதுமற் றவலங் கொள்ளாது'
என்பது அசை நிலை

'உரையாடா நின்றுழிப் பொருள் குறியாது
'மற்றோ' வெனவு மசைநிலை வரு,' மென்பாருமுளர்.
(14)

265] எற்றென்னு மிடைச் சொல்லின் பொருள்

எற்றென் கிளவி யிறந்த பொருட்டே.

இது, பொருள்படுமாறு கூறுகின்றது.

(இ-ள்) எற்றென் கிளவி யிறந்த பொருட்டே—எற்றென்னுஞ் சொல் லொன்றி னிடத்துநின்று மொன்று போயிற்றென்னும் பொருண்மை யுணர்த்துதலுடைத் தென்றவாறு.

(உ-ம்) 'எற்றெ னுடம்பி னெழினலம்.
இஃதென்னெழி னலமிறந்த தென நின்றது.

'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்' என்பதூஉம், இது பொழுது துணிவில்லாருட் டுணிவில்லாதேன் யான், என்று துணிவு இறந்த தென்பது பட நின்றது. (15)

266] 'மற்றை' என்னும் இடைச்சொல்லின் பொருள்

மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே.

இதுவுமது.

(இ-ள்) மற்றைய தென்னுங் கிளவிதானே-மற்றைய தெனப் பெயர்க்கு முதனிலையாய் வரும் மற்றையென் னுமை கார வீற்றிடைச்சொல், சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே—ஒருவன் முன்னர்க் கருதப்பட்ட பொருளொழிய வதனினப் பொருளைக் கருதி நிற்கு மென்றவாறு.

(உ-ம்) ஆடை கொணர்ந்தவழி, யவ்வாடை வேண்டாதார் 'மற்றையது கொண்டு வா' வென்றால்,

அதற்கினமாகிய பிறவாடை குறித்து நிற்கும் இனிச் சிறுபான்மை 'மற்றை யாடை' யெனத் தானேயும் வரும்.

அஃது, அவனென்னுந் தொடக்கத்தன வற்றிற்கு மற்றை யஃது, 'மற்றையவன்' என அவ்விடைச்சொல் முதல் நிலையாய் வருதலின் மற்றையென இடைச் சொல்லைப் பிரித்து ஓதாது மற்றையது என ஒன்றாக ஓதினார். (16)

267] 'மன்ற' வென்னு மிடைச்சொல்லின் பொருள்

மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

இதுவுமது

(இ-ள்) மன்றஎன் கிளவி தேற்றஞ் செய்யும்—அம் மன்றவென்னுஞ் சொற் றெளிவுப் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) மடவை மன்ற வாழிய முருகே!

என மன்ற வறியாமையையே தெளிவித்தது. (17)

268] தஞ்சமென்னு மிடைச்சொல்லின் பொருள்.

தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.

இதுவுமது.

(இ-ள்) தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே — தஞ்ச மென்னுஞ்சொல் லெளிதென்னும் பொருண் மையை யுடைத் தென்றவாறு.

'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்'

எனத் தஞ்ச மரசு கொடுத்த லெளிதென நின்றது. (18)

269] அந்தி லென்னு மிடைச்சொல்லின் பொருள்

அந்தி லாங்க வசைநிலைக் கிளவியென்
றாயிரண் டாகு மியற்கைத் தென்ப.

இது, பொருள்படுமாறும் அசைநிலையுங் கூறு கின்றது.

(இ-ள்) அந்திலாங்கவசைநிலைக் கிளவியென் றாயிரண்டாகு மியற்கைத் தென்ப—அந்தி லென்னுஞ்சொல் லாங்க வென்னு மிடப்பொருளுணர்த்துதலு மசை நிலைச் சொல்லாதலுமென்னுமவ் விரண்டு கூறா மியற்கையை யுடைத்தென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) 'வருமே சேயிழை யந்தில்'
'அந்தில் கச்சினன் கழலினன்'

என இடமு மசைநிலையுமாய் நின்றது. (19)

270] கொல்லென்னு மிடைச் சொல்லின் பொருள்

கொல்லே யையம்

இது, பொருள் படுமாறு கூறுகின்றது.

(இ-ள்) கொல்லே யையம் — கொல் லென்னுஞ் சொல் லையப்பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) யாதுகொல் மற்றவர் நிலையே.

'இதனள வுண்டு கொன் மதிவல் லோர்க்கே' எனத் துணிவின்க ணையஞ் சிறிது நினைத்தலு மொன்றென முடித்தலாற் கொள்க. (20)

271] எல்லென்னுமிடைச் சொல்லின் பொருள்

எல்லே யிலக்கம்.

இதுவுமது.

(இ-ள்) எல்லே யிலக்கம் - எல்லென்னுஞ் சொல் விளங்குதற் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) எல்வளை யெம்மொடு நீவரின்.
எனவரும். (21)

272] 'ஆர்' என்னும் இடைச் சொன்முடிபு

இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

இது, ஆரென்னு மிடைச்சொல் முடிபு கூறுகின்றது.

(இ-ள்) இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி—இருதிணைக்கும் இயலும் பெயர்க்கும் அஃறிணை யிருபாற்கு மியலும் பெயர்க்கும் முன்னர் வரு மாரென்னு மிடைச் சொல், பலர்க்குரியெழுத்தின் வினையொடு முடிமே - ரஃகா னொற்றினை யீறாகவுடைய வினைச்சொல்லான் முடியு மென்றவாறு.

(உ-ம்) பெருஞ் சேந்தனார் வந்தார்.
முடவனார் வந்தார்.
முடத்தாமக் கண்ணியார் வந்தார்.
தந்தையார் வந்தார்.
எனவும்,

கிளியார் வந்தார்.

எனவும் வரும்.

பெரும்பான்மை யியற் பெயர்கூறவே,
நம்பியார் வந்தார்
நங்கையார் வந்தார்

எனச் சிறுபான்மை யுயர்திணைப்பெயர் முன்னரும் வருத லொன்றென முடித்தலாற் கொள்க. இவைதாம்

ரகர வீற்றுப் பெய ரன்மையின் விளி யேற்குமிடத் திகரவீறு மைகார வீறுமாய் நின்றே விளியேற்கு மென் றுணர்க. ஒருமைப் பெயர் நின்று ஆரைக் கிளவியை யேற்றலி, னிவை யொருவரைக் கூறும் பன்மைக்கிளவி யின் வேறாயின. (22)

273] ஆர் என்பதற்குப் புறநடை

அசைநிலைக் கிளவி யாகுவழி யறிதல்.

இது, மேலதற்கோர் புறநடை

(இ-ள்) அசைநிலைக் கிளவி யாகுவழியறிதல்—அவ் வாரென்னுஞ் சொல் லசைநிலைச்சொல்லா மிடமறிக வென்றவாறு.

'ஆகுவழி' யறித லென்றதனா னும்மை முன்னரும் 'உம்' ஈற்று வினை முன்னரும் வருதல்கொள்க.

(உ-ம்) 'பெயரி னாகிய தொகையுமா ருளவே'
'எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே'
எனவரும். (23)

274] 'ஏ, குரை' என்னு மிடைச்சொற்களின் பொருள்

ஏயுங் குரையு மிசை நிறை யசை நிலை
யாயிரண் டாகு *மியற்கைய வென்ப.

இஃ திசைநிறையு மசைநிலையுங் கூறுகின்றது.

(இ-ள்) ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை யாயிரண்டாகு மியற்கைய வென்ப - ஏயென்னுமிடைச் சொல்லுங் குரை யென்னு மிடைச் சொல்லு மிசை நிறையு மசைநிலையுமென வோரோ வொன் றவ்விரண் டியல்பினை யுடைய வென்று கூறுவராசிரிய ரென்ற வாறு.

(உ-ம்) 'ஏஎ இஃதொத்த னாணிலன் றன்னோடு'

இஃதிசைநிறை.

* இயற்கைத் தென்ப (பா. பே.)

ஏஎயெனச் சொல்லியது—இஃதசைநிலை
அளிதோ தானே யது பெறலருங் குரைத்தே-
இஃதிசை நிறை
பல்குரைத் துன்பங்கள் சென்று படும்—
இஃ தசைநிலை.

தேற்றேகாரம் முதலியன போலச் சார்ந்த மொழியோடு ஒன்றுபட்டிசையாது தொடர்மொழி முதற்கண் பிரிந்திசைத்தலின் வேறு கூறினார். (24)

275] 'மா' என்னு மிடைச்சொல் வருமாறு

மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

இஃது, அசை நிலை கூறுகின்றது

(இ-ள்) மாவென்கிளவி வியங்கோளைச் சொல்—மாவென்னு மிடைச் சொற் பெரும்பான்மை வியங்கோளைச் சார்ந் தசைநிலையாய் வரு மென்றவாறு.

(உ-ம்) 'புற்கை உண்கமா கொற்கை யோனே.'

எனவரும். (25)

276] முன்னிலை யசைச் சொற்கள்.

மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னும்
ஆவயி னாறும், முன்னிலை யசைச்சொல்.

இதுவுமது.

(இ-ள்) மியா இக மோ மதி இகும் சின் என்னும் ஆவயின் ஆறும்-'மியா இக, மோ, மதி, இகும், சின் னென்று சொல்லப்படு மவ்விடத் திடைச்சொல் லாறும், முன்னிலை யசைச்சொல்—முன்னிலைப் பொருளை புணர்த்தும் அசைச் சொல்லா மென்றவாறு.

(உ-ம்) கேண்மியா, சென்மியா

எனவும்,

கண்பனி யான்றிக வென்றி தோழி!

எனவும்'

காமஞ் செப்பாது கண்டது மொழிமோ!

எனவும்,

'உறைமதி வாழியோ வலவ'

எனவும்,

'மெல்லம் புலம்ப கண்டிகும்'

எனவும்,

'காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்'

எனவும் வரும். (26)

277] 'இகும், சின்' என்பவற்றிற்குப் புறனடை

அவற்றுள்,
இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந்
தகுநிலை யுடைய வென்மனார் புலவர்.

இது, மேலதற்குப் புறநடை கூறுகின்றது,

(இ-ள்) அவற்று ளிகுமுஞ் சின்னும் — முற்கூறிய வாறனுள் இகுமுஞ் சின்னும், ஏனை யிடத்தொடுந் தகு நிலையுடைய வென்மனார் புலவர்-ஒழிந்த தன்மைச் சொல்லோடும் படர்க்கைச் சொல்லோடும் பொருந்தும். நிலைமை யுடைய வென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) 'கண்டிகு மல்லமோ!
கண்ணும் படுமோ என்றிசின் யானே'

எனத் தன்மைக் கண்ணும்,

'புகழ்ந்திகு மல்லரோ பெரிதே'
'யாரஃ தறிந்திசி னோரே'

எனப்படர்க்கைக் கண்ணும் வந்தன.

முருகாற்றுப்படையுள்,

'விளிவின்

றிருணிற முந்நீர் வளைஇய உலகத்
தொருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
* * * * * மலைகிழவோனே'

என மதி படர்க்கைக்கண்ணும் வந்ததனைத் 'தகு நிலை யுடைய' வென்றதனா னாதல்,

'அவ்வச் சொல்லிற் கவை யவை'

என்னுஞ் சூத்திரத்தானாதல் அமைத்துக்கொள்க. அன்றி, மதியை யறிவாக்கிப் பல வறிவுடனே நீ யொருவனேயாகப் பரிசி னல்குமெனப் பொருள் கூறுவாருமுளர்.

'ஊனு மூணு முனையி, னென்னும் புறப்பாட்டினுட்

'சென்மோ பெரும!வெம் விழவுடை நாட்டென'

என்பதனையுந் தன்மைக்கண் 'மோ' வரும் என இவ்வாறமைத்தலு மொன்று. அன்றிப் 'பெரும', எம் விழவுடை நாட்டே நீ செல், லென்று சுற்றத்தார் தலைவனை நோக்கிக் கூற, அப்பொருநனும் பாட்டுடைத் தலைவனை நோக்கிப் பின்னுங் கூறினா னாகப் பொருள் கூறுதலு மொன்று.

278] 'அம்ம' வென்னு மிடைச்சொல்லின் பொருள்

அம்மகேட் பிக்கும்.

இது, பொருள் படுமாறு கூறுகின்றது.

(இ-ள்) அம்மகேட் பிக்கும்—அம்மவென்னுஞ் சொல் யான் கூறுகின்றதனைக் கேள் என் றொருவர்க்குக் கேட்பிக்கும் பொருண்மையினை யுணர்த்தநிற்கு மென்றவாறு.

சொல்லொடு பொருட் கொற்றுமை கருதிக்
'கேட்பிக்கு' மென்றார்.

(உ-ம்) 'அம்ம வாழி தோழி!

அம்ம வென்னு மசைச்சொனீட்ட மென்புழி
யும் பொருடந்தே நிற்குமாறு கூறியவா றாண்
டுணர்க (23)

279] 'ஆங்க' வுரையசை யென்பது

ஆங்க வுரையசை.

இதுவுமது.

(இ-ள்) ஆங்கவுரையசை—ஆங்கவென்னு மிடைச் சொற் கட்டுரைக் கண்ணே யசைத்த நிலையாய் வரு மென்றவாறு.

கட்டுரை—புனைந்துரை. அசைத்தல்—சேர்த்துதல்.

'ஆங்கக் குயிலு மயிலுங் காட்டிக்
கேள்வனை விடுத்துப் போக்கி யோளே'

யென்புழி 'யங்ஙனே' யெனப்புனைந்துரைத்து நின்றது

சிறிது பொருளுணர்த்துவனவற்றை யுரையசை யென்றும், பொருளுணர்த்தாது சொற்களை யசைத்து நிற்பன வற்றை யசைநிலை யென்றுங் கூறுதலாசிரியர் கருத்தாதலை யிரண்டதிகாரத்துங் கண்டு கொள்க. (29)

280] ஒப்பில் போலி

ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்.

இதுமது.

(இ-ள்) ஒப்பில் போலியு மப்பொருட்டாகும்- ஒன்றற் கொன் றொக்கு மென்னும் பொருள் தன் கணின்றி வரும் போலியென்னுஞ் சொல்லும் அக் கட்டுரைக் கண்ணே யசைத்த நிலையாகிய பொருளை யுடைத்தாய் வருமென்ற வாறு.

அப்பொருட் டெனவே யாங்கவும் பொரு டருதல் பெற்றாப்.

(உ-ம்) 'மங்கல மென்பதோ ரூருண்டு போலும்'
'நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉம்'
'எரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும்.'

எனப்போலு மென்னு மிடைச்சொ லூரையும் நெய் யையும் புனைந்து நின்றவாறு காண்க. (30)

281] அசைநிலைச் சொற்கள்.

யாகா,
பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி.

இஃது, அசைநிலை கூறுகின்றது.

(இ-ள்) யா கா பிற பிறக் கரோ போ மாமதென வரூ உம் ஆயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி—யா, கா, பிற, பிறக்கு அரோ போ மாது என்று சொல்ல வருகின்ற அவ்வேழு சொல்லுந் தாஞ்சேர்ந்த சொல்லை யசைத்து நிற்கும் நிலைமையையுடைய சொல்லா மென்ற வாறு.

'யா பன்னிருவர் மாணாக்கருள ரகத்திய னார்க்கு' எனவும்,

இன்னும்,

'தோழியா சுவாகதம் போது சீங்கென'

வென்று பாடமாயி னதுவு மிதற் குதாரணம்.

'புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா'

எனவும்,

'தான்பிற

'வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி'

எனவும்,

'நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய'

எனவும்,

'நோதக

'விருங்குயி லாலு மரோ'

;

எனவும்,

'பிரியின் வாழா தென்போ தெய்ய

எனவும்,

'விளிந்தன்று மாதவத் தெளிந்தவென்

னெஞ்சே'

எனவும் வரும். (31)

232] பிரிவில் அசைநிலைச் சொற்கள்

ஆக வாக லென்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவி லசைநிலை.

இது, தாஞ் சார்ந்து நின்ற சொல்லின் பொருண்மையை யுணர்த்தி நிற்கு மிடைச் சொற்களைக் கூறுகின்றது.

(இ-ள்) ஆக ஆக லென்பதென்னு மாவயின் மூன்றும் — ஆக ஆகல் என்ப தென்று சொல்லப்படுகின்ற அவ்விடத்து மூன்றும், பிரிவிலசைநிலை—தாஞ் சார்ந்த சொற்களின் பொருள்களைப் பிரிதலின்றி யுணர்த்து மசை நிலையாமென்றவாறு.

(உ-ம்) 'காரெதிர் கானம் பாடினே மாக'

'இனைத லானா ளாக'

'சொல்லற் பாணி நின்றன னாக'

வெனச் செயவெனெச்சம் முற்றாய்த் திரிவுழி யாக வென்று மிடைச்சொல் வந்தவற்றின் பொருளே யுணர்த்திச் செயவெ னெச்சமாய் நின்றது. இவ் வினை யெச்ச முற்று வினைமுதலைக் கொள்ளும்வழி யாக லென்று மிடைச் சொல்லைப் பெற்று நிற்கும்.

'அருளா யாகலோ கொடிதே' புறம்
'தன்பெய ராகலி னாணி, புறம்
'அனையை யாகன் மாறே' புறம்

என ஆக லென்னும் வினைக்குறிப்புச் சொற் சார்ந்து நின்ற சொற் பொருளையே யுணர்த்தி நின்றது. தெரிநிலைக்குங் குறிப்பிற்கும் உரியவிரண்டிடைச் சொற்களும் சிறுபான்மைய வாகலின், வினையியற்கண் எடுத் தோதா ராயினார்.

நடுங்கு நோய் தீரநின் குறிவாய்த்தா ளென்
பதோ துறந்ததை,
எறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்
பதோ
துறந்ததை (கலி.)

என்புழி என்ப தென்றது, என்று, சொல்லப்படுவ தென்னும் பொருடந்து நில்லாது, வாய்த்தா ளெதிர் கொண்டாளென் னுஞ்சொற்களுணர்த்திய செய்ந்நன்றி யைத் தானு முணர்த்தி நின்றவாறு காண்க.

இவை தாஞ் சார்ந்த சொல்லை யசைத்தே நிற்கு என்றலின் 'பிரிவிலசை நிலை' யென்றார். இங்ஙனம் நில்லாது, வழக்கின்கண் ஆக ஆக வென வடுக்கிவந் துடம்பாடாமையும் ஆதர மின்மையு மாகிய பொரு டந்து நிற்குமென்றல் அசை நிலைக் காகாமையின் அவ் வாறு கூறுதல் பொருளன்மை யுணர்க.

283] 'ஔ' வென்பதன் பொருள் வேறுபாடு

ஈரள பிசைக்கு மிறுதியி லுயிரே
யாயிய னிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வரு காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்;
குறிப்பி னிசையா னெறிப்படத் தோன்றும்.

இது, பொருள் வேறுபடுமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஈரள பிசைக்கு மிறுதியிலுயிரே—இரண்டு மாத்திரையை யிசைக்கு 'முயிரௌ வெஞ்சிய் விறுதி யாகு' மென்றதனான் மொழிக்கீறாக தென்ற வௌ காரம். ஆயியனிலையுங் காலத்தானும் — கவவோ டியையி னௌவு மாகு மென்ற வியல்பின் கண்ணே கௌ, வௌ வெனமொழிக் கீறாய் நிற்குங் காலத்துக் கண்ணு (மெவ்வாறு நிற்குமெனின்) அளபெடை நிலை யுங் காலத்தானு மளபெடை யின்றித்தான் வருகாலை யும் பொருள் வேறுபடுத லுளவென மொழிப—அவை யளபெடுத்து நிற்குங்காலத்தினும், அளபெடாதுதானே வந்து நிற்குங் காலத்தினும் பொருள் வேறுபடுதலுள தென்று கூறுவராசிரியர், குறிப்பினிசையா னெறிப் படத் தோன்றும்—அப்பொருள் வேறுபாடுதான் சொல்லு வான் குறிப்பினானுளதாம் ஓசை வேறுபாட்டான் வழிப்படப் புலப்படு மென்றவாறு.

**முன்னர் நின்ற வும்மைச் சிறப்பும்மை. பின்னர் நின்ற விரண்டு மெண்ணும்மை.**

ஆசிரியர் முன்னர்க் கூறியதனை யீண்டு மிறுதியி லுயிரே யென் றொருதலைமொழித லென்னு முத்தி யாகக் கூறினமை யானும், உரையாசிரியரும்.

'நெட்டெழுத்தேழே யோரெழுத் தொருமொழி'

என்புழி யௌகாரத்தினை யுதாரணங் காட்டாது 'கவவோடியையின்' என்பதனாற் கௌ வௌ வென வுதாரணங் காட்டினமையானும், ஈண்டு,

'ஆயிய னிலையுங் காலத்தானு
மளபெடை யின்றித் தான்வரு காலையும்.'

என்னு மிரண்டிற்கும் ஔஉ, ஔ வென்றுயிரையே யுதாரணமாகக் காட்டுதல் மாறு கொளக் கூறலாமென் றுணர்க.

(உ-ம்) கௌஉ வென வளபெடுத்தவழிக் 'கைக் கொண்டேவிடு' எனத்துணிவுங் கௌவென வளபெடாத வழி 'நினக்குக் கருத்தாயின்' கைக் கொளென வையமு முணர்த்தும். இது வௌ வென்பதற்கு மொக்கும்.

இனி, ஔகார மளபெடுத்துழி யுகரவிறாயே நிற்றலின் ஔஉ வென உகர விறாகிய ஔகாரமு மீண்டுக் கோடும். இது, வியப்புணர்த்தும் அளபெடா வௌகாரமாகா தென்றுணர்க. (33)

234] சொல்லுவான் குறிப்போடு பொருள் உணர்த்துவன

நன்றீற் றேயு மன்றீற் றேயு
மந்தீற் றோவு மன்னீற் றோவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.

இதுவுமது.

(இ-ன்) நன்றீற் றேயும்—நன்றின தீற்றின்கண் வந்த வேயும், அன்றீற் றேயும்—அன்றின தீற்றின் கண் வந்த வேயும், அந்தீற் றோவும்—அந்தின தீற்றின் கண் வந்த வோவும், அன்னீற்றோவும்—அன்னின தீற்றின் கண் வந்த ஓவும், அன்ன பிறவுங் குறிப்பொடு

கொள்ளும் - அவை போல்வன பிறவுஞ் சொல்லுவான் குறிப்பொடு பொருளுணர்த்தி நிற்கு மென்றவாறு.

ஒருவன், 'கொலை, களவு, கள், காமம், பொய் யென்பனவற்றை விரும்புக,' என்றவழி, 'அவற்றை விரும்புத னன்றே யென்றால் மேவாமைக் குறிப் புணர்த்தும்.

'நின்றே யெறிப பறையினை—நன்றே காண்' (நாலடி) என்பது, தீதென்னுங் குறிப்புணர்த்தும்.

'இஃதூழன்றே!, யென்றா லஃதிங்ஙனம் நுகர்வியா தொழியுமோ, வென்னுங் குறிப்புணர்த்தும்.

'அந்தோ! வெந்தை யடையாப் பேரில்'
(பெயரில்)

'அன்னோ! வென்னா வதுகொல் தானே!
என்பன இரக்கக் குறிப்புணர்த்தும்.

இவ்வேகார வோகாரங்கள் பலசொல்லோ டடுத்து வராது இச்சொற்களையே யடுத்துப் பொருள் வேறு பட்டு நிற்றலி னவற்றைப் (பெயர்) பேர் தந்து வேறு கூறினார்.

'அன்ன பிறவு' மென்றதனான்'
'அன்னா! அலமரு மாருயிரும்'

என்புழி 'அன்னா இரக்கக் குறிப்புணர்த்துதல் கொள்க. இதனை ஒகார மாகாரமாய்த் திரிந்த தென்றலுமாம்.

'ஏ எ யிவளொருத்தி பேடியோ வென்றார்'
என வேகாரத்தின் பின்வந்த ஏ இழி புணர்த்துதலும்.

'அ ஆ, விழந்தான்!'
எனவும்

ஐயாவென்னை யாவென் னையா வகன்றனையே!
எனவும்

ஆவம்மா அம்மாவென் அம்மா வகன்றனையே!

எனவும் ஆகார மிரக்கக் குறிப்புணர்த்துதலும், பிறவுங் கொள்க. (34)

285] உம்மைகள் மயங்குமாறு.

எச்ச வும்மையு மெதிர்மறை யும்மையுந்
தத்தமுண் மயங்கு முடனிலை யிலவே.

இது, முற்கூறிய வும்மைகண் மயங்கு மென்கின்றது.

(இ-) எச்சவும்மையும்—எச்சப் பொருண்மையினை யுடைய வும்மையும், எதிர்மறை யும்மையும்—அதனை முடிக்கவரு மெதிர்மறைப் பொருண்மையினையுடைய வும்மையுந், தத்தமுண் மயங்கும் — தொடராய் வந்து தம்முண் மயங்கும், உடனிலையிலவே-அங்ஙன மயங்கிற் றேனுந் தன்வினை யொன்றிய முடிபுகொள்ளா என்றவாறு.

(உ-ம்) 'சாத்தனும் வந்தான், இனிக் கொற்றனும் வரினும் வரும்,' என்புழிச் சாத்தனுங் கொற்றனு மென்னு மெச்ச வும்மைகள் வரினு மென்னு மெதிர்மறை யும்மை யோடு தொடர்ந்து நின் றொருவினை கொள்ளாது, இறப்பு மெதிர்வும் பற்றி வரும் வேறுவினை கொண்டவாறு காண்க. இங்ஙன முலக வழக்குண்மை யானும், ஆசிரியர் மயங்கி யுடனிலையில வென்னாது மயங்கு முடனிலையிலவெனச் சூத்திரஞ் செய்தமையானும், இதுவே பொருளென்றுணர்க. இவ்விரண்டும்மையு மெச்சமாதலின் இவற்றிற்கே மயக்கமுள தென்று கூறினார்.

ஒன்றெனமுடித்த லென்பதனான், வடுகரசரும் வந்தார்; இனித் தமிழ்நாட்டு மூவேந்தரும் வரினும் வருவர்; என வெச்ச வும்மையோடு முற்றும்மை தொடர்ந்து வேறுவினை கோடலுங் கொள்க. (35)

286] எச்ச உம்மை நிற்றற்குரிய இடம்

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இஃது, எச்ச வும்மைக்கண் சொல்லுதல் வகைமை கூறுகின்றது.

(இ-ள்) எஞ்சு பொருட்கிளவி—எச்சவும்மையாற் றழுவப்படுமெஞ்சு பொருட் கிளவி, செஞ்சொலாயின் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்—உம்மையில் சொல்லாயின், அவ்வும்மையில் சொல்லை யவ்வும்மைத் தொடர்க்குப் பின்சொல்லாது முன் சொல்லுக வென்ற வாறு.

(உ-ம்) சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான்.

'அடகு புலால் பாகு பாளிதமு
முண்ணான்.

'கடல் போலுங் கல்வி யவன்.'

எனவரும். பிற்படக் கிளப்பின் பொருள் கொள்ளாமை காண்க. செஞ்சொலாயின் முற்படக் கிளக்க, வெனவே யும்மையோடு வரின் யிற்படக் கிளக்க வென்றவாறாம். (36)

237] முற்றும்மை யெச்சவும்மையாகும் வழுவமைதி

முற்றிய வும்மைத் தொகைச் சொன்மருங்கி
னெச்சக் கிளவி யுரித்து மாகும்.

இது, முற்றும்மை யெச்ச வும்மையாம் பொருட்டு மென வழுவமைக்கின்றது.

(இ-ள்) முற்றிய வும்மைத் தொகைச் சொன் மருங்கின்—முற்றும்மை யடுத்து நின்ற பெயரும் வினையுஞ் சார்ந்த சொல்லிடத்து, எச்சக்கிளவி யுரித்துமாகும் — எச்சச் சொல்லுரித்துமாகு மென்றவாறு.

எனவே, எச்சப்பொருள் குறியாது நிற்றலே பெரும் பான்மை. ஏற்புழிக் கோடலாலிஃதெதிர் மறைக்கண் ணதெனக் கொள்க.

(உ-ம்) பத்தும் கொடால். அனைத்துங் கொடால்.

என்னும் முற்றும்மைகள், சில 'கிடக்கக் கொடு' என வெச்சப் பொருளுணர்த்தி நின்றவாறு காண்க. தொகைச் சொலென்றதனானே 'எல்லாரும் வாரா' ரெனப் பொருட் பெயர்க்கண்ணுங் கொள்க. பத்துங் கொடு பிறவுங் கொடு என்பது கருத்தாயின் அஃதெச்ச வும்மையாம். (37)

288] ஈற்றசை யேகாரத்திற் களபொன்று
ஈற்று நின் றிசைக்கு மேயெ னிறுதி
கூற்றுவயி னோரள பாகலு முரித்தே.

இஃது, ஈற்றசை யேகாரத்திற்கு வேறோ ரிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) ஈற்றுநின்றிசைக்கு மேயெனிறுதி—செய்யு ளிறுதிக்கணின் றிசைக்கு மீற்றசையேகாரம், கூற்று வயின்—அச் செய்யுளிடத்துப் பாவென்னு முறுப்பினை நிலைபெறக் கூறுமிடத்து, ஓரளபாகலு முரித்தே — தனக்குரிய விரண்டு மாத்திரையே யன்றிப் பின்னரு மொரு மாத்திரை யுண்டாய் வருதலு முரித்தென்ற வாறு.

உம்மையான் மூன்று மாத்திரை பெறா திரண்டு மாத்திரை பெற்றுவருதலு முரித்தாயிற்று. பாவென்னு முறுப்பினை நிலைபெறக் கூறுமிடத்து மூன்று மாத் திரை பெறுவது செய்யுளிறுதிக்க ணிற்கும் ஈற்றசையே யென்பதறிவித்தற்கு ஏ யெனிறுதி யென்று மீட்டுங் கூறினார்.

(உ-ம்) 'கடல்போ றோன்றல காடிறந் தோரேஎ'
'அகில்படு கள்ளியங் காடிறந் தோரேஎ'
'தண்கடல் வேலிநின் குடநா டற்றேஎ'

இவை போல்வன பிறசான்றோர் செய்யுட் களெல்லாம் மூன்று மாத்திரை பெற்றுப் பாவென்னு முறுப்பை விளக்கி நிற்குமாறு காண்க.

இனி,

'அவரேஎஎ கேடில் விழுப்பொருட்டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரேஎ'

எனச் செய்யுளிடைக்கண் வருமீற்றசை யேகார மிரண்டு மாத்திரை பெற்றுப் பாவென்னு முறுப்பை விளக்கி நின்றவாறு காண்க. இஃதீற்றசை யாகலிற் செய்யுளி யலிற் கூறு மாத்திரை யென்னு முறுப்பின்கண் அடங்கா தென் றீண்டுக் கூறினார். அது பெரும்பான்மை பொருட்டருஞ் சொற்கே விதியாகலின். (38)

289] எண்களுக்கு முடிபு வேற்றுமை.

உம்மை யெண்ணு மெனவே னெண்ணுந்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே.

இது, எண்களுக்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) உம்மை யெண்ணு மெனவே னெண்ணும் —உம்மையான் வருமெண்ணும் எனவான் வருமெண்

ணுந், தம் வயிற் றொகுதிகடப்பாடிலவே—தத்த மிறு திக்கட் டொகைச்சொற் பெறுதலை முறைமையாக வுடைய வல்ல (எ-று)

எனவே, தொகை பெற்றும் பெறாதும் வருமென்ப தாம்.

(உ-ம்) உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குறி
மையு மாயிரு திணைக்குமோ ரன்ன வுரி
மையு மம்மூ வுருபின'

'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் [தோன்றி'
நிலனென நீரெனத் தீயென வளியென [நான்கும்'
'உயிரென உடலென வின்றி யமையா'

வெனவரும்.

தொகையெனப் பொதுப்படக் கூறியவதனால் எண்ணுப் பெயரேயன்றி, 'யனைத்தும், எல்லாம் என்' னுந் தொடக்கத் தனவுங் கொள்க. (39)

290] எண்ணேகாரம் இடை இட்டும் வரும்

எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.

இது, எண்ணிடத்து வழுவமைக்கின்றது.

(இ-ள்) எண்—உம்மையு மேகாரமு மெனவுமென்று மெனாவு மென்றாவுஞ் செவ்வெண்ணுமாகிய வெழு வகை யெண்களுள் ஒன்று முதனின்று, ஏகாரமிடை யிட்டுக் கொளினும்—ஏகாரவெண்ணைத் தன்னிடத்தே யழைத்துக் கொண்டு நிற்பினும் பிறவெண்களைத் தன்னிடத்தே யழைத்துக் கொண்டு நிற்பினும், எண்

ணுக் குறித்தியலு மென்மனார் புலவர் — பல வெண் வந்தனவென்று குற்றமாகா, தான் உணர்த்தும் எண்ணுப் பொருளையே பலவுங் குறித்து நடக்கு மென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) 'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்ன
நிலைவி லுணர்வுடை யோர்'
'தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே
யுறலோ டாங்கைம் புலனெனமொழிப.'

இவை செவ்வெண் ணின் றேகார வெண்ணை யிடை யிட்டன.

'மாத்திரை யெழுத்திய லசைவகை யெனா'

வென்பது செவ்வெண் ணின் றெனாவெண்ணை யிடை யிட்டது.

'வண்ணம் வடிவே யளவே சுவையே.'

யென்னுஞ் சூத்திரம் செவ்வெண்நின்று ஏகார வெண் ணையும் என்றாவென்னு மெண்ணையும் இடை யிட்டது.

யாத்த சீரே யடியாப் பெனாஅ

என்பது ஏகாரவெண் செவ்வெண்ணையு மெனாவையு மிடையிட்டது. ஒழிந்த வெண்களு மிவ்வாறு வருமாறு சூத்திரங்களுள்ளுஞ் செய்யுட்க ளுள்ளுங் காண்க. (40)

**291] எனா என்றா இரண்டும் எண்ணில் வருதல்**

உம்மை தொக்க வெனாவென் கிளவியும்
ஆவீ றாகிய வென்றென் கிளவியும்
ஆயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.

இஃதெண்ணும்மை பிறவெண்ணோடு மயக்குங் காற் சிறந்துவரு மென்கின்றது.

(இ-ள்) உம்மை தொக்கவெனா வென் கிளவியும்- முன்ன ரெண்ணும்மை யடுக்கி நின்ற எனா வென்னு மிடைச் சொல்லும், ஆவீறாகிய வென்றென் கிளவியும்-

முன்னரெண்ணும்மை யடுக்கி நின்ற வாகாரத்தை யீறாகவுடைய வென்றெண்ணு மிடைச்சொல்லும், ஆயிருகிளவியு மெண்ணு வழிப்பட்டன — அவ்விரண்டு சொல்லு மெண்ணுமிடத்தே சிறந்து வருமென்றவாறு.

(உ-ம்) 'ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா' வென்னுஞ் சூத்திரம் உம்மை தொக்க வென்றாவிற் குதாரணம். உம்மை தொக்க வெனா வந்துழிக் காண்க.

இனி, உம்மை தொக்க வென்பதற்கு நிலனெனாவும் என விற்று நின்றவும்மை தொக்கு நிலனெனா வென்றல் வழக்கமின்மையானும், எனாவு மென்றாவு மெண்ணிடைச் சொல்லாதன் மேலிற் சூத்திரத்தாற் பெறப்படுதலானு மிதுவே யாசிரியரின் கருத்து. (41)

292] எண்ணிடைச் சொற்களுக்கு முடிபு வேற்றுமை

அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்
பெயர்க்குரி மரபிற் செவ்வெ ணிறுதியும்
ஏயி னாகிய வெண்ணி னிறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா.

இது, எண்ணிடைச் சொற்கட்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும் — முற்கூறிய 'எனா, என்றா' என்பனவற்றான் வரும் எண்ணுச் சொற்களி னிறுதியும், பெயர்க்குரி மரபிற் செவ் வெண்ணிறுதியும்—இடைச் சொல்லா னன்றிப் பெயரா னெண்ணப் படுஞ் செவ்வெண்ணி னிறுதியும், ஏயினாகிய வெண்ணினிறுதியும் — ஏகாரத்தான் வரு மெண்ணுச் சொற்களி னிறுதியும், யாவயின் வரினுந் தொகையின் றியலா—யாதானு மோரிடத்து வரினுந் தொகையின்றி நடவா வென்றவாறு.

(உ-ம்) நிலனெனா நீரெனா விரண்டும்
நிலனென்றா நீரென்றா விரண்டும்
நிலம்நீரென விரண்டும்.
நிலனே நீரேயென விரண்டும்

எனவரும்.

இறுதியு மென்ற தவ்வெண்ணுக்க ணிறுதி தொகை பெறும், என்றற்கு. 'பெயர்க்குரி மரபி னென்றது, 'மற்றைய வெல்லா மிடைச்சொல்; செவ்வெண்ணுப் பெயர் தம்மாலே யாமென்றற்கு. (42)

293] உம்மை யெண்ணில் உருபு தொகுதல்

உம்மை யெண்ணி னுருபு தொகல் வரையார்.

இஃதும்மையு முருபுந் தொக்க வழியும் உருபு தொகையெனப்படுமென வழுவமைத்தவாறு.

(இ-ள்) உம்மை யெண்ணின்—உம்மையான் வரு மெண்ணின் கண், உருபு தொகல் வரையார்—இரண் டாவது மேழாவதுந் தொக்கு நிற்றலை நீக்கா ராசிரிய ரென்றவாறு.

உம்மையெண்ணெனப் பொதுப்படக் கூறுதலின் உம்மை தொக்குழியும் விரிந்துழியு முருபு தொகுதல் கொள்க.

(உ-ம்) புலி விற் கெண்டை
யானை தேர் குதிரை காலாள்

என்னும் பலபெய ரும்மைத் தொகைகள் ஒரு சொன்னடை யவாய்க் 'கிடந்தன, வந்தன' வென்னுந் தம்வினையாகிய பயனிலைகளைக் கொள்ளும் வழியும்,

புலியும் வில்லுங் கெண்டையுங் கிடந்தன.
யானையுந் தேருங் குதிரையுங் காலாளும்
[வந்தன

எனவும்மை விரிந்து நின்ற பொருளைத் தந்தே நிற்கு மாறு போல, இவ்வும்மைத் தொகைகள்,

புலி விற் கெண்டை வைத்தான்
யானை தேர் குதிரை காலா ளெறிந்தான்

என வுருபேற்று நின்றவழியும்,

புலியும் வில்லுங் கெண்டையும் வைத்தான்.
யானையுந் தேருங் குதிரையுங் காலாளும்
[மெறிந்தான்,

என வும்மை விரிந்து நின்ற பொருளைந் தத்தே நிற்றல் வேண்டும். அங்ஙன மும்மை விரிந்து நிற்குமிடத்து வைத்தானென்னும் வினைமுதல் வினைக்குப் புலியும் வில்லுங் கெண்டையுஞ் செயப்படு பொருளா யிரண்டா முருபே விரித்து நிற்றலும் எறிந்தா னென்னும் வினை முதல் வினைக்கு யானை முதலியன செயப்படு பொருளா யிரண்டா முருபே விரித்து நிற்றலு முணர்க.

'குன்றி கோபங் கொடி விடுபவள
மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்?

என்னும் பலபெயர் உம்மைத் தொகைக்கும் உம்மையு முருபும் விரித்தே பொருளுரைக்க. இக் குன்றி முதலிய வற்றைச் செவ்வெண்ணாக்கி 'யிவற்றை'யெனத் தொகை கொடுத்துருபு விரித்துழியும் அச்சுட்டு அக் குன்றி முதலியவற்றையே சுட்டுதலின் அக்குன்றி முதலி யன செயப்படு பொருளாயே நிற்குமாறு முணர்க. அன்றியவை செவ்வெண்ணாயின்.

'நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி
னளப்பரியை' (பதிற்றுப்பத்து)

என்றாற் போல வும்மையு முருபும் விரித்தற்குப் பொருந் தாது எழுவாயாய் நான்கென்னுந் தொகைச்சொற்

பயனிலை கொண்டு நிற்றல் வேண்டு மென்றுணர்க. இவை யும்மைத் தொகைக்க ணுருபு தொக்கன. இங்ஙன மிரண்டு தொக்கனவற்றை யென்ன தொகை யென்று கோடுமோ வெனின் புலியையும் வில்லையுங் கெண்டையையும் வைத்தானென விரித்தவழி யெண்ணுப் பொருடந்து நிற்கு மும்மையினுஞ் சொற்றொடர்ப் பொருளை யுணர்த்தி நிற்ப துருபாதலி னச்சிறப்பு நோக்கி யுருபு தொகையென்றே கோடும்.

இனிப்

'பாட்டுங் கோட்டியு மறியாப் பயமில்
தேக்கு மரம்போ னீடிய வொருவன்'
இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி.

என்னும் இவை யும்மை விரிந்து நின்றுருபு தொக்கன. (43)

294] உம் என்பது உந்து எனத்திரிதல்

உம்முந் தாகு மிடனுமா ருண்டே.

இது, உம்மென்னு மிடைச்சொற் றிரியு மென்கின்றது.

(இ-ள்) உம்முந் தாகு மிடனுமா ருண்டே —வினை செயன் மருங்கிற் காலமொடு வருவனவற்றுள் உம் மீறு உந்தாய்த் திரிதலு முடைத்தென்றவாறு.

(உ-ம்) நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து.
நாரரி நறவி னான்மகிழ் துங்குந்து

எனவரும்.

இடனுமாருண்டே யென்றதனா னித்திரிபு பெயரெச்சத்திற்கே கொள்க. (44)

295] எண்ணிடைச்சொற்கள் வினைச்சொற்களோடும் வருதல்

வினையொடு நிலையினு மெண்ணுநிலை திரியா
நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே.

இஃது, எண்ணிடைச் சொற்கள் வினைச்சொற் கண்ணும் வருமென்கின்றது.

(இ-ள்) எண்ணு வினையொடு நிலையினும் நிலை திரியா - எண்ணிடைச் சொற்கள் பெயர்ச் சொல்லோ டன்றி வினைச் சொல்லோடு நிற்பினுந் தத்தம் நிலை மையிற் றிரியா, அவற்றவற்றியல்பு நினையல் வேண் டும் - அவற்றவற்றிலக்கணங்களாராய்ந் தடுதல் வேண்டு மாசிரிய ரென்றவாறு.

(உ-ம்) 'உண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தையானே' (புறநானூறு)
உண்ணவெனத் தின்னவெனப் பாடலென
வந்தான் எனவரும்.
ஒழிந்த வெண் வினையோடு வந்தன வுள
வேற் காண்க.
உண்டு தின்றோடி வந்தான்

என்பது தொகையின்றேனுஞ், செவ்வெண்ணாம் சிறுபான்மை முற்றுந் தொகை பெற்று வருதலின்.

சாத்தன் வந்தான் கொற்றன்வந்தான் வேடன் வந்தா னென மூவரும் வந்தமை யாற் கலியாணம் பொலிந்தது. என முற்றுச் செவ்வெண்டொகை பெற்று வரும். இவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்றலின் 'எண்ணப்படா', வெனின், ஓர்பொருள் வேறுபாட்டானா னெண்ணி னார். இதனை, இம்மூவருடன்வரிற் கலியாணம்பொலியுமென விருக்கின்றான் கூற்றாகக் கொள்க. என்னை? முன்னர்ச் சாத்தன் வந்தான்; அதன் பின்னர்க் கொற்றன் வந்தான்; அதன் பின்னர் வேடன் வந்தான் இவர்க ளொருங்குவந் திலரேனு, முடிவில் வந்து நிற்றலின், இது

முடிபு போயிற்றென்று கூறினானாதலின். இம்மூவ ரென்றமையாற், பெயர்தொகை பெற்ற தேனும் வந்தமையா னென்றத னான் வினையுந் தொகைபெற்று அவ் வினையாற் கலியாண முடிந்தவாறு காண்க. இம் முற்றடுத்து வந்தனவுஞ் செவ்வெண்ணாம்.

இனி, யாங் கண்டபொழு திம்மாடத்து மேனின் றானு மிருந்தானுங் கிடந்தானு மிவனென முற்றுச் சொற் கன்னு மெண்ணும்மை வருதல் கொள்க. பெயரெச்சத்தி லெண்ணிடைச் சொல்வாரா. (45)

296] எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென்றோன் றுதல்
என்று மெனவு மொடுவுந் தோன்றி
யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே.

இஃது, எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென் றொன்று மென்கின்றது.

(இ-ள்) என்று மெனவு மொடுவுந் தோன்றி - என்றும் எனவும் ஒடுவும் மென்பன ஒருவழித் தோன்றி, எண்ணினுட் பிரிந் தொன்றுவழியுடைய—எண்ணினுட் பிறவழியும் பிரிந்து சென்றொன்று மிடமுடைய வென்ற வாறு.

(உ-ம்) 'வினைபகை யென்றிரண்டி னெச்சம்' (குறள்)

'கண்ணிமை நொடியென'

'பொருள் கருவி காலம் வினையிடனோ [டைந்தும் (குறள்)

என்புழி, 'வினையென்று, கண்ணிமையென, பொரு ளொடு கருவியொடு, காலத்தொடு, வினையொடு' என்று பிறவழிச் சென்றோன்றியவாறு காண்க.

ஒன்றுவழியுடைய வென்றதனால், சொற்றோறும் நிற்றல் பெரும்பான்மை. அஃதிக் காலத்தரிது. (46)

297] இடைச் சொற்களுக்குப் பொருள் கொள்ளுமாறு

அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த வியல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
*திரிந்துவேறு வரினுந் தெரிந்தனர் கொளலே.

இஃது, எழுவகை இடைச் சொற்கும் பொருடரும் புற நடை கூறுகின்றது.

(இ-ள்) அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென மெய்பெறக் கிளந்த வியலவாயினும் — முற் கூறிய இடைச் சொற்கடா மவ்வச் சொற்குக் கூறிய அவையே அவையே பொருளென நிலைபெறச் சொல்லப் பட்ட வியல்பை யுடையவாயினும், வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்திரிந்து வேறுவரினும் - தாமடைந்து வருஉம் வினையோடும் பெயரோடு மாராய்ந்துணரத் தோன்றி வேறு பொருளவாயும் அசை நிலையாயுந் திரிந்து வரினும், தெரிந்தனர் கொளலே—ஆராயந்து கொள்க வென்றவாறு.

வேறு பொருளவென்றுணர்தற்குச் சார்பு, வினையும்பெயரும்.

(உ-ம்) ஓகாரம்,
'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ'

என விற்றசை யாயும்,

'கலக்கொண்டனன் கள்ளென்கோ!
காழ்க்கொண்டென கூடென்கோ!

என, வெண்ணாயும்

* திரிந்து வேறு படினும் (பா. பே.)

'நீங்கின ளோவென் பூங்க ணோளே!
என இரக்கக் குறிப்பாயும் வந்தது.

என வென்பது, ஊரெனப் படுவ துறையூர்
எனச் சிறப்பின்கண் வந்தது.

அவர் நமக்குத் தஞ்சம் அல்லர்
எனத் தஞ்சக் கிளவி பற்றலர் என்கின்றது.

மா, ஓர்கமா தோழி! அவர் தேர்மணிக் குரலே'
என முன்னிலைக் கண் அசைச் சொல்லாயும்,

'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே'
என முன்னிலையன்றி யசைச் சொல்லாயும் வந்தது.

'அதுமற் கொண்கன் றேரே'
என் 'மன்' அசைநிலையாய் வந்தது.

சாரியை இன் 'காப்பி, னொப்பின்' என அசை நிலையாயும் வந்தது.

இனி, உருபு பொருண்மை நோக்கிய ஐகாரமும்
நேரை நோக்க நாரரி பருகி'

எனவும்,

'முனையுண்டவ ருருகும் பசுந்தினைப் பிண்டியும்'
எனவும் அசைநிலையாய் வருதலுங் கொள்க.

'தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே'
விசும்பிழி தோகைச் சீர்பொன் றிசினே'
(ஐங்குறுநூறு)

என்பன. 'தண்ணென்றது, போன்றது' என முற்றுச் சொல் 'சின்' அசைக்கட் படுதலுங் கொள்க. பிறவுஞ் செய்யுட் கண் வேறுபடுவன எல்லாம் இதனான் அமைத்துக் கொள்க. (47)

298] இடைச் சொற்களுக்குப் புறநடை

கிளந்த வல்ல *வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.

இஃது, அவற்றிற்குச் சொற்புறனடை கூறுகின்றது.

(இ-ள்) கிளந்த அல்ல அன்ன பிறவும்-மேல் சார்பும் இடமும் குறிப்பும் பற்றிச் சொல்லப்பட்டன அன்றி அவை போல்வன பிற வரினும், கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளல் ஏ — அவற்றையும் அச்சொற்களின் மூவகையாகக் கூறிய இலக்கணத்தான் உணர்ந்து கொள்க (எ-று)

(உ-ம்) சிறிது தவிர்ந்தீக மாளநின் பரிசிலருய்ம்மார்

என மாளவும்,

'சொல்லேன் றெய்ய நின்னொடுபெயர்ந்தே'

எனத் தெய்யவும்,

'அறிவா ரியாரஃ திறுவுழி யிறுகென'

என எனவும்,

'அஞ்சுவ தோரு மறனே'

எனவோரும்,

'செலிய ரத்தைநின் வெகுளி'

என வத்தையும்,

'செழுந்தே ரோட்டியும் வென்றீ'

என ஈகாரமும்,

'காத னன்மா நீமற் றிசினே'

என விசினும்,

'பணியுமா மென்றும் பெருமை'

என ஆமும்'

* அன்ன பிறவும் (பா. பே.)

'ஈங்கா யினவா லென்றிசின் யானே'
என ஆலும்,
'புனற்கன்னி கொண் டிழிந்த தென்பவே'
எனவென்பவும்,
'சேவடி சேர்து மன்றே'
என வன்று மசைநிலையாய் வந்தன.
'குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே'
(திருமுருகு)
எனத்தொறு, தான் சார்ந்த மொழிக்குப் பன்மையு மிடனு முணர்த்திற்று. இது, 'நாடோறும் நாடி' யென நீண்டும் நிற்கும்.

'ஆ' வென்பது, வியப்புள் வழியும் மறுத்தலுள் வழியும் பொருளுணர்த்துதலும் 'ஐ' யென்ற திசையுள் வழியும் வருத்த முள்வழியும் பொருளுணர்த்துதலுங் கொள்க.

பொள்ளென, பொம்மென, கதுமென—விவை விரை வுணர்த்தின.

'கொம்மென' வென்பது, பெருக்கம் மென்னுங் குறிப்புணர்த்திற்று.

ஆன மேன மோன மென்பன வெழுத்துச் சாரியை.
'எப்பொரு ளெத்தன்மைத்தாயினு' மெனவரும் எகர வினாவும் கொள்க.
'அங்கு, இங்கு, உங்கு, எங்கு,' என வெழுத்தினு 'ளிடப் பொருளுணர்த்து' மென்றனவும், இவை நீண்டு வருவனவும், பிறவாற்றான் வருவனவும் இதனாற் கொள்க. (48)

**தொல்காப்பியம் 2. சொல்லதிகாரம்**

ஏழாவதிடைச்சொல்லியன் நச்சினார்க்கினியம் முற்றும்.

**ஆக இயல் ஏழினுக்கும் சூத்திரம் 298**

௨

# அ-வது, உரி இயல்.

299] உரிச் சொற்குப் பொது இலக்கணம்

உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
யிசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
யொருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்று நிலை மருங்கி
னெச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.
என்பது சூத்திரம்.

இது, தமக்கியல் பில்லா விடைச் சொற்போலாது, இசை குறிப்புப் பண்பென்னும் பொருட் குரியவாய் வருதலின் உரிச்சொல்லோத் தென்னும் பெயர்த்தா யிற்று. ஈறு பற்றிப் பல பொருள் விளக்கலு முரு பேற்றலு மின்றிப் பெயரையும் வினையையுஞ் சார்ந்து பொருட்குணத்தை விளக்கலி, னுரிச்சொற் பெயரின் வேறென்றுணர்க. இச்சூத்திரமுரிச் சொற் கெல்லாம் பொதுவிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) உரிச்சொற் கிளவி விரிக்குங்காலை — உரிச் சொல்லாகிய சொல்லை விரித்துணர்த்து மிடத்து, ஒருசொற் பலபொருட்குரிமை தோன்றினும் - அஃதொரு சொல்லொருபொருட் குரித்தாய் வாராது பலபொருட் குரித்தாய் மயங்கி வரினும், பல சொல்லொரு பொருட் குரியவாய் மயங்கி வரினும்—இசையினுங் குறிப்பினும்

பண்பினுந் தோன்றிப் பெயரினும் வினையினு மெய் தடுமாறித் தத்த மரபிற் சென்றுநிலை மருங்கின்— இசைப் பொருண்மைக் கண்ணும் மனத்தாற் குறித் துணரும் பொருண்மைக் கண்ணும் பண்புப் பொருண் மைக் கண்ணும் வெளிப்பட்டுப் பெயர்வினைகள் போன்று மவற்றிற்கு முதனிலையாயுந் தம் முருபு தடு மாறித் தத்தமக்குரிய முறையாற் றாஞ் சென்று நிற்கும் நிலைக்களங்களாலே. எச்சொலாயினும் பயிலாதவற் றைப் பயின்றவை சார்த்திப் பொருள் வேறு கிளத்தல் —கேட்போனாற் பொருளுணரப் படாத வெவ்வகைப் பட்ட சொல்லாயினும் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சேர்த்திப் பொருளை வேறு வேறு சொல்லுக வென்றவாறு.

**'அது மயங்கி வரினும்'** நிலைக்களங்களாலே சேர்த்து வேறு வேறு கிளத்த, லென வினைமுடிபு செய்க.

பண்பு, பொறியா னறியப்படுங் குணம்.
கறுப்பு, பெயர்ப் போலி.
தவ, வினைப்போலி.
துவைத்தல், பெயர்க்கு முதனிலை.
தாவாத, வினைக்கு முதனிலை.

பலவு மோதினாரேனு முரிச்சொற் கிலக்கண மூவகைப் பொருளும் பற்றி வருதலேயாம். (1)

300] வெளிப்படை அல்லா உரிச்சொற்கே பொருள்கூறல்
வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன.

இது, உரிச் சொற்களுள் யான் கூறப்படுவன விவை யென்கின்றது.

(இ-ள்) வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா —பொருள் புலப்பட்ட வுரிச்சொற்க ளெல்லாரு மறி தலி னெடுத்தோதிப் பொருளுணர்த்துதல் வேண்டா,

வெளிப்பட வாராவுரிச்சொன் மேன — பொருள் புலப் பட வாராத வுரிச்சொன் மேலன யான் பொருள் புலப் பட வோதுத லென்றவாறு. (2)

301] 'உறு, தவ, நனி' என்பவற்றின் பொருள்

அவைதாம்,
உறு தவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள வென்ப.

இது, குறிப்புப் பற்றி வரு முரிச்சொற் பொருள் படுமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவைதாம் — வெளிப்பட வாராத வுரிச் சொற்கடாம், யாவை யெனின், உறு, தவ, நனியென வரூஉம் மூன்றும் — உறுவெனத் தவவென நனியென வருகின்ற மூன்றுரிச் சொற்களும், மிகுதி செய்யும் பொருள வென்ப — 'மிகுதி' யென்னு முரிச்சொற் காட்டுங் குறிப்புப் பொருளை யுடைய வென்று கூறுவ ராசிரிய ரென்றவாறு.

குறிப்புச் சொற் பரப்புடைமையின் முற்கூறினார்.

(உ-ம்) 'உறுகா லொற்ற வொல்கி யாம்பல்'
'ஈயாது வீயு முயிர்தவப் பலவே'
வந்துநனி வருந்தினை வாழிய நெஞ்சே.
எனவரும். (3)

302] 'உரு' புரை, என்பவற்றின் பொருள்

உருஉட் காகும் புரையுயர் வாகும்.

இதுவுமது.

(இ-ள்) உருவுட் காகும் — உருவென்னு முரிச் சொலுட்குத லென்னு முரிச்சொல்லது குறிப்புப் பொருட்டாம், புரையுயர் வாகும்-புரையென்னு முரிச் சொல்லு யர்வென்னு முரிச்சொல்லது குறிப்புப் பொருட்டா மென்றவாறு.

(உ-ம்) 'உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த'
'புரைய மன்ற புரையோர் கேண்மை'
எனவரும்.

'உருவக் குதிரை மழவ ரோட்டிய'
உருவமென் றுரைத்தீ யாயி
னென வுருவடி வழகையும்,
'புரைதீர் கேள்விப் புலவரான'
வெனப்'புரை' குற்றத்தையு முணர்த்துதல்

'கூறிய கிளவிப் பொருணிலை யல்ல'
வென்னுஞ் சூத்திரத்தாற் கொள்க. (4)

303] குரு கெழு என்பவற்றின் பொருள்.

குருவுங் கெழுவும் நிறனா கும்மே
இது, பண்பு.

(இ-ள்) குருவுங் கெழுவும் நிறனாகும்மே - குருவென்னு முரிச்சொல்லும் கெழுவென்னு முரிச்சொல்லு நிறமென்னு முரிச்சொல்லது பண்புப்பொருளாமென்றவாறு.

(உ-ம்) 'குருமணித்தாலி'
'நறுஞ்சாந்து புலர்ந்த கேழ்கிள ரகலம்'
எனவரும்

'குரூஉத்துளி பொழிந்த'
'குரூக்கண்ணிறடிப் பொம்மல்'
எனக்குரு நீடலும், கெழுக் கேழென நீடலு
மீறு கெடுதலும்,

'எழுத்துப் பிரிந் திசைத்த லிவணியல் பின்றே' என்பதனாற் கொள்க. கெழுவென்று வரு மிட முளதாயிற் கொள்க. இக்கெழு பொருத்தத்தை யுணர்த்துதலுங் கெழுமுத லென்னும் வழக்கிற்கு முதனிலையாய் நிற்றலுங் கூறிய கிளவி யென்றதனாற் கொள்க. மேல் வருஞ் சூத்திரங்கட்கு மிவ்வாறே பொருள் கூறுக. (5)

304] 'செல்லல், இன்னல்' என்பவற்றின் பொருள்

செல்ல லின்ன லின்னா மையே.

இது, குறிப்பு.

(இ-ள்) செல்ல லின்னல் இன்னாமையே - செல்லலு மின்னலு மின்னாமை யென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்'
'வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கத்து'

எனவரும். (6)

305] 'மல்லல், ஏ' என்பவற்றின் பொருள்

மல்லல் வளனே; யேபெற் றாகும்.

இதுவுமது.

(இ-ள்) மல்லல் வளனே — மல்லல் செல்வமென்னுங் குறிப்பினையும், ஏபெற்றாகும் — ஏ என்பது பெருக்க மென்னுங் குறிப்பினையு முணர்த்து மென்றவாறு.

'பெற்று' அடுக்குதலுமாம்.

(உ-ம்) 'மல்லல்மார் படுத்தனன் புல்லுமா றெவனோ'

'ஏக லடுக்கத் திருளளைச் சிலம்பின்'

எனவரும். (7)

306] 'உகப்பு, உவப்பு' என்பவற்றின் பொருள்

உகப்பே யுயர்த லுவப்பே யுவகை.

இதுவுமது,

(இ-ள்) உகப்பே யுயர்தல்—உகப்பு உயர்வு என்னுங் குறிப்பினையும், உவப்பே யுவகை-உவப்பு உவகையென்னுங் குறிப்பினையுமுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'விசும்புகந் தாடா திரைதேர்ந் துண்ணாது'
உவந்து வந்
தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇய'
எனவரும். (8)

307] 'பயப்பு' என்பதன் பொருள்

பயப்பே பயனாம்.

இதுவுமது.

(இ-ள்) பயப்பே பயனாம் — பயப்புப் பயமென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'பயவாக்
களரனையர் கல்லாதவர்' (நாலடியார்)
எனவரும். (9)

308] 'பசப்பு' என்பதன் பொருள்

பசப்பு நிற னாகும்

இது, பண்பு.

(இ-ள்) பசப்பு நிறனாகும் — பசப்பு நிறனென்னும் பண்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'மையில் வாண்முகம் பசப்பூரும்மே'
(கலித்தொகை)
எனவரும். (10)

309] 'இயைபு' என்பதன் பொருள்

இயைபே புணர்ச்சி.

இது, குறிப்பு.

(இ-ள்) இயைபே புணர்ச்சி — 'இயைபு' கூட்டமென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொ
டியைந்த கேண்மை யில்லா கியரோ'
(புறம்)        (11)

எனவரும்.

310] 'இசைப்பு' என்பதன் பொருள்

இசைப்பிசை யாகும்.

இது, இசை கூறுகின்றது.

(இ-ள்) இசைப்பிசையாகும் — 'இசைப்பு' இசைப் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'வாயிற் றோன்றி யாழிசையூப் புக்கு'
எனவரும்.        (12)

311] 'அலமரல், தெருமரல்' என்பவற்றின் பொருள்

அலமர றெருமர லாயிரண்டுஞ் சுழற்சி.

இது, குறிப்பு.

(இ-ள்) அலமரல், தெருமரல் ஆகிய அவ்விரண்டும் மனத்தடு மாற்றமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'அலமர லாயம்'        (ஐங்குறுநூறு)
'தெருமர லுள்ளமொ டன்னையுந் துஞ்
சாள்'
எனவரும்.        (13)

'உலமரல்' சொற்புறநடையாற் கொள்க. (13)

312] 'மழ, குழ' என்பவற்றின் பொருள்

மழவுங் குழவு மிளமைப் பொருள.

இதுவுமது.

(இ-ள்) மழவுங் குழவு மிளமைப் பொருள — மழ வுங் குழவு மிளமை யென்பதன் குறிப்புப் பொருண் மையை யுடைய வென்றவாறு.

(உ-ம்) 'வரைபுரையும் மழகளிற்றின் மிசை'
'உருவக் குதிரை மழவ ரோட்டிய'
'தடமருப் பெருமை மடநடைக் குழவி'
எனவரும். (14)

313] 'சீர்த்தி, மாலை' என்பவற்றின் பொருள்

சீர்த்தி மிகுபுகழ்; மாலை யியல்பே.

இதுவுமது.

(இ-ள்) சீர்த்தி மிகு புகழ்—சீர்த்தி பெரும் (மிகு) புகழும், மாலை யியல்பே—மாலை யியல்புமாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'வயக்கஞ்சால் சீர்த்தி'
'இரவரன் மாலையனே'
எனவரும் (15)

314] 'கூர்ப்பு, கழிவு' என்பவற்றின் பொருள்

கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்.

இதுவுமது.

(இ-ள்) கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்—கூர்ப் புங் கழிவு முன் சிறவா துள்ளதொன்று சிறத்தலாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வ மொடு'
'சினனே காமங் கழிகண் ணோட்டம்'

எனவரும்.

315] 'கதழ்வு, துனைவு' என்பவற்றின் பொருள்

கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள
இதுவுமது.

(இ-ள்) கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள— கதழ்வுந் துனைவும் விரையென்னுஞ் சொல்லினது குறிப்பைத் தமக்குப் பொருளா கவுடைய வென்றவாறு.

(உ-ம்) 'அண்டர்
கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்
'துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவின்'

எனவரும். (17)

316] 'அதிர்வு, விதிர்ப்பு' என்பவற்றின் பொருள்

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும்.
இதுவுமது.

(இ-ள்) அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும்— அதிர்வும், விதிர்ப்பும் நடுக்கமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'அதிர வருவதோர் நோய்' (குறள்)
'விதிர்ப்புற வறியா வேமக் காப்பினை.
(புறம்)

எனவரும். (18)

317] 'வார்தல், போகல், ஒழுகல்' என்பவற்றின் பொருள்

வார்தல் போக லொழுகன் மூன்றும்
நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள.

இது, பண்பு.

(இ-ள்) வார்தல் போக லொழுகன் மூன்றும் நேர்பு நெடுமையுஞ் செய்யும் பொருள — வார்தல் போகலொழுகலென்னு மூன்று சொல்லும் நேர்மையும் நெடுமையு முணர்த்தும் பண்பினைத் தமக்குப் பொருளாக வுடைய வென்றவாறு.

(உ-ம்) 'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையை'
தெள்ளற றழீ இய வார்மண லடைகரை
எனவும்

'போகு கொடி மருங்குல்'
'திரிகாய் விடத்தேரொடு காருடை போகி'
எனவும்

'ஒழுகு கொடி மருங்குல்'
'மால்வரை யொழுகிய வாழை,'
எனவும் வரும் (19)

318] தீர்தல், தீர்த்தல், என்பவற்றின் பொருள்

'தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்.
இது, குறிப்பு.

(இ-ள்) தீர்தலுந் தீர்த்தலும் விடற் பொருட் டாகும்—தீர்தலுந் தீர்த்தலும் விடலென்னு முரிச் சொல்லினது குறிப்புப் பொருண்மையை யுடைத்தா மென்றவாறு.

'துணையிற் றீர்ந்த கடுங்கண் யானை'
(நற்றிணை)

'நங்கையைச் செற்ற தீங்குத்
தீர்த்துநீர் கொண்மின்' (சீவகசிந்தாமணி)

இதனானே, விடலென்னு முரிச்சொல் லடியாகப் பிறக்கும் பெயரும் வினையும் தன்வினையும் பிறவினை யும் பற்றிப் பிறக்கு மென்ப துணர்த்துதற்கு விடற் பொருட்டென்றார். இயை பென்பதற் கியைப்பென 'வழங்காதியைக்க' வியை விக்கவென வேறுபட்டு வழங்குதலிற் றன்வினை பிறவினையுடன் ஓதாராயி னார்.

ஒன்றென முடித்தலான் பிளத்தல் அணங்கல் என்றாற் போலத் தன்வினை பிறவினைக்குப் பொது வாய் வருவனவுங் கொள்க. இப்பிறவினைத் தீர்வித் தல் தீர்ப்பித்தலென வாய்பாடு வேறுபட்டிக் காலத்து வழங்குமாறு முணர்க. (20)

319] கெடவரல், பண்ணை, என்பவற்றின் பொருள்

கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு.

இதுவுமது.

(இ-ள்) கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளை யாட்டு — கெடவரல் பண்ணை யென்னு மவ்விரண்டும் விளையாட்டென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கெடவர லாயமொடு'

'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளும்'

எனவரும்.

விளையாட் டென்றது விளையாட்டுக் கருத்தினை. (21)

320] 'தட, கய, நளி' என்பவற்றின் பொருள்

தடவுங் கயவும் நளியும் பெருமை.

இது, பண்பு.

(இ-ள்) தடவுங் கயவும் நளியும் பெருமை — தட வுங் கயவும் நளியும் பெருமையாகிய பண்புணர்த்து மென்றவாறு

(உ-ம்) 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்'
'இரும்பிடி கன்றோடு விரைஇக் கயவாய்ப்
பெருங்கை யானை'
'நளிமலை நாடன் நள்ளியவ னெனவே'

எனவரும்.

கயவ ரென்பது வழக்கு. (22)

321] 'தட' என்பது வளைவையும் உணர்த்தல்.

அவற்றுட்

டடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்.

இது, எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்தனுதலிற்று.

(இ-ள்) அவற்றுட்டடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்—முற்கூறிய மூன்றனுள் தடவென்னுஞ் சொற்கோட்ட மென்னும் பண்பினையு முணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'தட மருப் பெருமை'

எனவரும் (23)

322] 'கய' என்பது மென்மையையும் உணர்த்தல்

கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்.

இதுவுமது.

(இ-ள்) கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்-கய வென்னுஞ் சொன் மென்மை யென்னும் பண்பினையு முணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கயந்தலை மடப்பிடி'

எனவரும். (24)

323] 'நளி' என்பது செறிவையும் உணர்த்தல்

நளியென் கிளவி செறிவு மாகும்.

இதுவுமது

(இ-ள்) நளியென் கிளவி செறி வுமாகும் —நளி யென்னுஞ் சொற் செறிவென்னுங் குறிப்பினையு முணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்து நீ
நளிந்தனை வருத லுடன்றன ளாகி'

எனவரும். (25)

324) 'பழுது' என்பதன் பொருள்

பழுது பயமின்றே.

இது, குறிப்பு.

(இ-ள்) பழுது பயமின்றே — 'பழுது' பயமின்மை யாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

'பழுதுகழி வாணாள்'

எனவரும்.

பழுது குற்றத்தினை யுணர்த்துதல் வழக்கு. (26)

325] சாயல் என்பதன் பொருள்

சாயன் மென்மை

இது' பண்பு,

(இ-ள்) சாயன்மென்மை — 'சாய' லென்னுஞ் சொல் மெய், வாய், கண், மூக்கு, செவி, யென்னு மைம் பொறி யானும்கரு மென்மையை யுணர்த்து மென்ற வாறு.

(உ-ம்) 'மயிற் சாயன் மகள் வேண்டிய'
'சாயன் மார்பு நனியலைத் தென்றே'

என இவை, ஒளியானு மூற்றானு பிறந்த மென்மை யுணர்த்தின.

'அமிர்தன்ன சாயல்'

என்பது, தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமற் றடுக்கு மென்மையை யுணர்த்தவே பல மென்மையு மடங்கின. ஒழிந்தன வந்துழிக் காண்க. (27)

263] 'முழுது' என்பதன் பொருள்

முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே.

இது குறிப்பு.

(இ-ள்) முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே-- முழுதென்னுஞ் சொல் லெஞ்சாமையாகிய குறிப்பு ணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'மண்முழு தாண்டநின் முன்னோர் போல' எனவரும். (28)

327] 'வம்பு' என்பதன் பொருள்

வம்பு நிலை யின்மை.

இதுவுமது.

(இ-ள்) வம்புநிலை யின்மை—வம்பு நிலையின்மை யாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'வம்பு மாரியைக் காரென மதித்தே'

எனவரும். (29)

328] 'மாதர் என்பதன் பொருள்

மாதர் காதல்.

இதுவுமது.

(இ-ள்) மாதர் காதல் — மாதர் காதலென்னும் குறிபபினை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய்! எனவ.நம். (30)

329] 'நம்பு, மே' என்பவற்றின் பொருள்

நம்பும் மேவும் நசையா கும்மே.

இதுவுமது.

(இ-ள்) நம்பும் மேவும் நசையா கும்மே—நம்பும் மேவும் நசையென்னுங் குறிப்பினையுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி'

எனவும்.

'பேரிசை நவிர மேவுங் (மேஎய் உறையும்)
காரி யுண்டி'

எனவும் வரும் (31)

330] 'ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய்'—பொருள்

ஓய்த லாய்த ணிழத்தல் சா அ
யாவயின் நான்கு முள்ளத னுணுக்கம்.

இதுவுமது.

(இ-ள்) ஓய்த லாய்த ணிழத்தல் சா அ யாவயி னான் கும்—ஓய்த லாய்த ணிழத்தல் சாஅய் என்னு முரிச்சொல்

முதனிலையாகிய வவ்விடத்து வந்த குறிப்புப் பெயர் நான்கும், உள்ளதன் நுணுக்கம்—பண்டுள்ள தொன் றனது நுணுகுதலை யுணர்த்து மென்றவாறு.

[உ-ம்] 'சாய்தல்' விகாரப் பட்டது.

'வேனிலுழந்த வறிதுயங் கோய் களிறு'
'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை'
'நிழத்த யானை மேய்புலம் படர'
'கயலறல் எதிரக் கடும்புனல் சா அய்'

எனவரும்.

'ஆய்ந்த தானை' என்றது, பொங்குதல் விசித்தலா னொசிந்த துகி லென்றவாறு. (32)

331] 'புலம்பு' என்பதன் பொருள்

புலம்பே தனிமை.

இதுவுமது.

(இ-ள்) புலம்பே தனிமை—'புலம்பு' தனிமை யென் னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

'புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி' எனவரும்.
தமி யென்பது சொற்புற நடையாற் கொள்க. (33)

332] 'துவன்று' என்பதன் பொருள்,

துவன்று நிறைவாகும்.

இதுவுமது.

(இ-ள்) துவன்று நிறைவாகும்-துவன்று நிறை வென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்
எனவரும். (34)

333] 'முரஞ்சல்' என்பதன் பொருள்

முரஞ்சன் முதிர்வே.

இதுவுமது.

(இ-ள்) முரஞ்சன் முதிர்வே—முரஞ்சன் முதிர் வென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு

'கோடுபல முரஞ்சிய கோளி யாலத்து'

(மலைபடுகடாம்)

எனவரும். (35)

334] 'வெம்மை' என்பதன் பொருள்

வெம்மை வேண்டல்.

இது, பண்பு.

(இ-ள்) வெம்மை வேண்டல்—'வெம்மை' விரும் புதலாகிய பண்பையுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'ஏமவெங் காம மியைவ தாயினும்' எனவரும்.

இது, குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு' எனத்திரிந்து நிற்கும்.

'வெம்மை' வெப்ப முணர்த்துதல் வழக்கு. (36)

335] 'பொற்பு' என்பதன் பொருள்

பொற்பே பொலிவு.

இது, குறிப்பு.

(இ-ள்) பொற்பே பொலிவு—பொற்புப் பொலி வென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு

(உ-ம்) 'பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்' எனவரும். (37)

336] 'வறிது' என்பதன் பொருள்

வறிதுசிறி தாகும்.

இதுவுமது.

(இ-ள்) வறிதுசிறிதாகும் — வறிது சிறிதென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

'வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி'

எனவரும். (33)

337] 'எற்றம்' என்பதன் பொருள்

எற்றம் நினைவுந் துணிவு மாகும்.

இதுவுமது.

(இ-ள்) எற்றம் நினைவுந் துணிவுமாகும் —எற்றம நினைவுந் துணிவுமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கானலஞ் சேர்ப்பன் கொடுமை எற்றி'

'எற்றமி லாட்டியென் ஏமுற்றாள்'

எனவரும். (39)

333] 'பிணை, பேண்' என்பவற்றின் பொருள்

பிணையும் பேணும் பெட்பின் பொருள.

இது, குறிப்பும் பண்பு முணர்த்துகின்றது.

(இ-ள்) பிணையும் பேணும் பெட்பின் பொருள— பிணையும் பேணும் பெட்பென்னு முரிச்சொல்லினது பொருளினை யுடையவா மென்றவாறு

பெட்பென்பது, புறந்தருதலும் விரும்புதலுமாகிய குறிப்பும் பண்பு முணர்த்தும். சிறுபான்மை பெட்ப நகு மெனப் பெருமையு முணர்த்தும்.

(உ-ம்) 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்'
யானும் பேணினெ னல்லனோ மகிழ்ந.!

இவை புறந்தருத லுணர்த்தின.

'பெற்றோற் பெட்கும் பிணையை யாகென'

வென்புழிக் கணவனைப் புறந்தரும் விருப்பத்தினை 'யுடையை யாவா யெனப்பிணை விருப்பத்திற்கு வந்தது.

'அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்'

இது விருப்ப முணர்த்திற்று.

'பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்'
'காய்தலு முவத்தலும் பிரித்தலும் பெட்டலும்'

எனவாசிரியர் பெட்பின் பகுதியாகிய பெட்டென்னு முரிச்சொல்லை யுடம்பொடு புணர்த்தோதியவாறுங் காண்க. (40)

339] பணை என்பதன் பொருள்

பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்.

இது, குறிப்பு.

(இ-ள்) பணையே பிழைத்தல் பெருப்பு மாகும் — பணை பிழைத்தலாகிய குறிப்புணர்த்தலே யன்றிப் பெருப்பாகிய குறிப்பு முணர்த்து மென்றவாறு.

பெருமையாகிய பண்புணர்த்தாது பெருத்தலாகிய குறிப்புணர்த்துதற்குப் 'பெருப்பு' என்றார்

(உ-ம்) 'அமர்க்க ணாமா னருநிற மூழ்காது
பணைத்துவீழ் பகழிப் போக்கு நினைந்து
கானவன்'

'வேய்மருள் பணைத்தோ ளணகிழச் சேய்
[நாட்டு'

எனவரும்

இப்பணை மூங்கிலினை யுணர்த்துதல் லுரிச்சொலன்மை யுணர்க. (41)

340] 'படர்' என்பதன் பொருள்

படரே யுள்ளல் செலவு மாகும்.

இதுவுமது.

(இ-ள்) படரே யுள்ளல் செலவுமாகும்—படருள்ளுத லென்னுங் குறிப்புணர்த்தலே யன்றச் செலவென்னுங் குறிப்பு முணர்த்து மென்றவாறு.

உள்ளல், வருத்தக் குறிப்பா னுள்ளுதலும் வருத்தக் குறிப்பின்றி யுள்ளுதலுமென விருவகையவாதலின், செலவுப் பொருட்டாகிய படரு மவ்விருவகையு முடைத்து.

(உ-ம்) 'வள்ளியோர்ப் படர்குவர் புலவர் யானும்'
'பசந்த மேனியொடு படரட வருந்தி'

யெனவும்,

'கறவை கன்றுவயிற் படர'

எனவும் வரும். (42)

341] 'பையுள், சிறுமை' என்பவற்றின் பொருன்

பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள.

இதுவுமது.

(இ-ள்) பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள—பையுளுஞ் சிறுமையும் நோயாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

'பையுண் மாலைப் பழுமரம் படரிய
சிறுமை யுறுப செய்பறி யலரே'

எனவரும் (43)

342] 'எய்யாமை' என்பதன் பொருள்

எய்யா மையே யறியா மையே.

இதுவுமது.

(இ-ள்) எய்யா மையே யறியா மையே—'எய்யாமை' யறியாமையாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'எய்யா மையலை நீயும் வருந்துதி'
எனவரும்.

அறித லென்னு முடம் பாட்டிற்கு மறையாகிய வறியாமை யென்னு முரிச்சொல்லா னெய்யாமை யுணர்த்தவே, யவ்வெய்யாமை மறைச் சொல்லென்பதூஉ, மதற் கெய்த்த லென்னு முடம்பாட்டுச் சொல்லுள தென்பதூஉம் பெற்றாம். அவ்வுடம் பாட்டை யோ தாது மறையை யோதினார், மறைச்சொல்லு முரிச்சொல்லாய் வருமென்றற்கு.

'எய்த்து நீர்ச்சிலம் பின்குரை மேகலை'
யென்புழி 'யெய்த்தென்ப தறிந் தென்னும் பொருளுணர்த்திற்று. (44)

343] 'நன்று' என்பதன் பொருள்

நன்று பெரி தாகும்.

இதுவுமது,

(இ-ள்) நன்று பெரிதாகும்—நன்று பெரிதென்னுங் குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'நன்று மரிதுற் றனையாற் பெரும'
எனவரும்.

'பெருமை' யென்னாது பெரிதென்றதனா, னன்றென்பது வினையெச்சமாயிற்று (45)

344] 'தா' என்பதன் பொருள்

தாவே வலியும் வருத்தமு மாகும்.

இதுவுமது.

(இ-ள்) தாவே வலியும் வருத்தமு மாகும்—தாவலியும் வருத்தமு மாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'தாவி னன்பொன் றைஇய பாவை'
'தாவாக் கொள்கைத் தகைசால் சிறப்பின்'
எனவரும். தாவாக் கொள்கை, வருத்தமில்லாத விரதம்

இனி, 'கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்று,' எனத் தாவுதலும்.

'தாவாத வில்லை வலிகளும்'

எனக்கேடு முணர்த்துதல் 'கூறிய கிளவி' யென்பதனாற் கொள்க. (46)

345] 'தெவு' என்பதன் பொருள்

தெவுக்கொளற் பொருட்டே.

இதுவுமது.

(இ-ள்) தெவுக்கொளற் பொருட்டே-'தெவுகொள்ளுதலாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'நீர்தெவு நிரைத் தொழுவர்' (47)
எனவரும்.

346] 'தெவ்வு' என்பதன் பொருள்

தெவ்வுபபகை யாகும்.

இதுவுமது.

(இ-ள்) தெவ்வுப்பகையாகும்—தெவ்வுபகையாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'தெவ்வுப்பலம் சிதைய வெய்கணை சிதறி'
எனவரும். (48)

347] விறப்பு, உறப்பு, வெறுப்பு, என்பவற்றின் பொருள்
விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே.

இதுவுமது.

(இ-ள்) விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே—விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவென்னுங் குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்து'

'உறந்த விஞ்சி யுயர்நிலை மாடத்து'
'வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்'.

எனவரும். (49)

348] 'விறப்பு' அச்சமும் உணர்த்தல்

அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்.

இது, எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள் விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்—அம் மூன்றனுள் 'விறப்புச்' செறிவே யன்றி வெருவுதற் குறிப்பு முணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'அவலெறி வுலக்கைப் பாடுவிறந் தயல' (50)
எனவரும்.

349] 'கம்பலை, சும்மை, கலி, அழுங்கல்'—பொருள்

கம்பலை சும்மை கலியே யழுங்க
லென்றிவை நான்கு மரவப் பொருள்.

இது, இசை.

(இ-ள்) கம்பலை சும்மை கலியே யழுங்க லென் றிவை நான்கு மரவப்பொருள்—கம்பலை சும்மை கலி யழுங்க லென்று சொல்லப்பட்ட விந்நான்கு மரவமாகிய விசைப் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'களிறுகவர் கம்பலை போல'

'தளிமழை தோயுந் தண்பரங் குன்றில்
'கலிகொள் சும்மை யொலிகொ ளாயம்'
'கலிகொ ளாய மலிதொகு பெடுத்த'
'உயவுப்புணர்ந் தன்றிவ் வழுங்க லூரே'.

எனவரும்.

'கலிகொள் சும்மை' என்பதனுள் 'கலி' செருக்கினை யுணர்த்துதல் 'கூறிய கிளவி' யென்பதனாற் கொள்க. (51)

350] 'அழுங்கல்' இரக்கமும், கேடும் உணர்த்தல்.

அவற்றுள்,
அழுங்க லிரக்கமுங் கேடு மாகும்.
இஃதெய்தியதன் மேற் சிறப்புவிதி

(இ-ள்) அவற்று ளழுங்க லிரக்கமுங் கேடுமாகும்—அந்நான்கனுளழுங்க லரவமே யன்றி யிரக்கமுங் கேடு மாகிய குறிப்பு முணர்த்து மென்றவாறு.

'பழுங்க ணோட்டமு நலிய
வழுங்கினே னல்லனோ வயர்ந்தனன் மனனே'
'குணனழுங்கக்
குற்றமுழை நின்று கூறுஞ் சிறியவர்கட்கு'
(52)

எனவரும்.

351] 'கழுமு' என்பதன் பொருள்

கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.
இது, குறிப்பு.

(இ-ள்) கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும் — கழு மென்னுஞ் சொன் மயக்கமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கழுமிய ஞாட்பினுண் மைந்திழந்தா ரிட்ட' எனவரும்.

இது,

'கழும முடித்துக் கண்கூடு கூழை'

யெனத்திரட்சியை யுணர்த்துதல் 'கூறிய கிளவி' யென்பதனாற் கொள்க. (53)

352] 'செழுமை' என்பதன் பொருள்

செழுமை வளனுங் கொழுப்பு மாகும்.

இதுவுமது.

(இ-ள்) செழுமை வளனுங் கொழுப்பு மாகும் — செழுமை வளனுங் கொழுப்புமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு

(உ-ம்) 'செழுஞ்செய்ந் நெல்லின் சேயரிப் புனிற்றுக் கதிர்'

'செழுந்தடி தின்ற செந்நா யேற்றை,'

எனவரும்.

'வளத்தொடு கொழுப்பிடை வேற்றுமை யென்னை?' யெனின் வளமென்ப தாக்கம். கொழுப்பென்ப தூன் றொடக் கத்தன வற்றது நிணங்குடி கோட லிழு திருப்பு (54)

353] 'விழுமம்' என்பதன்பொருள்

விழுமஞ் சீர்மையும் சிறப்பு மிடும்பையும்.

இதுவுமது.

(இ-ள்) விழுமஞ் சீர்மையும் சிறப்புமாகும்—விழு மஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையு மாகிய குறிப் புணர்த்து மென்றவாறு

(உ-ம்) 'விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு' (நாலடி)
'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து'
[புறம்
'நின்னுறு விழுமங் களைந்தோன்'
எனவரும். (55)

354) 'கருவி' என்பதன் பொருள்

கருவி தொகுதி.

இதுவுமது.

(இ-ள்) கருவிதொகுதி—கருவிதொகுதியாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

உணர்த்துங்கால் பலவற்றது கூட்டத்தை விளக்கும்.

(உ-ம்) 'கருவி வானங் கதழுறை சிதறி'
யெனவரும். ஆண்டு மின்னு முழக்குங் காற்று மென் பனவித் தொகுதி. (56)

355] 'கமம்' என்பதன் பொருள்

கமம் நிறைந் தியலும்.

இதுவுமது.

(இ-ள்) கமம் நிறைந்தியலும்-கமம் நிறைவாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

சொல்லொடு பொருட் கொற்றுமை கருதி 'நிறைந் தியலு,' மெனப் பொருளின் றொழிலைச் சொன்மே லேற்றினார்.

'கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை' (57)
எனவரும்.

356) 'அரி' எவ்பதன் பொருள்

அரியே யைம்மை.

இதுவுமது.

(இ-ள்) அரியே யைம்மை—அரிஐம்மை யாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

'அரிமயிர்த் திரண்முன்கை'

எனவரும். (58)

357] 'கவவு' என்பதன் பொருள்
கவவகத் திடுமே.

இதுவுமது

(இ-ள்) கவவகத்திடுமே—கவவகத் தீடாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கவவுக்கடுங் குரையள் காமர் வனப்பினள்' எனவரும்.

இது, 'கழூஉ விளங் காரங் கவைஇய மார்பே' யென வெச்சமாங்காற் றிரிந்து நிற்கும். (59)

358] 'துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல், — பொருள்

துவைத்தலுஞ் சிலைத்தலு மியம்பலு மிரங்கலு
மிசைப்பொருட் கிளவி யென்மனார் புலவர்.

இஃது, இசை.

(இ-ள்) துவைத்தலுஞ் சிலைத்தலு மியம்பலு மிரங்கலு மிசைப்பொருட் கிளவி யென்மனார் புலவர்— 'துவைத்தல் முதலிய நான்கு மிசைப்பொருளை யுணர்த் துஞ் சொல்லாமென்று கூறுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) 'முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப் பவும்'

'ஆமா நல்லேறு சிலைப்ப'

'கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப'
'ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறாஅன்'

எனவரும். (60)

359] 'இரங்கல்' கழிவாகிய குறிப்பும் உணர்த்தல்
அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டு மாகும்.
இது, எய்தியதன் மேற் சிறப்புவிதி.

(இ-ள்) அவற்று ளிரங்கல் கழிந்த பொருட்டு மாகும்-அந்நான்கனு ளிரங்க லிசையே யன்றி யொரு பொருளது கழிவாற் பிறந்த வருத்தமாகிய குறிப்பு முணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'செய்திரங் காவினைச் சேண்விளங் கும் புகழ்' எனவரும். இஃது,

'இனிநினைந் திரக்க மாகின்று'

என 'இரக்க' மெனவும் நிற்கும்.

உம்மை, இறந்தது தழீ இயிற்று. (61)

360] 'இலம்பாடு, ஒற்கம்' என்பவற்றின் பொருள்.

இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை.

இதுவுமது

(இ-ள்) இலம்பாடு—இலமென்னுஞ் சொற் குறிப்புச்சொற் றன்மைப்பட் டின்மை யென்னு முரிச்சொல்லாய் நின்றதுவும், ஒற்கம்—ஒற்கமென்னு முரிச்சொல்லும், ஆயிரண்டும் வறுமை — ஆகிய அவ்விரண்டும் 'வறுமை' யென்னு முரிச்சொற் பெயரது குறிப்புணர்த்து மென்றவாறு.

'இலம்படு புலவ ரேற்றகைந் நிறைய'
'ஒக்க லொற்கம் சொலியத் தன்னூர்'

எனவரும்.

'இலம்படு புலவர்' என்பதற் கில்லாமை யுண்டா கின்ற புலவரென அல்வழியாகப் பொருளுரைக்க. இதற் குரையாசிரிய 'ரிலத்தாற் பற்றப்படும் புலவரென வேற்றுமையாகப் பொருள் கூறினாரா லெனின்' ஆசிரியர்'

'அல்வழி யெல்லா மெல்லெழுத்தாகும்'

என வல்வழியே கூறத்தொடங்கி,

'அகமென் கிளவிக்குக் கைமுன் வரின்'

னெனப் பண்புத் தொகையும்,

'இலமென் கிளவிக்கு'

என அல்வழிக் கண்வரு முரிச்சொல்லுங் கூறி, பின்ன ரெண்ணுப்பெயரும் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் கூறி, 'படர்க்கைப் பெயரும்' என்னுஞ் சூத்திரத்தின் 'வேற்றுமையாயின்' என மீட்டும் வேற்றுமையை யெடுத்தோதினமையின், இலமென்பதனை வேற்றுமை யென்றல் பொருந்தாமை யுணர்க.

இல மென்னுஞ் 'சொல் யாம் பொருளிலம்' என முற்றுச் சொல்லாயும், ஒருகாலுரிச்சொல்லாயு நிற்கு மென்ப துணர்த்துதற்கு இலத்திற் குரிச் சொற் றன்மைப்பட்டு நிற்கு மிடத் தென்றார்.

'இலமென் கிளவிக்குப் படுவரு காலை'

என நிலைமொழி வருமொழி செய்து முன்னர் ஆசிரியர் புணர்த்தமையின், இலம்பாடு' என வொரு சொல் லாக வோதாமை யுணர்க.

'இலம்பாடு நாணுத் தரும்'

மென்றதோ? வெனின், இல்லாமை யுண்டாத னாணுத் தருமெனப் பொருள் கூறிக்கொள்க. (62)

361] 'ஞெமிர்தல், பாய்தல்' என்பவற்றின் பொருள்.

ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

இதுவுமது.

(இ-ள்) ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள- ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தலாகிய பொருண் மையையுடைய வென்றவாறு.

(உ-ம்) 'தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து'
'புண்ணுமிழ் குருதி முகம்பரய்ந் திழிதர'

என வரும். (63)

362] 'கவர்வு' என்பதன் பொருள்.

கவர்வுவிருப் பாகும்.

இதுவுமது.

(இ-ள்) கவர்வு விருப்பாகும்—கவர்வு விருப்பாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கவர் நடைப் புரவி'

என வரும்.

இனிக்

'கொள்ளை மாந்த ரின்னாது கவரும்'

எனக் கைக் கொள்ளுதல், 'கூறிய கிளவி' யென்பத னாற் கொள்க.

'கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்'

எனக் 'கவைத்தல் சொற்புற நடையாற் கொள்க, (64)

363] 'சேர்' என்பதன் பொருள்.

சேரே திரட்சி.

இதுவுமது.

(இ-ள்) சேரே திரட்சி—சேர் திரட்சியாகிய குறிப் புணர்த்தும் மென்றவாறு.

(உ-ம்) 'சேர்ந்துசெறி குறங்கின்'

எனவரும். (65)

364] 'வியல்' என்பதன் பொருள்

வியலென் கிளவி யகலப் பொருட்டே.

இதுவுமது.

(இ-ள்) வியலென் கிளவி யகலப் பொருட்டே — வியலென்னுஞ் சொல் அகலமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'இருங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்று'

எனவரும். இது,

'வியன்றானை விறல்வேந்தே'

யெனத் திரிந்தும் நிற்கும். (66)

365] 'பேம்', நாம், உரும்' என்பவற்றின் பொருள்

பே நா முருமென வரூஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சப் பொருள.

இதுவுமது.

(இ-ள்) பேம் நாம் உருமென வருஉங் கிளவி யாமுறை மூன்று மச்சப்பொருள—பேம் நாம் உரு மென்று சொல்ல வருகின்ற கிளவியாகிய வம்முறைமை யினை யுடைய மூன்று மச்ச மென்னு முரிச்சொல்லது குறிப்புப் பொருண்மையையுடைய வென்றவாறு.

(உ-ம்) 'மன்ற மரா அத்த பேஎம்முதிர்க் கடவுள்'
'நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த'
'உருமில் சுற்ற மொடு'

எனவரும். நாம் நாமமெனத் திரிந்து வழங்கிற்று, (67)

366] 'வய' என்பதன் பொருள்

வயவலி யாகும்.

இதுவுமது.

(இ-ள்) வயவலி யாகும் — வய வலியாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'துன்னருந் துப்பின் வயமான் றோன் றலை'

எனவரும். (68)

367] 'வாள்' என்பதன் பொருள்

வாளொளி யாகும்.

இது பண்பு,

(இ-ள்) வாளொளி யாகும் — வாள் ஒளி யாகிய பண்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே'

எனவரும். (69)

368] 'துயவு' என்பதன் பொருள்

துயவென் கிளவி யறிவின் றிரிபே.

இது, குறிப்பு.

(இ-ள்) துயவென் கிளவி யறிவின் றிரிபே—துய வென்னுஞ் சொல் லறிவினது திரிதலாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'துயவுற்றேம் யாமாக'

எனவரும். (70)

369] 'உயா' என்பதன் பொருள்

உயாவே யுயங்கல்.

இதுவுமது.

(இ-ள்) உயாவே யுயங்கல்—உயா வருத்தமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'பருந்திருந்

துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை'

எனவரும் (61)

370] 'உசா' என்பதன் பொருள்

உசாவே சூழ்ச்சி.

இதுவுமது.

(இ-ள்) உசாவே சூழ்ச்சி — 'உசா' சூழ்ச்சியாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'உசாத்துணை'

எனவரும். (72)

371] 'வயா' என்பதன் பொருள்

வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்.

இதுவுமது.

(இ-ள்) வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்— வயா வென்னுஞ் சொல் வேட்கையினது பெருக்கமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'வயாவும் வருத்தமு மீன்றக்கா னோவும்' என வரும். இது, வயவுறு மகளிரெனத் திரிந்தும் நிற்கும்.

ஈண்டு 'வேட்கை' யென்றது கருப்பந் தங்கி வருத்த முற்று நுகரப்படும் பொருண்மேற் செல்லும் வேட்கையை. (73)

372] 'கறுப்பு, சிவப்பு' என்பவற்றின் பொருள்

கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள.

இதுவுமது.

(இ-ள்) கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள— கறுப்புஞ் சிவப்பும் வெகுளியாகிய குறிப்புப் பொருண் மையையுடைய வென்றவாறு.

'நிற்கறுத் தோரருங் கடிமுனை யரணம் போல்
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்.'

யென வரும்.

'கருமை, செம்மை' யென்னாது 'கறுபபுச் சிவப்பு' எனத் தொழிற் படுத்தினார், அவை வெகுளியை யுணர்த்தினமையின். (74)

373] மேற்கூறியன நிறப்பண்பும் உணர்த்தல்.

நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப.

இஃதெய்தியதன் மேற் சிறப்பு விதி.

(இ-ள்) 'நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப— கறுப்புச் சிவப்பெனத் தொழிற் படுத்துக் கூறிய

சொற்கள் வெகுளியேயன்றி நிற வேறுபாடாகிய பண் புணர்த்துதற்கு முரியவென்று கூறுவ ராசிரிய ரென்ற வாறு.

இவை தொழிற் பட்டுழியும் பண்புணர்த்துமெனை வெளிப்படு சொல்லையுங் கூறினார் ஐயமகற்றுதற்கு.

(உ-ம்) 'கறுத்த காயா'
'சிவந்த காந்தள்'

என வரும். முதல், சினைமுதல். (75)

374] 'நொசிவு, நுழைவு, நுணங்கு'—பொருள்.

நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.

இதுவுமது.

(இ-ள்) நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை- நொசிவு முதலியன நுண்மை யாகிய பண்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'நொசிபடு மருங்குல் கசிவுறக் கைதொழா'
'இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்'
'நுணங்கு துகி லுடக்கம் போல,

என வரும்.

'நுணங்கு நுண்கொடி மின்னார் மழைமிசை'
என நுணங்கு நுடக்கத்தை யுணர்த்துதல் 'கூறிய கிளவி' யென்பதனாற் கொள்க. (76)

375] 'புனிறு' என்பதன் பொருள்

புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே.

இது, குறிப்பு

(இ-ள்) புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே —புனிறென்னுஞ் சொல் ஈன்றணிமையாகிய குறிப்புப் பொருளை யுடைத்தென்றவாறு.

(உ-ம்) 'புனிறுதீர் குழவிக் கிலிற்று முலைபோல'
'புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி'

எனவரும். (77)

376] 'நனவு' என்பதன் பொருள்

நனவே களனு மகலமுஞ் செய்யும்.

இதுவுமது.

(இ-ள்) நனவே களனு மகலமும் செய்யும்—நனவு களனு மகலமுமாகிய குறிப்புப் பொருண்மையை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்'
'நனந்தலை யுலகம் வளைஇ.'

எனவரும். (78)

377] 'மத' என்பதன் பொருள்

மதவே மடனும் வலியு மாகும்.

இதுவுமது

(இ-ள்) மதவே மடனும் வலியுமாகும்-மதம் மடனும் வலியுமாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'பதவு மேய்ந்த மதவுநடை நல்லான்'
'கயிறிடு கதச்சேப் போன்மத மிக்கு'

எனவரும். 'மதவுநடை' என்பதில் மத 'மதவு' என வீறு திரிந்து நின்றது. (79)

378] 'மத' என்பது வேறு பொருளும் உணர்த்தல்

மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே.

இஃது, எய்தியதன் மேற் சிறப்புவிதி.

(இ-ள்) மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே—'மத' மடனும் வலியுமே யன்றி மிகுதியும் வனப்பு மாகிய குறிப்புஞ் சிறுபான்மை யுணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'போரரரா வேற்றின் பொருநா கிளம்
பாண்டில் தேருரச் செம்மாந் ததுபொன்
மதைஇயினள்' 'மாதர் வாண்முக மதை
இய நோக்கே

எனவரும். இவையு மீறு திரிந்தன. (80)

379] 'யாணர்' என்பதன் பொருள்.

புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

இதுவுமது.

(இ-ள்) யாணர்க் கிளவி புதிது படற் பொருட்டே —யாணரென்னுஞ் சொல் வருவாய் புதிதாகப் படுத லாகிய குறிப்பை யுடைத்தென்றவாறு.

(உ-ம்) 'வீகொடு சென்ற வட்டிற் பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர!'

எனவரும். (81)

330] 'அமர்தல்' என்பதன் பொருள்.

அமர்தல் மேவல்,

இதுவுமது.

(இ-ள்) அமர்தல் மேவல் — அமர்தன் மேவலாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'அகனமர்ந்து செய்யா ளுறையும்'
எனவரும். (82)

381] 'யாண்' என்பதன் பொருள்.

யாணுக்கவி னாகும்.

இதுவுமது.

(இ-ள்) யாணுக் கவி னாகும் — யாணென்னுஞ் சொற்கவினாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) யாணது பசலை யென்றனன்.
எனவரும். (83)

382] 'பரவு, பழிச்சு' என்பவற்றின் பொருள்.

பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

இதுவுமது.

(இ-ள்) பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள— பரவும் பழிச்சும் வழுத்துதலென்னும் சொல்லினது குறிப்புப் பொருளையுடைய வென்றவாறு.

(உ-ம்) 'கல்லே பரவி னல்லது
நெல்லு குத்துப் பரவும் கடவுளு மிலவே'
'செறிவளை விறலியர்கை தொழூஉப் பழிச்சி
வறிதுநெறி யொரீஇ'
என வரும் (84)

383] 'கடி' என்பதன் பொருள்.

கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதிச் சிறப்பே
யச்சம் முன்றேற் றாயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.

இது, பெரும்பான்மை குறிப்புஞ் சிறுபான்மை பண்பு முணர்த்து மென்கின்றது.

(இ-ள்) கடியென் கிளவி வரைவே கூர்மை காப்பே புதுமை விரைவே விளக்கம் மிகுதிச் சிறப்பே யச்ச முன் றேற் றாவீரைந்து மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே—கடி யென்னுஞ்சொல் வரைவு, கூர்மை, காப்பு, புதுமை, விரைவு, விளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம், தெய்வம் முதலியவற்றை முன்னின்று தெளிவித்தலென்று கூறப்படுகின்ற வப்பத்துச் சொல்லும் மெய்மைபடத் தோன்றும் பொருண்மையினை யுடைத்தென்றவாறு.

(உ-ம்) 'கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு'
என வரைவும்,
'கடி நுனைப் பகழி'
எனக் கூர்மையும்,
'கடிமரந்தடியு மோசை'
எனக்காவலும்,
'கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்'
எனப் புதுமையும்,
'கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்'
என விரைவும்,
'கடும்பகல் ஞாயிறு' என விளக்கமும்,
'கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்து'
என மிகுதியும்,
'அம்பு துஞ்சுங் கடியரணால்' எனச்
சிறப்பும்
'கடியுருமி னுரறிக் கடிப்புச் சேர்பு
கடிய மன்றநின் றழங்குகுரன் முரசம்,'
என வச்சமும்
'கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம்
நோக்கிக்
கடுஞ்சூ டருகுவ னினக்கே கானல்'
என முன்றேற்றும்
உணர்த்தியவாறு காண்க.

இவ்வுரிச் சொற் பெரும்பான்மை திரிந்து நிற்கும்.
(85)

384] 'கடி' என்பது வேறுபொருளும் உணர்த்துதல்

ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே.

இஃது, எய்தியதன்மேற் சிறப்பு விதி.

(இ-ள்) ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே — கடி யென் கிளவி முற்கூறிய பத்துமே யன்றிச் சிறுபான்மை ஐயமாகிய குறிப்புங் கரிப்பாகிய பண்பு முணர்த்துதற்கு முரித்தென்றவாறு.

(உ-ம்) 'கடுத்தன ளல்லளோ வன்னை?
'கடிமிளகு தின்ற கல்லா மந்தி?

எனவரும் (86)

385] 'ஐ' என்பதன் பொருள்

ஐவியப் பாகும்.

இது, குறிப்பு.

(இ-ள்) ஐ வியப்பாகும் — 'ஐ' வியப்பாகிய குறிப் புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) ஐதே யம்ம காமம் யானே
எனவரும். (87)

386] 'முனைவு' என்பதன் பொருள்

முனைவுமுனி வாகும்.

இதுவும், அது.

(இ-ள்) முனைவு முனிவாகும் — முனைவென்னுஞ் சொல் முனிவாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

'முனை' என்றும் பாடம்.

(உ-ம்) 'சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்.'
எனவரும். (88)

387] 'வை' என்பதன் பொருள்

வையே கூர்மை

இதுவுமது.

(இ-ள்) வையே கூர்மை — வை கூர்மையாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) வை நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்து' எனவரும். (89)

388] 'எறுழ்' என்பதன் பொருள்

எறுழ்வலி யாகும்.

இதுவுமது,

(இ-ள்) எறுழ் வலியாகும்—'எறுழ்' வலியாகிய குறிப்புணர்த்து மென்றவாறு.

(உ-ம்) 'சிலைநவி லெறுழ்த்தோள் ஒச்சிவலன் வளையு'
எனவரும். (90)

389] உரிச் சொற்களுக்குப் புறனடை.

மெய்பெறக் கிளந்த உரிச்சொ லெல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
யொத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றோன்றுமன் பொருளே.
இது, உரிச் சொற்கெல்லாம் புறநடை கூறுகின்றது

(இ-ள்) மெய்பெறக்கிளந்த உரிச் சொலெல்லாம் - ஒரு சொற் பலபொருட் குரிமை தோன்றியும், பலசொல். லொரு பொருட் குரிமை தோன்றியும், வருமென்றிரு கூறு செய்து பொருள் பெறக் கூறப்பட்ட வுரிச்சொ லெல்லாவற்றையும், முன்னும் பின்னும் வருபவை நாடி

—தத்தமக்கு முன்னும் பின்னும் வருமொழிகளை யாராய்ந்து, ஒத்தமொழியாற் புணர்த்தன ருணர்த்தல்-அம்மொழிகளுள் தமக்குப் பொருந்தின மொழியோடு கூட்டிப் பொருளுணர்த்துக, மரபின்—அங்ஙன முணர்த்திய வரலாற்று முறையானே, தத்தம் பொருள்மன் தோன்றும்—தத்தமக்குரிய பொருள் விளங்கித் தோன்றுமென்றவாறு.

எனவே, 'உரிச்சொல் ஆணையாற் பொருளுணர்த்தாது வரலாற்று முறைமையாற் பொருளுணர்த்து' மென்றார்.

(உ-ம்) 'போகு கொடி மருங்கு' லென்பதில் போகலென்பது முன்வருஞ் சொல்லா னேர்மையை யுணர்த்திற்று.

'திரிகாய் விடத்தேரொடு காருடை போகி' யென்பதில் போகலென்பது பின்வருஞ் சொல்லா னெடுமையை யுணர்த்திற்று.

'உறுகா' லென்பது முன்வருங் காலென்னுஞ் சொல்லான் மிகுதியை யுணர்த்திற்று.

அணங்கிய செல்ல லென்பது பின்வரும் அணங்கிய வென்னுஞ் சொல்லா னின்னாமையை யுணர்த்திற்று.

இங்ஙனங் கூறவே,

'முன்னும் பின்னும் மொழி யடுத்து வருதலு' மென விடைச் சொற் கோதிய விதி யிதற்குங் கூறினாராயிற்று. (91)

390] உரிச்சொல், கூறப்பட்ட பொருளேயன்றிப் பிற பொருளும் உணர்த்தல்.

கூறிய கிளவிப் பொருணிலை யல்ல
வேறுபிற தோன்றினு மவற்றொடு கொளலே.

இதுவுமது.

(இ-ள்) கூறிய கிளவிப் பொருணிலை யல்ல வேறு பிற தோன்றினும்—முன்னும் பின்னும் வருபவை நாடிய வழி முற்கூறிய வுரிச் சொற்களின் பொருணிலைமை யல்லாத வேறு பிறபொரு டோன்றுமாயினும், அவற்றொடுகொளல் - அக்கூறப் பட்டனவற்றோடே யவற்றையு முரிச்சொல்லாகக் கொள்க வென்றவாறு.

(உ-ம்) 'கடி நாறும் பூந்துண' ரென்றான் முற்கூறிய வற்றுக் கேலாது மணப்பொருட்டாயிற்று. 'மரம் புரைபட்ட' தென்பது உயர்வுப் பொருள் குறித்ததென்று கொள்ளற்க. பொந்துப் பட்டதென்னும் பொருட்டா யிற்று.

இவையே யன்றி, வேறுபிற தோன்றினவை யவ்வச் சூத்திரங்களுட் காட்டிப் போந்தா மவற்றா னுணர்க. (92)

391] பொரு ளுணர்த்தும் முறைமை

பொருட்குப் பொருடெரியி னதுவரம் பின்றே.

இச்சூத்திர முதலெழுத்துப் பிரிந்திசைத்த லென்னுஞ் சூத்திரத்தளவும் முற்கூறிய நால்வகைச் சொல்லையு முணருமாறு, முணர்த்துமாறு, மவற்றின் றன்மையு முணர்த்துகின்றார், மேற் கூறுகின்ற பொதுவிலக்கண மாகிய வெச்சவியற் கேற்ப வதிகாரப் பட்டமை கருதி.

(இ-ள்) பொருட்குப் பொருடெரியின் — ஒரு சொல்லை ஒருசொல்லானும் பலசொல்லானும் உணர்த்தியவழி பொருளுணர்த்த வந்தச் சொற்கும் பொருள் யாதெனப் பொருடெரியு மாயின், அதுவரம் பின்று — அங்ஙனந் தெரிதல் வரம்பின்றோடு மதனாற் பொருட்குப் பொருடெரியற்க வென்றவாறு.

ஒருசொற் கொரு சொல்லானும் பல சொல்லானும் பொருளுணர்த்தினாலு முணரு முணர்வில்லா தானை யுணர்த்துமாறு மேற் கூறுகின்றார். (93)

392] உணர்த்து மாறுணர்த்தின் பொருட்குத் திரிபின்மை
பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்.

இதுவுமது.

(இ-ள்) உணர்த்த வல்லின் பொருட்குத் திரிபில்லை —மாணாக்க னுணரு மாறறிந் தாசிரிய னுணர்த்த வல்லனாயி னிச்சொல் லிப்பொருட் டென்று தான் கூறிய பொருட்குத் திரிபின்றா மென்றவாறு.

யாம் என்பது படர்க்கை யுளப்பாட்டுத் தன்மைப் பெயரென்றா லுணராதானை, யது சேய்மைக்க ணின் றாரைத் தன்னோடு கூட்டிக் கூறப்பட்டுப் புடை பெயர்ச்சி யின்றி நின்றதோர் பொருளை யுணர்த்திற்று காண் எனத் தொடர்மொழி கூறியானுஞ் சேய்மைக்க ணின்றாரைத் தன்னோடு சேர்த்துக் காட்டி யானும் பொருளுணர்த்துக.

உண்டே மென்பது பன்மைத்தன்மை, யென்றாற் பொருளுணராதானை, இது, யானு மிவனு மவனு முண்டற் றொழிலைச் செய்தே மென்னும் பொரு ளுணர்த்திற்றுக் கா ணெனத் தொடர் மொழி கூறி யானு மவரைத் தன்னொடு சேர்த்தித் தொழினிகழ்த்திக் காட்டி யானும் பொருளுணர்த்துக.

'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே'!

யென்புழி மன்னைச் சொலினியது கழிந்ததென்னும் பொருள் குறித்துநின்றதுகா ணென்றாற் பொருளுண ராதானை, 'யரிதாகப்பெற்ற கள்ளை யெக்காலமு மெமக்குத் தருகின்றவன் றுறக்கத்துக்குச் சேறலி னெமக் குக் கள்ளுண்டல் போயிற்றென்றலிதன் பொருளெனத் தொடர்மொழி கூறிப் பொருளுணர்த்துக.

உறுகா லென்புழி யுறுவென்பது மிகுதி யென்றால் பொருளுணராதானைக் கடுங்காலினது வலிகண்டா,

யீண்டுறு வென்பதற்குப் பொருளஃது' என்று தொடர் மொழி கூறியானுங், கடுங்காலுள்வழிக் காட்டியானு முணர்த்துக.

இங்ஙனம நால்வகைச் சொல்லையும் மாணாக்க னுணருமாறறிந்து உணர்த்தவே பொருட்குத் திரிபின்றாம்.

இங்ஙன முணாத்தவு முணராதானை யுணர்த்தற் பாலனல்ல னென்கின்றது மேல்வருகின்ற சூத்திரம்.

(94)

393] பொருளுணர்ச்சி யுணர்வோர் ஆற்றலைப் பொறுத்தது

உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே.

இதுவுமது.

(இ-ள்) உணர்சசி வாயில்-நால்வகைச் சொல்லை யும் மாணாக்க னுணர்தற்குக் கூறிய விவ்விலக்கணம், உணர்வோர் வலித்து-தன்னை யுணர்வோரதுணர்வைத் தனக்கு வலியாக வுடைத் தென்றவாறு.

எனவே, தன்னை யுணரு முணர்வில்லாதாற்குத் தான் சொல்வது பயன்படா தாகலின், அதனை யவர் குணர்த்தற்க வென்பது பொருளாயிற்று.

இத்துணையு முணருமாறு முணர்த்துமாறு முணர்த்தினார். (95)

394] சொற்பொரு ளுணர்த்துங் காரணம்
ஆசிரியர்க்கே புலப்படல்.

மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

இது, சொற்பொரு ளுணர்த்துங் காரண மாசிரியர்க்கே புலப்படு மென்கின்றது.

(இ-ள்) மொழிப்பொருட் காரணம்—நால்வகைச் சொற்கும் பொருளை யறிவித்து நிற்கின்றதோர் காரண முண்டாந் தன்மை, விழிப்பத் தோன்றா—நுண்ணுணா வில்லாதோர்க்கு மரபென்று கொள்வதல்லது விளங்கத் தோன்றா வென்றவாறு.

எனவே, நுண்ணுணர் வுடையோர்க்குக் காரணம் உண்டாந் தன்மை விளங்கத் தோன்றுமென்பது பொருளாயிற்று.

இது மரபென்று கோடல் 'நிலந் தீ நீர் வளி' யென் னும் மரபியற் சூத்திரத்தானு மாசிரிய ருணர்த்தினார்.

உலகத்துப் பொருள்களி னிகழ்ச்சிக்குச் சொற் காரணமாதலின், மொழிப்பொருட் காரணமென்றார். இக்காரண மக்காரியங்களோ டியைந்து நிற்கின்ற தன்மை யாசிரியர்க்கல்லது புலப்படாமையின், 'விழிப் பத் தோன்றா', வென்றார். (96)

395] உரிச்சொற் கெழுத்துப் பிரிந்திசையாமை

எழுத்துப் பிரிந்திசைத்த லிவணியல் பின்றே.

இது, உரிச்சொற் கெழுத்துப் பிரிந்திசைத்த லின் றென்கின்றது.

(இ-ள்) எழுத்துப் பிரிந்திசைத்த லிவணியல் பின்றே—எழுத்துக்கள் முதனிலையு மிறுதிநிலையுமாகப் பிரிந்து வேறு வேறு பொருளுணர்த்துத லுரிச் சொல் லிடத் தியல் புடைத்தன்று. (எ—று)

எனவே, எழுத்துக்க டிரிந்து பொருளுணர்த்துத லுரிச் சொல்லிடத்தியல் புடைத் தென்றவாறாம்.

எழுத்துக்கள் பிரிந்திசைத்தன வினைச்சொல்லு மொட்டுப் பெயரும். அவற்றுள், வினை பிரிந்தன வினை யியலு ளீறு பற்றி யோதிப் பிரித்துக் காட்டினார்; பெயர் பிரிந்தன 'நம்மூர்ந்து வருஉ மிகர வைகாரமு

மென்பன முதலியவற்றாற் காட்டினார். 'வெற்பன், பொருப்பன் என்பன முதனிலை பிரிப்பப் பிரியு மேனு' மவையு மொட்டுப்பெ ரென்றுணர்க

தாமாகப் பொருளுணர்த்தாமையிற், பிரிதலும் பிரியாமையு மிடைச் சொற்கின்று.

இனி, உரிச்சொல் லெழுத்துத் திரிந்து இசைத்தன வெல்லா மிவ்வோத்தினுட் காட்டிப் போந்தவற்றா னுணர்க.

396]            உரிச்சொற்களுக்குப் புறநடை            (97)

அன்ன பிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉ
முரிச்சொ லெல்லாம் பொருட்குறை கூட்ட
லியன்ற மருங்கி னினைத்தென வறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்.

இஃது, உரிச்சொற் கெல்லாம் புறநடை கூறுகின்றது.

(இ-ள்) கிளந்த வல்ல வன்ன பிறவும் — சொல்லப் பட்டனவே யன்றி யவை போல்வன பிறவுமாய், பன் முறை யானும் பரந்தன வரூஉம் உரிச்சொலெல்லாம்— ஈறு பற்றி யுணர்த்தற் கடங்காது பலவாற்றானும் பரந்துவரு முரிச்சொலெல்லாம், பொருட்குறை கூட்ட— பொருளைச் சொல் இன்றியமையாக் குறைபாடு தீரப் பொருளை யதனோடு கூட்டி யுணர்த்த, இயன்ற மருங்கி னினைத்தென வறியும் வரம்பு தமக்கின்மை யின் — 'இசை, குறிப்புப்,பண்பு' பற்றித் தாமியன்ற நிலத்தித்துணை யென வரையறுத் துணரு மெல்லை தமக்கின்மையா னெஞ்சாமற் கிளத்த லரிதாகலின், வழி நனி கடைப்பிடித்து— அவற்றை யறிவதற் கோதிய வழி

களைச் சோராமன் மிகவுங் கடைப்பிடித்து, ஓம்படை யாணையிற் கிளந்தவற்றியலாற் பாங்குற வுணர்த லென் மனார் புலவர்— பாதுகாவலாகிய வாணையிற் கிளந்த வற்றி னியல்பாலே யவற்றையும் பகுதியுற வுணர்க வென்று சொல்லுவர் புலவர் (எ—று)

'ஆதலால் யானு மவ்வாறே கூறினேன்', னென்றா ரெனக் குறிப்பெச்சமாக வுரைக்க.

எனவே,

'பெயரினும் வினையினு மெய்தடு மாறி'

யெனவும்'

'முன்னும் பின்னும் வருபவை நாடி'

யெனவும் யான்கூறிய நெறியைச் சோராமற் கடைப் பிடித்து

'எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்'

எனவும்,

'ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்தல்
தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே'

எனவு மென்னாற் றரப்பட்ட பாதுகாவலாணையாற் கிளந்த வற்றியலாற் பாங்குற வுணர்க, வென்ப திதன் கருத்தாயிற்று.

'உரிச் சொலெல்லாங், கூட்ட வரம்பு தமக்கின்மை யிற் கடைப்பிடித் தியல்பாகவே யவற்றை யுணர்க என வினை முடிவு செய்க.

'இருமை' யென்பது கருமையும பெருமையுமாகிய குறிப்பும். 'சேண்மை' யென்பது சேய்மையாகிய குறிப்பும், 'தொன்மை' யென்பது பழமையாகிய குறிப்பு முணர்த்துதலும், 'இவறல்' உலோபமும்.

'நொறிலியற் புரவி யதியர் கோமான்'

என நொறில் நுடக்கமும்'

'நொறிலியற் புரவிக் கழற்கா லிளையோர்,

என 'நொறில்' விரைவும், 'தெவிட்டுத' லடைதலு, 'மலிதல்' நெருங்குதலும், 'மாலை' குற்றமு முணர்த்து தலும்; பிறவும் 'கிளந்தவல்ல' வென்பதனாற் கொள்க. (98)

உரி இயல் முற்றும்.

தொல்காப்பியம் 2-வது சொல்லதிகாரம்

நச்சினார்க்கினியம் முற்றிற்று

ஆக இயல் எட்டற்கும் சூத்திரம் 396.

---

௳

# ஒன்பதாவது எச்சவியல்

397] நால்வகைச் சொற்கள்

இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே.

என்பது சூத்திரம். முற்கூறியவெண்வகை யோத்தினுள்ளு முணர்த்துதற் கிடமின்றி யெஞ்சி நின்ற சொல்லிலக் கணங்களைத் தொகுத்துணர்த்துதலின், இஃதெச்ச வியல் என்னும் பெயர்த்தாயிற்று. செய்யுட்குரிய சொல்லு மவற்ற திலக்கணமு மவற்றின் விகாரமு மச்செய்யுட் பொருள்கோளும் முதலுணர்த்துகின்றார். இச்சூத்திரஞ் செய்யுள் விதி யொழிபு பெரும்பான்மைத் தாகலின், செய்யுட் செய்வதற்குரிய சொற்களிவை யென அவற்றின் வரையறை கூறுகின்றது.

(இ-ள்) இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வட சொலென் றனைத்தே — இயல்பாகிய சொல்லும் அது தான் றிரிந்து வருஞ்சொல்லும் திசைக்கண் வழங்குஞ் சொல்லு மாரியச் சொல்லுமெனக் கூறிய வத்துணையே செய்யுளீட்டச் சொல்லே — ஒருபொருண்மேனிகழுஞ் செய்யுளை யீட்டுதற்குரிய சொல்லாவன வென்றவாறு

எனவே, பிறபாடைக்குரிய சொற்க ளீட்டுதற்குரிய வன்றிச் சிறுபான்மை வருமாயிற்று. அவை செப்பு, குளிறு சிக்கு, அந்தோ என்றாற் போல்வன பிறவுமாம்.

இயல்பாகிய சொன், முற்கூறிய நால்வகைச் சொல் லேயாய் நின்று செய்யுட் குரித்தாம்.

அவ்வியற் சொற் றிரிசொல்லாங்காற் பெரும் பான்மை பெயராகவுஞ் சிறுபான்மை வினைத்திரி சொல்லாகவுந் திரிதலன்றி யிடையு முரியுமாகத் திரிந்து வாரா.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெரும்பான்மை பெயர்ப்பெயராயும் சிறுபான்மை தொழிற் பெயராயும் வருதலன்றி யேனையவாய் வாரா. (1)

398] இயற்சொல்லுக் கிலக்கணம்

அவற்றுள்,

இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே.

இது, நிறுத்த முறையானே யியற்சொற் கிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுளியற் சொற்றாமே — அந்நான் கனுளியற் சொல்லென்று கூறிய சொற்றாம், செந் தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி — செந்தமிழ் நிலத் தின் கண்ணே வழங்குதலோடு பொருந்தி, தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே—அச்செந்தமிழ் நிலத் துங் கேட்டவர்க்குத் தத்தம் பொருள் வழுவாம லொலிக் குஞ் சொல்லா மென்றவாறு.

திரிபின்றி யியல்பாகிய சொல்லாவன. 'நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், மக்கள், மரம், தெங்கு, கமுகு' என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலமாவது, வையை யாற்றின் வடக்கும்' மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம். (2)

399] திரிசொல்லுக் கிலக்கணம்.

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த லொருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இது, திரிசொற் கிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) திரிசொற் கிளவி-அவ்வியற் சொற்றிரிந்த திரி சொல்லாகிய சொல்லை, ஒரு பொருள் குறித்த வேறு சொல்லாகியும் வேறு பொருள் குறித்த வொரு சொல்லாகியு மிரு பாற்றென்ப—ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொல்லாயும் பல பொருளைக் குறித்துவரு மொருசொல்லாயு மிரு வகைப்படுமென்று கூறுவா ராசிரியர் (எ—று)

அவ்வியற் சொல்லைத் திரிக்குங்காற் றம்மெழுத்துச் சிறிது நிற்பத் திரிப்பனவு மவ்வியற்சொற் றம்மையே பிற சொற்கொணர்ந்து முழுவதூஉந் திரிப்பனவு மென விரு வகையாம்.

(உ-ம்) 'கிளி, மயில்' என்பனவற்றைக் கிள்ளை, மஞ்ஞை யெனச் சிறிது நிற்பத் திரித்து மவற்றைத் 'தத்தை பிணிமுகம்' எனப் பிறசொற் கொணர்ந்து முழுவதூஉந் திரித்துங் கூறுதல்.

மலைக்கு 'வெற்பு, விலங்கல், விண்டு' என்பன முழுவதூஉந் திரித்தன. இவை யொருபொருள் குறித்த வேறுசொல்.

'உந்தி' யென்பது யாழ்ப்பத்தலுங், கொப்பூழுந், தேர்த்தட்டுங் கானியாற்றிடையு முணர்த்துதன் முழுவதூஉந் திரித்தது. இது வேறுபொருள் குறித்த வொருசொல்

'அளகு' என்பது கோழி, கூகை, மயி லென்னும் மூன்றுசாதியிற் பெண்பாற்கும் பெயராதலி, னிதுவும் வேறுபொருள் குறித்ததாம். இவை முழுவதூஉந் திரித்தன. இவை யெல்லாம் பெயர்த் திரிசொல்.

'கேட்டீவாயாயின், செப்பீமன், ஈங்குவந் தீத்தாய், புகழ்ந்திகுமல்லரோ, என்மனார், என்றிசினோரே, பெறலருங் குரைத்து' என்பன போல்வன வினைத்திரிசொல். இவை சிறிது நிற்பத்திரித்தன.

'பைங்கண், பைந்தார், பச்சிலை, காரா, சேதா என்றாற் போலும் பண்புத் தொகையாகிய சொற்க ளைப் 'பசுமை, கருமை, செம்மை' யெனப் பண்புப் பெயராக நிறுத்தி, யீற்றுயிர்மெய்யு மீற்றய லுயிருங் கெட்டு வருமொழிக்கேற்ப வொன்றுத திரிந்துந் திரி யாது மாதிநின்ற அகரம் ஐகாரமாயுந் திரிந்தன வென்று, மீற்றுயிர் மெய்யு மீற்றய லுயிருங் கெட் டாதி நீண்டதென்று, மீற்றுயிர் மெய்யு மிடையிலொற் றுங் கெட் டாதி நீண்டோர் தகரவொற்று மிக்கதென் றும் பின்னுள்ளோர் சந்தி முடிக்கின்றது பொருந்தாது என்னை? பைங்கணென்புழிப் பசியதாகிய கண்ணெனப் பண்புணர்த்து மீற்றை விரித்தலின்றிப் பசுமைக் கண்ணெனத் தாந்தொகுத்த பண்புப்பெயரை விரித்த லாகாமையின். இவை செய்யுட்குப் புலவர் சிறிது நிற்பத் திரித்துக்கொண்ட பெயரெச்ச வினைகுறிப்புப் பெயரென்றுணர்க. எழுத்ததி காரத்துச் செய்யுட் கிவ் வாறு முடிக்கவென வாசிரியர் முடிபுகூறிய வற்றை யெல்லாஞ் செய்யுண் முடிபென்று கூறலும். வழக்குச் சொல் லிவ்வாறு திரிந்து வந்தனவற்றை வினைத்திரி சொல்லென்று பெயர் கூறலு மாசிரியர் கருத்தாம்.

இடையு முரியுந் திரிசொல்லாய் வருமேனு முணர்க. (3)

400] திசைச்சொற் கிலக்கணம்

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

இது, திசைச் சொற்கிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) திசைச் சொற் கிளவி—திசைச் சொல் லாகிய சொல், செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந் தங்குறிப் பினவே — செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரு நிலத்தும் பன்னிரண்டையும் புறஞ் சூழ்ந்த, பன்னிரண்டு நிலத்துந்தாம் தாங்குறித்த பொருளையே விளக்குந் தன்மையையுடையன வென்றவாறு.

உம்மையை யெச்ச வும்மை யாக்குப் பொருளு ரைக்க. எனவே, யியற்சொற் போல வெந்நிலத்துந் தம்பொருள் விளக்காவாயின.

பன்னிரு நிலமாவன: 'பொங்கர்நாடு, ஒளிநாடு, தென் பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூமிநாடு, மலாடநாடு, அருவா நாடு, அருவாவடதலை எனத் தென்கீழ்பான் முதலாக வடகீழ் பாலீறாக வெண்ணுக.

இனிப் பன்னிரண்டையுஞ் சூழ்ந்த பன்னிரண்டா வன: சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளுவும், குடகமும், கருநடமும், கூட மும், வடுகும், தெலுங்கும், கலிங்கமுமாம்.

தென்பாண்டி நாட்டார் ஆ எருமை யென்பன வற்றைப் பெற்றமென்றுங், குட்ட நாட்டார் தாயைத் தள்ளை யென்றும் நாயை ஞெள்ளை யென்றுங், குட நாட்டார் தந்தையை அச்ச னென்றும், கற்கா நாட் டார் வஞ்சரைக் கையரென்றும், சீதநாட்டார் ஏடா வென்பதனை எலுவனென்றுந் தோழியை இகுளை யென்றுந் தம்மாமி யென்பதனைத் தந்துவை யென்

றும், பூழிநாட்டார் நாயை ஞமலி யென்றுஞ் சிறு குளத்தைப் பாழி யென்றும், அருவா நாட்டார் செய்யைச் செறு வென்றுஞ் சிறு குளத்தைக் கேணி யென்றும், அருவாவடதலையார் குறுணியைக் 'குட்டை' யென்றும் வழங்குப.

இனிச் சிங்களம், அந்தோ! வென்பது. கருநடம் 'கரைய, சிக்க, குளிர; என்பன. வடுகு, செப்பென்பது. தெலுங்கு எருத்தைப் பாண்டி லென்பது. துளுவம மா மரத்தைக் கொக்கென்பது.

ஒழிந்நவற்றிற்கும் வந்துழிக் காண்க. (4)

401] வடசொற் கிலக்கணம்.

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

இது, வடசொற்கிலக்கணங் கூறுகின்றது,

(இ-ள்) வட சொற்கிளவி—வட சொல்லாகிய சொல், வடவெழுத் தொரீஇ — உரப்பியு மெடுத்துங் கனைத்துங் கூறும் வடவெழுத்துக்களி னீங்கி, எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும் — இருசார் மொழிக்கும் பொதுவாகிய வெழுத்தானியன்ற சொல்லாமென்றவாறு.

அவை, 'வாரி, மேரு, குங்குமம், மணி, மானம், மீனம், வீரம், வேணு, யூபம், காரணங் காரியம், நிமித்தங், காரகம் என்றாற் போல்வன சான்றோர் செய்யுட்கண் வரும்.

இனி, ஒழிந்தோர் செய்யுட்கண் வருவன, 'கமலம், அமலம், மூலம், கோபம், ஞானம், ஞேயம், தமாலம் தாரம், திலகம், நாமம், யானம், யோனி, உற்பலம்' இவைபோல்வன பிறவுமாம். (5)

402] மேலதற்கோர் புறநடை

சிதைந்தன வரினு மியைந்தன வரையார்.
இதுவுமது.

(இ-ள்) சிதைந்தன வரினும்-பொது வெழுத்தானி யன்றனவே யன்றி வடவெழுத்தா னியன்ற வடசொற் சிதைந்து வரினும், இயைந்தன வரையார்—பொருத்த முடையன செய்யுளிடத்து நீக்காரென்றவாறு.

(உ-ம்) 'அரமிய வியலகத் தியம்பும்'
'தசநான் கெய்திய பணைமரு ணோன்றாள்'
'வாதிகை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி'
'கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை'
'பேதை யல்லை மேதையங் குறுமகள்'
'தைப்பமை சருமத்து'

என்றாற் போல்வன சான்றோர் செய்யுட்கண் சிதைந்து வந்தன.

இனி, 'தந்திரம், சூத்திரம், விருத்தி, அருத்தாபத்தி, உத்தி' என்றாற்போல்வன, நூலுள் சிதைந்து வந்தன. பங்கயம், இடபம், விசயம், இருடிகள், மேகம், பந்தம், மயானம், விடம், துங்கம், பலம், பாரம், சர்ச்சரை, சாதி, சேனை, சித்தி, சாதனம், அயன், அரி, அரன், ஆரம் அருகம், சிங்கம், மோக்கம், காமம், பக்கம், சூலம், சதம் போதகம், போகம், சுத்தம், சலம், மோகம், யோகம் வந்தனை, வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை புரி, மேதினி, குமரி, நதி, அரங்கம், இலங்கை, இயக்கன், உலோபம், உலோகம், நிருத்தம், சீதம், வாச்சியம், வச்சிரம், அருத்தம், கருமம், கருப்பம், காப்பியம், பருப்பதம், என்றாற்போல்வன பின்னுள்ளோர் செய்யுட்கண் திரிந்து ஏற்கும் எழுத்துக்களால் மருவி வந்தன.

இனிச் சிதைந்தன வரினுமெனப் பொதுப்படக் கூறியவதனால் 'ஆணை, வட்டம், நட்டம், கண்ணன்' எனப் பாகதமாகச் சிதைந்தனவுங் கொள்க. (6)

403] செய்யுள் விகாரம்

அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலு மெலிக்கும்வழி மெலித்த
விரிக்கும்வழி விரித்தலுந் தொகுக்கும்வழித் [லும்
[தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலுங் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய வென்மனார் புலவர்.

இது, செய்யுள் விகாரமாமாறு கூறுகின்றது.

(இ-ள்) அந்நாற் சொல்லுந் தொடுக்குங்காலை-முற் கூறிய நான்கு சொல்லையுஞ் செய்யுளாகத் தொடுக்குங் கால், வலிக்கும்வழி வலித்தலும் -- மெல்லொற்றை வல்லோற்றாக்க வேண்டும்வழி வல்லொற்றாக்கலும், மெலிக்கும் வழிமெலித்தலும் வல்லொற்றை மெல்லொற் றாக்க வேண்டும்வழி மெல்லொற்றாக்கலும், விரிக்கும் வழி விரித்தலும் — சந்தி நிரம்புதற்கோர் சொல்லை விரிக்கவேண்டும் வழி விரித்தலும், தொகுக்கும் வழித் தொகுத்தலும் — சந்தமுளவாதற் கோர் சொல்லைத் தொகுக்க வேண்டும்வழித் தொகுத்தலும், நீட்டும் வழி நீட்டலும், — குற்றெழுத்தினை நீட்டவேண்டும் வழி நீட்டலும், குறுக்கும் வழி குறுக்கலும் — நெட்டெழுத் தினைக் குறுக்க வேண்டும் வழிக் குறுக்கலுமாகியவறு வகை விகாரமும், நாட்டல் வலியவென்மனார் புலவர் — செய்யு ளின்பம் பெறச் செய்வார் நாட்டுதலை வலியாக வுடைய வென்று சொல்லுவர் புலவரென்றவாறு.

(உ-ம்) 'முத்தை வருஉங் காலந் தோன்றின்'
'குன்றிய லுகரத் திருதி யாகும்'

'தண்ணந் துறைவன் கொடுமை'
'இடையெனப் படுப'
'வெள் வளை நல்காள் வீடுமெ னுயிரே'
'திருத்தார்நன் றென்றேன் றியேன்.'

என முறையே காண்க.

'பாசிலை, அழுந்துபடு விழுப்புண்' என்றாற்போல விரண்டு விகாரம் வருவனவற்றை 'நாட்டல் வலிய' வென்றதனாற் கொள்க. (7)

404] பொருள்கொள் வகை.

நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே.

இது, செய்யுள் செய்வுழி யதன்பொருட்கிடை கூறுகின்றது.

(இ-ள்) இயல்புபுணர்மொழி - இயற்கையாகத் தம் முட் கூடிப் பொருளுணர்த்துஞ் சொற்க ளங்ஙன மியற்கையாகக் கூடிப பொருளுணர்த்தாது விகாரப்பட்டுப் பொருளுணர்த்துங்கால், அவை—அவ்விகார வகை, நிரனிறை சுண்ண மடி மறி மொழிமாற்று நான்கென்ப— நிரனிறையுஞ் சுண்ணமு மடிமறியு மொழி மாற்று மென நான்கென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

நிரனிறையுஞ் சுண்ணமும், நிரலே நிறுத்தலுந் துணித்துக் கூட்டுதலுமாகிய வேறுபாடுடைமையின், மொழிமாற்றின் வேறாயிற்று. (8)

405] நிரனிறைப் பொருள்கோள்.

அவற்றுள்,
நிரனிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

இது, நிறுத்த முறையானே நிரனிறை கூறுகின்றது.

(இ-ள்) அவற்று ணிரனிறை தானே—அந்நான் கனு ணிரனிறையாவது, வினையினும் பெயரினும் நினையத் தோன்றி-வினையானும் பெயரானு மாராயத் தோன்றி, சொல்வேறு நிலைஇப் பொருள் வேறுநிலை யல்—முடிக்கப் படுஞ் சொல்லும் வேறுநிலைபெற்று முடிக்குஞ் சொல்லும் வேறே நிற்றலா மென்றவாறு.

தொடர்மொழிப் பொருண் முடிக்குஞ் சொற்கண்ண தாகலான், முடிக்குஞ் சொல்லைப் பொருளென்றார்.

'வினையினும் பெயரினு' மென்றாதனான், வினைச் சொல்லான் வருவதூஉம் பெயர்ச்சொல்லான் வருவதூ உம் அவ்விரு சொல்லான் வருவதூஉம், என நிரனிறை மூன்றாம்.

(உ-ம்) 'மாசு போகவுங் காய்பசி நீங்கவுங்
கடிபுனன் மூழ்கி யடிசில்கை தொட்டு'

என்புழி, முடிவனவு முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறு வேறு நிற்றலின் வினை நிரனிறை.

'கொடிகுவளை கொட்டை துப்புண்கண்மேனி'

என முடிவனவு முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலிற்; பெயர் நிரனிறை,

'உடலு நிமிர்ந்தோடு மூம்மலரும் பார்க்கும்
கடலிரு ளாம்பல்பாம் பென்ற—கெடலருஞ்சீர்த்
திங்க டிருமுகமாச் செத்து.

என்புழி, முடிவனவாகிய பெயரும் முடிபபனவாகிய வினையும் வேறுவேறு நிற்றலிற், பொது நிரனிறை.

நினைய வென்றதனாற் சொல்லும் பொருளும் நிரல்பட நில்லாது,

'களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்.'

என மயங்கி வருதலுங் கொள்க. (9)

406] சுண்ணப் பொருள்கோள்

சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த வீரடி யெண்சீ
ரொட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல்.

இது, சுண்ணமாமாறு கூறுகின்றது.

(இ-ள்) சுண்ணந்தானே — சுண்ணமாவது. பட்டாங் கமைந்த விரடி யெண்சீர்—இயல்பாக வமைந்த வீரடிக்க ணுளவாகிய வெண்சீரை, துணித்தன ரொட்டு வழியறிந்தியற்றல் - துணித்தியையும் வழி யறிந்து கூட்டி யியற்றப் படுவதா மென்றவாறு.

ஈரடி யெண்சீரளவடி யல்லா விகாரவடியானும் பெறப்படுதலி, னவற்றை நீங்குதற் ‘களவடியானமைந்த வென்பார், பட்டாங்கமைந்த வீரடி யென்றார்.

(உ-ம்) ‘சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை;

‘சுரை மிதப்ப, வம்மி யாழ, யானைக்கு நிலை, முயற்கு நீந்து’ எனத் துணித்துக் கூட்ட வியையும்.

சுண்ணம் போலச் சிதர்ந்து கிடத்தலின், சுண்ணமாயிற்று.

இதனு, ‘ளாழ வம்மி, நீத்து முயற்கு’ என வொட்டிப் பொருடந்து நின்றனவேனுஞ் சுரைக்கும் யானைக்குஞ் சொன் முடிபு நோக்குப்பட நின்று பொருளுணர்த் தாமையின், மாற வேண்டிற்று. (10)

407] அடிமறிப் பொருள்கோள்

அடிமறிச் செய்தி யடி நிலை திரிந்து
சீர் நிலை திரியாது தடுமா றும்மே.

இது, அடிமறி யாமாறு கூறுகின்றது.

(இ-ள்) அடிமறிச் செய்தி — அடிமறி யென்பதன் செய்தி, சீர்நிலை தெரியா தடிநிலை திரிந்து தடுமாறும் — சீர் நின்றாங்கு நிற்ப வடிக டத்தம் நிலையிற்றிரிந்து ஒன்றனிலைக்களத் தொன்று சென்று நிற்கு மென்ற வாறு.

(உ-ம்) 'மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
யேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே.'

இது சீரும் பொருளுந் திரியா, தடி திரிந்தவாறு காண்க. இது நான்கடிச் செய்யுட் கல்லது பெரும் பான்மை வாராது. (11)

408] மேலதற்கோர் புறனடை

பொருடெரி மருங்கி
னீற்றடி யிறுசீ ரெருத்துவயிற் றிரியுந்
தோற்றமும் வரையா ரடிமறி யான.
இது, மேலதற்கோர் புறநடை.

(இ-ள்) அடிமறியான — அவ்வடிமறிச் செய்யுளி டத்து, பொருடெரிமருங்கின்-பொருண்முடிவை யாராயு மிடத்து, ஈற்றடி—அப்பொருண் முடிவினையுடைய வடி யில், எருத்து வயினிறுசீர்—முடிக்கின்ற, சீர்க்கு முதற் சீரிடத்துப் பொருளே தம்பொருளாய் இறும்சீர், திரியுந் தோற்றமும் வரையார்—ஏனையடிகள் போல நேராய் முடியாது மீண்டு சென்று முன்னின்றதோர் சொல் லோடே பொருண் முடியுந் தோற்றரவும் நீக்காரா சிரியர் (எ—று)

'கூறாய் தோழியான் வாழுமாறே'
யென்பதியாண்டு நிற்பினும் பாட்டிற் பொருண்

முடிக்கின்றவடி. அதில் வாழுமென்ப தெருத்துச்சீர் மாறென்னு மிடைச்சொல்லாகிய விறுதிச்சீர் தான் பிரிந்து நின்றுணர்த்துதற்குத் தனக்கோர் பொருளின்றி வாழும்படியை யென வெருத்துச் சீரின் பொருளையே யுணர்த்தி யுருபையேற்றுக் கூறாயென முன்னின்ற சொல்லோடு முடிந்தவாறு காண்க.

உம்மையா னிங்ஙன முடிதல் சிறுபான்மை யாயிற்று. (12)

409] மொழிமாற்றுப் பொருள்கோள்

மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய
முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளா அல்.

இது, மொழிமாற் றாமாறு கூறுகின்றது.

(இ-ள்) மொழிமாற்றியற்கை-மொழிமாற்றினியல் பாவது, சொன்னிலைப் பொருளெதி ரியைய முன்னும் பின்னுமாற்றி — செய்யுட்கட் பாவென்னு முறுப்பிற் கேற்பச் சொன்னின்ற நிலைப்பொருட் டாராத வழிச் சொன்னின்ற நிலைக்குப் பொருளெதிரே வந்து பொருந் தும்படி யச்சொல்லின் முன்னின்ற சொல்லைப் பின்னே மாற்றியும் பின்னின்ற சொல்லை முன்னே மாற்றியும், கொள்வழிக் கொளாஅல் — பொருள் கொள்ளுமிடத்தே கொளுத்துதலா மென்றவாறு.

(உ-ம்) 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரிய.'

புரவியினது வாங்குவள் நரம்பார்ப் பன்ன பரியவென முன்னின்ற மொழியைப் பின்னே மாற்றியும்,

'இடை முலைக் கிடந்' தென்பதற்கு

முலையிடை யெனப் பின்னின்ற மொழியை முன்னே மாற்றியும் வருமாறு காண்க. இச்சூத்திரமுமது.

'கடற்படை குளிப்ப மண்டி'

என்பதுமது.

'இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப'

என்பதுமது.

'பொன்னோடைப் புகரணி நுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாஅத்
தெயிறுபடை யாக வெயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து
மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா.'

என்றாற் போல வருவனவெல்லாம் அணுகி வந்தமாட்டென்னு முறுப்பு

'ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும்'

என்பதுமது.

அகன்று வந்த மாட்டு முருகாற்றுப்படை முதலிய வற்றுட் காண்க.

மொழி மாற்றாவது கேட்டோர் கூட்டி யுணரு மாற்றானீரடிக் கண்ணே வருவதென்றும் மாட்டென்னு முறுப்பாவ திரண்டிறந்த பலவடிக் கண்ணும் பலசெய் யுட் டொடரின் கண்ணு மகன்று மணுகியும் வரு மென்றுமுணர்க. அது,

'அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலை யினு
மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்'

என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க. உதார ணங்கள் மாங்குக் காட்டுதும்.

பூட்டுவிற் பொருள்கோளு மளைமறி பாப்புப்

பொருள் கோளுந் தாப்பிசைப் பொருள்கோளுங் கொண்டுகூட்டுப் பொருள்கோளு 'மாட்டென்னு முறுப் பின்க' ணடங்குமாறும் யாற்றொழுக்குப் பொருள்கோள் யாப்பென்னு முறுப்பின்க ணடங்குமாறு முணர்க. (13)

410] கிளைப்பெயர்கள் பிரிக்கப்படா

த ந நு எ எனு மவைமுத லாகிய
கிளை நுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.

இது, மேற் றொகைச்சொற் கூறுவான் றொகை போல விருபொருள் படுவன விவையென்கின்றது.

(இ-ள்) த ந நு எ எனுமவை முதலாகிய கிளை நுதற் பெயரும்—த, ந, நு, எ, என்கின்ற வெழுத்துக் களை முதலாகவுடைய வொருவரோ டொருவர்க்குள்ள தொடர்ச்சிக் கிழமையைக் கருதின வொட்டுப்பெயர்க ளும், பிரிப்பப் பிரியா—தொகைச்சொற் போல விரு பொருள்பட்டு நிற்பினு மவை போலப் பின்வருஞ் சொற் றம்பொரு ளுணர்த்தாமையின் பிரிக்கப்படா வொருசொல்லேயாய் நிற்கும் (எ-று.)

(உ-ம்) தமன், தமள், தமர்.
நமன், நமள், நமர்.
நுமன், நுமள், நுமர்.
எமன், எமள், எமர்.

எனவரும். விளிமரபின் முதலு மீறும் பற்றி யோதி யிடையின் விகற்பங் கூறாமையிற் றம்மான், நம்மான், நும்மான், எம்மான், என்றாற்போலும் வாய்பாட்டு விகற்பமுங் கொள்க.

இவற்றைச் சேனாவரையர், தன்கிளை, என்கிளை, தங்கிளை, யெங்கிளை, யென வொருமைக்கும் பன் மைக்கும் பொதுவாய் நிற்குமென்றாராலெனின், ஆசிரியர்,

'தாமென் கிளவி பன்மைக் குரித்தே'
'யாம் நாமென வரூஉம் பெயரும்.'

என்றிவ்வதிகாரத்து ளெடுத்தோதிய பன்மைச் சொற் களை யெழுத்ததிகாரத்துள் அவை யெழுவாயும் பய னிலையுமாய் நிற்கும்வழித் திரியாது புணருமென்று கூறித்

'தாநாமென்னு மகர விறுதியும்' என்னுஞ்'

சூத்திரத்தா னுருபேற்கும் வழித் திரிந்து புணரு மென்று கூறி நும்மென்பதனை,

'நும்மெ னொருபெயர்'

என்னுஞ் சூத்திரத்தா னுருபேற்குமாறு கூறி,

'அல்லதன் மருங்கின்.'

என்னுஞ் சூத்திரத்தா னஃதெழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் வழி நீயிரெனத் திரிந்து பன்மை யாயே நிற்கு மென்றுங் கூறிப் போந்தா ராதலி, னீண்டு மதற்கேற பத் 'தம்முடைய கிளை, யெம்முடைய கிளை யெனப் பன்மை புணர்த்துதலன்றி யொருமையை புணர்த் தாமை புணர்க. ஏனையவு மன்ன.'

'தம்பொரு ளென்பதம் மக்கள்' எனவும்
'நம்ம னோர்க்கே' எனவும்.
'நும்ம னோருமற் றினைய ராயி
னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ' எனவும்

இந்நான்கு சொல்லுமம் முடிபு பெற்று முதனிலை திரிந்து நின்று, பன்மைப் பொருளுணர்த்தியவாறு காண்க.

ஈண்டிவை 'வெற்பன், பொருப்பன்,' போலத் தம், நம், நும், எம் மென்பன பிரிந்து நின்று பொருளுணர்த் திப் பின் வருகின்ற ஆன், அள், அர் என்பன பொருளு ணர்த்தாது இடைச் சொல்லாயே நிற்றலிற் பிரிப்பப் பிரியா வென்றார்.

இனி, யும்மையை யெச்சப்படுத்திப் பிற வொட்டுப் பெயர்களும் பிரிப்பப் பிரியாவெனப் பொருள் கூறி, 'இம்பர், உம்பர், இம்மை, உம்மை, எம்மை' யென்றாற் போல்வன பிறவு மிவ்விட முவ்விட மிப்பிறப்பு உப் பிறப்பு எப்பிறப்பெனப் பொருளுணர்த்தி நிற்கு மென் றுணர்க. (14)

411] ஒரு சொல் லடுக்கு.

இசை நிறை யசை நிலை பொருளொடு புணர்தலென் றவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே.

இதுவுந் தொகைச் சொற்போல வடுக்கி வருவன கூறுகின்றது.

(இ-ள்) ஒரு சொல்லடுக்கே—ஒரு சொல்லை யடுக்கு மடுக்கு, இசை நிறை யசைநிலை பொருளொடு புணர்த லென்றவை மூன்றென்ப—இசைநிறையு மசைநிலையும் பொருளொடு புணர்தலு மென்று சொல்லப்பட்ட வவை மூன்றுமென்று சொல்லுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) 'ஏ ஏ ஏ ஏ யம்பல் 'மொழிந்தனள்.' இது இசைநிறை.

'மற்றோ மற்றோ' இது அசை நிலை.

'வந்தது வந்தது கூற்று' 'வைதேன் வைதேன்' அவனவன் போம் போம் என்பன விரைவு முடம்பாடுந் துணிவுந் ஒரு தொழில் பல கானிகழ்தலுமாகிய பொருள் வேறு பாடுணர்த்தலிற் பொருளொடு புணர்தல். (15)

412] தொகை மொழியின் வகை

வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே
வினையின் றொகையே பண்பின் றொகையே
யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்

றவ்வா றென்ப தொகைமொழி நிலையே.

இது, தொகைச் சொற்குப் பெயரு முறையுந் தொகையுங் கூறுகின்றது.

(இ-ள்) வேற்றுமைத்தொகையே—வேற்றுமை யுருபுக டொக்கதொகை, உவமத்தொகையே—உவமயுருபுக டொக்கதொகை, வினையின்றொகையே — வினைச் சொல்லீறுக டொக்க தொகை, பண்பின் றொகையே—பண்புணர்த்து மீறுக டொக்கத்தொகை, உம்மைத் தொகையே உம்மென்னு மிடைச்சொற் றொக்கதொகை, அன்மொழித் தொகையே — இத்தொகைச் சொற்களி னிறுதிக் கண்வந்து பொருடரும் வேறோர் சொற் றொக்கதொகை, என்றவ்வாறென்ப—என்று சொல்லப் பட்ட வவ்வாறு மென்று சொல்லுவராசிரியர், தொகை மொழிநிலையே—தொகைச் சொல்லினது நிலைமையை யென்றவாறு.

'ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்'
எனவும்,

'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்
மெய்யொருங்கியலுந் தொழிறொகு மொழியும்
எனவும்,

'உருபு தொக வருதலும்'
எனவும்,

'மெய்யுருபு தொகா விறுதியான'
எனவும்,

'பண்புதொக வரூஉங் கிளவியானும்'
எனவும்,

'உம்மை தொக்க பெயர்வயினானும்'

எனவும்,

'வேற்றுமை தொக்க பெயர்வயினானும்'

எனவும்,

'உம்மை யெஞ்சிய விருபெயர்த் தொகைமொழி

எனவும்,

ஆசிரியர் தொக்கே நிற்குமெனச் சூத்திரஞ் செய்தலின், வேற்றுமையுருபு முவமவுருபு மும்மும் வினைச்சொலீ றும் பண்புணர்த்துமீறு மித்தொகைச் சொற்களல்லாத தோர் சொல்லுந் தொக்கு நிற்றலிற் றொகைச் சொல் லென்பதேயவர் கருத்தாயிற்று. 'ஆயிற் கேழற்பன்றி, வேழக்கரும்பு' என்பனவற்றிற்குத் தொக்கன' வின்மை யிற் றொகைச் சொல்லாமா றென்னை? யெனின், அவற்றிற்கு மொன்றை யொன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை யுணர்த்துதற்கு வருமாகிய வென்னும் வாச கந் தொக்குநின்றதென்றே கோடும். அன்றித் தன்கட் டொக்கனவின்றி யங்ஙனம் வாசகந் தொக்கு நின்றது தொகை' யென்றற்குச் சாலாமையினதனை யொட்டி யொருசொல்லாய் நின்று தம்பொருளுணர்த்து மென்று கொண்டேனையவற்றையு மவ்வாறு கோடும்எனின்! எடுத்தோத்தினு மிலேசு சிறத்தல் யாண்டு மின்மை யினது பொருந்தாது. என்னை? யவ்விருபெயரெட்டுப் பண்புத்தொகை யறுவகைத் தொகைச் சூத்திரங்களு ளெடுத் தோத்தின்றி 'யென்ன கிளவியு' மென்ற விலே சினாற் கொண்டதாகலின் ஆயின், 'வண்ணத்தின் வடிவி' னென்பதன் கண் ணிருபெயரொட்டா யைம்பா லறியாத வடிவினையு மெடுத் தோதினாரா லெனின் வடிவு முதலியவற்றிற்கும் அறுவகைத் திரிபினுளேற்பன கொணர்ந்து முடித்தலிற், குன்றலுந் தொகையா மென் றுணர்க. 'என்ன கிளவியு' மென்றதனாற் கொள்வன வருமொழியின்றி நிலைமொழியும் பொருளுணர்த்தி நிற்கு மென்பதாண்டுக் கூறுதும்.

அன்றியும், செய்தான் பொருள், இருந்தான் மாடத் தென வழங்குவன வொட்டியொரு சொல்லாகாமையுஞ், செய்யுட் கண்

'கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே'

எனவும்

'மாற்றுமைக் கொண்ட வழி'

எனவும்

'இறுதிக்க ணிரண்டாவது தொக்கன'

'முயங்கின னல்லனோ'

எனவும்

'போற்றா' 'யெனவும் வரும் முடிக்குஞ் சொற் களோ

டொட்டி யொரு சொல்லாகாமையும்;

'தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே

எனவும்,

'சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே'

எனவும்,

இறுதிக்க ணேழாவது தொக்கன, தோன்றும்

எனவும்,

'சேர்ந்தனை செலினே'

எனவும்,

வரும் முடிக்குஞ் சொற்களொட்டி யொரு சொல்லா காமையு முணர்க.

இன்னும்,

'வல்லே மறவ லோம்புமதி யெம்மே'

என விடைக்கட் டொக்கனவும்,

'பொன்னோடைப் புகரணிநுதல்
துன்னருந்திறல் கமழ்கடா அத்
தெயிறுபடை யாக எயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை'

என வடுக்கி வருவனவு மொட்டியொரு சொல்லா காமையு முணர்க.

'அதுவென் வேற்றுமை' யென்னுஞ் சூத்திரத்துஅது வெனுருபுகெட, வென்றதனா லதுவெனுருபு நின்றா லல்லது கெடுதலின்மையின், அது நின்று கெட்டதென் னும் பொருடர லாண்டுக் கூறிப் போந்தாம். அதனால் ஈண்டுச் சேனாவரையர் கூறிய பெருட்கு விடையின்மை யுணர்க.

இவற்றுள் வினைத்தொகையும் பண்புத் தொகை யுஞ் சிறிது தொக்குத் தொகையாதலு, மேனைய முழு வதூஉந் தொக்குத் தொகையாதலு முணர்க. (16)

413] வேற்றுமைத் தொகை

அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

இது, முறையானே வேற்றுமைத் தொகை கூறுகின்றது.

(இள்-) அவற்றுள்—முற்கூறிய வாறனுள், வேற்று மைத் தொகையே — வேற்றுமை யுருபுக டொக்க தொகைச் சொற்கள், வேற்றுமை யியல - அவ்வுருபுக டொக்கனவேனுந் தொகாது நின்றாற் போலப் பொரு ளுணர்த்து மியல்பின.

(எ—று)

(உம்) 'பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க,
'ஒருகுழை யொருவன் போல'

எனவும்,

'வல்லவர், செதுமொழி சீத்த செவி'

எனவும்,

'பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்'

எனவும்,

'வரையிழி மயிலி னொல்குவள்'

எனவும்,

'நின், மைந்துடை மார்பிற் சுணங்கு'

எனவும்,

'உறுபுலி யுருபேய்ப்ப'

எனவும்,

'மன்ற வேம்பி னொண்குழை மலைந்து'

எனவும் வரும்.

வழக்கு உதாரணம் வேற்றுமை மயங்கியலிற் காட்டினாம்.

'சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான்' என்றாற் போல்வன தொக்காற் றொகைப் பொருளுணர்த்தா தெழுவாயும் பயனிலையுமாய் நிற்றலி, னிந்நிகரன தொகாவென் றுணர்க. (17)

414] உவமைத் தொகை

உவமத் தொகையே யுவம வியல.

இது, உவமத் தொகை கூறுகின்றது.

*(இ-ள்)* உவமத் தொகையே—உவம வுருபுகடொக்க தொகைச் சொற்கள், உவம வியல—அவ் வுவம வுருபுக டொக்கன வேனுந் தொகாது நின்றாற் போலப் பொருளுணர்த்து மியல்பின வென்றவாறு.

மேலுவம வியலுள் 'வினை பயன் மெய் யுரு' வென்னுஞ் சூத்திரத்தா 'னுவமம் நால் வகைய' மென்று மவைதாமன்ன வேய்ப்ப, வென்னுஞ் சூத்திரத்தா னவற்றி னுருபு முப்பத்தாறென்றுங் கூறுகின்ற வாசிரியரீண்டவ் வுருபுக டொக்கு நிற்குமாறுங் கூறுகின்றார்.

ஒப்பில் வழியாற் பொருள் செய்யுமவ் வுவம வுருபுகடாம் முதனிலையாய் நின்றும் பெயரெச்சங்கட்கும் முற்றிற்கும் வினையெச்சங்கட்கு முரிய வீறுகளை யேற்ற சொற்களாயே நின்று, அவற்றிற் கேற்ற முடிபு கொள்ளு மென்றுணர்க.

ஆசிரியர் செய்யுளின்பம் நோக்கி யவ் வுவம வுருபுகளைப் பெரும்பான்மை செயவெனெச்ச வாய் பாட்டானும் சிறுபான்மை செய்த வென்னும்பெயரெச்ச வாய்பாட்டானும் ஓதினாரேனு மேனைய வாய்ப்பாடுகளும் அம்முதனிலைக் கண் விரியுமா றாண்டுணர்க.

புலிப் பாய்த்துள், மழை வண்கை, துடி நடுவு, பொன்மேனி, என வினை பயன் மெய்யுருவின்கண் வந்த வ்வுவமத் தொகைகள் விரிந்துழிப் போலு மென்னு முருபானும் அன்னவென்னு முருபானும் பிற வுருபானும் விரிந்து செய்யுஞ் செய்த வென்னும் பெயரெச்சக் குறிப்பா மாறுணர்க. அவற்றுட் போலு மென்பது செய்யு மென்னுங் குறிப்பு முற்றாமாறு முணர்க. உணர்த்துங்காற் 'புலிபோலும் பாய்த்துள், புலியன்ன பாய்த்து' ளென விரித்தா லுணராதானை, இதன் பொருள் 'புலியினது பாய்த்துளை யொத்த பாய்த்து' ளென்றவாறு காணெனவொப் பென்னும் வழக்கு வாசகத்தாற் 'செய்யுஞ் செய்த' வென்னும் பெயரெச்சக் குறிப்பு வாசகந் தோன்ற வுணர்த்துக.

'முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு'

என்புழி 'வேய்த்தோளாட்கு முறிபோலு மேனி', முத்தம் போலு முறுவல், தெய்வ மணம் போலு மியற்கை நாற்றம் வேல் போலுங் கண்ணென விரித்தா லுணராதானை, இதன் பொருள் வேய்த் தோளாட்குத் தளிரினது நிறத்தை யொக்கும் நிறம்; முத்தினது நிறத்தை யொக்கும் பல்லு, தெய்வ மணத்தை யொக்கு மியல்பான மணம், வேலினது கொலைத் தொழிலை யொக்கும் கண்ணென்றவாறு காமெனன 'வொப்' பென்னும் வழக்கு வாசகத்தாற் 'செய்யு' மென்னுங் குறிப்பு முற்று வாசகந் தோன்ற வுணர்த்துக. கண் மலர்ந்த காவி யென்புழிக் கண் போல மலர்ந்த காவி யென்றா லுணராதானை யிதன் பொருள் 'கண்ணை யொக்க மலர்ந்த காவி' யென்றவாறு காமெனன வொப்பென்னும் வழக்கு வாசகத்தாற் செயவென்னெச்ச வாசகந் தோன்ற வுணர்த்துக. இங்ஙனங் கூறிய விருவகை யெச்சத்தையு முற்றையு மிவ்வுவம வுருபுக டருமாறு காண்க.

இனி, 'முறிமேனி முதலியன வுருவகமாமெனின் தொல்காப்பியனார்க் குருவகமு முவமையாமா றாண்டுணர்க.

இங்ஙனம் வேற்றுமை யுருபும் முவமவுருபும் விரிந்துழி, வேற்றுமைத் தொகையென்று கோடுமோ, வுவமத் தொகை யென்று கோடுமோ வெனின் ஆசிரியர் தாம் மேற் கூறுமுவமவுருபுகளுட் கிலவிரண்டாவதற்கு முடிபாமென்ப துணர்த்துதற் குவமவுருபிற்கெல்லாம் பொதுவாய் வழக்கு வாசகமாய் நிற்கும். ஒப்பென்னு முருபினைக் 'காப்பி னோப்பி' றூர்தியினிழையின் எனவெடுத் தோதினார் ஆதலின் அவ்விரண்டாதவ்வுவம வுருபுகளான் முடிந்து நின்றவழி யுவமத்தொடர் மொழி யொப்புமைப் பொருளே தந்து நிற்றலி னுவமத்தொகை யென்று கோடும்.

ஆயினெடுத் தோதிய வொப்பென்பதனோ டன்றி யேனையுருபுகளோடு மிரண்டாவது முடியுமோ? வெனின், முடியும்.

'தீயி னன்ன வொண்செங் காந்தள்'

எனவும்,

'கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்'

எனவும்,

'மானோக்கு நோக்கு மடநடை யாயத்தார்'

எனவும்

'எழிலி வானம் மெள்ளினன் றரூஉங்
கவிகை வண்கைக் கடுமான் றோன்றல்'

எனவும்,

'வீங்குசுரை நல்லான் வென்ற வீகை'

எனவும்,

வருவனவற்றின்க 'ணன்ன மானும், நோக்கு எள்ளி வென்ற' வென்னு முவம வுருபுகளை யிரண்டாவது கொண்டு முடிந்தவாறு க்ாண்க. இவற்று ளெள்ளி யென்பது செய்தெ னெச்சமாகிய உவம உருபு, இங்ஙன முவமவுருபு விரிந்துழி நின்றுவமப் பொருள்தருகின்ற விரண்டாவது தொக்குழி அவ்வுவமப் பொருடந்தே நிற்குமென்றுணர்க.

'என்போல் பெருவிதுப் புறுக'

வென்புழிப் போல் என்பது போல வென்னும் செய வென்னெச்சக் குறிப்பாகிய வுவமவுருபு.

'நும்ம னோருமற் றினைய ராயின்'

என்புழி யன்னாரென்ப துவமவுருபாகியவிடைச் சொன்

னிலையாகப் பிறந்த பெயர். இனிச் சிறுபான்மை ஏனை யுருபுகளித் தொகைக்கண் விரியுமாறு முவம வியலுட் காண்க.

சேனாவரையரிவற்றை யுவமவுருபன்றென்றும் முவமவுருபுகளை யிரண்டாவது கொண்டு முடியாதென் றுங் கூறினாராலெனின், அவ ராசிரியர் கருத்துஞ் சான்றோர் செய்யுள் வழக்கமு முணராமற் கூறினா ரென்பதிக் கூறியலாற்றானுணர்க. (19)

415] வினைத் தொகை

வினையின் றொகுதி காலத் தியலும்

இது, வினைத்தொகை கூறுகின்றது.

(இ-ள்) வினையின் றொகுதி-வினைச்சொல்லின் றீறாய்த் தொக்கு நிற்குமெழுத்துக்கள், காலத்தியலும்— காலத்தின் கண்ணே தொக்குநிற்கு மென்றவாறு.

வினையென்றது உண், தின், (என்பன) முதலிய முதனிலைகளை அவை யீண்டு மாகுபெயராய்த் தம் மாற்பிறந்த பெயரெச்சத்தை யுணர்த்தின. தொகுதியா வன அகரமும் நில்கின்றென்பனவும் உம்முமாம். அவை காலத்தியலுதலாவது கொல்யானை யெனத்தொகுத் துக் கொன்றயானை யெனவிரித்தாற் செய்த வென்னும் பெயரெச்ச வாய்பாட்டுத் தகரவீறு இறப்புணர்த்து தலுங், கொல்லாநின்றயானை கொல்கின்ற யானை யென விரித்தால் நின்ற கின்ற வென்னும் பெயரெச் சம் நிகழ்கால முணர்த்துதலும் கொல்லும் யானை யென விரித்தாற், செய்யுமென்னும் பெயரெச்ச த்து உம்ஈறு நிகழ்வும் எதிர்வு முணர்த்துதலுமாம்.

'ஆயினும்மீ றெதிர்கால முணர்த்துதல் யாண்டுப் பெறுது மெனின். 'காலத்தியலு' மென, மூன்று காலத் திற்கும் பொதுவாகக் கூறியவதனாற் பெறுதும் இக்

கருத்தானே பின்பு பின்னூல் செய்தவர்களெல்லாரு மும்மீறெதிர் காலமே யுணர்த்துமென்றார். சேனா வரையரு மிக்கருத்தானே.

'அகன்றவர் திறத்தினி நாடுங்கால்'

என்பதே நிகழ்விற்கு மெதிர்விற்குங் காட்டினார்,

'கொல்யானை, யென்றது, அக்காலத்து அஃது உதிரக் கோட்டோடு வந்ததே லிறப்பு மதன் றொழிலைக் கண்டு நின்றுழி நிகழ்வும் அது கொல்ல வோடுவதனைக் கண்டுழி யெதிர்வும் விரியும்.

இனி, கொல்யானை யென்பதன்கண் ணிரண்டீறு மொருங்கு தொக்கு நின்ற தென்றதற்கு விதி,

'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழிறாகு மொழியும்,

என்றதாம். என்றதன் பொருள் 'செய்யுஞ் செய்த' வென்னும் பெயரெச்சச் சொற்களினுடைய காலங் காட்டும். உம்மும் அகரமு மொருசொற் கண்ணே சேர நடக்கும் புடை பெயர்ச்சி தொக்கு நிற்குஞ் சொற்கள் என்றவாறு. இங்ஙன மிரண்டு பெயரெச்ச வாசகமுஞ் சேரத் தொக்கு நிற்றலா னாசிரியர் ஒரு சொல்லாக்கிப் புணர்க்கலாகாதென்று 'புணரிய னிலையிடை யுணரத் தோன்றா, வென்றார். இவ்வெழுத் ததிகாரச் சூத்திரத் தானே பெயரெச்சம் நின்று தொக்க தென்னாது பெயரெச்சப் பொருளவாய் நின்று இரண்டு சொற் றொகு மென்று சேனாவரையர் கூறியது பொருந்தாமை யுணர்க. அவை தொகுங்காற் றத்தமக் குரிய வாறு பொருட் கண்ணுந் தொகும்.

(உ-ம்) ஆடரங்கு, செய்குன்று, புணர்பொழுது, அரிவாள், கொல்யானை, செல் செலவு

எனவும்,

'உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி'
'செய்பொருட் சிறப்பெண்ணி'
'வான்மடி பொழுதினி னீர்நசைஇக் குளித்த'
'வெல்வே லண்ணற் காணா வூங்கே'
'நெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கின்'
'வெல்போர்ச் சோழர்'

எனவும் வரும். இவற்றிற்குப் பொருட் கேற்ற காலங் களை விரிக்க. (19)

416]　　　பண்புத் தொகை

வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
யின்ன திதுவென வரூஉ மியற்கை
யென்ன கிளவியும் பண்பின் றொகையே.

இது, பண்புத் தொகை கூறுகின்றது.

(இ-ள்) இன்ன திது வென-ஓர் பொருட்குப் பொதுமை யுள்வழி 'யிப்படி யிருப்ப திப்பொரு' ளென்றதனை விசே டித்துக் கூறும்படியாக, அதன் குண நுதலி—பின் வரு கின்ற வப்பொருளின் குணத்தைத் தான் கருதி, வண் ணத்தின் வடிவினளவிற் சுவையின் வரூஉ மியற்கைக் கிளவியும்—அப்பொருட் குணமாகிய வண்ணத்தின்கண் ணும் வருமியல்பாகிய கிளவியும், அன்னபிறவு மென்று வரூஉங் கிளவியும் — அவைபோல்வன பிறவுமென்று சொல்லப்பட்டு வருங்கிளவியும், என்னகிளவியும்—எத் தன்மையவாகிய சொற்களும், பண்பின்தொகையே — பண்புச்சொற் றொக்க தொகையாமென்றவாறு.

பண்பெனப் பண்புச்சொல்லை யுணர்த்திற்று, ஆகு பெயராய். எழுத்ததிகாரத்து,

'உயர்திணை யஃறிணை யாயிரு மருங்கி
னைம்பா லறியும் பண்புதொகு மொழியும்'

என்புழிப் பண்புத்தொகை யைந்து பாலையு முணர நிற்ற லிங்ஙன நின்றன. பிரித்துப் புணர்த்தற் கியையா வென்றமையா னீண்டு மதற் கேற்ப வியற்கை யென்றார் ஐம்பா லறியும் பண்புதொகுமொழியு மென்றதன் பொருள், 'ஐந்து பாலையும் ஒருவன் அறிதற்குக் காரண மாகிய பண்புச் சொற்றொக்க தொகைச் சொல்லு' மென்றவாறாம். பண்புணர்த்துகின்ற வைம்பா லீறுக டொக்கு நின்றே விரியுமென்ப துணர்த்துதற்கு அவ்வா றாகத் தோன்ற வின்ன தென்றார். ஐம்பாலும் பொரு ளென்றா, லஃறிணையா யடங்குமாதலிற், பொருளாக்கி யிதுவென்றஃறிணையாற் கூறினார். இந்நான் கனுள் வண்ணமும் அளவும் சுவையும் ஐம்பாற் கண்ணும் வரும்.

(உ-ம்) வண்ணம்: 'கரும்பார்ப்பான், கரும்பார்ப் பனி, கரும்பார்ப்பார், கருங்குதிரை, கருங் குதிரைகள்' என்னும் பண்புணர்த்து மீறுக டொக்கனவற்றை விரிப்புழிக் 'கரியனாகிய பார்ப்பான், கரியளாகிய பார்ப்பனி, கரிய ராகிய பார்ப்பார், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரைகள்' எனப் பண் புணர்த்து மைம்பா லீற்றினையும் விரித்த வாறு காண்க. கரிய பார்ப்பா னென்ப தீறு தோன்றாத பெயரெச்சக் குறிப்பாய் நிற்கும்.

இனி, 'வெண்மை' முதலியவற்றிற்கு மிவ்வாறே யொட்டுக. இவற்றுட் 'கரு' வொழிய வேனைய தொக்கவாறு காண்க. இவற்று ளஃறிணைக்

கண் வருமீறுகள் பண்புகொள் பெயராய் நிற்குமாறு முணர்க.

இனி, அளவு: 'குறுமுனி, குறுமகளாடிய, ஊர்க்குறு மாக்கள், குறுந்தாட் கூதளிர், குறுங்கோட்டன' என்பனவற்றையு மவ்வாறே விரிக்க' இனி, 'நெடுமை' முதலியவற்றிற்கு மிவ்வாறே யொட்டுக.

இனி, சுவை: ஐம்பொறியா னுகர்தற்குரிய வினிமைகளை யுணர்த்தும் 'சாயன் மார்பிற் கமழ்தார் குழைத்த' எனவும், 'தீங்கரும் பனுக்கிய' எனவும், 'தீம்புகை கமழ வூட்டி' எனவும், 'உடைதிரைத் திவலை யரும்புந் தீ நீர்' எனவும், 'தீந்தொடை நரம்பி' னெனவும் மெய்யானும், நாவானும், மூக்கானுங், கண்ணானுஞ், செவியானும், நுகரு மினிமைகளை யுணர்த்தின. இவற்றை விரிப்புழி அஃறிணை யிருபாற்கு மேற்ப 'வினிதாகிய மார்பு, தீவியனவாகிய கரும்புகள், தீவிதாகிய புகை, தீவியதாகியநீர், தீவியனவாகிய நரம்புகள் என விரிக்க. இனி, கட்கின் புதல்வன், கட்கின் புதல்வி, கட்கின் புதல்வர்' எனக் கண்ணாள் நுகரு மினிமைக்க ணுயர்திணை முப்பாற்கு மொப்ப 'வினியனாகிய புதல்வன், இனியளாகிய புதல்வி, இனியராகிய புதல்வர்' என விரிக்க.

இனி, வடிவு: இது வட்டஞ் சதுரங் கோண முதலியனவாம். 'வட்டப்பலகை' என்பது, 'வட்டமாகிய பலகை' யெனவிரிந்து தனக்கேற்ற வொருமைப் பன்மையை யுணர்த்தும்

ஈறுகளின்றி நிற்றலினஃது ஐம்பா லறியாத பண்புத் தொகையாயிற்று. இங்ஙன மைம் பாலறியாத பண்புத்தொகையை யாசிரியர் எழுத்தின்கண் நிலைமொழி வருமொழி செய்து புணர்த்தார். அவை 'யகங்கை' முதலியனவாம்.

'கரும்பார்ப்பா' னென்புழிக் கருமையும் பார்ப்பா னுந் தம்மின் வேறின்றி நின்று மகனாகிய பொரு ளையே யுணர்த்திய வாறுங் கருமைப் பார்ப்பான் பொதுமைமை விசேடித்த வாறும், 'பார்ப்பான்' கருமை யின் பொதுமையை விசேடியாதவாறுங் காண்க.

இவை தொகுங்காற், 'கரு' வென்னும் பண்பு மாத் திரம் நின்று பண்புப் பெயராங்காற் பெற்று நிற்குங் கருமையென்னு மகரவைகாரந் தொக்கு நிற்குமென் றாற் கரியது, வெளியது, கரியன, வெளியன வென்னும் பண்புணர்த்து மீறுகளின் கண்ணும் அவை தொக்கவை யுந் தொகைச் சொல்லாவான் சேற லினதுபொருந்தாது.

'கரியன், கரியள், கரியர், கரியது, கரியன' என்னும் பண்புணர்த்து மீறுகளே தொக்குநிற்பன வென் ...னர்க. என்னை? ஆசிரியர் இப்படியிருப்ப திப்பொருளென்று வினைக்குறிப்பிற்கேற்ற விரிவு தோன்றச் சூத்திரஞ் செய்தாராகலின். இன்ன திதுவென ஒருபொருண் மேனிற்றலினப்பண்புத் தொகைக ளெல்லாம் பெய ரெச்ச வினைக்குறிப்பாய் நிற்பதோர் பெயரென்றுணர்க அது, உருபேற்றும் பயனிலைகொண்டும் நிற்றலின்.

'உயர்திணை' யென்பது வினைத்தொகையோ பண்புத்தொகையோ? வெனின் உயரென்னு முதனிலை நின்று உயர்ந்த திணை; யென அகரவீற்றுப் பெயரெச்ச மாய் நின்றிறந்தகாலந் தொக்கு நிற்றலின், வினைத் தொகையாம். இதற்கேனைக் காலமுந் தொகுமாறறிக. இதனைப் பண்புத் தொகையாக்கி விரிக்குங்காற்

'கரியதாகிய குதிரை யென' விரிந்தாற்போல விரியா துயர்ந்ததாகிய திணையென விரிக்கவேண்டும் அங்ஙனம் விரிந்துழி, யஃதுயரென்னு முதனிலைப் பின்வந்த தகர வகர மிறந்தகால முணர்த்தியே நிற்றலிற் பண்புத் தொகையாகாமை யுணர்க. என்னை? பண்பும் வினைக் குறிப்பும் முக்காலமும் புலப்படாமை நிற்குமென்றே முற்கூறலின். அன்றியுங் காலம் புலப்பட நின்றதன்மேற் பண்புகொள் பெயர் விரியாமையு முணர்க.

இனி, 'அன்ன பிறவு' மென்றதனால் 'நுண்ணூல், பராரை, நல்லாடை, வெந்தீ, தண்ணீர், நறும்பூ, என் றுந் தொடக்கத்தன கொள்க.

'மெல்லிலை' வினைத் தொகையுமாம்

இத்தொகையை வேற்றுமைத் தொகையென்பார், 'கருமையை யுடைய பார்ப்பா னென்று பண்புப்பெய ராக்கி விரிப்பர். அதுபொருந்தாது. கருமென்னு முதனி லைப பண்பினையுணர்த்தி யிதனையுடைய திதுவென நில்லாது கரியதென வப்பண்புடைய பொருளை நோக்கி நிற்றலின் வேற்றுமைப் பொருண்மை யாண்டின்றென வுணர்க. என்ன கிளவியு மென்றதனால் சாரைப்பாம்பு, கேழற்பன்றி, வேழக்கரும்பு, இடைச்சொற்கிளவி உரிச் சொற்கிளவி என்றாற் போலவப் பண்புணர்த்து மீறுக டொகாது தம்பொருளுணர்த்தும் பெயர்ப்பெயரிரண்டு கூடிநின்று விசேடித்தலை யுணர்த்து மிருபெயரொட்டுப் பண்புத் தொகையுங் கொள்க. அவை சாரையெனவுங் கேழலுழுத கரிப்புனக் கொல்லையெனவும் வேழந் தீவியது யெனவுமிடைச்சொலெல்லாம் எனவும் உரிச் சொன்மருங்கினு மெனவும் பின்வருஞ் சொல்லின்றியுந் தம் பொருளுணர்த்துதல் பற்றி யெடுத்தோத்தினுள் முடியாமையினிலேசாற் கொண்டார். வட்டப்பலகை அகங்கை முதலியன பின்வருஞ் சொல்லோ டொன்றித் தம்பொருளுணர்த் தாமையி னிறுத்த சொல்லுங் குறித்து

வருகிளவியுமாய் நிற்கு மென்றவற்றை முடித்தார். இவற்றிற்குப் பின்வருஞ் சொன் முன்வருமொழியை விசேடியாது நிற்கும், இங்ஙனம் வருமென் றற் கன்றே யாசிரியர் இன்னதிதுவென்று முன்மொழியை விசேடிப் பதாகவும் பின்மொழியை விசேடிக்கப்படுவதாகவும் கூறுவாராயிற் றென்றுணர்க. 20)

417] உம்மைத் தொகை

இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே.

இது, உம்மைத் தொகை கூறுகின்றது.

(இ-ள்) உம்மைத் தொகை உம்மை தொக்கு நிற்குந் தொகை, இருபெயர் — இரண்டாகிய பெயரும், பலபெயர்—பலவாகிய பெயரும், அளவின்பெயர் — அளத்தலா லுளதாகிய பெயரும், எண்ணியற் பெயர்—எண்ணியலானாகிய வுயர்திணைப் பெயரும், நிறைப்பெயர்க் கிளவி — நிறுத்தலானாகிய பெயர்ச்சொல்லும், எண்ணின் பெயரோடு — எண்ணினா னுளதாகிய வஃறிணைப் பெயரோடு கூடப்பட்ட, அவ்வறு கிளவியும் கண்ணியநிலைத்து — அவ்வாறு சொல்லையுங் கருதிய நிலைமையை யுடைத்தென்றவாறு.

(உ-ம்) உவாஅப் பதினான்கு
புலிவிற் கெண்டை
தூணிப் பதக்கு
முப்பத்து மூவர்
தொடியரை
பதினைந்து

என்பனவற்றை யும்மை விரித்துக் கொள்க.

'பலபெயர்' எனவே யிருபெயருமடங்கு மேனு மிரண்டாகிய பலபெயரினு மிரண்டிறந்த பலபெயரி னுந் தொகு மென்றற்கு 'இருபெயர், பலபெய' ரென் றார். அளவுப்பெயர் முதலியன விருபெயர்க்கணடங்கு மேனும் முன்னர் யாண்டும் பொருள் வேற்றுமையே பற்றி வேறாகவே யோதுதலின் ஈண்டு மெடுத்தோதி னார். (21)

418] அன்மொழித் தொகை

பண்புதொக வரூஉங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே.

இது, அன்மொழித் தொகை கூறுகின்றது.

(இ-ள்) அன்மொழித்தொகையே—ஒருவன் கூறுஞ் சொற்கணன்றிப் பின்னர் வேறோர் சொற்றொக்கு நிற்குந் தொகை, பண்புதொக வரூஉங் கிளவியானும்—பண்புச் சொற்றொகவரூஉந் தொகைப் பெயர்க்கண் ணும், உம்மை தொக்க பெயர்வயினானும்—உம்மென்னு மிடைச்சொற் றொக்க தொகைப் பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர்வயினானும் — வேற்றுமை யுருபுக டொக்கதொகைப் பெயர்க்கண்ணும், ஈற்று நின்றியலும் — இறுதிச்சொற் கண்ணே நின்று நடக்கு மென்றவாறு.

முன்ன ரன்மொழியா னுணரும் பொருள்களை மனத் துணர்ந்துதான் பின்னர்ப்பண்புத் தொகை முதலியனவற்றாற் கூறக் கருதியவழி அத்தொகைகளின் இறுதிச் சொற்கண் எழுந்து, படுத்தலோசையான் அத் தொகைச் சொற்றோன்றிப் பொருள் விளக்குதலின், 'ஈற்றுநின்று இயலும்' என்றார்.

(உ-ம்) வெள்ளாடை, தகர ஞாழல், பொற்றொடி, எனவரும் இவை 'வெள்ளாடை உடுத்தாள், தகரஞாழல் அணிந்தாள், பொற்றொடி தொட்டாள்; என விறுதிச் சொற்கண் எழுந்து படுத்தலோசையால் தொகை தோன்றியவாறு காண்க.

பெரும்பான்மை வரும் பண்புத்தொகைப் பின்னர் அங்ஙனம் வரும் வேற்றுமைத் தொகையை வையாது, 'முந்து மொழிந்ததன் றலைதடுமாற்'றான் உவமத் தொகைக் கண்ணும் வினைத்தொகைக் கண்ணும் அன் மொழித் தொகை வருதல் கொள்க.

'வினையின் றொகையினும் உவமத் தொகையினும்
அன்மொழி தோன்று மென்மனார் புலவர்'

என்பது அவிநயம். 'அறற்கூந்தல், திரிதாடி' யென்பன வற்றை 'அறற்போலுங் கூந்தலை யுடையாள், திரிந்த தாடி யையுடையான்' எனவிரிக்க. (22)

419] தொகைச்சொற் பொருணிலை

அவைதாம்,

முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலு மொருங்குட னிலையலும்
அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருணிலை மரபே.

இது, தொகைச்சொற் பொருணிலை கூறுகின்றது

(இ-ள்) அவைதாம் பொருணிலை மரபு — அத் தொகைச் சொற்கடாம் பொருள் பெற்று நிற்கும் நிலைமையினது முறைமையினை, முன்மொழி நிலைய லும் — முன்மொழிக்கண்ணே பொருள் சிறந்துநிற்ற லும், பின்மொழிநிலையலும் — பின் மொழிக் கண்ணே

பொருள்சிறந்து நிற்றலும், இருமொழி மேலும் ஒருங்கு டன் நிலையலும்—இருமொழிக் கண்ணும் பொருள் ஒருங்கு சிறந்து நிற்றலும், அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும் - அவ்விருமொழிக் கண்ணும பொருள் சிறந்து நில்லாது மற்றோர் மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், அந்நான்கு என்ப—என்று சொல்லப்பட்ட அந்நான்கு கூறுஎன்று சொல்லுவர் ஆசிரியர் (எ—று)

(உ-ம்) வேங்கைப்பூ—முன்மொழி நிலையல், அது 'நறிது' என்பதனோடு கூட்ட வேங்கைக் கண் பொருள் சிறவாது பூவின்கண் பொருள் சிறத்தலின்.
ஆரமாலை — பின்மொழி நிலையல்.

இவை. வேற்றுமைத் தொகை.

வேற்கண் — முன்மொழி நிலையல்.
'பெண்ணணங்கு' — என்பது 'அணங்கு போலும் பெண்' என்பதாகலின், பின் மொழி நிலையலாம்.

இவை உவமத் தொகை.

கொல்யானை — முன்மொழி நிலையல். இவ்வினைத் தொகைக்குப் பின்மொழி நிலையல் இன்று.
தீந்தேன் — முன்மொழி நிலையல்.
அடைகடல் — பின்மொழி நிலையல். இது 'கடலாகிய கரை' எனக் 'கரை' கூறுதலே கருத்தாகலின்;
இவை பண்புத்தொகை.
இவை யிடம் பற்றி வந்த முன்னும் பின்னு மாம்.
காலம் பற்றி வருவனவும் வந்துழிக் காண்க.
பண்புத்தொகையே யன்றி யேனைத்

தொகைக்கும் விசேடித்தல் சிறுபான்மை வருதலின், 'ஒன்றன் கண்ணது பொருட் சிறப்பு' என்றார். 'உவாஅப் பதினான்கு' இருமொழி மேலும் நின்றது. 'உடன்' என்றதனால், 'புலிவிற் கெண்டை' எனப் பன்மொழிமே னிற்றலுங் கொள்க 'வெள், ளாடை' யென்பது இரு மொழிமேலும் நில்லாது, உடுத்தாண்மேல் பொருள் நின்றது.

420] தொகைச் சொற்கள், ஒருசொல் தன்மைய
எல்லாத் தொகையு மொருசொன் னடைய.

இது, தொகைச்சொற்க ளெல்லாம் ஒரு சொல் லாய் நிற்கு மென்கின்றது.

(இ-ள்) எல்லாத் தொகையும் — இருமொழித் தொடரின் கண்ணும் பன்மொழித் தொடரின் கண்ணும் தொக்கு நிற்கு மெல்லாத் தொகைச்சொற்களும், ஒரு சொல் நடைய. ஒரு சொல் நின்று தன்னை முடிக்குஞ் சொற்களோடு முடியுமாறு போலத் தாமும் தம்மை முடிக்குஞ் சொற்களோடு முடிதலை யுடைய (எ—று)

அங்ஙனம் முடியுங்கால், 'பெயரினாகிய தொகையு மாருளவே' என்னுஞ் சூத்திரத்தால், தொகைச்சொல் இரு வகைய வென்றும் அவற்றுள் பெயரும் பெயரும் தொக்கன ஒருசொல் நீர்மையவாய்ப் பயனிலை கொள்ளும் என்றும் கூறிய விதியொழிந்த விலக்கணங்கள் எல்லாம் ஈண்டுக் கொள்க.

அவை, 'யானைக்கோடு' என்னும் பெயரினாகிய தொகை யானைக் கோட்டைக் குறைத்தான்' என உருபேற்றலும், 'நிலம் கடந்தான், குன்றத் திருந் தான்' என்னும் வினையினாகிய தொகைகளும் ஒரு முற்றுச் சொல்லாய்ச் 'சாத்தன்' என்னும்

பெயர்கோடலும், 'மா ஊர்ந்து போயினான், குன்றத் திருந்து போயினான்' என வினையெச்சச் சொல்லாய் நிற்றலும், மா ஊர்ந்த சாத்தன், குன்றத் திருந்த சாத்தன், எனப்பெயரெச்சச் சொல்லாய் நிற்றலுமாம்.

இவ் வினையினாகிய தொகை, படுத்த லோசையால் பெயராகியவழிப் பயனிலை கோடலுங் கொள்க. எழுத்தினுள் 'பெயரும் தொழிலும்' என்னுஞ் சூத்திரத்துள் பெயரும் தொழிலும் பிரிந்து இசைத்த வழியும் பெயரும் பெயரும் ஒருங்கிசைத்த வழியும் வேற்றுமை தொக்கு நிற்கும் என்றலின், 'நிலங்கடந்தான், குன்றத்திருந்தான்' எனப் பெயரும் தொழிலும் பிரிந்திசைத்த வழியும் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று. இப்பெயரும வினையும் தொகுதல் உவமைத் தொகைக்கும் வினைத் தொகைக்குங் கொள்க. இவை யிருமொழித்தொடர்.

'உயர்சொற் கிளவி'
'இடைச்சொற் கிளவி'
'உரிச்சொற் கிளவி'

என்புழி, 'உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல்' என்னுந் தொகைச் சொற்கள் ஒரு சொன்னடையவாய் அவை 'கிளவி' யென்பதனோடு தொக்கு ஒரு சொன்னடையவாய், மேல்வந்து முடிப்பனவற்றோடு முடிந்தன 'கற்சுனைக் குவளையிதழ்' என்றாற் போல்வனவுமது.

இனி,
'கரியமலர் நெடுங்கண் காரிகைமுன்'
'முட்புற முதிர்கனி'
'பெடைமயில் உருவிற் பெருந்தகு பாடினி'
'கன்னிப் பெண்ணார முதின்'

எனச்செய்யுட்கண் பல தொகையும் விராய் வந்து, ஒரு சொன்னடையவாய்த், தம்மை முடிப்பனவற்றோடு முடிந்தன.

'துடியிடை, நெடுங்கண், துணைமுலை பொற்றொடி'- இஃது அறுவகைத் தொகையும் ஒருங்கு தொக்கது. இனி, 'கலனே தூணிப் பதக்கு, தொடியே கஃசரை பதினொன்றரை' என அளவும் நிறையும் எண்ணும் ஒரு சொன்னடையவாய் நின்றன. இப்பன்மொழித் தொகைக்கு முற்கூறிய முடிபுகளும் கொள்க.

இனி, உம்மை யெச்சவும்மை யாகலின், தொகையல் தொடர்மொழிகளினும் ஒருசொன்னடையவாய் முடிவன வுளவெனக் கொள்க. அவை 'யானைக்கோடு கூரிது' இரும்பு பொன்னாயிற்று, மன்று பாடவிந்தது, மக்களை யுயர்திணை என்ப' எனவரும். (24)

421] உயர்திணை உம்மைத் தொகைமுடிபு
உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்.
இஃது, உம்மைத் தொகைக்கு வழூவமைக்கின்றது.

(இ-ள்) உயர்திணைமருங்கி னும்மைத் தொகையே- உயர்திணைப் பெயரிடத்துத் தொக்க வும்மைத் தொகையினீறு, பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர் - பலரைச் சொல்லுஞ் சொல்லினிறுதி போலப் பன்மையை யுணர்த்தி நிற்குமென்று கூறுவராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) கபில பரணர்.

கபிலன்பரணன் என்பதில் கபில னென்னும் ணகாரவீறு சந்தியாற் கெட்டுக்கபில பரண னென நின்றவழி இருவராய் நின்றமையின் வந்தாரென்னும் பன்மையோடு முடிதலே வேண்டுதலி னாண்டு நின்ற வொருமை யீறு பன்மையோடு முடிதல் வழூவென்று கருதி னகரவீறு ரகரவீறாய் நிற்குமென வழூவமைத்தார். 'கல்லாட மாமூலப் பெருந்தலைச்

சாத்தர் என்றாற் போல்வனவு மது. இவை யோசைபடுத் திசைத்தலின் ஒரு சொல்லா யொட்டாமை காண்க.

'உயர்திணைப் பெயரென்னாது மருங்கினென்றா ருயர்திணை விரவுப்பெயரு மடங்குதற்கு. (25)

422] குறிப்பு மொழியி னிலக்கணம்

வாரா மரபின வரக்கூ றுதலு
மென்னா மரபின வெனக்கூ றுதலு
மன்னவை யெல்லா மவற்றவற் றியல்பா
னின்ன வென்னுங் குறிப்புரை யாகும்.

இது, தொகைய திகாரம் விட்டு மரபுவழுக் காக்கின்றது.

(இ-ள்) வாரா மரபின வரக்கூறுதலும்—இயங்காதனவற்றை யியங்குவனவாகக் கூறுதலும், என்னாமரபின் வெனக் கூறுதலும் — சொல்லாதனவற்றைச் சொல்லுவனவாகச் சொல்லுதலுமாகிய, அன்னவை யெல்லாம் — அத்தன்மையன வெல்லாம், அவற்றவற்றியல்பான் — அவ்வப்பொருள்களி னியல்புகாரணத்தான், இன்னவென்னுங் குறிப்புரை யாகும் — இத்தன்மைய வென்று சொல்லுங் குறிப்பு மொழி யாமென்றவாறு.

(உ-ம்) அந்நெறி யீண்டு வந்து கிடந்தது.
அம்மலை வந்திதனோடு பொருந்திற்று.
அவலவ வென்கின்றது நெல்.
மழைமழை யென்கின்றன பைங்கூழ்.

எனவும் வரும். இவை வரவுஞ் சொல்லு முணர்த்தா 'தின்ன' வென்பதனைக் குறிப்பானுணர்த்தியவாறு காண்க.

இனி, ஒன்றென முடித்தலென்பதனாற் 'கவவகத் திரு' மென்றாற்போல அச்சொல்லின் பொருட் டொழி

யையச் சொன் மேலேற்றிக் கூறுவனவு மாயிரங் காணம் வந்த தென்றாற் போல வொருவனா லியக்கப் பட்டதனைத் தானியங்கிற்றாகப் பொருள் கூறுவனவும், நீலுண் டுகிலிகை யென்றவழி யவற்றினீலம் பற்றியதனை நிலமுண்டதாகக் கூறுதலு மிப்பொருளை யிச்சொற் சொல்லுமென்றாற்போல வருவனவுங்கொள்க (26)

423] இசைநிறை யடுக்கிற்கு வரையறை

இசைப்படு பொருளே நான்குவரம் பாகும்.

இது, முற்கூறிய விசைநிறை யடுக்கிற்கு வரையறை கூறுகின்றது.

(இ-ள்) இசைப்படு பொருளே நான்குவரம்பாகும்— முற்கூறிய வொருசொல் லடுக்கினு ளிசை நிறைத்தலாற் படும் பொருண்மைக்கு வருமடுக்கு நான்காகிய வெல் லையையுடைய வென்றவாறு.

(உ-ம்) பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ எனவரும. (27)

424] விரைசொல் லடுக்கிற்கு வரையறை

விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்.

இது, முற்கூறிய பொருளோடு புணர்த லடுக்கிற்கு வரையறை கூறுகின்றது.

(இ-ள்) விரைசொல்லடுக்கே மூன்றுவரம்பாகும்- முற்கூறிய வொரு சொல்லடுக்கினுட் பொருளொடு புணர்தற்கண் விரைவுப் பொருள்பட வடுக்குவது மூன் றாகிய வரம்பை யுடைத்தென்றவாறு.

(உ-ம்) தீத் தீத் தீ

எனவரும். அசைநிலை யிருமுறையல்ல தடுக்காமையி னதற்குப் பெயரெல்லை கூறாராயினார். ஒருமுறைவருவ தடுக் கன்மையின் ஒருசொல்லடுக்கெனவே யிரு முறையல்ல தடுக்கின்மை பெறுதும். அவை பெறவே 'தீத்தீ படைபடை' என விரைவுப் பொருளின் சிற்றெலலையிருகாலடுக்குதல் கொள்க. இது இசைப்படு பொருடகு மொக்கும். விரைவிக்குஞ்சொல் விரை சொல் (28)

425] அசைநிலை யடுக்கு

கண்டீ ரென்றா கொண்டீ ரெனறா
சென்ற தென்றா போயிற் றென்றா
வன்றி யனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி யசைக்குங் கிளவி யென்ப.

இது, வினைச் சொற்களு ளொரு சாரன வசையாம்' என்கின்றது.

(இ-ள்) கண்டீரென்றா கொண்டீ ரென்றா சென்ற தென்றா போயிற்றென்றா வன்றியனைத்தும் — கண்டீ ரெனவுங் கொண்டீ ரெனவுஞ் சென்றதெனவும் போயிற் றெனவும் வரும் அவ்வினைச்சொன்னான்கும், வினா வொடு சிவணிநின்ற வழியசைக்குங் கிளவியென்ப — வினாவொடு பொருந்தி நின்ற வழியசைநிலை யடுக்கா மென்று கூறுவர் புலவரென்றவாறு.

எனவே வினாவொடு சிவணாதவழி வினைச் சொல்லேயாம்

'ஒருவன் கூறிய கூற்றிற்கு உடம்படாதான், 'கண்டீரே' கண்டீரே, கேட்டீரே கேட்டீரே யென்றால், வினைச் சொற் பொருண்மையும் வினாப் பொருண்மையுமின்றி நிற்கும்.

* கேட்டீரென்றா (பா. பே:)

இது, வரையாது கூறினமையின் அடுக்காதும் வரும். ஏனையவு மேற்புழி யடுக்கியும் அடுக்காதும் வருமாயினு, மவையிக்காலத்தரிய. (29)

426] இதுவும் அது

கேட்டை யென்றா நின்றை யென்றா
காத்தை யென்றா கண்டை யென்றா
வன்றி யனைத்து முன்னிலை யல்வழி
முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே.

இதுவுமது

கேட்டை யென்றா நின்றை யென்றா காத்தை யென்றா கண்டையென்றா வன்றியனைத்தும் — கேட்டையெனவும் நின்றையெனவுங் காத்தையெனவுங் கண்டையெனவும்வருமம்முன்னிலை வினைச்சொன் னான்கும், முன்னிலை யல்வழி—முன்னிலைப்பொருளை யுணர்த்தி நில்லாக்கால், முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே—முற்சொல்லப்பட்ட வசைநிலையா மென்ற வாறு.

இவையுங் கட்டுரைக்க ணடுக்கியுஞ் சிறுபான்மை யடுக்காதும் வந்து ஏற்புழி யசைநிலையாய் நிற்கும். இவையு மிக்காலத்தரிய. இவை சிறுபான்மை வினா வொடு வருதலுங் கொள்க. (30)

427] ஒருசார் வினைமுற்றுக் குறியீடு

இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்ற
சிறப்புடை மரபி னம்முக் காலமுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினு
மெய்ம்மை யானு மீரிரண் டாகு
மவ்வா றென்ப முற்றியன் மொழியே.

இது, வினைச்சொற்களு ளொரு சாரனவற்றிற்கு ஆட்சி வேண்டியதன் குணங் காரணமாகக் கொண்டு ஓர் குறியிடுதனுதலிற்று.

(இ-ள்) தன்மை முன்னிலை படர்க்கை யென்னு மம் மூவிடத்தான் - 'தன்மை முன்னிலை, படர்க்கை' யென்று சொல்லப்பட்ட வம்மூவிடத்தின் கண்ணும் வரும், மெய்ம்மை யானும் உயர்திணை, யஃறிணை 'விரவுத் திணை' யென்னு மூவகைப் பொருடோறும் வினையினுங் குறிப்பினு மீரிரண்டாகு மென்றஅவ்வாறு மொழி-தெரி நிலை வினையாயினுங் குறிப்பு வினையானு மிவ்விரண் டாய் வருமென்றி யான் மூற்கூறிய வவ்வறு வகைச் சொல்லை, இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றசிறப்புடை மரபி னம்முக்காலமு மியன் முற்றென்ப-இறப்பொன்றா னும் நிகழுஞ் சிறப்புடை மரபானும் நிகழ்வொன்றானும் நிகழுஞ் சிறப்புடை மரபானு மெதிர்வொன்றானும் நிக ழுஞ் சிறப்புடை மரபானும் அம்முக்காலத்தானும் நிக ழுஞ் சிறப்புடை மரபானு மியலுமுற்றுச் சொல்லென்று பெயர் கூறுவராசிரியரென்றவாறு.

'அம்மா' மென்னுஞ் சூத்திரம் முதலாகப் 'பல்லோர் படர்க்கை' யென்னுஞ் சூத்திர மிறுதியாக, மூவகையிட மும் மூவகைப் பொருளு மிருவகை வினையு மெடுத்தோதி யவற்றை யீண்டு மோதியது அனுவாதமாயிற்று. ஆண் டோதா தெஞ்சி நின்றகாலமுங் குறியீடு மீண்டோதிய திலக்கணமாயிற்று. முன்னர்க் 'குறிப்பினும் வினையினு' மென்னுஞ் சூத்திரத்திற் காலமொடு வரூஉம் வினைச் சொல் லெல்லாம்' என்றது மூவகை வினைக்கும் பொது வாய் நின்று ஒரோவோர் முற்றுவினையும் முக்காலமும் பெற்றே வருமென்னு மைய நிகழ்த்திற்றதனை யோரோ வோர் காலம்பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்றெ ன வைய மகற்றினார் இச்சூத்திரத்தான். எச்சங்கட்கு மேலிச்சூரத்திரத்

தானைய மகற்றுப மேற் 'பிரிநிலைவினை' யென்னுஞ் சூத்திரத்தானெச் சங்கட்குக் குறியீடு கூறுகின்றா ராதலி, னதற்கேற்ப முற்றிற்குங் குறியீடு கூறினார்.

இனி, யவை காலத்தொடு வருங்கால், றகர வுகர மிறந்த காலத்தாற் சிறந்தது. உம்மொடு வரூஉங் கடதற வுங், கடதற வென்னு மந்நான் கூர்ந்த குன்றிய லுகரமு மல்லும் பக்ரமு மாரு மாவும் வவ்வுமாகிய பதின்மூன்று மெதிர்காலத்தாற் சிறந்தன. அம்மா மெம்மேமும் மென். னேனும் அன் ஆனும் அள் ஆளும் அர் ஆரும் அகரமுந் தகரவுகரமுமாகிய பதினான்கும் முக்காலத்தாற் சிறந்தன. ஆக முற்றிருபத் தொன்பதின் கட்டகரவுகரம் வினைக் குறிப்பாதலி னதுவும் முக்காலத்தாற் சிறந்த தாம். ஆகத் தெரிநிலைமுற் றிருபத் தெட்டுங் காண்க.

'யாார்? எவன்? என்பனவோ!' வெனின், அவையு முப்பாற்கு மிருபாற்கும் பொதுவாகி யிட முணர்த்தாவே னும், வினைக் குறிப்பாதலின், முக்கால முடையவென் றுணர்க.

இருதிணைக்கு மோதிய குறிப்புவினை பதினெட்டும் முக்காலமு முடைய.

இனி, பொருளுணர்த்தா திடமுணர்த்தும் முன் னிலையும் வியங்கோளுமாகிய விரவுவினை முற்றுக்களு மிடமும் பொருளு முணர்த்தா. விரவுவினை முற்றுக் களும், பிரிவுவேறு படூஉஞ் செய்தியவாய் நிற்றலி, னிடமும் பொருளு முணர்த்திக் காலங்கொண்டே நிற்கு மென்றுணர்க.

இவை ஐயு மாயு மிருவு மீரு முக்காலத்தாற் சிறந் தன. இகரமு மின்னும் வியங்கோளுஞ் செய்மனவு மெதிர்காலத்தாற் சிறந்தன. செய்யுமென்பது நிகழ்காலத் தாற் சிறந்தது. இன்மை செப்பலும் வேறென் கிளவியும் வினைக்குறிப்பாதலின், முக்காலத்தாற் சிறந்தன.

இனி, விரவு வினையுள் வினையெச்சமும் பெயரெச்சமு மேற்கூறுதும். இவை யீரிரண்டாங்கா லோரீற்றின் கண்ணே கொள்க.

(உ-ம்) சென்றனன், கரியன்,

எனவும்

சென்றது, கரிது

எனவும்,

கரியை எனவும் வரும்.

ஈண்டுக் காலமுங் குறியீடுங் கூறினாரேனும், வந்தது கொண்டு வாராத துணர்த்தலென்னும் உத்தி பற்றி வினையியலுட் காலமுங் குறியீடும் விரித்தாசிரியர் எல்லாரு முரையுங் காண்டிகையுங் கூறினாரென்றுணர்க. இவை முற்றி நிற்குமா றவற்றோடு வருவழி யென்னுஞ் சூத்திரத்துட் கூறினார்.

'மெய்ம்மை யானு' மென்றது 'ஊரானோர் தேவகுல' மென்றாற்போலத் தொறு மென்பதன் பொருட்டாய் நின்றது.

இச்சூத்திரத்திற் கூறியனவெல்லா முற்றப் பெறுவனவும் குறையப் பெறுவனவும் வினையியலுள் விரித்தோதியவாற்றா லுணர்க. (31)

428] மேலதற் கொரு புறனடை

எவ்வயின் வினையு மவ்வியி னிலையும்.

இது, மேலதற்கோர் புறநடை

(இ-ள்) எவ்வயின் வினையும் — மூன்றிடத்தும் வரும் வினையெச்சமும் பெயரெச்சமும், அவ்வயின் நிலையும்—அம் முற்றியல்பிலே நிற்குமென்றவாறு.

என்றது, இறப்புப்பற்றி வருவனவும், இறப்பும் நிகழ்வும் பற்றி வனவும், மெதிர்வு பற்றி வருவனவு, முக்காலமு பற்றி வருவனவுமா மென்றவாறு.

வினையெச்சங்களுள் உகரமும் ஊகாரமு மெனவும் முன்னுங் கடையு மிறப்பும், புகரமும் பின்னு மிறப்பும் நிகழ்வும் இயரு மியவு மின்னுங் குகரமு மெதிர்வும், அகரமுங் காலும் வழியு மிடமும் முக்காலமும் பற்றி வந்தவாறும்; பெயரெச்சங்களுள் உம் மீறு நிகழ்வும் எதிர்வும், அகரவீறிறப்பும் பற்றி வந்தவாறு காண்க

இருவகை யெச்சத்திற்குங் காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லாமென்ற பொதுவிதியான் முக் காலமு மொன்றற்கு வருமோ வென்னுமையநிகழ்ந்த தனை யிச்சூத்திரத்தான கற்றினார். ஆசிரிய ரவற்றிற் கோதிய வாசகங்களானவற்றிற்குரிய காலங்களு முணர்த் தினாராலெனின், அவ்வாசகங்களாற் காலமுணர்த்தா தவையு முளவாதலி, னவையும் விளங்குதற் கீண்டுக் கூறி னாரென்றுணர்க.

சேனாவரையர், 'வினையென்றது முதனிலை' யென்று பொருளுரைத் தவையு' முற்றுச் சொற்போல முற்றிநிற்கு மென்றாரா லெனின், அம்முதனிலைப் படுத்த லோசை யான் பெயர்த்தன்மைப் படநிற்குமாறும், எடுத்த லோசையான் முன்னிலை யேவ லொருமைவினை முற் றாய் நிற்குமாறும் இர் ஈர் மின்னென்னுஞ் சூத்திரத் துட் கூறினாம்.

முற்றிலக்கணங் கூறுதற்கிடையே யிச்சூத்திரத்தா னெச்ச விலக்கணத்தைக் கூறினார், பருந்து விழுக்கா டாக, மாட்டேற்றிற்று என்றுகருதி· (32)

429) வினைமுற்றுப் பெயரொடு முடிதல்.

அவைதாந்,
தத்தங் கிளவி யடுக்குந வரினு
மெத்திறத் தானும் பெயர்முடி பினவே.

இது, முற்றுச் சொற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) அவைதாம்-முற்கூறிய முற்றுச் சொற்கடாம், தத்தங் கிளவியடுக்குந வரினும்—தத்தமக்குரிய வாய்பாடுகள் பலவா யடுக்கி வரினும் உம்மையான் அடுக்கா தொன்றே வரினும், எத்திறத்தானும் பெயர் முடிபினவே எவ்வாற்றானும் பெயர்ச் சொல்லை முடிபாக வுடைய வென்றவாறு.

(உ-ம்) உண்டான், நின்றான், ஓடினான், பாடினான்
சாத்தன், நல்ல அறிவுடையன், செவ்வியன்
சான்றோர்மகன் எனவும்,
வந்தான் வழுதி.
கரியன் மால். எனவும் வரும்.

'எத்திறத்தானு' மென்றதனால்,
உண்டான் சாத்தன்,
சாத்தனுண்டான்.

என முன்னும் பின்னும் பெயர் நிற்றலும்.

'நின்றான் இருந்தான் கிடந்தான்தன்
கேளலறச் சென்றான்'

எனவடுக்கிப் பெயர் வெளிப்படாது நிற்றலும், 'முப்பஃ தென்ப' வென வடுக்காது பெயர் வெளிப்படாது நிற்றலுங் கொள்க.

ஈண்டி லேசாற் கொண்டது முடிக்கும் பெயர் வெளிப் படாது நின்றதற் கென்று, 'மெவ்வயிற் பெயரு' மென்னுஞ் சூத்திரத்தாற் கொண்டது முடிக்கப படும் பெயர் வெளிப்படாது நின்றதற் கென்று முணர்க

'வேற்றுமைச் சொல்'லென வேறோர் சொல்லின்றி முற்றுமெச்சமும் வேற்றுமையை விரிக்குமாறு போல, எழுவாயும் பயனிலையு மென வேறோர் சொல்லின்றி முற்று மெச்சமும் மெழுவாயும் பயனிலையுமாய் நிற்கு மென்றுமுணர்க.

முற்றுப் பெயர் கொண்டல்லது தாமாக முற்றி நில்லாமைக்குக் காரணம் 'அவற்றொடு வருவழி' யென்னுஞ் சூத்திரத்துட் கூறினாம். (33)

430] எச்சங்கட்குப் பெயர் முதலியன.

பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே
குறிப்பே யிசையே யாயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி.

இது, முற்கூறிய வெச்சச் சொற்கட்கு முடிபு கூறு வான் அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறு கின்றது.

(இ-ள்) நெறிப்படத் தோன்றும்-முன்னரெடுத் தோதியவிடங்களிலே முறைமைப்படத் தோன்றும், பிரி நிலை வினையே பெயரே யொழியிசை யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே குறிப்பே யிசையே யாயீ ரைந்தும்—'பிரிநிலை' 'முதல்இசை' யீறாகிய வப்பத்தும், எஞ்சுபொருட் கிளவி - எச்சச் சொல்லென்று பெயரா மென்றவாறு.

எஞ்சி நிற்பதோர் பொருளையுடைய சொல்லெ னவே 'யெச்சச்சொல்' லென்று பெயராயிற்று. இப்பத் தோடு மெச்சமென்பதனைக் கூட்டுக. இவற்றுட் பிரி நிலை யெச்சமுதலிய வேழு மெச்சச் சொல்வந்து முடித் தலையுடைய; வேனைய மூன்று மச்சொல் வந்து முடியா வென்றுணர்க.

வினையெச்சமும் பெயரெச்சமும் வினைச் சொல் லொழிபு; ஏனைய விடைச்சொல் லொழிபாம். (34)

431] பிரிநிலையெச்சத்திற்கு முடிபு

அவற்றுள்,

பிரிநிலை யெச்சம் பிரிநிலை முடிபின.

இது, முறையே பிரிநிலை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள்—முற்கூறிய பத்தினுள், பிரிநிலை யெச்சம்—ஏகாரமு மோகாரமு மாகிய பிரிநிலை யெச்சங்கள், பிரிநிலைமுடிபின—பிரிக்கப்பட்ட பொருண் மேல் வருஞ் சொல்லையே தமக்கு முடிபாக வுடையவா மென்றவாறு.

(உ-ம்) அவனே கொண்டான்.

அவனோ கொண்டான்.

எனப்பிரிக்கப்பட்ட சுட்டுப்பெயரின்வினைகொண்டு முடிந்தன. இடைச்சொற்குத் தமக்கியல் பின்மையின் சோற்றைப் பசித்துண்டான், என்றாற்போல அவனென் னுஞ் சுட்டுப் பெயருமிடை நின்ற வேகாரமு மோகா ரமும் கொண்டா னென்பதனோடு முடிந்தன. அன்றி யவனென்பது கொண்டா னென்பதனோடு முடிய, வேகார வோகாரங்கள் பிறர் கொண்டில ரென்பத னோடு முடிந்த வென்றல் பொருந்த முறைத்தெனின் வினையெச்சமும் பெயரெச்சமு மொழித்திடைச் சொல் லான் வருமென்ற வெச்சங்கள் பொருடருமாறிடைச் சொல்லோத்தினுட் கூறி, யீண்டவற்றிற்கு முடிபுசொற் கூறுகின்றா ராகலிற் கொண்டா னென்னுஞ் சொல் லெந் தவ்வெச்சங்களை முடித்தா லல்லது பிறர் கொண்டி லர் என்னும் பொருண்மை முடிபு தோன்றா தாகலிற் கொண்டா னென்பதே முடிக்குஞ் சொல்லாய் நிற்பப் பிறர் கொண்டில ரென்னும் பொருண்மை முடிபு தோன் றிற் றென்றலே பொருந்திற் றென்று கோடும் அன்றியும்,

மும்மை யெச்சத்திற் குண்ணின்ற பொருண்மை முடிபு முன்னர்க் கூறியதனை நீக்கிச் சொன்மை முடிபு பிண்டுக் கூறுகின்றதனானு மிஃதே யாசிரியர் கருத்தென்று முணர்க. (35)

432] வினையெச்சத்திற்கு முடிபு

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே.

இது, வினையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு நினையத் தோன்றிய முடிபாகும்—வினையெச்சத்திற்குத் தெரி நிலை வினையுங் குறிப்பு வினையும் ஆராயத் தோன்றிய முடிபு சொல்லாம், ஆவயின் குறிப்பே யாக்க மொடு வருமே—ஆண்டுக் குறிப்பு முற் றாக்கவினை யோடு வருமென்றவாறு.

(உ-ம்) உழுது வந்தான்.
மருந்துண்டு நல்ல னாயினான்.

எனவரும். நினைய வென்றதனான்,

உழுது வந்தவன்
உழுது வருதல்

எனத் தொழிற் பெயரோடும் வினைப்பெயரோடும் முடிதலுங் கொள்க.

'ஈண்டு இவ் வினையெச்ச மரபு கூறுகின்றவர், வினையியற் கண் 'முதனிலை மூன்று' மென்னுஞ் சூத திர முதலிய மூன்று சூத்திரத்தான் வினையெச்சத்திற்கு முடிபு கூறிய தென்னை? யெனின், ஈண்டுக் கூறியபொது விதிக் காண்டு மூன்று சூத்திரத்தானும் மூவகையாகச் சிறப்புவிதி கூறினார், எதிரது போற்ற' லென்னுந் தந்திரவுத்தியால் என்க.

இனி,

'வேங்கையுங் காந்தளும் நாறி
யாம்பன் மலரினுந் தான்றண் ணியளே'
'வில்லக விரலிற் பொருந்தியவன்
நல்லகஞ் சேரி னொருமருங் கினமே'

என்றாற் போல்வனவும் பிறவு மாக்கம் விரிந்தல்லது 'பொருளுணர்த்தாதாமை' உணர்க. (36)

433] பெயரெச்சத்திற்கு முடிபு

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

இது, பெயரெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) பெயரெஞ்சுகிளவி பெயரொடு முடிமே — பெயரெச்சம் பெயர்ச்சொல்லோடு முடியு மென்றவாறு.

(உ-ம்) உண்ணுஞ் சாத்தன்
உண்ட சாத்தன் எனவரும்.

ஈண்டுப் 'பெயரொடு முடியு' மென்ற பொதுவிதி நோக்கி, 'நிலனும் பொருளு' மென்னுஞ் சூத்திரத்தானிப் பெயர்தாம் பொருள் வகையா னாறு வகையவா மென்று 'எதிரது போற்ற' லென்னும் உத்தியாற் கூறினார். (37)

434] ஒழியிசை யெச்சத்திற்கு முடிபு

ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின.

இது, ஒழியிசை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின — மூனுன்நமல்லும் ஓகாரமு மாகிய வொழியிசை யெச்ச தின்று மவ்வொழியிசைப் பொருண்மேல் வருஞ் சொல்லையே தமக்கு முடிப்பாக வுடைய வென்றவாறு.

(உ-ம்) 'கூரியதோர் வாண்மன்' என்பது திட்பமின் றென்பதனோடும் வருகதில் லம்ம வென்பது வந்தாலின்னது செய்வே னென்பதனோடும் முடியும். ஆண்டுப் பொருண்மை முடிபு கூறினா ரீண்டுப் பொருண்மையை யுணர்த் துஞ் சொன்மை முடிபு கூறினார்.

'கொளலோ கொண்டான்' என்பது கொண் டா னென்பதனோடு முடியும். அதுகொண் டுய்யப் போமா றறிந்தில னென்பதனோடு முடிந்த தெனிற் 'கொண்டானென் ற' ந்து

முடியாக்கால் அப்பொருண்மை முடிபு தோன்றாமை யுணர்க. (33)

435] எதிர்மறை யெச்சத்திற்கு முடிபு

எதிர்மறை யெச்ச மெதிர்மறை முடிபின.
இஃது, எதிர்மறை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது

(இ-ள்) எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின — 'மாறுகோளெச்சம்' என்ற வேகாரமும் ஓகாரமும் உம்மையுமாகிய எதிர்மறை யெச்சம் மூன்றும் எதிர் மறைப் பொருளை யுணர்த்துஞ் சொல்லை முடிபாக உடைய. (எ-று)

(உ-ம்) யானே கொள்வேன்.
யானோ கொள்வேன்.
சாத்தன் வரலு முரியன்

என. அவ்விடைச் சொற்களின் பின்னர் நின்ற சொற் கள் அவற்றை முடித்தலால், 'கொள்ளேன், கொள்ளேன், வாராமையு முரியன், என்னும் பொருண்மை முடிபு தோன்றியவாறு காண்க. (39)

436] உம்மை யெச்சத்திற்கு முடிபு

உம்மை யெச்ச மிருவீற் றானுந்
தன்வினை யொன்றிய முடிபா கும்மே.

உம்மை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ-ள்) இரு ஈற்றானும்-ஒன்றற்கொன்று முடிவன வும் முடிப்பனவு மாகிய இரண்டு கூற்றின் கண்ணும் வரும், உம்மை எச்சம் தன்வினை—உம்மை யெச்சங் களை முடிக்குந் தன்னுடைய வினைச்சொற்கள், ஒன்றிய முடிபாகும்—ஓர் உம்மைக்குப் பொருந்திய வினையே மற்றை யும்மைக்கும் முடிபாய் வரும்: (எ-று)

(உ-ம்) 'சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான்' என எதிரது தழீஇய உம்மைக்கு முடிபாய வினையே இறந்தது தழீஇயதற்கும் முடிபா யிற்று.

'சாத்தனும் வந்தான் கொற்றனும் வரும்,' என்பதூஉம் ஒன்றிய முடிபாம், கொற்றனு முண்டான்; என்றால், ஒன்றிய முடிபாகா.

எனவே, எச்சப் பொருட்கும் உம்மையை முடிபாகக் கூறாது அதனோடு தொடர்ந்த வினை முடிபாமாறு கூறவே, உள் நின்ற பொருண் முடிபு கூறாது சொன் முடிபு கூறுதலே ஆசிரியர் கருத்தாயிற்று. எனவே முற் கூறிய வற்றிற்கும் சொன் முடிபே கூறினாராயிற்று.

'வேங்கையு மொள்ளிணர் விரிந்தன
நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே'

(அகம்)

என்பது, இணர் விரிதலும், ஊர் கோடலும், மணஞ் செய்யுங் காலங் குறித்தலின், அவை யொரு வினையே ஆம்

இனி, எஞ்சுபொருட்கிளவி செஞ்சொல் ஆயவழி யும் தன் வினைகோடல் 'தன்னினம் முடித்த' லாற் கொள்க. அது சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான்' வரும் என்பதாம்.

437] எச்ச வும்மையின் காலமயக்கம்

தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழூங் காலமொடு வாராக் காலமு
மிறந்த காலமொடு வாராக் காலமு
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

இதுவு, மவ்வெச்ச வும்மை யினது காலமயக்கங் கூறுகின்றது.

(இ-ள்) தன்மேற் செஞ்சொல் வரூஉங்காலை — அவ்வும்மை யெச்சத்தின் முன்னர் முடிக்குஞ் சொல்லும் மையில் சொல்லாய் வருங்காலத்து, நிகழூங் காலமொடு வாராக்காலமும்—நிகழ் காலத்தோ டெதிர்காலமும், இறந்த காலமொடு வாராக் காலமும்—இறந்தகாலத்தோ டெதிர்காலமும், மயங்குதல் வரையார் முறைநிலை யான—மயங்குதலை நீக்கா ரவ்வாறு மயங்கு முறை மைக்க ணென்றவாறு.

(உ-ம்) கூழுண்ணா நின்றான் சோறு முண்பன்.
கூழுண்டான் சோறு முண்பன்.

எனவரும் 'முறைநிலை' யென்றதனால் சிறுபான்மை நிகழ்வோடிறப்பும் மயங்குதலுங் கொள்க.

(உ -ம்) கூழுண்ணா நின்றான் சோறுமுண்டான்.
(கூழுண்டான்) எனவரும். (41)

438] எனவென் னெச்சத்தின் முடிபு

எனவெ னெச்சம் வினையொடு முடிமே

இது, எனவெனெச்ச மாமாறு கூறுகின்றது.

(இ-ள்) எனவெனெச்சம்-முன்னர் வினையுங் குறிப்பு மிசையும் பண்புமெனக்கூறிய நால்வகையவாகிய வென வென்னெச்சம், வினையொடும் முடிமே — தெரிநிலை வினையொடுங் குறிப்புவினையொடு முடியுமென்றவாறு.

'செய்தென' வென்னும் வினையெச்ச 'வென' வினை கோடன் முற்கூறினார். எண்ணெனவும் பெயரெனவும் வினைகொள்ளா எனவே 'என' வென்னு மிடைச்சொல் லேழு வகையவாயிற்று.

(உ-ம்) கார் வருமெனக் கருதி நொந்தான்
துண்ணெனத் துடித்தது.
ஒல்லெனவொலித்தது.
காரெனக் கறுத்தது.

என நான்கனு ளிருவகை வினையுங் காண்க.

'என்' றென்பதற்கு மிவ்விதி கொள்க.
கொள்ளென்று கொண்டான்
மலைவான் கொள்ளென வுயர்பலிதூ

யென்பன 'கொள்ளென்று சொல்லிக்கொண்டான்' எனவும், 'மலை வான் கொள்ள வேண்டுமென்று சொல்லி' யெனவும் பொருடருதலிற், சொல்லெச்சமாம். (12)

439] ஏனை யெச்சங்கட்கு முடிபு வேற்றுமை
எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு
மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப.

இது, ஏனைவினையெச்சங்கட்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ-ள்) எஞ்சிய மூன்றும்—ஒழிந்த சொல்லெச்ச முங் குறிப்பெச்சமு மிசையெச்சமுமாகிய மூன்றும், மேல் வந்து முடிக்குமெஞ்சுபொருட் கிளவி யிலவெனமொழிப

—ஒழிந்த வெச்சங்கள் போலத் தமக்குமேல் வேறாய் வந்து தம்மை முடிக்கு மெஞ்சிய பொருட்கிளவியை யுடைய வல்லவென்று கூறுவ ராசிரிய ரென்றவாறு

எனவே, பிற சொல்லை அவாவி நின்றாலு, மவை வந்து முடியாமற் றாமே யவற்றைக் கூறி நிற்குமாயின அவை மேற்காட்டுதும், 'சொல்லையெச்சமாகவுடை ய சொல்'லெனவுங், குறிப்பின் கட் டோன்றிய வெச்ச மெனவும் இசையின் கட்டோன்றிய எச்சமெனவும் விரிக்க. (43)

440] குறிப்பெச்சமும் இசையெச்சமும் முடியுமாறு தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்.

இது, குறிப்பெச்சமு மிசையெச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்) எச்சம்—சொல்லெச்ச மொழிந்த விருவகை யெச்சங்கள், தத்தங் குறிப்பின் செப்பும்—தம்மைக் கூறு வோர் தம்முடைய குறிப்புக்களாலே தம்முடைய வெஞ்சு பொருட் கிளவியைத் தாமே கூறி நிற்கு மென்றவாறு.

(உ-ம்) கற்கறிக்க நன்கட்டா யென்றாற் றீங்கட்டா யென்னுங் குறிப்பிற் றோன்றிய வெஞ்சு பொருளினைத் தாமே கூறி நின்றது.

'வயிறு மொடு மொடுத்த' தென்றா, லிசை யிற் குறிப்பாகிய உண்ண வேண்டா வென்னு மெஞ்சு பொருளினைத்தாமே கூறி நின்றது. இவ்விசையிற் குறிப்பு வயிற்றின் கண்ணுங் கொள்க.

இனி, பிறசொல் வாராது தம்மைத்தாமே முடிக்கு மென் றுவிண் ணென விணைத்த, தொல்லென லொலித்த தென்பன காட்டினாரா லுரையாசிரிய ரெனின், அவை

தம்மைத் தாமே முடியாமல் அது 'விண்ணென வீங்கிற்று, ஒல்லென வோடிற்று' எனப்பிற சொல்வந்து முடித்தலு மவற்றிற் கேற்குமாகலானு, மவை யென வென்னு மிடைச் சொல்லாகலானு, மவற்றைக் கொண்டால், 'காரெனக் கறுத்த' தென்னும் பண்புங் கோடல், வேண்டுமாகலானு மது போலி யுரையாம்.

இனி சேனாவரையர் குறிப்பெச்சத்திற்கு
'இளைதாக முண்மரங் கொல்க'

வென்னுங் குறள் வெண்பாவு, மிசையெச்சத்திற் ககர முதல வென்னுங் குறள்வெண்பாவுங் காட்டினாரா லெனின், அவர் காட்டின குறிப்பெச்சஞ் செய்யுளிலக் கணங் கூறுகின்ற செய்யுளியலிற் சொல்லொடுங் குறிப் பொடு மென்னுஞ் சூத்திரத்தாற் பலசொற்றொடர்ந்த தோர் செய்யுண் முடிந்தக்கால் வருமென்று கொண்ட குறிப்பெச்சமாகலி னதனைச் சொல்லிலக்கணத்திற் கூறு கின்ற குறிப்பெச்சத்திற்குக் காட்டினாலாண்டைக் குறிப்பெச்சத்திற்கு வேறு பொருளின்றா மாகலானு மவரிசை யெச்சமென்ற அகர முதல வென்பதன் கண் அதுபோலவென் விரிந்த வுவமச்சொற் றுணியுமாறு விரியா திரண்டற்கும் பொதுவாய் வேறுபடவந்த வும மத்தின்பாற் படுத லல்லது இசையாற் பிறவாமையானு மவை பொருந்தாமை யுணர்க. (44)

441] சொல்லெச்சத்திற்கு முடிபு

சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே.

இது, சொல்லெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது

(இ-ள்) என்னெச்சம்—என்னென்கின்ற வெச்சமானது, சொல்லளவல்லது — சொல்லென்னு முதனிலை மாத்திரை தன்னுள்ளேயே யெஞ்சிநிற்றல்லது, சொன் முன்னும் பின்னு மெஞ்சுதலின்று—செய்யுளியலிற் கூறுஞ் சொல் லெச்சம் போலவொரு சொற் செய்யுட்கு முன்னும் பின்னும் எஞ்சி நிற்றலில்லை யென்றவாறு.

'என்' னென்னு மிடைச் சொற்கண்ணே 'சொல்' லென்பது தோன்றுதலி 'னென்னெய்ச்ச' மென்றார். என்னென்பது சொல்லை யொழிபாக நிற்றலின், முன்னர்ச் 'சொல்லெச்ச' மென்றார்; என்னென்ப திடைச்சொல் லாய் நிற்றலின், வினை யெனப்படுவதென்றது வினை யென்று சொல்லப்படுவதென்று பொருடந்த விடத்தென் வென்னு மெச்சந்தா னவாவுதலி னிடையே நின்ற சொல்லென்னு முதனிலைக்குத் தன்னீற்றி னின்ற செய் வென் னெச்சத்தை யுணர்த்துமகரத்தை யேற்பித்து நின்றவாறு காண்க. 'நளியென் கிளவி' யென்றது நளி யென்று சொல்லுஞ் சொல் லென்று பொருடந்தவிடத்து மென்னென்னு மெச்சந்தா னவாவுதலி னிடையே நின்ற சொல்லென்னு முதனிலைக்குத் தன்னீற்றி னிற்கும் செய்யு மென்னு மெச்சத்தை யுணர்த்தும் உம் என்பதை யேற்பித்து நின்றவாறு காண்க. 'தாவென நின்றான்' என்பது தாவென்று. சொல்லி நின்றா' னென என, என் னெச்சஞ் சொல்லி யென்னும் வினைகொண்டு நின்றது. இது சொல் லெச்ச மன்று. இங்ஙன மெச்ச வீறுகளை யேற்றலிற் சொல்லென்பது முதனிலையாயிற்று. என் னென்பதற்குஞ் சொல்லென்பதற்கு மிடை நின்ற றகர வுகரங்க ளவ்விரண்டினையுங் கூட்டுதற்கு வந்து நின்றன எழுத்தெனப்படுப, பெயரெனப் படுப, இடைனெப் படுப' எனவும் இலமென்கிளவி. முழு தென்கிளவி; கடி யென்கிளவி, மீமென்கிளவி, தேமென்கிளவி. எனவும் வருவனவெல்லா மிக்கூறியவாறே வந்த சொல்லெச்சம்

இனிச் செய்யுட்கண் வருஞ் சொல் லெச்சமாயின் எடீக்கு

என கல்கெழு கானவர் நல் குறூஉம் மகள்
மருந்தெனின் மருந்து, வைப்பெனின் வைப்பே.
முன்னும், குன்றங்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டு என்புழி

'யாங் காந்தட் பூவாற் குறைவில' மெனப்பின்னுங் கூற்று, சொல் லெச்சமாய் நிற்குமாறுணர்க.
இதற்குவிதி,

'சொல்லொடுங் குறிப்பொடு முடிபுகொ ளியற்கை
புல்லிய கிளவி யெச்சமாகும்.
என்னுஞ் சூத்திர மென்றுணர்க.

இனி, யுயர்திணை யென்மனார் என்பதற் காசிரிய ரெனவரும் பெயர் சொல்லெச்சமென் றுதாரணங் காட்டினாலது பொருந்தாது. சூத்திரச் செய்யுளாத லானு மதுதான் முற்றுச் சொற்குப் பெயர் தோன்றா மலு நிற்கு மென்று முற்கூறிய தாகலானுமிது சொல் லெச்ச மாகாமை யுணர்க. (45)

442)　　　　இடக்க ரடக்கல்

அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

இது, மரபு வழூக் காக்கின்றது.

(இ-ள்) அவையல் கிளவி—நன்மக்களிடைக் கூறப் படுவ தல்லாத சொல்லை, மறைத்தனர் கிளத்தல்—அவ் வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற்கூறுக வென்ற வாறு.

(உ-ம்) 'ஆன் முன் வரூஉ மீகார பகரம்'
'கண்கழீஇ வருதும்'
'கருமுக மந்தி'
'செம்பி னேற்றை'
'புலிநின் றிறந்த நீரல் லீரத்து'.

எனவரும், 'ஈகாரம் பகர' மென்றது. ஓருயிர் மெய் யெழுத்தாகக் கூறி னவையல்கிளவியா மென் றுயிரு மெய்யுமாகப் பிரித்து அவ்வுயிர்மெய் யெழுத்தையே கூறி யது. ஒழிந்தன, அவ்வா றன்றி, யவையல்கிளவிப் பொரு ளைப் பிறசொல்லா லுணர்த்திற்றேனும் அப்பொரு ளையே யுணர்த்தி, நிற்றலி, னதனைப் பிறிதோ ராற் றான் மறைத்தனவேயாம்.

தகுதியாவது 'செத்தா'னெனப் பெரும்பான்மை வழங்கப்பட்டுத் தகுதி நோக்கித் துஞ்சினானெனச் சிறு பான்மை வழங்கப்பட்டு நிற்கும். அவையல் கிளவியா வது, இழிந்தோர் கூறு மிழி சொற்களை நன்மக்களிடை மறைத்துக் கூறப்படும் இஃதிரண்டிற்கும் வேற்றுமை. இங்ஙனம் மறைத்துக் கூறாக்கால் வழுவாதல் கருதி வழுவமைத்தார். இது பொருளிடை யிடுதலென்னுந் தந்திர வுத்தி. (46)

443) மேலதற்கொரு புறனடை

மறைக்குங் காலை மரீஇய தொராஅல்.
இது, மேலதற்குப் புறநடை.

(இ-ள்) மறைக்குங்காலை — அவையல் கிளவியை மறைத்துக் கூறுங்கால், மரீஇய தொராஅல்—மேற் றொட்டு மரீஇ வழங்கி யதனை மறைத்தலை நீக்குக வென்றவாறு.

(உ-ம்) 'மெழுகு மாப்பிதன்கண் கலுழ்நீரானே'
'ஆப்பிநீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை'

'யானையி லண்டம்'
'யாட்டுப் பிழுக்கை'.

எனவரும்.

தன் பொருண்மே னில்லா தணிகுறித்து நின்ற
'பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி'

என்றாற் போல்வன தம்பொருளை யுணர்த்துங்கான் மறைத்துக் கூறப்படுமாறுணர்க. (47)

444) இரப்புணர்த்துஞ் சொற்கள்.

ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்று
மிரவின் கிளவி யாகிட னுடைய.

இஃதொரு பொருண்மேல் வரும்ஈதாகொடு என்னும் பலசொற்கு மரபு வேறுபாடுணர்த்துவானவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

(இ-ள்) ஈதா கொடு வெனக் கிளக்கு மூன்றும்-ஈதா கொடுவென்று முன்னின்றானை நோக்கிக் கூறுஞ் சொற் கண் மூன்றும், இரவின் கிளவி யாகிட னுடைய —ஒருவனொன்றை யிரத்தற்கண்வருஞ் சொல்லா மிட முடைய வென்றவாறு.

'ஈச்சிறு' கெனவுந் 'தாவினன்பொன்' னெனவுங் கொடுங்கோலெனவு மிவை பிற பொருளையு முணர்த்து தலின் கிளவி யாகிட னுடைய வென்றார்.

இவை மூன்று 'மில்' லென விரப்போர்க்கு, மிட னின்றி, யிரப்போர்க்குந், தொலைவாகி யிரப்போர்க்கு முரியவென்றுணர்க. (48)

445) ஈ யென்பதன் மரபு

அவற்று,
ளீயென் கிளவி யிழிந்தோன் கூற்றே.

இது, முதலதன் மரபு கூறுகின்றது.

(இ-ள்) அவற்று ளீயென்கிளவி—முற்கூறிய மூன்று வற்று 'ஈ' யென்னுஞ்சொல், இழிந்தோன் கூற்று-இரக்கப் படுவோனி னிழிந்த இரவலன் அவனை யிரக்குங் காற் கூறுங் கூற்றாமென்றவாறு.

(உ-ம்) 'பெருமா! வெனக்கொரு பிடி சோறீ'

எனவும்

'ஈயென விரத்தலோ வரிதோ நீயது'

எனவும் இவ்விரண்டுந் தன்மையும் முன்னிலையும் பற்றி வந்தன.

'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே'

என்றது உளப்பாட்டுத் தன்மையும் படர்க்கையும் பற்றி வந்தது.

'இவற்கீத் துண்மதி கள்ளே'

என்புழியு 'மிவ' னென்பது முன்னிலையும் படர்க்கையும் என்றுணர்க. (49)

446] தா வென்பதன் மரபு

தாவென் கிளவி யொப்போன் கூற்றே.

இஃது, இரண்டாவதன் மரபு கூறுகின்றது.

(இ-ள்) தாவென்கிளவி—தன்மைக்கு முன்னிலைக்கு முரிய தா வென்னுஞ்சொல், ஒப்போன் கூற்று—இரக்கப் படுவானோ டொக்கு மிரவலன் அவனையிரக்குங் காற் கூறுங் கூற்றாமென்றவாறு.

(உ-ம்) எனக்குச் சோறு தா,

எனவரும்.

'மாணலந் தாவென வருந்தற் கண்ணும்'

எனவும்

'என்னலந் தாராய்'

எனவும்

'கொடு' போல வருவன, கொடுப்போன் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாதன வற்றை யிரந்தனவாம்.

'ஒப்போன் கூற்' றென்றா ரேனுஞ், சிறு பான்மை வலியாற் கொள்ளுமிடத்துந் 'தா' வென்பது வருமென்றுணர்க.

'நின்னது தாவென நிலைதளரக்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையோன் றென்கோ'

எனவரும். (50)

447) 'கொடு' என்பதன் மரபு

கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே.

இது, மூன்றாவதன் மரபு கூறுகின்றது

(இ-ள்) கொடுவென்கிளவி — கொடுவென்னும் படர்க்கையாகிய முதனிலைச் சொல், உயர்ந்தோன் கூற்றே — இரக்கப்படுவோனின் உயர்ந்த விரவல னவனை யிரக்குங்காற் கூறுங் கூற்றாம். (எ—று

(உ-ம்) இவற் கூண் கொடு.

எனவரும் (51)

448) 'கொடு' என்பது தன்மையிலும் வருதல்
கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
றன்னிடத் தியலு மென்மனார் புலவர்.

இது, 'கொடு' வென்பதற் கிடவழு வமைக்கின்றது.

(இ-ள்) தன்னைப் பிறன்போலாயினுங் கூறுங் குறிப்பின் கொடுவென் கிளவியும்—இரப்போர் பலருந் தம்மினொருவனைக்காட்டி யிவற்குக் கொடு' வெனத் தம்மைப் பிறரைப் போலாயினுங் கூறி யிரக்குங் கருத்தினாற் கூறப்படுங் 'கொடு' வென்னுஞ் சொல்லும். தன்னைப் பிறன்போலாயினுங் கூறுங்குறிப்பிற் படர்க்கைக் கிளவியும்—கூறுகின்றோர் பலருந் தம்மைப் பிறரைப் போலாயினுங் கூறுங் கருத்தினாற் கூறப்படும் படர்க்கைச் சொற்களும், தன்னிடத்தியலு மென்மனார் புலவர்—இவ்விரண்டுந் தன்மையிடத்திற் குரியவாய் நடக்குமென்று கூறுவர் புலவர் (எ—று)

(உ-ம்) இவற்கு ஊண் கொடு.

எனவும்வரும். அங்ஙனஞ் சொல்லப்படுவானோ, பெருஞ்சாத்தன்றந்தை;அங்ஙனஞ்சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தன்றாய் எனவும் வரும்.

இந்நான்கு சூத்திரத்தானும் ஆண் பாலுரிமையாற் கூறினாரேனு, மவை முப்பாற்கு முரித்தாமாறு மேலே யுணர்க.

சேனாவரையார். 'கொடு' வென்பது தானே தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பினையு முணர்த்தும்; என்று, அதற்குச் 'சாந்து கொடு', என்பதுதாரணங் காட்டினாராலெனின் 'கொடு' என்பது கொடுப்பதோர் பொருளை யேற்றற் குரிய நான்க னுருபு வந்தா லதனை முடித்தற்கு வருஞ் சொல்லாதலின், 'அவற்கு' இவற்கு, உவற்கு, என்னுஞ் சொற்களை அவாய அவற்றை முடித்தேநிற்றல் வேண்டும்; வேண்டவே யவற்குக் கொடுவென்பது, 'ஏனையிரண்டு' மென்புழிக் கூறியதாம், 'எனக்குக் கொடு', என்பது ஏனையிரண்டு மென்புழிக் கூறியதாம்', 'எனக்குக் கொடு' என்பது தன்னைப்பிறன் போற்கூறுங் குறிப்பில்லாதாயிற்று. ஆதலாற்றன்னைப் பிறன்போற்கூறுங் குறிப்பிற்றாய் வழுவமைதியு மேற்று நிற்பது'இவற்குக் கொடு' என்னு முதாரணமேயாயிற்று என்க.

(52)

449] ஒருசார்ச் சொற்களின் வழுவமைதி

பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்
திசைநிலைக் கிளவியி னாஅ குநவும்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவும்
மெய்ந்நிலை மடக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே.

இதுவு, மொருசார் வழுவமைக்கின்றது.

(இ-ள்) பெயர் நிலைக்கிளவியி னாஅகுநவும் — தத்தம் பொருளுணர்த்தாது பெயர்ந்த நிலைமையை யுடைய சொல்லான் வருஞ்செய்யுளும், திசைநிலைக் கிளவியி னாஅ குநவும் — திசையா னிலைபெற்ற பெய ரான் வருஞ் சொல்லும், மொழிவயிற் றொன்னெறி யாகுநவும் — சொல்லிடத்துப் பழைய நெறியா னாய், வருஞ் சொல்லும், மெய்ந்நிலை மயக்கி னாஅகுநவும் — ஒருமைப் பொருளால் கூறவே பன்மைப் பொருடோன்றி மயங்கும் மயக்கி னானாகுஞ் செய்யுட்களும், மந்திரப் பொருள்வயி னாஅகுநவும் — மந்திரத்தையுடைய தெய் வங்களிடத்தே யம்மந்திரமாய் வருஞ் சொற்களும், அன்றியனைத்துங் கடப்பாடில — ஆகிய அவ்வனைத் தும் வழங்கியவாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புற வுடையவல்ல வென்றவாறு.

(உ-ம்)

'ஔவாள்,

கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோனூரே'

என்புழி 'வேலோன்' என்பது 'வேலையுடையோ' னென்னும் பொருள் பெயர்ந்தொரு பெயர்த் தன்மை யாய் நின்றது.

'செழுந்தா மரையன்ன வாட்கண்'

என்பதூஉம் அது.

'தென்னன், வடமன், குடக்கோ, தென் பாண்டி' என இவைதிசை நிலைக்கிளவி. முதுமொழி, பொருளுடையனவும் பொரு ளில்லனவு மென விருவகைப்படும். 'யாட் டுளா னின்னுரைத் தாரான்' என்றது இடையனெழுத்தொடு புணராது பொரு ளறி வுறுக்கும் மொழியைக் கூறுதலன்றி, யெழுத்தொடு புணர்ந்து பொருளறி வுறுக் கும் மொழியைக் கூறான்' என்னும் பொரு டந்து நின்றது.

'யாற்றுட் செத்த வெருமை யீர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்' என்பது 'குயவன் சுள்ளையினெழுந்த புகையானாய மேகந் தந்த நீரானெருமை சாதலின், அதனை குயவர்க்கிழுத்தல் கடனாற்று, என வொரு காரண முள்ளது போலக் கூறுகின்றது. உண்மைப் பொருளன்றி, யொருவ னியை பின்றிக் கூறிய சொற் கெடுத்துக்காட்டா கக் கூறப்படுதலிற், பொரு ளுணர்த்தாதா யிற்று.

'இல்வாழ்வா னென்பான்'
'தினைத்துணையுந் தேரான் பிறனில் புகல்'
'நட்பர ணாறு முடையான்'
'வறியவ னிளமை போல்'

என்றாற் போல்வன வெல்லா மொருமைப் பொருளே கூறிற்றேனும் பன்மைப் பொ ருளை யுணர்த்தலின், மெய்ந்நிலை மயக்க மாயிற்று. மெய் — பொருள்.

மந்திரச்சொல், மந்திர நூல்களிற் கேட்டு ணர்க. 'நம்பி, 'நங்கை' யெனவஃறிணை யைக் கூறுவனவும்,

'எழுதுவரிக் கோலத்தார்'

என்னும் பிரேளிகைச் செய்யுளிற் றிணைவழூவும்,

'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்'

என்னுஞ் சூத்திரத்து ளடங்குமாறும், 'புலியான்' பூசை யான், என்பன இசைச் சொற்க ணடங்குமாறு முணர்க. வெண்கொற்றப் படைத்தலைவனுஞ் சிறப்பினாகிய பெயர்க்கணடங்கும்.

450] 'செய்யா'யென்பது 'செய்' எனநிற்றல்

செய்யா யென்னும் முன்னிலை வினைச்சொற்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.

இது, ஓசை வேறுபட்டா னொருசொல் லொரு சொல்லா மென்கின்றது.

(இ-ள்) செய்யா யென்னும் முன்னிலை வினைச் சொல்—ஒரு தொழிலினை 'மேற்செய்யா' யென்னும் மறையாகிய முன்னிலை வினைச்சொல், செய்யென் கிளவி யாகிட னுடைத்து—'அத்தொழிலினைச்செய் யென்னு முடம்பாட்டு முன்னிலை வினைச் சொல்லா மிடத்தினை யுடைத்தென்றவாறு.

'இடனுடைத்து', என்றதனான், 'உண்ணாய்' என்பது மறையாய் வருதலே பெரும்பான்மை யாயிற்று. அது சிறு பான்மை யுடன்பாட்டிகண் வருங்கால் வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் வரும் என்றுணர்க.

'உண், தின்' என்பன முதலிய முன்னிலை யேவல், உயர்ந்தா னிழிந்தானை யேவுதற்கண் வரும்.

'அறியாய் வாழி தோழி!
* * * *
பொருளே காதலர் காத
லருளே காதல ரென்றி நீயே'.

என்னு மகப்பாட்டினுள் 'அறியா' யென்றது, 'காதலரு ருளே காதலித்திருப்பார், என்று நீ கூறுகின்றமையாற், காதலர் கருத்தினை நீ யறியா'யென முன்னிலை மறை யாய் நின்ற வாறும்.

'அறியாய் வாழி தோழி! பொறிவரிப்
பூநுதல் யானை யொடு'

என்னும் அகப்பாட்டினு 'ளறியா' யென்றது,

'காமங் கலந்த காதல ருண்டெனின்,
நன்றும னதுநீ நாடாய் கூறுதி

யென்றதனோ டியையுங்கா, 'லைனோடு கூட்ட முண்டெனி, னது மிக நன்று! அதனை நீ யாராயாமற் கூறுகின்றார்; யதனை நின் மனத்தா னாராய்ந்து பாரா; யென வேண்டிக் கோடற் பொருடந்து முன்னிலையேவ லுடம்பாடாய் நின்றவாறு முணர்க. இங்ஙனம் மறைச் சொல் லுடம்பாட்டுப் பொருளைப் படுத்த லோசை யாய் உணர்த்திநிற்றல் சான்றோர் செய்யுளுட் பெரும் பான்மை யென்றுணர்க.

இனி, வழக்கி னுள்ளும்,

இந்நா ளெம்மில்லத் துண்ணாய்.
இப்பொழுது சொல்லாய்.

என்றாற் போலப் பெரும்பான்மையும் வழங்குமாறு ணர்க,

'உண்பாய்' என்னுஞ் சொல், ஓசைவேற்றுமையான் முற்றுந் தொழிற்பெயரும் வினையெச்சமும் வியங்கோளு மாய் நின்றாற்போலவுந்; 'தபு' என்பது ஓசை

வேற்றுமையான் 'ஒன்றனைக் கொல், 'என்றும்' நீ சா என்றும் நின்றாற் போலவும்' மறைச்சொல் லோசை வேற்றுமையான் உடம்பாடுணர்த்திற் றென்றுணர்க. அங்ஙனமுணர்த்திற் றேனும், மறையுணர்த்து மாகார முடம்பாடுணர்த்துமோ? வெனின் அதனை யேகாரம் 'உண்பனே', உண்ணேனே' யென விதிக்கும் மறைக்கும் வந்தாற்போலக் கொள்க.

'மறை' யென்பது 'செய்யாய்' என்னும் வாசகத் தாற் சூத்திரஞ் செய்தமையாற் பெற்றாம். 'செய்' யென்பது விதி வினையே யுணர்த்துதல் பற்றிச், 'செய் யென் கிளவி' யென்றார்.

இனி, சேனாவரையர், 'செய்யா' யென்னும் முன்னிலை முற்றுச் சொல் 'ஆய்' என்னு மீறுகெடச் 'செய்' யென்னு முன்னிலை யேவன் முற்றாய் நிற்கு மென்று பொருள் கூறி, 'உண்ணாய்' தின்னாய், நட வாய், கிடவாய்', என்பன வீறு கெட்டு, 'உண், தின் நட, கிட எனநிற்கு,' மென்றா ராலெனின், 'உண்ணாய்' என்பதும் 'உண்' என்பதுந் தம்மிற் பொருள் வேறுபா டுடைமையி, னுண்ணா யென்பதன் பொருளை 'யுண் ணென்ப துணர்த்தி யீறு கெட்டு நிற்குமென்றல் பொருந்தாதாம். 'நீ கலாய்த்திரா தூண்ணா யென்ற பொருளை 'யுண்' ணென்றது தாரா தேவற் பொருட் டாய் நின்றவாறு காண்க. அன்றியும், இவ் 'உண், தின், நட, கிட, வென்பனவற்றை முதனிலை யென்றே தாமுங் கூறிப் போந்தா ராதலி, னிவை முதனிலையாய் நிற்குமிடத்துக் 'கரு, செய்வெள்? என்னு முதனிலைகள் பண்பு மாத்திரையே யுணர்த்தி, யீறுகெடுதலும் பொரு ளுணர்த்தலு மின்றி நின்றாற்போல, விவையும் வினை மாத்திரையே யுணர்த்தி யீறுகெடுதலும் பொருளுணர்த் தலுமின்றி நிற்றல் வேண்டும். இவை யங்ஙனம் நில்லாது' 'ஆய்' என்னு மீறுகெட்டு முன்னிலை யேவற் பொருண் மையை யுணர்த்தி நிற்கு மென்றலின், 'முதனிலை யென்றல் பொருந்தாதாம். ஆகவே,

வினைச்சொற்கு முதனிலைகள் 'உண், தின், நட, கிட' முதலியன என்றாம். இவர் பிறர்மதமே கூறினார். இஃது தொல்காப்பியனார்க்குக் கருத்தன்மை யுணர்க; அன்றியும், உண், தின், நட, கிட' முதலியன முன்னிலை யுணர்த்தி நிற்குமேல், 'உண்டான், உண்டேன்' என 'வுண்' ணென்னும் முதனிலையில் விரிந்து நின்ற விற்றா னுணர்த்தும் படர்க்கைக்குந் தன்மைககும் வழுவாமா றுணர்க. 54

451] 'ஈ, ஏ' என்பன நிலை வேறுபாடு
முன்னிலை முன்ன ரீயு மேயு
மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

இது, பொருடரு மிடைச் சொற்களுட் சில நிலை வேறு படுமாறு கூறுகின்றது.

(இ-ள்) முன்னிலை முன்ன ரீயு மேயும்—முன்னிலை வினைச்சொன் முன் வருமீகாரமு மேகாரமும், அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே—அம்முன்னிலைச் சொற் கள் தாம் நிற்றற் குரிய முறைமையை யுடைய மெய் களையூர்ந்து வரும் (எ—று)

முன்னிலைச் சொல்லாவன, 'செல், நில், புகு, உண், தின், உரை' என்றாற் போல வருவனவாம்.

(உ-ம்) 'சென்றீ பெரும! நிற் றகைக்குநர் யாரோ'
'அட்டி லோலை தொட்டனை நின்மே'
எனவரும்.

இவற்றுள் ஈகாரம், 'புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ' எனக் கடத றவை ஊர்ந்து வருமென்பது தோன்ற, அந்நிலை மரபின் மெய்' யென்றார். ஏகாரம் மகர மூர்ந்து வரும். இவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையின், புணர்ச்சி விகாரமின்றி, முன்னிலைச்சொல் விகாரமாயிற்று

'உண் ாய்' என்பதற்கு மறையாகிய 'உண்ணாய்' என்னுஞ்சொல், படுத்தலோசையான் 'உண்டலைச் செய்', என்னும் பொருடந்து நிற்றலின்

'செய்யென் கிளவி மாகிட னுடைத்து'

என்று சூத்திரஞ் செய்ததன் பின்னர்' 'சொல்லுதலைச் செய்; நிற்றலைச் செய்; என இச்சூத்திரத்தின் முதனிலைகளும் 'செய்' யென்னும் வாசகத்தினையே யுணர்த்தி நிற்குமென்பது கருதி, 'செய்யென் கிளவி யாகிடன் உடைத்து' என்றதன்பின், இதனை வைத்தார்.

452] புதியன புகுதல்

கடிசொல் லில்லைக் காலத்துப் படினே.

இது, காலநதோறும் புதிதாகத் தோன்றிய சொற்களும் கொள்க என்கின்றது.

(இ-ள்) கடிசொல் இல்லை — இவை தொன்று தொட்டு வந்தன அல்ல,' என்று கடியப்படுஞ் சொற்களில்லை, காலத்து படினே—அவ்வக்காலத்துத் தோன்றி நன்மக்கள் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் வழங்கப் பட்டு வருமாயின் (எ-று)

(உ-ம்) சட்டி, சள்ளை, சமை எனவும்,

'சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே'

'தைய லாய்சம ழாதுரை யென்றதே'

எனவுஞ் சகரம் மொழிக்கு முதலாய் வந்தவாறு காண்க. இவை.

'சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
அஐ ஔவெனும் மூன்றலங் கடையே'

என வாசிரியர் விலக்கலின், அக்காலம் மொழிக்கு முதலாகாது விலக்கிய சகரம், பிற்காலத்து வழங்கியதாயிற்று.

'ஞெண்டு' என்பது 'ஞண்டு' ஆய்ப்பின்னர் 'நண்டு என மரீஇயிற்று.

இச்சூத்திரம், 'எதிர்பொருள் உணர்த்தல்' என்னும் உத்தியாம். இவ்வாறு பின்னர் வழங்குவன எல்லாவற்றிற்கும் இதுவே விதி.

இனி, 'ஒன்றென முடித்தலால், புதியன தோன்றினாற் போலப் பழையன கெடுவனவும் உள. அவை, 'அழன், புழன்' முதலியனவும், எழுத்திற் புணர்ந்த சொற்கள் இக்காலத்து 'வழங்கா' தனவுமாம். (56)

453] செய்யுள் விகாரம்.

குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி யறிதல்

இது, செய்யுள் விகாரங் கூறுகின்றது.

(இ-ள்) குறைச்சொற் கிளவி—குறைக்கப்படுஞ் சொல்லாகிய சொற்கள், குறைக்குமவழி யறிதல்—குறைக்கு மிடமறிந்து குறைக்கும் வழியறிதல் குறைக்கு மிடமறிந்து குறைக்க வென்றவாறு.

குறைக்கும் வழியறித' லென்றது, ஒரு சொற்குத 'தலை, யிடை, கடை,' யெனவிடம் மூன்றே; யவற்று 'ளின்னுழிக் குறைக்கப்படு மிச்சொல்,' என்றறிந்து குறைக்க, வென்றவாறாம்.

(உ-ம்) 'மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி'

எனவும்.

'வேதின வெரிநி னோதி முது போத்து'

எனவும்,

'நீலுண் டுகிலிகை கடுப்பப் பலவுடன்'

எனவும் மூன்றிடத்துங் குறைத்தவாறு காண்க.

ஈது ஒரு சொல்லின்கட் சிறிது நிற்பச் சிறிது கெடுத் தலாதலின், முழுவதுங் கெடுத்தலாகிய 'தொகுக்கும் வழித் தொகுத்த'லின் வேறாத லறிக.

'குறைச் சொற் கிளவி' யெனவே யிவ்விதி செய்யுட் கண் ணென்பது பெறுதும். இது, 'பொருளிடையிடுத' லென்று முத்தியாம். (57)

454] மேலதற்கொரு புறனடை

குறைத்தன வாயினும் நிறைப்பெய ரியல

இது, மேலதற்கோர் புறநடை

(இ-ள்) குறைத்தன வாயினும்,—செய்யுளகத்துச் சொற்கள் குறைக்கப்பட்டன வாயினும், நிறைப்பெயரியல—அவை பொரு ளுணர்த்தும்வழி நிறைந்து நின்ற பெயரினியல்பை யுடையவா மென்றவாறு.

என்றது, முற்கூறிய வுதாரணங்கள் 'தாமரை, ஓந்தி நீல மென நிறைந்த பெயரின் பொருள்களைத் தந்தே நிற்கு மென்றவாறு.

'கண்டிரண் முத்தங் கொண்டு வந்து'

என்புழி வந்தன்று என்னும் வினையும்

'சான்றோரென்பிலர் தோழி!

யென்புழி 'யென்பாரில' ரென்னும் வினையுஞ் சிறு பான்மை குறைத்த றன்னின முடித்தலாற் கொள்க. (58)

455] விசேடிக்குஞ் சொல் நிற்குமாறு

இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே.

இது, விசேடிக்குஞ் சொல் லிவ்வாறு நிற்குமென்கின்றது.

வேற்றுமைச் சொல் லெல்லாம் — முடிக்குஞ் சொல்லை விசேடித்து நிற்குஞ் சொற்களெல்லாம், இடைச்சொல் — முடிக்கப்படுஞ் சொற்கும் முடிக்குஞ் சொற்கும் நடுவே வருஞ் சொல்லாய் நிற்கும். (எ - று)

வேற்றுமைச்சொல், 'வேறுபாட்டினைச் செய்யுஞ் சொல்'லென விரியும். எழுவாயை முடிக்கும் பயனிலைக் கும், முற்றை முடிக்கும் பெயரிற்கும், வினையெச்சத்தை முடிக்கும் வினைக்கும், பெயரெச்சங்களை முடிக்கும் பெயர்கட்கு மிடையே வருதலி, 'னிடைச்சொல்' லென் றார்.

(உ-ம்) 'கண்ணி கார்நறுங் கொன்றை'

* * * *

ஊர்தி வால்வெள் ளேறே;

என்புழி, 'கொன்றையையு மேற்றையு மிடைவந்த சொற் கள் விசேடித்து நின்றன.

'ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்'

என்புழி, 'யீர்ந்தையோ' னென்னும் முற்றிற்கு முடி பாகிய 'பகைஞ' னென்னும் பெயரை யிடையி னின்ற சொல் விசேடித்து நின்றது.

என்புழி, பெற்'றென்னுஞ் செய்தெனெச்சத்திற்கு முடிபாகிய 'மிசையு' மென்னும் வினையை யிடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

ஏந்தெழின் மழைக்க ணிளையோன் மடுப்பத்
தேம்பாய் தேறல் நீசிறி துணினே'

என்புழியும், 'மடுப்ப' வென்னுஞ் செயவென்னெச்சத் திற்கு முடிபாகிய உணின் என்னும் வினையை யிடை நின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

'வெற்ப ராடும் வேற்புச்சேர் பிருக்கை
பயம்பிற் கொள்ளாப் பைங்கண் யானை'

ஏன்புழிச், செய்யு மென்னும் பெயரெச்சத்திற்கும் அதன் மறைக்கும் முடிபாகிய விருக்கையையும் யானையையும் இடை வந்த சொற்கள் விசேடித்து நின்றன.

'குரங்குகளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய'!

என்புழி, செய்த வென்னும் பெயரெச்சங்கட்கு முடி பாகிய புரவியையுஞ் செழியனையுமிடை வருஞ்சொற்கள் விசேடித்து நின்றன. சான்றோர் செய்யுட்க ணிங்ஙன மிச்சொற்களை விசேடித்து வருதல் பெரும்பான்மை யென்றுணர்க. பண்பு முடைமையு முதலிய விடை வந் தால் அவை (விசேடித்து) விசேடியாது நிற்குமாறு முணர்க.

இனி, இடைச் சொற்களெல்லாந் தாமடைந்த பெயர் வினைகளின் பொருள்களை வேறுபடுத்தி நிற்ற லின், 'வேற்றுமைச்சொல்' என்று சொல்லப்படும், என்று பொருள் கூறினாரா லுரையாசிரிய ரெனின், அவை வேறுபாடு செய்தல் அவ்வோத்திற் கூறிய சூத்திரங்களின் பொருளால் ஆண்டுப் பெறப்படுதலி, னீண்டுக் கூறல், கூறியது கூறலா மாகலான் அது பொருந்தாது, என்க. 'கூரியதோர் வாண்மன்' என் புழித் 'திட்பமின்' றென் பது வாளை வேறுபடுத்தினவாறு அச்சூத்திரத்தாற் பெற்றாம். பிறவற்றையு மிவ்வாறே கொள்க.

இனி, சேனாவரையர், இடைச் சொல் லெல்லாம் விசேடித்து நிற்குமென்றாரா லெனின்,

'கொன்னூர் துஞ்சினும்'
'கொன்னே கழிந்தன் றிளமையும்'

என்றாற் போல்வன சிலவிடைச் சொற்கள் விசேடித் தலன்றி, எல்லாவிடைச் சொற்களும் விசேடித்து நில் லாமை ஆண்டு அவர் காட்டிய வுதாரணங்களை நோக்கி யுணர்க. (59)

456] உரிச்சொற்கும் விசேடித்த லுண்மை
உரிச்சொன் மருங்கினு முரியவை யுரிய.

இஃது, உரிச்சொற்கும் விசேடித்த லுண்டென்கின்றது.

(இ-ள்) உரிச்சொன் மருங்கினும்- உரிச்சொல்லிடத் தும் உரியவை யுரிய-விசேடிக்குஞ் சொல்லாதற் குரியன வுரியவா மென்றவாறு.

எல்லா முரியன வாகா எனவே, யுரிச்சொற்கள் விசேடித்தும் விசேடிக்கப்பட்டும் நிற்பன வுளவென்பது பெற்றாம்.

(உ-ம்) 'உறுகால்' தவப்பல, நனிசேய்த்து, ஏகல் லடுக்கம் என்பன வொன்றை விசேடித் தல்லது வாரா.
'குருமணி, விளங்கு குரு
கேழ்கிள ரகலம், செங்கேழ்
செல்லனோய், அருஞ்செல்லல்
இன்னற்குறிப்புப், பேரின்னல்

இவை தாமொன்றனை விசேடித்தும் பிற தம்மை விசேடிக்கப்பட்டும் நின்றன,

'குரு விளங்கிற்று; செல்லறீர்க; வெனத் தாமே நின்று வினைகொள்வன விசேடிக்கப்படுந் தன்மை யுடையன வென்றுணர்க. பிறவு மிவ்வாறு வருவன வுளவேற் கண்டு கொள்க.

'மருங்கினு' மென்ற வும்மையை யெச்சவும்மை யாக்கி, யிடைச் சொற்களினும் விசேடித்து நிற்றற் குரியன சிலவுள; வெல்லா முரியன வாகா வெனப் பொருளுரைத்து,

'கொன்னூர் துஞ்சினும்
'கொன்முனை யிரவூர் போல'
'கொன்னே கழிந்தன் றிளமையும்'

என்றாற் போல வருவன பிறவுங் கொள்க.

முன்னிற் சூத்திரத்தாற் கூறிய விசேடித்த வுரிச் சொற்கு மிடைச்சொற்கு மேற்றலி னவற்றையு மீண்டுக் கூறினார். விசேடித்த லிடைச் சொற்குச் சிறுபான்மை யாக லினதனை யும்மையாற் றழீஇயினார். (60)

457] வினையெச்சம் முதலியன வேறுபெயர் பெறல்

வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

இது, வினையெச்சம் முதலியன வேறுபெயர் பெறு மென்கின்றது.

(இ-ள்) வினையெஞ்சு கிளவியும் — வினையெச்ச மாகிய சொற்களு (மும்மையாற் பெயரெச்சமாகிய சொற்களும் முற்றுச் சொற்களும்,) வேறுபல் குறிய — முற்கூறிய பெயர்களோடு வேறு வேறாகப் பலபெயர் களையு முடையவாம். (எ—று)

(உ-ம்) பெயர்த்தனென் முயங்கயான்—இது வினை யெச்சத் தன்மைத் தெரிநிலை முற்று.

'வந்தனை சென்மோ வளைமெய் பரப்ப — இது

வினையெச்ச முன்னிலைத் தெரிநிலை முற்று

'முகந்தனர் கொடுப்ப'
'மோயின ளுயிர்த்த காலை'—இது வினை யெச்சப் படர்க்கைத் தெரிநிலை முற்று.
'ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழி' — இது வினையெச்ச உளப்பாட்டுத் தன் மைத் தெரிநிலை முற்று.

'வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந'
இது வினையெச்சத் தன்மை வினைக்குறிப்பு முற்று.

'நன்னர் நறுநுத லயந்தனை நீவி'
'வெள்வேல் வலத்திர்' இவை வினையெச்ச முன்னிலை வினைக்குறிப்பு முற்று.

'சுற்றமை வில்லாச் சுரிவளர் பித்தைய
ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்'

இவை வினையெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று. இன்னும் வேறுவேறு பெயர் பெற்று வருவனவுங் கொள்க.

'எல்வளை நெகிழ்த்தோர்க் கல்ல லுறீஇயர்'
'உள்ளேன் றோழி! படீஇயரென் கண்ணே'
'கேட்டீவா யாயின்'

என்பன வினையெச்ச வினைத்திரிசொல். இங்ஙனம் வினை யெச்சந் திரிந்து நிற்கு மெனவே, யீறு திரிந்து நிற்குமென வினையியலுட் காட்டி யவற்றிற்கு மிதுவே விதியாயிற்று.

இனிப், பெயரெச்சம் வேறு பெயர் பெறுமாறு.

'அவர் தம் முள்ளான்
றருமை தத்த னென்பான்'

எனவும்,

'கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காணிரோ'

எனவும்.

'குவளை யேயள வுள்ள கொழுங்கணா
ளவளையே'

எனவும்,

'புரிமாலையர் பாடினியரும்'

எனவும் வந்தன உயர்திணை முப்பாற் கண்ணும் வந்த பெயரெச்ச படர்க்கை வினைக்குறிப்பு முற்று.

'பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
தெரிநடைய மாகளிறு
தன்றாள் பாடுநர்க்கு நன்கருளியும்'

இவை யஃறிணை யிருபாற் கண்ணும் வந்த பெயரெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று

'பெருவேட்கையே னெற்பிரிந்து'

இது பெயரெச்சத்தன்மை யொருமை வினைக் குறிபபு முற்று.

'கண்புரை காதலே மெம்மு முள்ளாள்'

இது பெயரெச்சத் தன்மை யுளப்பாட்டுப் பன்மை வினைக்குறிப்பு முற்று.

'உலங்கொ டோளினை யொருநின்னால்'

இது, பெயரெச்ச முன்னிலை யொருமை வினைக் குறிப்பு முற்று.

'வினை வேட்கையிர் வீரர்வம்மின்'

இது, பெயரெச்ச முன்னிலைப் பன்மை வினைக் குறிப்பு முற்று.

இன்னும், வேறு வேறு பெயராய் வருவனவுங் கொள்க.

பின்பு நூல்செய்தோர் 'வினையெச்ச முற்' றென்று பெயர் கூறாமன் 'முற்றுவினை யெச்ச' மென்று பெயர் கூறினாரேனும் 'பெயரெச்ச வினைக்குறிப்பு முற்' றென்று பெயரெச்சத்திற்குக் குறியிட்டாள வேண்டுதலி, னதற்கு மப் பெயரே கொள்ளவேண்டு மென்றுணர்க'

'இனி 'பாயுந்து' 'தூங்குந்து'

எனவும்,

'சினைஇய வேந்த னெயிற்புறத் திறுத்த'

வெனவும்

'கடை இயநின் மார்பு

எனவும். வருவன பெயரெச்ச வினைத்திரிசொல்.

இனி,

'கண்ணும் படுமோ வென்றிசின் யானே'
இது தன்மை முற்று வினைத்திரி சொல்.
ஈங்குவந் தீத்தந்தாய்'
இது முன்னிலை முற்று வினைத்திரிசொல்.
'புகழ்ந்திகு மல்லரோ'
இது படர்க்கை முற்று வினைத்திரி சொல்.

இவ்வாறே மூவகைப் பெயர்களும் வேறுவேறு பெயர் பெற்று நிற்றல் கூறவேண்டுதலி, னிதனை யிவ் வோத்தினுட் கூறினார்.

இங்ஙனம் பெயர்கள் கூறவே, யவற்றிற் குரிய விலக்கணமுங் கூறினாராயிற்று.

இனி, யோரெச்ச மோரெச்சமாய்த் திரிந்து வரு வனவும் வேறே பெயர் பெறுதலி, னவற்றிற்கும் இதுவே யிலக்கணமாம். 'இவற்றுள்ளும் விசேடித்து

நிற்பனவுமுள', வென்ப துணர்த்துதற்கு 'உரிச்சொன் மருங்கி' னென்னுஞ் சூத்திரத்தின் பின்னிதனை வைத்தார்.

'இதனை விரவு வினையாகிய வினையெச்சமும் பெயரெச்சமும், பாலுமிடமுங்காட்டி நிற்றலின், முற்றெச்சமாய்த் திரிந்ததென்னாமோ? வெனின், என்னாம்; 'அளிநிலைபெறா' தென்னு மகப்பாட்டினுள், ஒண்ணுதல், 'துறுக வந்து, முக மாறிக் கொள்ளாது, தனித்து, வடுக்கொளுத்தி, நக்கு, முகத்தினுரைத்து, ஒற்றி மோந்து, உயிர்த்தகாலை' யெனவினை யெச்ச வடுக்காகச் செய்யுட் செய்கின்றவர், தம் பேரறிவுடைமை தோன்ற, வெழுவாய்க்கும் பயனிலைக்குமிடையே கிடந்து பயனிலையை விசேடிக்கு மெச்சங்களுட் சில வற்றைத் திரித்துப் பாலு மிடமுங் காட்டி நிற்பச் செய்யுட் செய்தாராதலின். இனிப் பெயரெச்ச வினைக் குறிப்பு மூற்றுக்கும் அவர் தம்மிடத்தே நின்ற தருமதத்தன், புரிமாலை யணிந்த பாடினியர்' எனப் பெயரெச்சம் விரிந்தவாறு காண்க.

பெரும்பான்மை யிங்ஙனம் செய்யுள் செய்தற்குக் காரணம் விரவுவினை பிரிவு வேறுபடூஉஞ் செய்தியவாய்ப் பிரிந்து நிற்குங்காற் பாலுமிடமுங் காட்டுந் தன்மையுந் தம் முள்ளே யுடைய வாயினமையின், அவ்வெச்ச வாய்பாடு முடனோதி யெல்லாவற்றிற்கு மொரு வினையே முடிவு கூறிற்றென்றுணர்க. அன்றியு முற்றெச்சமாய்த் திரிந்தடுக்கியுந் தனித்தும் வந்து வினைகோடலாசிரியர்க்குக் கருத்தாயிற் சிறுபான்மையாய் வினைகொள்ளு முற்றிற்குச் சூத்திரஞ் செய்தாற் போல முற்றுச்சொல்லடுக்கியு மடுக்காதும் வந்து பெயரொடு முடிதற் 'கவைதாந், தத்தங் கிளவி' யென்று சூத்திரஞ் செய்தாற் போல முற்றுச்சொல்லே யெச்சமாகி யடுக்கியுந் தனித்தும் வந்து வினைகொள்ளு மென்றாற் போல வோர் சூத்திரஞ் செய்திலராம்; அங்ஙனம் பெரும்

பான்மையும் வழங்குவதோ ரிலக்கணத்திற்குச் சூத்திரஞ் செய்யாமையினவர்க்கது கருத்தன்மையு முணர்க. அன்றியும், வினையெச்ச முற்றாய்த் திரிந்து பின்னு மதன் பொருளுணர்த்தி நிற்றலின்றி யென்னும் வினையெஞ் சிறுதி' யென்னுஞ் சூத்திரத்தானு முணர்க.

இவ்விலக்கணத்தினது நுண்மையை யுணர்த்தலாற் றாப் பின்னுள்ளோர், 'முற்றே யெச்சமாகலு முரித்தே' யெனச் சூத்திரஞ் செய்தார். அவர் கருத்தைப் பற்றிச் சேனாவரையரும் முற்றெச்சமா மென்றார். அது பொருந்தாமை, யிக் கூறியவாற்றானுஞ் சான்றோர் செய்யுட்கு முன்னுள்ளோர் கூறிய வுரைகளானு முணர்க.

இனி, 'ஞாயிறு பட' வென்னுஞ் செயவென்னச் சத் தகரவீறு. 'பட்டு' எனவுகரவீறாய்த் திரிந்து நின்றது; என்றாரா லுரையாசிரிய ரெனின், 'ஞாயிறு படவந்தா' னென்பது, 'ஞாயிறு படா நிற்க வந்தான்', என நிகழ் கால முணர்த்துதல் வழக்காதலினிது திரிந்திறந்த கால முணர்த்து மென்றல் பொருந்தாமை யுணர்க.

458) தொடர் மொழிப் பொருள் வேறுபாடு
உரையிடத் தியலு முடனிலை யறிதல்.

இது, தொடர் மொழிப் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) உரையிடத்திலும் —ஓரெச்ச வாய்பாடாகக் கூறுமிடத்தது. தானே மற்றோ ரெச்ச வாய்பாட்டிற்கு மேற்று நடக்கும். உடனிலை யறிதல் — கூட்டத்தினை யறிந்து தொடர் மொழிக் கேற்ப வெவ்வேறாகப் பொரு ளுரைக்க வென்றவாறு.

(உ-ம்) பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கி
னாண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்.'

என்புழிப், பெண்மை சுட்ட வேண்டியாண்மை திரிந்த, வென வினையெச்ச வாய்பாடாயும், 'பெண்மை சுட்டிய பெயர்நிலைக்கிளவியெனப் பெயரெச்ச வாய் பாடாயும் நின்றவாறு காண்க.

'ஆடிய கூத்தனும் வந்தா னவனோடு
பாடிய கூத்தியையுங் கொண்டு'.

என்றாற் போல்வனவுஞ், சான்றோர் செய்யுட் கணிவ்வாறு வருவனவும், பிறவு மிதனான் முடித்துக் கொள்க.

இன்னு 'முடனிலை' யென்றதனானே, 'ஓடிவந்தான், விரைந்து போயினான்,' என முடிக்கும் வினையோ டுட னிகழ்வனவுங் கொள்க.

இச்சூத்திரத்திற்கு 'வழக்கிடத் துடனிற்கற்பால வல்லனவற்ற துடனிலை போற்றுக,' வென்று பொருள் கூறி யிந்நாழிக் கிந்நாழி சிறிது பெரிது' என்பது காட்டி னாரா லுரையாசிரிய ரெனின், அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப் பொருளா யடங்குத லானுஞ், 'சிறி' தென்பது பெருமையை விசேடித்து நிற்ற லானும், அஃதுதான் முன்னர்ப் பெறப்பட்டமையானு, மிவ்வெச்ச மயக்கங் கூறுதலே யாசிரியர் கருத்தென்று ணர்க. (62)

459] வினைக்குறிப்புச் சொல் பொருடரும் வேறுபாடு
முன்னத்தி னுணருங் கிளவியு முளவே
யின்ன வென்னுஞ் சொன்முறை யான.

இது, வினைக்குறிப்புச்சொற் பொருடரும் வேறுபாடு கூறுகின்றது.

**(இ-ள்)** இன்னவென்னுஞ் சொன் முறையான—இத் தன்மைய வென்று சொல்லப்படும் வினைக்குறிப்பு சொற்கள் பொருடரும் முறைமை யிடத்து, முன்னத்ச்

னுணருங்கிள வியுமுள—அவற்றுட் சில நுண்ணுணர் வுடையோர்க்குக் குறிப்பினாற் றெரிநிலைப்பொரு ளுணரப்படுஞ் சொற்களுமுள; அவற்றை யுணர்க வென்றவாறு.

உம்மையாற், றெரிநிலைப்பொரு ளுணரப்படாத சொற்களு முளவென்றுணர்க. தெரிநிலைப் பொருளு ணர்த்துவன, வினையெச்ச வினைக் குறிப்பு முற்றும் பெயரெச்ச வினைக் குறிப்பு முற்றுமாம். தெரிநிலைப் பொருளுணர்த்தாதன, ஏனை வினைக் குறிப்பு முற்றாம்.

முருகாற்றுப் படையுள்,

'கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
றகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே'

என்புழி வந்த வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்களாக்கம் பெற்றுப் பொரு ளுணர்த்துங்காற், 'கச்சைக் கட்டி, கழலை யணிந்து, கண்ணியைச் சூடி குழலை யூதி, கோட்டைக் குறித்து, பல்லியங்களை' யெழுப்பி, தகரைப்பின்னிட்டு, மயிலையேறி, கொடியை யுயர்த்து, வளர்ந்து, தோளிலே தொடியை யணிந்து, துகிலை யுடுத்து, ஏந்தி, தழீஇ, தலைக்கை கொடுத்து ஆடலும் அவற்கு நிலை நின்ற பண்பெனச்' செய்தெ னெச்சப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க.

முன்னர்க் காட்டிய பெயரெச்ச வினைக் குறிப்பு முற்றுக்கட்குந் தெரிநிலை வாசகமாக விரித்துப் பொருள்

கூறுதற் கேற்பனவற்றை யுணர்ந் தவற்றிற் கேற்கத் தெரிநிலையாகப் பொருள் கூறிக்கொள்க.

'நல்ல னறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்,' எனக் குறிப்பு முற்றடுக்கிப் பெயரோடு முடி புழி, நல்லனாயிருப்ப, னறிவுடையனா யிருப்பன்; செவ் வியனா யிருப்பன், சான்றோர் மகன்,' என விரித்துப் பொருள் கூறியக்காலும் அத்தெரிநிலைப் பொருளுணர்த் தாதவாறு காண்க,

இச்சூத்திரத்திற் குரையாசிரியர், 'சொல்லுவான் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொற்களு முள, 'விப் பொருளித் தன்மைய' தென்று கூறுதற்கண், ணெனப் பொருள் கூறி, 'செஞ்செவி வெள்ளொக்கல' ரென்பது காட்டினாரா லெனின், அது குறிப்பிற் றோன்றலினது வேறுபாடாமென மறுக்க. (63)

460] மரபு வழுவமைதி

ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்.

இஃதொரு சொல் லிருபொரு ளுணர்த்துவதோர் மரபு வழுவமைக்கின்றது. இதனை, 'யொரு சொல்லிரு பொருட் பிரிவில வரையார்', என மாறுக.

(இ-ள்) இருபொரு ளொரு 'சொற் பிரிவில வரை யார் ஒருசொல் லொருகாற் கூறுதற் கண்ணே யிரண்டு பொருளைப் புலப்படுத்தி யிரண்டற்கும் பிரிவிலவாய் நிற்றலைச் சிறப்புடைய வென்று கொள்வா ராசிரிய ரென்றவாறு.

'பிரிவில' வென்ற, திரண்டற்கு மொப்ப நிற்றலை,

(உ-ம்) 'குழல்வளர் முல்லையிற் கோவலர் தம
மொடு

மழலைத் தும்பி வாய்வைத் தூத'

என்புழி, 'குழல்வளர் முல்லை'யென்று கூறியபொழுதே யாய ரூதுங் குழலிலே யெழுந்த முல்லை யென்னும் பண்ணையும் மயிரிலே கிடந்த முல்லை யென்னும் பூவையு மொருகாலத்தே புலப்படுத்தி யிரண்டற்கும் பிரிவிலவாய் நின்றவாறு காண்க.

இஃதொரு சொல்லொருகாற் கூறுதற்கணிரண்டு பொருளை யுணர்த்துதல் வழுவேனு மமைக' வென அமைத்தார். இதனையு முவம வியலு 'ளொரீஇக் கூறலு' மென்னுஞ் சூத்திரத்துச் செய்யுட் கிலக்கணமு மாகக் கூறுமாறு முணர்க. இங்ஙனஞ் சான்றோர் செய்யுட்களுட் பலவிடத்தும் வருமா றுணர்க.

'வரையா' ரென்றதன, னிவை விகாரப்பட்டு நிற்பனவுங் கொள்க.

'பாடுதும் பாவை பொற்பே'

என்ற வழி, ஒருகாற் 'பொலிவே' யென் றேகார வீறாயும் ஒருகாற். 'பொன்னாற் செய்த பே' யென்று யகரவீறாயும் விகாரமாயும் நின்றவாறு காண்க. இவ் வாறு வருவன பிறவு முணர்க.

இன்னு, 'முய்த்துக் கொண்டுணர்த' லென்னுந் தந்திரவுத்தியா னிச் சூத்திரத்திற்குச் செவ்வனே கிடந்த வாறும் பொருள் காண்க.

ஒரு பொருளையே யுணர்த்தி நிற்கு மிரண்டு சொற் கடம்மிற் பிரிதலின்றி நிற்பனவற்றை நீக்கார் கொள்வ ராசிரிய ரென்றவாறு.

(உ-ம்) 'நிவந்தோங்கு பெருமலை'
'துறுகன் மீமிசை'

என்றாற் போல வொரு சொல் லிடை வாராம லடுக்கிநிற்பனவுங் கொள்க. (64)

461) பால் வழுவமைதி

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே.

இது, பால்வழு வமைக்கின்றது.

(இ-ள்) ஒருமை சுட்டிய பெயர்நிலைக்கிளவி—ஒருமையைக் கருதிய பெயராகிய நிலைமையை யுடைய சொல், பன்மைக்காகு மிடனுமாருண்டே—பன்மைக்குப் பொருந்திநிற்கு மிடமு முண்டென்றவாறு.

எனவே, பன்மை சுட்டிய பெயர்ச் சொல்லொருமைக்குப் பொருந்தி நிற்கு மிடமு முண்டென்னும் பொரு ளருத்தா பத்தியாற் றந்தது.

(உ-ம்) 'அஃதைதந்தை
யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்'

என்புழி, சோழர் எல்லாரு மகுதைக்குத் தந்தையாம் முறையராய் நிற்றலின் 'தந்தை' யென்னு மொருமைச் 'சோழ' ரென்னும் பன்மையோடு தனித்தனி சென்று கூடுதலின் வழுவின்றேனும், ஈற்றுப் பன்மை பற்றி வழுவமைத்தார்.

'புலையனெறிந்த பூசற் றண்ணுமை
யேவ லிளையர் தாய்வயிறு கரிப்ப'

என்புழி, இளையரென்னும் பன்மை தாயென்னு மொருமையோடு பொருந்தும் வழி யொருவர்க்கொருத்தி தாயாந் தன்மையான் வழுவின்றேனு, மீற்றுப் பன்மை பற்றி வழுவமைத்தார். இவை பொருளிடையிடுத லென்னு முத்தியாம்.

இன்னு மிதனானே,

'தினைத்தா ளன்ன சிறுபசுங்கால
வொழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே'

எனப் பன்மை சுட்டிய பெயர்ச்சொல் லொருமை யோடியை பின்றி யியைதலின், வழுவா யமைவதூஉங் கொள்க. 'குரு' கென்ப தியற்பெய ராதலி, னதன்கட் பன்மையோடு 'கால' வென்பதியைந்து காலனவாகிய குருகுகளென நிற்பின். அஃது 'உண்டு' என்னும் ஒருமைக் கேலாமையின், 'குருகு' என்பது ஒருமையாயே நின்றது ஆதலின், வழூவேயாம்: 'கள்வன்தான் ஒருவனுமே; வேறுசிலர் ஆண்டு இல்லை, என்று கூறுகின்றாள், இரைதேரும் மனக்குறிப்பு உடைமையின் கேளாது; சிறிது கேட்டதாயினும், கொலைசூழ் குருகு ஆதனின், கூறுவதும் செய்யாது; இத்தன்மைத்தாய தோர் குருகுமுண்'டென்று கூறுதலி, னுண்டென்றொ' ருமை வாசகத்தாற் கூறினர்.

இனி, 'அவ்விரண்டினுட் கூர்ங்கோட்ட சுடர்வே' லென்புழி, 'யிரண்டனு'ளென, வொன்றை வகுத்தமை யாற் 'கூர்ங்கோட்ட'தென் னொருமை யாகற் பாலது 'கோட்ட' வெனப்பன்மையாய் நிற்றலு மிதனாற் கொள்க.

'என்னீ ரறியாதீர் போல விவைகூறின்'

என வொருவனைப் பன்மையாற் கூறிப் பின்னர்,

'நின்னீர வல்ல நெடுந்தகாய்'

என வவனை யொருமையாற் கூறுவன போல்வனவும்,

'இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய'

என்றாற் போல்வனவு மிதனாற் கொள்க.

இன்னு மிதனானே, நம்பிமார், நங்கைமார் அன்னை மா' ரென்றாற் போல் வொருமைப் பெயரடுத்து நின்று மாரீறு பன்மை யுணர்த்துதலுங் கொள்க.' யானெம் மூர் புகுவன்', நீநும்மூர் புகுவை, என்றாற்போல் வனவோ! 'வெனின்' அவையான் புகுவன்; நீபுகுவை,'

யென வொருமை முடிபோடு முடிந்து நிற்ப, எம்மூர், நும்மூர் என்பன வேறோர் முடிபாய் நின்றன வென்று கொள்க.

இனி,

'மன்ற மராஅத்த பேமுதிர் கடவுள்'

என்பது, 'மராத்துக் கடவு' ளெனநிற்கும். இவை போல் வனவன்றி, முன்னர்க் காட்டிய வுதாரணங்கள் போல மயங்கி வருவன வுளவே லவற்றையு மிச்சூத் திரத்தானமைத்துக் கொள்க. (65)

162] ஆற்றுப்படையில் முன்னிலை யொருமை பன்மையோடு முடிதல்.

முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இஃதாற்றுப் படைக்கண் முன்னிலை யொருமை பன்மையோடு முடிக வென்கின்றது.

(இ-ள்) முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி— முன்னிலை யிடத்தைக் கருதின வொருமைப் பெயர், பன்மையொடு முடியினும் வரைநிலையின்று—பன்மைச் சொல்லோடு முடியினு நீக்குநிலையின்று, ஆற்றுப் படை மருங்கிற் போற்றல் வேண்டும்-அம்முடி பாற்றுப் படைச் செய்யுளிடத்துச் சுற்றத்தார் தலைவனை யாற் றுப்படுத்தற்கண்ணதாகப் பாதுகாத்துணர்த்தல் வேண்டு மென்றவாறு.

(உ-ம்) கூத்தராற்றுப் படையுட் 'கலம்பெறு கண் ணுள ரொக்கற் றலைவ!'. வெனநின்ற வொருமைச் சொன்முடிவுழி, யிரும் பே ரொக்கலொடு பதமிகப் பெறு குவிர், என்னும் பன்மையோடு முடிந்தவாறு காண்க.

இவ்விரண்டு சூத்திரத்தானுங் கூறிய மயக்கஞ் சிறு வரவிற்றா யிலக்கண வழக்குண்மையிற், 'பான்மயக் குற்ற'வென்னுஞ் சூத்திரத்தாற் கூறிய வொருமைப் பன்மை வழுவமைதி யாகிய விலக்கண வழக்கோ டுடன்வையா தீண்டுவைத்தார். (66)

463] அதிகாரப் புறனடை

செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியி னூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.

இது, 'யான் பிரித்துக் கூறாதனவற்றை விரித்துக் கூறிக்கொள்க' வென வதிகாரப் புறநடை கூறுகின்றது.

(இ-ள்) செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும் — இவ்வதிகாரத்தின்கட் செய்யுளிடத்தும், வழக்கிடத்தும் மெய் பெறக் கிளந்த கிளவியெல்லாம்— சிலவற்றிற்கு ஞாபகமாகப் பொருள் பெறச் சொல்லப் பட்ட சொற்க ளெல்லாவற்றையும், பல்வேறு செய்தியி னூனெறி பிழையாது-செம்பொருளவாய்ப் பலவாக வேறுபடுத்திய விரிவுகளையுடைய அகத்நிபத்திற் கூறிய நெறியிற் றப்பாமல், சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்-சொல்லை வேறுபடுத்து மாணாக்கனுணரு மாறு நுண்ணுணர்வுடையோருரையானுங் காண்டிகை யானும் பிரித்துக் காட்டுக வென்றவாறு.

அங்ஙன முணரப் பிரித்துக் காட்டுமா றென்னை? யெயனின், இரண்டாவது

'வினயே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்றும்'

என்றதற்கு. மூவகையவாகிய வினைச்சொல்லினும் வினைச்குறிப்புச் சொல்லினும், பிறக்குங் காரணங்க

ளெட்டனுட் செயப்படுபொருட்கண்ணே இரண்டாவது தோன்றுமென்றும் அச்செயப்படு பொருள்கடாமூவகைய வென்றும், மூன்றாவதற் கோதிய வினைமுதல் இயற்றும் வினைமுதலு மேவும் வினைமுதலுமென விருவகைய வென்றுங், கருவி முதற் காரணமுந்துணைக் காரணமு மெனவிருவகையவென்றும், நான்காவதற் கோதிய கொடைப் பொருள் இருவகைய வென்றும், ஐந்தாவதற்குப் பொருணால்வகைய வென்று, மதன் கணுறழ் பொருவு முவமப் பொருவும் ஆமென்றும், ஏது காரகவேதுவும் ஞாபக மேதுவுமா மென்றும், ஆறாவதற்குத் தற்கிழமையை வகைய பிறிதின்கிழமை மூவகைய வென்றும், பிறவும் வேற்றுமை யோத்தினுட் பிரித்துக் காட்டினாம்.

இனி 'வினை யெனப்படுவ' தெனப் பொதுப்படக் கூறிய முதனிலைகளை யின்னவாறு வருமெனப் பிரித்துக் காட்டியும், அவை யெடுத்த லோசையான் முன்னிலையேவ லொருமை முற்றாய் நிற்கு மென்றும், கடதறக்கண் முதனிலையையடுத்து வருங்கா லிறப்பு, மீற்றினை யடுத்து வருங்காலெதிர்வு முணர்த்து மென்றும், 'நில், கின்' றென்பன நிகழ் கால முணர்த்து மென்றும், பகர வகர மெதிர்கால முணர்த்து மென்றும், ஏனைய வெழுத்துக்க'ளின்' பெற்றும்பெறாது முகரம் பெற்றும் பெறாதும் வருமென்றும், வினைக்குறிப்புக்கள் பண்பாங் காலத்துங் குறிப்பாங் காலத்தும் வேறு பொருளுணர்த்து மென்றும், விரவு வினைகள் பிரிவு வேறு படூஉஞ் செய்தியவாங் காலத்து முடிக்குஞ் சொல்லானு மன்றித் தம்முள்ளே பாலு மிடமுங் குறித்துக் கொள்ளுந் தன்மையை யுடைய வென்றும், வினையெச்சங்கள் காலங் காட்டு மெழுத்துக்கள் பெறுமென்றும், அவை காரண காரியம் பெறுமென்றும், பெயரெச்சங்களுட் காரணப் பொருட்டாய் வருவன கருவிக் கண்டங்கு மென்றும், பிறவும் வினையியலுட் பிரித்துக் காட்டினாம்.

இனி, யறுவகைத் தொகையும் தொகுங்கால் இன்ன சொற்கண்ணே இன்ன தொகை தொகுமென்றும், முற் கூறிய வினைச்சொற்கடாமும், சில முக்காலமும் உணர்த்து மென்றும், அவை பெயர்கள் பெறுங்கால் இன்னவாறே பெயர்கள் பெறுமென்றும், பிறவு மெச்ச வியலுட் பிரித்துக் காட்டினாம்.

இனிச் 'சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்ட லென்பதனால், 'திரையனூர்' ரென்பது, 'திரையனாற் செய்யப்பட்ட வூரெனவுந் திரையனுடைய வூ' ரெனவு, மூன்றாவது மாறாவதும் விரிந்தது.

'கடிப்பகை' யென்பது, நான்காவது, மாறாவதுங், கடியாகிய பகை' யெனப் பண்பும் விரிந்தது.

ஏழேகா லென்பது 'ஏழுங்காலு' மென வும்மையும், 'ஏழேகா னிலமான வூ' ரென வன்மொழியும் விரிந்தது.

சொல்லிலக்கண மென்ப, தாறாவதும், நான்கா வதும், ஏழாவதும், விரிந்தது; சொல்லிலக்கணங் கூறிய நூலெனவாகு பெயருமாய் நின்றது.

'பொன்மணி', யென்பது மூன்றாவது, மைந்தாவதும் ஏழாவதும், பொன்னும் மணியு, மென வும்மையும் விரிந்தது.

'கருப்புவேலி' யென்பது, நான்காவது, மாறாவது, மேழாவதும், மூன்றாவது, மைந்தாவதும், விரிந்தது.

'இயலிசை' யென்பது, ஆறாவது, மேழாவது, 'மியலு மிசையுமென' வும்மையும், 'இயல்கின்ற விசை' யென வினையு, 'மியலாகிய விசை' யெனப் பண்பும் விரிந்தது.

'உரைவிரி' யென்பது, ஆறாவதும், நாலாவது, மேழாவது மிரண்டாவதும் 'உரைக்கும்விரி'யென வினையும், உரைவிரியையுடைய' தென வன்மொழியும் 'விரிந்தது.

'கருத்துப்பொரு, ளென்பது, இரண்டாவதும், மூன்றாவது, மைந்தாவதும், நான்காவது, மாறாவது, மேழாவதும், 'கருத்தும் பொருளு' மென வும்மையும் விரிந்தது;

'சொற்பொரு' ளென்பது, மூன்றாவதும் நான்காவது, மைந்தாவது, மாறாவதுஞ், 'சொல்லும் பொருளு' மென வும்மையும், சொல்லாகிய பொருளெனப் பண்பும் விரிந்தது.

இவ்வாறே பிற சொற்களுந் தொக்கு விரியுமாறறிந்து பிரித்துக் காட்டுக.

'இவனியா ரென்குவை யாயி னிவனே',

என்னும் புறப்பாட்டினுட், சேரனை முன்னிலையாக்கி முடமோசியார் கூறுகின்றகாலத் 'திவ' னென்பது முன்னிலைப்படர்க்கையாய் நின்றது. இவ்வாறு வருவனவும் பிறவும் பிரித்துக் காட்டுக.

'கொல், செல், வெல்' என்பன லகாரம் னகாரமாய்த் திரிந்து, தனக்கேற்ற றகர வொற்றுப் பெற்றுப் பாலுமிடனுங் காட்டு 'மா'னேறிக். 'கொன்றான், சென்றான், வென்றான்' என நின்றன.

'கோறு' 'கோறும்; வேறு, வேறும்; சேறு, சேறும் என்பன முதனிலை நீண்டு, லகர வொற்றுக் கெட்டுத் தமக்குரிய வொருமைத்தன்மை யீறும் பன்மைத்தன்மை யீறும் பெற்று நின்றன.

'வா' வென்பது' வந்தான், வருகின்றான்' என முதனிலை குறுகி, கால வெழுத்திற் கேற்ற வினை நிலையெழுத்துப் பெற்று வந்தன.

'கொள்' ளென்பது, 'கொண்டான், கோடு, கோடு மென ளகாரம் ணகாரமாயுங், கெட்டு முதனிலை நீண்டும் வந்தன.

கை வாரங் கொள்வானைக் 'கை வாரி' யெனவுந், திருவில்லாதானைத் 'திருவிலி' யெனவு, மறிவில்லாதானைத் 'யறி விலி' யெனவும், நூலோதினானை 'நூலோதி' யெனவு, மிவ்வாறே யீறு திரிந்து வருவனவும், பிறவும் பிரித்துக்காட்டுக.

'வில்லி, வாளி' வினைக்குறிப்பு முற்று ஈறுதிரிந்த பெயர்.

'வலைச்சி' பனத்தி, வெள்ளாட்டி' முதலியன, சகபமுந் தகரமும் டகரமுமாகிய விடைநிலை பெற்றன.

'செட்டிச்சி, கணக்கச்சி' முதலியன, இச்சென்னுமிடை நிலை பெற்றன.

'கணவாட்டி, இவ்வினைப் பெயர் டகரம பெற்றது

இன்னு மிவ்வாறே வருவனபிறவும் பிரித்துக் காட்டுக.

'கிள்ளிகுடி', கிள்ளியுடைய குடி மக்க ளிருக்குமூரெனவும், கீழ்வயிற்றுக் கழலை,-கீழ் வயிற்றின் கண்ணேயெழுந்த கழலையைப் போல்வா' னெனவு மன்மொழித் தொகையாம்.

'வடுகக் கண்ண' னென வல்லொற்றடுத்தால், வடுக நாட்டிற் பிறந்த கண்ண' னென்றாம்; வடுகங்கண்ண னென மெல்லொற்றடுத்தால் 'வடுகற்கு மகனாகிய கண்ண' னென்றாகும்.

'நனிநீ டுழந்தன்று மன்னே யினியே.

யென்பது, பின்வருங்கால முணர்த்திற்று.

'இனி யெம் மெல்லை' யெனப் 'பின்' னென்னுமிட முணர்த்திற்று.

'ஏனோ, னென்ப, தொழி பொருளுணர்த்திற்று.

'ஏதில' னென்ப, தயலா'னென்னும் பொருளுணர்த்திற்று.

'உண்ணா நின்றா' னென்புழி, 'ஆ' வென்ப திடை நிலை யெழுத்தென் றுணர்க.

'வா, தா' என்றாற் போல்வன மறை யுணர்த்துங் கால் 'வாரான், தாரான், வாராதுபோயினான், தாராது போயினான், வாராத சாத்தன், தாராத சாத்தன்', என முதனிலை குறுகாது நிற்கு மென்றுணர்க.

'நன், தீ, சிறு, பெரு, வன், மென், கடு, முது, இள புது, பழ, இன், உடை, அன், என்பன முதலிய முத னிலைகள், 'மகர வைகாரம் பெற்று, 'நன்மை, தீமை, சிறுமை, பெருமை என வினைக்குறிப்புப் பெயராய் நிற்குமாறும், இவைதாம் நன்று, தீது, சிறிது, பெரிது, வலிது, மெலிது, கடிது, முதிது, இளைது, புதிது, பழை யது, இன்று, உடைத்து, அன்று, என அஃறிணை வினைக்குறிப்பு முற்றாய் நிற்குமாறும், 'நல்லன், தீயன், சிறியன், பெரியன், வலியன், மெலியன், கடியன், முதி யன், இளையன், புதியன், பழையன், இலன், உடையன், அல்லன் என 'அன்' பெற்றுயர்திணை வினைக்குறிப் பாய் நிற்குமாறும், இவை தாமே 'ஆ'னென்னு மீறு பெற்று முற்றாயும், படுத்த லோசையான் வினைக்குறிப் புப் பெயரா யுரு பேற்றும், பயனிலைகொண்டும் நிற்கு மாறும் பிரித்துக் கொள்க. இவ்வாறே யேனைப் பால்க ளோடு மொட்டுக. இவை பண்பாய் நிற்குமாறும் உரிய வென் றுணர்க. இவை தாமே 'நன்றாய் வளர்ந்தான், வளர்ந்தது, தீயதாய்ப் போயினான், போயிற்று' என வினையெச்சக் குறிப்பா மாறும், 'நல்ல சாத்தன், தீய சாத்தன், எனப்பெயரெச்சக் குறிப்பா மாறுங் கொள்க.

'சிற, இழி, தீர்,' என்னும் முதனிலைக 'ஏல்' லீறு பெற்றும் 'அன்' னீறு 'மா'னீறும் பெற்றும் முற்கூறிய வாறே நிற்குமாறும், சிறந்து, இழிந்து, தீர்ந்து எனவும் 'சிறந்த, இழிந்த, தீர்ந்த' எனவும் வினையெச்ச வினைக் குறிப்பும் பெயரெச்ச வினைக்குறிப்பும் ஆமாறு முணர்க இவ்வாறு வருவன பிறவும் பிரித்துக் கொள்க.

'சுடரிழாய்! பன்மாணும்'

என்புழி, 'மா'னென்னு மிடைச்சொற் 'பலபடியும்' என்னும் பொருட்டாய் நின்றவாறு காண்க.

'பிரிதல் வல்லியா ரீதுந் துறந்தோர்'

என்புழி, 'வல்லாரா' யென வினையெச்சமாய் நின்றவாறு காண்க.

'கால்பொர நுடங்கலிற் கறங்கிசை யருவி'

யென்புழி, 'நுடங்குதலை யுடைய வருவி' யென நிற்குமாறு முணர்க. இவை போல்வன வோசை வேற்றுமையான் வேறுபடுவனவு முணர்ந்து கொள்க.

'நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்'

என்புழி, முன்ன ரெல்லாரு முளப்பாடாகக் கூறிய தோழி யீண்டும் 'பல்லே ருள்ளு' மென்னாது தன்னை நீக்கிக் கூறியதென்னை? யெனின், தலைமகன் றன்னை நோக்கி யழிவுதகக் கூறி யாற்றானாகி நின்ற நிலைமையைக் கண்டும் அருள் பிறவா தாயமுந் தலைவியும் போயவாறும் அதற்குத் தானழிவு தக்கு நிற்றலி னவரோடுடன் போதல மாற்றாது பின்னர்ப், 'போயவாறுந் தோன்றக் கூறுகின்றா ளாதலிற் 'பல்லோ ருள்ளு' மெனக் கூறினா ளென்று பொருள் கூறுக.

'முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
மரசெனப் படுவது நினதே யத்தை!

என்புழி ,'மூவி' ரென்னாத தென்னை? யெனின், புலவன் கூறுகின்ற விவனை யொழிந்த விருவகைக் குலத்தோரு மிவன் முன்னுள்ளோரும் படர்க்கைய ராதலின், அம் மூவகைக் குலத்துள்ளோரையுங் கூட்டி, 'முரசு முழங்கு தானை மூவர சுள்ளு'மர' சென் றீண்டுச் சிறப்பித்துச் சொல்லப் படுவ தச்சோழன்வழித் தோன்றிய நின் னரசே' யென்றா னெனப் பொருள் கூறுக.

இங்ஙனஞ் சான்றோர் செய்யுட்க ளிவ்வாசிரியர் கூறிய விலக்கணங்களு ளடங்காது போன்று கிடப்பன பிறவு முளவேனும் நுண்ணுணர் வுடையோ ரவற்றின் பொருட் பயனை நோக்கி, யொரு வாற்றா னிக் கூறிய விலக்கணங்களுளடக்கிக் கொள்க.

இச்சூத்திரத்தின் கருத், 'திவ்வதிகாரத்துட் சிலவற் றிற்கு விரித்துக் கூறாது, நுண்ணுணர்வுடையா ருணரு மாறு கூறிய விலக்கணங்களும் உள; அவற்றிற்கு முதனூலானும் விரித்துரை யானுங் காண்டிகையானு முணர்த்துக' என்று கூறுதலாம். இங்ஙனங் கூறினார், முடிந்தது காட்ட லென்னுந் தந்திர வுத்தக் கினமாக வென்றுணர்க. இங்ஙனங் கூறா,தியான் கூறப்படு மிலக்கணங்களை முதனூல்களாற் கூறிக்கொள்க', வெனின், அது குன்றக் கூறலென்னுங் குற்றமா மென் றுணர்க.

ஒன்பதாவது எச்ச வியன் முற்றும்.

தொல்காப்பியம் இரண்டாவது சொல்லதிகாரம் முற்றும்

ஆக, இயல் ஒன்பதற்கும் சூத்திரத்தொகை 463

விநாயகாய நம, வேலுமயிலும் முன்னிற்க.

சொல்லதிகாரத்திற்கு மதுரையாசிரியன் பாரத்து வாசி நச்சினார்க்கினியன் செய்த வுரையிடை யிட்ட காண்டிகை முடிந்தது.

---

பச்சைமா லனைய மேகம் பவ்வநீர் பருகிக் கானல்
வெச்சினாற் றிசையு முண்ணு மமிர்தென வெழுநா வெச்சின்
மெச்சிநா ணாளும் விண்ணோர் மிசைகுவர் வேத போத
நச்சினார்க் கினியர் நாவி னல்லுரை நுகர்வர் நல்லோர்,

பருவ ராலுகள் வாவிசூழ் மதுரையம் பதிவாழ்
பொருவ ராநச் சினார்க்கினி யானுரை புணையாங்
கருவ ராநெறி யுதவுதொல் காப்பியக் கடற்கே
வெருவ ராநின் றன்மகிழ்ந் தேகுவான் விரைந்தே
விநாயக சரண புண்டரீகமே துணை
கிருத்தி வாசன் துணை
இளங்கிளை வல்லி துணை

---

சொல்லதிகார வியற் சூத்திரத்தொகை

---

கிளவியோ ரறுபா னிரண்டுவேற் றுமையிற்
கிளரிரு பஃதிரண் டேழைந்
துளமயங் கியலாம்; விளியின்முப் பானேழ்
உயர்பெயர் நாற்பதின் மூன்று
தெளிவினை யியலைம் பானுடன் ஒன்று
செறியிடை யியலினாற் பானெட்
டொளிருரி யியலொன் பதிற்றுப்பத் துடனெட்
டொழிபுறு பானின்மே லேழே

---

# தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திர முதற்குறிப் பகராதி.

---

சூத்திர எண். பக்க எண்.

அ

| சூத்திர எண் | | பக்க எண் |
|---|---|---|
| | இயற்கைப் பொருளை ... | 23 |
| | இயற்கையினுடைமை ... | 100 |
| | இயற்சொல் திரிசொல் ... | 374 |
| | இயற்பெயர்க் கிளவியும் ... | 43 |
| | இயற்பெயர் சினைப்பெயர் ... | 181 |
| | இயற்பெயர் முன்னர் ... | 297 |
| 110 | இயைபே புணர்ச்சி ... | 331 |
| | இர் ஈர் மின்னென ... | 234 |
| | இரட்டைக் கிளவி ... | 52 |
| | இரண்டன் மருங்கின் ... | 115 |
| | இரண்டாகுவதே, ஐயென ... | 84 |
| | இருதிணைச் சொற்குமோ ... | 179 |
| | இருதிணைப் பிரிந்த ... | 167 |
| | இருதிணை மருங்கின் — | 14 |
| | இருபெயர் பலபெயர் ... | 406 |
| | இலம்பா டொற்கம் ... | 352 |
| 120 | இறப்பின் நிகழ்வினெதிர் ... | 198 |
| | இறப்பினிகழ்வின்—மோ ... | 416 |
| | இறப்பே யெதிர்வே ... | 278 |
| | இறுதியு மிடையும் ... | 123 |
| | இறைச்சிப் பொருள்வயின் ... | 195 |
| | இன்றில வுடைய ... | 226 |
| | இன்ன பெயரே ... | 193 |
| | இனச் சுட்டில்லாப் ... | 22 |
| | இனைத்தென வறிந்த ... | 37 |
| | ஈ | |
| | ஈதா கொடுவென ... | 435 |
| 130 | ஈரள பிசைக்கும் ... | 306 |

**சூத்திர எண்.** **பக்க எண்.**

சூத்திர எண் பக்க எண்

**சூத்திர எண்.** **பக்க எண்**

---

# தொல்காப்பியச் சொல்லதிகாரம்

# பொருளகராதி

---

## அகரவீறு

சூத்திர எண்

**ஏகார வீறு**

சூத்திர எண்.

சே



சொ



ஞெ



த



தா

சூத்திர எண்.

சூத்திர எண்

சூத்திர எண்

முற்றும்.

உ

**தொல்காப்பியம்**

**சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம்**

# அருஞ்சொல் முதலியவற்றின் அகராதி

எண் பக்க வெண் பக்க எண்

பக்க எண்,

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

செ

பக்க எண்



தீ



து

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்கம் எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

**வா**

பக்க எண்

முற்றும்

---

## தொல்காப்பியச் சொல்லதிகாரம்
## நச்சினார்க்கினியம்
# மேற்கோள் அகராதி

பக்க எண்

பக்க எண்

பக்க எண்.

## இகரம்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

## ஏகாரம்



## ஐகாரம்

## ஓகாரம்

பக்க எண்.

பக்க எண்.

பக்க எண்.

பக்க எண்



தூ

பக்க எண்



தெ



தே

பக்க எண்

நீ

பக்க எண்

## பூ

பே



பை



பொ

பக்க எண்

பக்க எண்

பக்க எண்

பக்க எண்



வா

பக்க எண்

வே

**வெள**



மேற்கோளகராதி முற்றும்



## இந்நூலுரையில் எடுத்தாண்ட நூற்பெயர்கள் முதலியவற்றின்

# முதற்குறிப்பு அகராதி

அகத்திணையியல் (தொல் பொருளதிகாரம் முதலாவது)

அகப்—அகப்பொருள்

அகம்—அகநானூறு (எட்டுத் தொகையினு ளொன்று)

ஆசாரக்—ஆசாரக்கோவை (பதினெண் கீழ்க்கணக்கினு ளொன்று

(இ-ள்) இதன் பொருள் (இச்சூத்திரப்பொருள்)

இறை அகப்—இறையனார் அகப்பொருளுரை

(உ-ம்)—உதாரணம்

உயிர்மயங்—உயிர் மயங்கியல் (எழுத்ததிகாரம்)

உவமவியல்—பொருளதிகாரம்

எழுத்—எழுத்ததிகாரம்

(எ-று)—என்றவாறு

ஐங்-ஐங்குறு-ஐங்குறுநூறு

ஏலாதி—கடைச்சங்க நூல்களிலொன்று

ஏனாதி—ஏனாதிநாதநாயனார் புராணம்

கல்லா—கல்லாடம்

கலி—கலித்தொகை

களவழி—களவழி நாற்பது (பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலொன்று)

களவியல்

கற்பியல்

கார்—கார் நாற்பது (பதினெண் கீழ்க்கணக்கினுளொன்று)

குற், புணர்—குற்றியலுகரப் புணரியல்

குறள்—திருக்குறள்

குறிஞ்சி—குறிஞ்சிப்பாட்டு(பத்துப் பாட்டினுளொன்று)

குறுந்—குறுந்தொகை (எட்டுத்தொகை நூலினுளொன்று)

சங். ந-சங்கர நமச்சிவாயப் புலவர்

சிலப்—சிலப்பதிகாரம் (ஐம்பெருங் காப்பியங்களிலொன்று)

சிறுபஞ்ச—சிறுபஞ்ச மூலம்

சிறுபாண்—சிறுபாணாற்றுப்படை

சீவக—சீவகசிந்தாமணி (ஐம்பெருங்காப்பியங்களிலொன்று)

சுயம்வர—சுயம்வரகாண்டம்

சூ—சூத்திரம்

செய்யுளியல்

திணை. நூற்—திணைமாலை நூற்றைம்பது

திரிகடுகம்

திருக்கோ—திருக்கோவையாருரை

தொல்—தொல்காப்பியம்

நச்—நச்சினார்க்கினியர்

நள—நளவெண்பா

நற்—நற்றிணை—எட்டுத்தொகையினுளொன்று

நன்—நன்னூல்

நாலடி—நாலடியார்

நான்மணி—நான்மணிக்கடிகை

நெடுநல்—நெடுநல்வாடை

பதிற்—பதிற்றுப்பத்து
பரி—பரிபாடல்
(பி-ம்)—பிரதிபேதம்
பு. வெ.—புறப்பொருள் வெண்பாமாலை
புள். மயங்-புள்ளி மயங்கியல்
புறத்திணையியல்
புறம்—புறநானூறு
பெரிய. பு-பெரியபுராணம்
பெரும்பாண்—பெரும்பாணாற்றுப்படை
பொருந—பொருநராற்றுப்படை
பொருளியல்—(பொருளதிகாரம்)
மதுரைக்—மதுரைக்காஞ்சி (பத்துப்பாட்டு)
மயிலைநா—மயிலைநாதர்
மரபியல்—(பொருளதிகாரம்)
மலைபடு—மலைபடுகடாம் (பத்துப்பாட்டு)
முத்தொள்ளாயிரம்
முதுமொழி—முதுமொழிக்காஞ்சி (பதினெண்கீழ்க்கணக்கு)
முருகு—திருமுருகாற்றுப்படை
முல்லை—முல்லைப்—முல்லைப்பாட்டு
மெய்ப்பாட்டியல் (பொருளதிகாரம்)
மேற்—மேற்கோள்
யாப். வி-விருத்தி
வேற். மயங்-வேற்றுமை மயங்கியல்

2 சொல்லதிகாரம், கிளவியாக்கத்தின்கண் அறுபத்திரண்டு சூத்திரங்களும், வேற்றுமையியலின்கண் இருபத்திரண்டு சூத்திரங்களும், வேற்றுமைமயங்கியலின்கண் முப்பத்தைந்து சூத்திரங்களும், விளிமரபின்கண் முப்பத்தேழு சூத்திரங்களும், பெயரியலின்கண் நாற்பத்துமூன்று சூத்திரங்களும், வினையியலின்கண் ஐம்பத்தொரு சூத்திரங்

ம், இடையியலின்கண் நாற்பத்தெட்டுச் சூத்திரங்களும் உரியியலின்கண் தொண்ணூற்றெட்டுச் சூத்திரங்களும் எச்சவியலின்கண் அறுபத்தேழு சூத்திரங்களும், ஆக நானூற்றறுபத்து மூன்று சூத்திரங்களை யுடைத்தாம்.

இச்சொல்லதிகாரப் பிரதியிலுள்ளவாறு (ஓலைச்சுவடியின்கண் உள்ளவாறே) சந்தி முதலியன எங்ஙனமுளவோ அங்ஙனமே பிரதிசெய்து பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதனை யுற்று நோக்கிச் சந்தி பிரித்துப் பயின்று பயன் அடைவார்களாக.

அகத்திய முனிவர்தம் அன்பு கெழீஇய
மாணவர் பன்னிரு வருளும் மாண்பார்
தொல்காப் பியனெனுந் தூய்மைத் தவநெறிச்
செல்வன் தொன்னெறி பிறழாச் சீரியன்
தண்டமிழ் மக்கள் கொண்டே குறிக்கொள
இயனெறி வகுத்தபே ரின்பப் பெரியோன்
சேவடி யென்றுஞ் சிந்தையில்
வைத்து வணங்கி வாழ்குவம் மகிழ்ந்தே.

தொல்காப்பியச் சொல்லதிகாரவுரை
நச்சினார்க்கினியம்
முற்றும்

வாழ்க தமிழகம்